# மூல மந்திரம்



திருமூலர்

விளக்கம் : வே. பசுபதி

# மூல மந்திரம்

'திருமூலர்'

விளக்க உரை

வே. பசுபதி

"THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSITANCE OF TIRUMALAI TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

விற்பனை உரிமை:

மூவேந்தர் பதிப்பகம்

29/2, சீனிவாசப் பெருமாள் சன்னதி தெரு,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.

முதற் பதிப்பு : டிசம்பர் 1996





பதிப்பாசிரியர் : மூவேந்தர் முத்து

விலை ரூ. 60.00

வெளியீடு:
வாணன் பதிப்பகம்
5, மேட்டுத் தெரு,
அரக்கோணம் - 3.

லேசர் ஒளிஅமைப்பு:
ஸ்ரீராம் கிராபிக்ஸ்

அச்சிட்டோர்:
மூவேந்தர் அச்சகம்
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.
தொலைபேசி : 826 71 89

Ph: STD 04112 - 23679

சிவமயம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிய பரமாச்சாரிய சுவாமிகள்

ஆதீனகர்த்தர்

தொண்டை மண்டல ஆதீனம்

57 V.C. பரமசிவம் தெரு, பெரிய காஞ்சிபுரம் - 631 502.

# அருளாசியுரை

*விந்துவும் நாதமும் மேவியுடன் கூடி*
*சந்திரனோடே தலைப் படுமாயிடில்*
*சந்திர வானத் தமுதம் வந்தூறிடும்*
*அங்குதி மந்திரம் ஆகுதி யாமே.*

எல்லாமாய் நிறைந்து யாவையுமாய் நின்று அனைத்தும் வல்லவனாம் எம்பெருமான் சிவபெருமான் திருவருளைப் பெற்று இவ்வுலக மக்கள் உய்தி அடைய திருமூலர் திரு அருளிச் செய்தவை மூவாயிரம் செய்யுள் ஆகும். அவற்றுள் மிகச் சிறந்த அனைத்து உட்பொருட்களும் அடங்கும் அளவில் தொள்ளாயிரத்து ஒரு பாடல்களை அன்பர் வே. பசுபதி இந்நூலில் எடுத்தோதியுள்ளார்.

இந்நூலாசிரியரின் விளக்கவுரையால் அவர் சித்தாந்தத் தெளிவு மிக்கவர் என்பது உறுதியாகும். மேலும் சித்தாந்தத் தெளிவு பெறத் துடிக்கும் அன்பர்களுக்கு ஓர் அற்புதப் படைப்பாகும்.

திருமூல திருமந்திரத்தின் சொல் அலங்காரம் அதன் பொருள் தெளிவுக்கு ஒரு தடையாக அமையுமானால் அத்தடை இந்நூலாசிரியரின் தெளிவுரையால் விலகும். பல்வகையான சித்தாந்த சாத்திரங்களின் மூலம் திருமூல மந்திரம் விளக்கப்பட்டுள்ளது இந்நூலாசிரியர் கைக்கொண்ட உத்தியாகும்.

இந்நூலாசிரியர் திரு வே. பசுபதி இன்னும் பல தெளிவுரையுடன் கூடிய சைவ நூல்களை வெளியிடுவதற்கும் அவர்கள் சைவத்திற்குச் செய்யும் சேவைகளும் இன்னும் சிறப்புற அமையவும் நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஏலவார் குழலி அம்மையுடனாகிய திருவேகம்பரின் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

நமசிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!

சிவம்.

# காணிக்கை

என் அருமை அன்னை
எம்பிராட்டி.

**வேல். வள்ளியம்மை அவர்கட்கு**

# நூற்சிறப்பு

தேவர் குறளும் திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவாசகம் திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்றுணர்.

திருமூலத் தேவனையே சிந்தை செய்வோர்க்குக்
கருமூல மில்லையே காண்.

திரு மந்திரமே சிவகதிக்கு வித்தாம்
திரு மந்திரமே சிவமாம் - அருமந்த
புந்திக்குளே நினைந்து போற்றுமடியார் தமக்கு
சந்திக்கும் தற்பரமே தான்.

# நுழைவாயில்

பேராசிரியர்
டாக்டர். பு.மு. கங்காதரன், பிஎச். டி.

ஒரே பொருளை நுதலி வருவனவாக அவ்வைப் பிராட்டியாரால் ஒப்பாய்வு நோக்கில் ஒருங்கு வைத்தெண்ணப் பெற்ற சீரிய நூல்களுள் ஒன்று திருமந்திரம். ஏனைய பிற நூல்கள் பொய்யில் புலவரின் பொருளுரையாகிய வள்ளுவம், வேதங்களின் முடிவாகிய உபநிடதங்கள், சைவ சமய குரவர்கள் பாடியருளிய தமிழ் வேதமாம் தேவாரம், திருவாசகம், காமஞ் சான்ற ஞானப்பனுவலாம் திருக்கோவையார் ஆகியனவாம்.

'தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்'

திருமந்திரம் தமிழ்மூவாயிரம், மந்திரமாலை என்னும் பரியாய நாமங்களானும் வழங்கப்பெறும். இது திருமுறைகள் பன்னிரண்டனுள் பத்தாவது திருமுறையாக வைத்து எண்ணப் பெறுவதாகும். இதனை இயற்றியவர் திருமூலராவார். இவர் நந்தியின் மாணாக்கர் எண்மருள் ஒருவர்; ஒப்பற்றவர்; கயிலாயத்துச் சித்தர் கணங்களுள் இருந்த காலத்துச் சுந்தரன் என்னும் இயற்பெயரினர்; பின்னர், நந்தியம் பெருமானிடத்துப் பயின்று தெளிந்தமையால் நாதன் என்னும் சிறப்புப் பெயர் வழங்கப் பெற்றவர். இக்காலத்து இவர் வழங்கியருளிய

நூல்கள் இரண்டு. அவை, உபதேசம் முப்பது; மந்திரம் முந்நூறு என்பனவாம். சாத்தனூரைச் சார்ந்த ஆன்குலம் மேய்க்கும் மூலன் என்பானின் குரம்பையுள் புக்கு மூலன் என எழுந்த பின்னர் யாத்தருளிய நூல் ஒன்றேயாம். அஃதே இது. இந்நூல், ஒன்பது தந்திரங்களும் இருநூற்றுமுப்பது அதிகாரங்களும் ஆக மூவாயிரம் பாடல்களைத் தன்னகத்தே கொண்டதாகும்.

இதன்கண்ணுள்ள மூவாயிரம் பாடல்கட்கும் மாவை. வே. விசுவநாத பிள்ளை என்பாரும் துடிசைகிழார் அ. சிதம்பரனார் அவர்களும் குறிப்புரை எழுதியுள்ளனர். முதல் தந்திரத்து முதல் தலைப்பாகிய உபதேசப் பகுதி முப்பதுக்கும் சி.எஸ். சுந்தர முதலியாரவர்கள் ஒரு விளக்கவுரை வகுத்துள்ளார்கள் என அறியவருகின்றோம். சேற்றூர் ரா.சுப்பிரமணியக் கவிராயர் என்பார் அங்குமிங்குமாக நூறு பாட்டுகளைத் தொகுத்து அவையிற்றுக்கு உரையெழுதி யிருப்பதாகத் தெரிய வருகின்றது. வித்துவான். பாலூர் கண்ணப்ப முதலியார் அவர்களும் முந்நூற்று அறுபது பாடல்களைத் தேர்ந்தெடுத்து உரை வகுத்துள்ளார்கள்.

இவர்கள் வழியைப் பற்றி ஏறக்குறைய இருபத்தைந்து நூல்களைத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு வழங்கியுதவிய பெரியவர் கவிரத்ன. நலங்கிள்ளியவர்கள் முதல் முறையாகத் தம்பெற்றோர் சூட்டி மகிழ்ந்த பசுபதி யென்னும் இயற்பெயரில் கடவுள் வாழ்த்தொடு முதல் தந்திரத்து உபதேசம் முதலாக ஒன்பதாம் தந்திரத்துச் சர்வ வியாபி இருவாயாக நூற்று அறுபத்து மூன்று தலைப்புகளில் சிலவும் பலவுமாகத் தொள்ளாயிரம் பாடல்களைத் தேர்ந்து 'மூலமந்திரம்' என்னும் நூற்பெயரும் சூட்டி அவையிற்றுக்கு யாவரும் எண்மையின் உணரும் வண்ணம் எளிய நடையில் உரையும் வகுத்துள்ளார்கள். எழுபத்தாறு அகவையளவும் தன் தாயோடு உடனுறையும் வாழ்க்கையை இறைவனருளால் ஏயப்

பெற்ற இவர், இந்நூலை அண்மையில் இறைமையெய்திய தன் இனிய தாயார்க்குக் காணிக்கையாக்கியதோடமையாமல் பிள்ளைப் பிராயத்து அவர்களிட்டு மகிழ்ந்த பசுபதி என்னும் தன்னியற்பெயரிலேயே வழங்கியுள்ளமை உன்னத்தக்கது. தாய்ப்பாசம் என்பது ஒட்டத் துறந்த பட்டினப் பிள்ளையாலும் துறக்க முடியாததன்றோ! திருவாளர் பி.ஜி. கருத்திருமன் அவர்கள் கம்பனின் காப்பியக் கதையோட்டமும் பிறவும் குன்றாமலும் தம்மால் சுவைக்கப் பெற்ற பாடல்களை 'யாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனும் மொழிக்கேற்ப ஏனையோரும் சுவைக்கும் வண்ணம் ஈந்தும் உதவியதன்ன முயற்சி இவர்தம் தொகுப்பு முயற்சியெனின் மிகையாகாது. நிற்க.

'மும்மைசால் உலகுக் கெல்லாம்
மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தை'

என வருவதை நோக்க 'மூல மந்திரம்' என்பது கவர்பொருள் தருவதொன்றாய் அமைதலின் நூலின் தலைப்பு 'மூலன் மந்திரம்' என்றே அமைந்திருக்கலாம். கம்பன் இராமாயணம், 'கம்பராமாயணம்' என்றும் சேரன் தாண்டவர் 'சேரதாண்டவம்' என்றும் வருவது கொண்டு 'மூல மந்திரம்' எனப் பெயரிட்டனர் போலும் என எண்ணவேண்டியுள்ளது.

மாந்திரம் என்பதன் மரூஉ மந்திரம் என்பது. மாந்தல் என்பதன் பொருள் உட்கோடல் என்பது. மக்களைத் தவிர்ந்த பிற உயிரினங்கள் ஐம்பொறிகளால் மட்டுமே புலநுகர்ச்சிகளை மாந்துகின்றன. மகனோ, ஐம்பொறிகளானேயன்றி மனனுணர்வானும் மிஞ்சவே மாந்துகின்றனன் பிற உயிரிகளைவிட. இது கருதியே மிஞ்ச மாந்தும் இவனை

மாந்தன் என்று குறித்தனர். உயிரிகள் பிறவற்றினும் மிகையாக இவனால் மாந்தப் பெறும் சீர்மையுடைய செம்பொருள் எது? திருவருட்பொருள் என்பதனைச் செப்பலும் வேண்டுமோ? திருவருட் பொருளை-திருமறைமொழியை-மந்திரம் என்றனர். இரம்-இருத்தல்.

> "ஐம்புலனால் மாந்தல் அனைத்துயிர்க்கும் ஆம் பொது;
> செம்புலனால் மாந்தல் சிறப்பாமால்; - இம்பரிடை
> மக்கட்கே மாந்துணர்வு; மாந்திரமே மந்திரமாம்;
> தக்கபொருள் மந்திரந்தாம் சாற்று"

இத்தகு மந்திரங்கள் தொன்னெடுங்காலமாகவே இருந்துள்ளமையை

> 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப'

எனவும்,

> 'மாந்திரப் பொருள்வயின் ஆஅ நேவும்'

எனவும்,

> 'மந்திர விதியின் மரபுளி வழாஅ
> அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே'

எனவும்,

> 'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும்'

எனவும்,

> 'அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
> வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டும்'

எனவும் வரும் இலக்கண இலக்கிய ஆட்சிகள் கொண்டு அறியக் கிடக்கின்றோம்.

பரமாத்மாவும் சீவாத்மாவும் அநாதி. 'என்று நீ அன்று நான்' என்பார் தாயுமானார். அநாதியாகிய ஆன்மாவை அணுத்தன்மைப் படுத்துவது ஆணவம் என்னும் மூலமலம். இதுபற்றியே ஆணவம் என்னும் காரணக்குறி பெற்றது. ஆன்மா, மூலமலத்தால் பிணிப்புண்டு அறிதற்குரிய கருவிகள் எவையுமின்றிக் கரிய இருட்டறையில் கிடக்கும் கண்ணிலிக் குழவியைப் போலக் கிடந்து துயருறும். இந்நிலை 'கேவலாவத்தை' எனப் பெறும். பேரருளாளனாகிய இறைவன் துயருறும் ஆன்மாவை ஈடேற்ற நினைகின்றனன். அவன் திருவருட் பெருக்கால் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் எனப்பெறும் ஐந்து கருவிகளை-தத்துவங்களை-ஆன்மாவோடு சேர்க்கின்றான். இத்தத்துவம் ஐந்தும் சேர்க்கப் பெற்ற சரீரம் 'கஞ்சுகசரீரம்' அல்லது 'விஞ்ஞானமய கோசம்' எனப்பெறும். இதனையே 'போத்திருத்தவம்' என்றும் சுட்டுவர். போத்திருத்தமாவது போகங்களை அனுபவித்தற்குரிய நிலையை ஆன்மா பெற்றுவிட்டது என்பது பொருள். பின்னரும் பேரருளாகிய இறைவன், கஞ்சுக சரீரத்தில் பஞ்சகிலேசமாகிய அவிச்சை, ஆங்காரம், ஆசை, சினம் ஆகியவற்றையும் கருணையின் பொருத்துகின்றான். பொருத்த, ஆன்மா வினையாற்றுதற்குரிய தன்மையைப் பெறத் தொடங்கிடும். இந்நிலையில் ஆன்மாவின் பெயர் புருடன். இப் புருடன் செயல்புரிய உடம்பு தேவையாகலின் மாயையைத் தொடர்புபடுத்துகின்றான். இம் மாயை ஆன்மாவுக்குக் காரண உடலாகின்றது. இவ்வுடலில் அந்தக் கரணங்கள் என்னும் உட்கருவிகள் நான்கும் ஓசை, ஊறு, ஒலி, சுவை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் வழங்கப்படச் சூக்கும பூதங்களாளியன்ற 'புரியட்ட காயம்' என்னும் பெயரிய சூக்கும உடம்பு - நுண்ணுடம்பு - வாய்க்கின்றது. வாய்க்க, அந்தக் கரணங்களில் ஒன்றான மனத்தில் விருப்பு வெறுப்புண்டாக ஏற்படும் வினைகளைக் கொண்டு அவ்வினைகளைத் துய்ப்பதற்காகப் பருவுடம்பை வழங்குகின்றான்

பரோபகாரியாகிய சிவன். அப்பருவுடம்பில் ஒன்றே மக்களுடம்பு. இதனையும் உடனே அவன் வழங்கி விடுவதில்லை. ஓரறிவுயிர், ஈரறிவுயிர் எனப் படிமுறை பரிணாம முறையிலேயே பாலிக்கின்றனன் என்பதை நினைதல் வேண்டும்.

'எப்பிறப் பாயினும் ஏமாப்பு ஒருவற்கு
மக்கள் பிறப்பில் பிறிதில்லை' என்றனர் முன்னோர்.

இவ்வேமாப்பும் எப்போதாம்? அதனையும் அன்னோர் கூறத் தவறவில்லை. 'அப்பிறப்பில் கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண் நிற்றலும் கூடப்பெறின்' என்பதே விடை. கற்றல், கேட்டல், கற்றவண்ணம் நிற்றல் ஆயவற்றைத் திறம்பட ஆற்றவல்லவன் மாந்தன் தானே! எனவே, இவையிற்றுக்கு ஏதுவாகும் 'மக்கள் உடம்பு பெறற்கரிது.' மக்கள் அறிவும் அறிவரிது. அறிவது அறிந்த மக்கள் அறத்தின் வழுவார்; நெறிதலை நின்று ஒழுகுவார்; என்பது தேற்றம். ஆகலின், உயிர்கள் உய்வான் வேண்டிக் கொள்ளத்தக்கவை இவையென்றும் தகாதவை இவையென்றும் பேரருளாளனகிய இறைவன் இருபத்தெட்டு ஆகமங்களை அருளினன்.

'அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொடு இருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத்து அறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே'

என்பது அகச்சான்று. சத்தியோபாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் ஐம்முகங்களில் அஞ்சாவது முகமாகிய ஈசானம் உரைத்த ஆகமம் இருபத்தெட்டனுள் நந்தியம்பெருமானாகிய குருமூர்த்திகட்குக் கிடைக்கப்பெற்ற காரணம், காமிகம், வீரம், சித்தம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம் எனும் ஒன்பது ஆகமங்களையே கேள்வியான் திருமூலர் பெற்றனராதலின்

கேட்ட அவையிற்றின் பிழிவையே ஒன்பது தந்திரங்களாக அருளிச் செய்தனர். பதி, பசு, பாசம் ஆகியனவும் இவற்றினை நிலைக்களனாகக் கொண்ட நேயம், ஞானம், ஞாதுருவம், மாயம் போன்றனவும் பிறவும் இன்னிதின் விளக்கப்பெற்று இடம்பெறுகின்றன, இதன்கண். இதனை,

'நேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
யாயத்தை அச்சிவன் தன்னை அகோசர
வியத்தை முற்றும் விளக்கி விட்டேனே'

என்பது கொண்டு தெளியலாம்.

நில்லாமையையே நிலையாகவுடைய இவ்வுலக இயல்பும், உலக இயல்பை உணர்ந்த உயிரி மேற்கொளத்தகும் நல்லியல்புகளும், ஒழுக்கநெறி நிற்பார்க்கு இறைவன் செய்துவரும் அருளிப்பாடுகளும், அவ்வருளாளன்மேல் பற்றுக் கொள்ளும் விதமும், பற்றற்றானைப் பற்றாகப் பற்றி அவனுடன் ஒன்றுபடுதற்குரிய வழிமுறைகளும், இறைவனை உள்முகப்படுத்தி உணரத்தக்க உயிர்கள் ஒலிவடிவான மந்திரங்களை உணர்ந்தும் தெளிந்தும் கருதற்குரிய வாயில்களும், நன்கறிவுயிர்கள் அறிய வேண்டிய சித்தாந்தங்களும், சித்தாந்தங்களைத் தெளிந்த உயிர்கள் குருவருளால் பற்றை அறுக்க மேற்கொளவேண்டிய தவநெறிச் சார்புகளும், அருட்பழக்கம் உடையார்க்கு அகத்தும் புறத்தும் வழிபடுதற்குரிய வழிவகைகளும்; இவ்வழிவகைகளோடு தொடர்புபட்டன சிலவும், இறைவனை நெருங்க நெருங்கக் கிடைக்கும் அருள் நலங்களும், சத்திநி பாதம் அடைந்த உயிர்கள் ஐந்தெழுத்தையும் ஐந்தெழுத்துடையானின் கூத்தியல்புகளையும் எண்ணியபடி வீட்டின்பம் பெறும் மாட்சிமைகளுமே விளக்கல் வேண்டும் என்னும் எண்ணம்

பல்கலைக்கடல் ஸ்ரீ அனந்தாழ்வான் ஸ்வாமிகளும் வழிகாட்டி நின்று ஊக்கம் அளித்து வந்தனர்.

இந்த முறையில் எழுந்துள்ள இந்நூலில் பிள்ளை லோகாச்சாரியாரின்மூலம் குறிக்கப்பட்டு இம்மூலத்தை விளக்க வினா விடைகள் அமைந்துள்ளன. எனவே, சாமானியரும் முமுட்சுப்படியைக் கற்று உணரும் வகையில் இயற்றப்படுகின்ற இந்நூல் திருவேங்கடவன் திருவருளைப் பெற உதவும் என்ற நம்பிக்கையோடு உங்கள் கைகளில் தவழ விடுகிறோம்.



பொருள்கோள் முறை - செய்யுள் எச்சங்கள் பத்தனையும் வேண்டியாங்கு வரப்பண்ணி உரை காணல் - போன்றனவற்றைப் பொன்னேபோல் போற்றி உரைவகுத்தல் வேண்டும். இவை தம்மை உணர்ந்தே தத்துவப் பேரொளி - கவிரத்ன. வே. பசுபதியவர்கள் உரைகண்டுள்ளார்கள் என எண்ணுகின்றேன். சான்றாகச் சில காண்போம்.

'வாழ்த்த வல்லார் மனத்து வள்ளூறு சோதியை' (39) என வருவதனைக் கண்ட இவ்வுரையாளர் 'பிணங்கி நின்றான்'(26) என்ற தொடர்க்கு அருத்தாபத்தியுணர்வொடு 'அன்பினால் தன்னை அண்டாதவர்களிடம் பிணங்கி நின்றும்' என உரை வகுக்கின்றமை உரையாளரின் முன்பின் நோக்கும் சிங்க நோக்கிற்குக் காட்டாய் அமைகின்றது. 'வானகத்தான் ஒக்கும் விண்ணகத்தான் ஒக்கும்'(31) என்பதற்கு வானகமும் விண்ணகமும் ஒன்றெனக் கருதாமல் ஆசிரியன் ஒரு கருத்துக் கொண்டே யாத்திருப்பான் என்றெண்ணியவராய் 'அகண்ட வானகம்' (ஐம்பூதங்களும் அகன்று விரிதற்கிடம் தரும் அகலிரும் விசும்பு) 'விண்ணகம்' என்பவற்றிற்கு முறையே அகண்டவான் அகம், விண்ணுலகமாகிய தேவருலகம் என விதந்துரைக்கின்றார். ஆணவம், கன்மம், மாயை, திரோதாயி, மாயேயம் என மலங்கள் ஐந்துள்ளமை கருதி 'மலங்களைத் தாமென' (118) என்ற தொடரை மலங்கள் + ஐந்தாம் எனப் பிறழப் பிரிக்காமல் நூலாசிரியரின் உள்ளமறிந்து 'மலம்+களைந்தாம்+என' என்று பிரித்துரையைக் காண்பது விழுமியதாகின்றது. 'தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்' என்னும் பத்திரகிரியார்த்தம் வாக்கைத் 'தூங்கிக் கண்டார் சிவலோகம்' (129) என்னும் அடியின் உரைக்கு நினைவு கூர்வது நினையத்தக்கது. 'தூங்காமல் தூங்கிச் சுகப்பெருமான் நின்நிறைவில் - நீங்காமல் நிற்கும் நிலைபெறவும் காண்பேனோ' என்பது தாயுமானார் வாக்கு.

'சொல் விளங்கிப் பொருள் மறையக் குறையாத தமிழ்' என்பார் சேக்கிழார் பெருமான் (காரி நாயனார் புராணம் - 1). இங்ஙனம் சொல் விளங்கிப் பொருள் மறைய நின்ற பாடல்கள் சித்தர்களால் யாக்கப்பட்டுள்ளமை பலரும் அறிந்ததே. 'மாங்காய்ப் பாலுண்டு மலைமேலிருப்பார்க்குத் தேங்காய்ப்பால் ஏதுக்கடி' என்ற தொடர் இவ்வகையில் பிரசித்தம் பெற்றதல்லவா? திருமூல நாயனாரும் இத்தகைய உட்பொருள் மறை பாடல்களைப் பாடுவதில் விலக்கானவர் அல்லர்.

'பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசுவைந்தும் பாலாச் சொரியுமே' (2883)

'பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்கள்ஓர் ஏழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே' (2874)

என்றாற் போன்று வருவனவற்றைக் காட்டாகச் சுட்டலாம். இத்தகைய மறை பொருட் கூற்றுகளின் செம்பொருளையும் வாசகர்கள் உணரும் வண்ணம் சிறுசிறு வாக்கியங்களால் விளக்கும் தன்மை இவ்வுரயாளரது போக்காகும். 'பார்ப்பான் அகத்திலே'யெனும் பாடலையும் சேர்த்து உரை கண்டிருக்கலாம் 'பட்டிப் பசுக்கள்' என்பதனொடு பொருள் தொடர்பு உள்ளமை கருதி. ஆனால், தொள்ளாயிரம் பாடற்கே உரை செய்ய முனைந்தமையான் விடுத்தனர் போலும்.

'கல்லைக் கண்டால் நாயைக் காணோம்; நாயைக் கண்டால் கல்லைக் காணோம்' என்னும் பழமொழி

கலையுணர்வை நுகர்வதற்கும் கலையுணர்வை நுகராமைக்கும் உரிய மனத்தை விளக்க எழுந்தது. இவ்வழிநின்று தோன்றிய பாடல்,

'மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே'

என்பதாகும். இதற்கு உவமை நயம் தோன்றப் 'பிரபஞ்சத்தின் ஊடே - பிரகிருதியிலே சுத்த சைதன்யமாம் பரத்தைக் காணும் காட்சி குருவருளால் வாய்த்து விட்டால் அங்கு நம் காட்சியிலே ஐம்பூதங்களும் மறைந்து யாவற்றிலும் பரமே தோன்றும்' என வகுக்கும் உரை நலம் வாய்ந்தது; 'குருவாய் வருவாய்' என்பதனை நினைப்பிப்பது.

தவ்வி - அகப்பை (196) நிலை - உலகம் (312) திரிகின்ற முப்புரம் - மும்மல வசமாகி இயங்கும் உடல் (348) மாகமை - மிக்க பொறுமை; சிவஞான யோகிகளின் வழிநின்று இலக்கணை மூன்றனுக்குக் காட்டுத்தந்து விளக்கல் (2566) என்றாற் போன்று உரையும் விளக்கமும் தரும் இடங்கள் பலப்பல. கானலின் என்பது இடைகுறையுமெனின் 'காலின்' என்றோ 'கானன்' என்றோ வரல் வேண்டும். இஃது மரூஉ எனக் கொள்ளத்தகும். உரையாளர் இடைக்குறை என்கின்றார். ஓர்க. அளவிறந்த எண்ணுத் தொகைகள் விளக்கப் பெறுகின்றன. இன்னும் பலப்பல நலங்கள் என்றதாக இவ்வுரை அமைந்துள்ளது. சிறப்பாகத் தொடர்பறாமை என்பது போற்றப்பட்டுள்ளது.

தத்துவம் என்பது ஆன்மாவுக்குத் துணை நிற்கக் கூடிய நுட்பப் பொருள்கள்; கலை - ஆணவமலத்தைச் சற்றே

நீக்குவது; வித்தை - ஆன்மாவின் ஆற்றலைச் சிறிதே வெளிப்படுத்துவது; அராகம் - ஆன்மாவின் விருப்ப ஆற்றலை வெளிப்படுத்துவது; காலம் - செயல் நிகழத் துணை நிற்பது; நியதி - ஆன்மா அனுபவிப்பதற்குத் துணை நிற்குமோர் முறைமைப்பாடு என்பனபோன்ற விளக்கங்களைக் குறிப்பில் உணரும்படி வைத்திருக்கின்றார். விரிக்கின் பெருகும்.

மொத்தத்தில், இவ்வுரை பண்டிதரேயன்றிப் பாமரரும் அறியும் வண்ணம் வகுக்கப்பட்டுள்ளது. சைவ சித்தாந்தத் தடத்தை எய்த வேண்டும் அவாவினர்க்கு இஃது ஊன்றுகோலாய் உதவும் என்பது திண்ணம்; நூல்மண்டபத்துள் புகுக.

'திரையற்ற நீர்போல் தெளிய எனத் தேர்ந்த உரை' என்பர் தாயுமானார். திரையற்ற நீர்நிலையில் தவளை குதிக்கின் யானையின் பெருத்த நிழலும் சிதையுமல்லவா? ஐயம் எனும் தவளை குதிக்க நிறையானையின் நிழலும் திரிந்து இதுவோ பொருள்? அதுவோ பொருள்? என நினையச் செய்து விடும். இந்நிலை சித்தாந்தச் செய்திகளில் நிலைதல் இயல்பு. ஆகலின், ஆசிரியர் விளக்கவுரையாக எழுதியிருப்பின் மேலும் சிறப்புடையதாக அமைந்திருக்கும் என்ற ஆதங்கத்தோடு தமிழ்கூறும் நல்லுலகம் வரவேற்பதாக என்னும் வேண்டுதலுடன் இவ்வகையிலும் அயராது எழுதும் ஆசிரியரை வாழ்த்தியமைகின்றேன். வாழ்க வையம்.

அன்பன்
பு.மு. கங்காதரன்

அரக்கோணம்
25.12.1996.

# முகவுரை

இந்த நூல், ''மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்'' மறையில் இருந்து தேர்ந்தெடுத்த 901 பாடல்களின் விளக்கமாகும்.

''மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்'' என்று, கூறிய திருமூல நாயனார் வாக்கின்படி, அவர் பாடிய பாடல்கள் மூவாயிரமே என்பது பெறப்படுகின்றது. இங்கே தமிழ் என்பது அவர் பாடிய பாக்களையே.

''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே''

என முன்னர் கூறிய வாக்கின்படி, தமிழ் என்ற சொல் தம் பாக்களையே குறிப்பதாகிறது.

சைவ சமயத்தைச் சார்ந்த பன்னிரண்டு, திருமுறைகளுள் இது பத்தாவது திருமுறையாகும்.

சைவ சமய இலக்கியங்கள் இருவகை. அவை சாத்திரம் தோத்திரம் என்ப.

சிவஞான யோகி, தவமுனி, திருமூலர் அருளிச் செய்த இந்தத் திருமந்திரந்தான். சாத்திர நூலின் பாற்படும். இந்நூலில் சாத்திர நுட்பங்கள், விளக்கங்கள் மட்டுமின்றி, அட்டாங்க யோகம், குண்டலி விளக்கம், சிவஞானம், பதி, பசு, பாச விளக்கம், சத்தி பேதம், சத்திநிபாதம், தத்துவமசி, மகா வாக்ய விளக்கம், மந்திரங்கள் தந்திரங்கள் ஞானம் இவை போல்வன விளக்கப்பட்டிருப்பதோடு திருவள்ளுவர் தம் தமிழ்மறையில் விளக்கிய அறம் பொருள்களின் விளக்கங்களையும் நன்கு விவரித்துரைக்கப்பட்டுள்ளது.

"எல்லாப் பொருளும் இதன்பாலுள இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லை." என திருவள்ளுவ மாலையில் மதுரைத் தமிழ் நாகனார் கூறியுள்ள கருத்து இந்தத் திருமந்திரத்திற்கு முற்றிலும் பொருந்தும்.

திருமூலர், ஒரு சிறந்த, தீர்க்க, சிந்தனையாளர். மிகச் சிறந்த சிர்திருத்தவாதி.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்றும்,

"ஒன்று கண்டீர் உலகுக்கொரு தெய்வம்" என்றும் கூறிய பெருஞ்சித்தர் அவர்.

"உள்ள பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்றும் "உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்" என்றும் கூறிய அவர் கருத்துக்கள் நுனித்து கருதத்தக்கன.

இனி அவரது வரலாற்றைப் பற்றிய உமாபதி சிவச்சாரியார் (சிவப்பிரகாசம் ஆசிரியர்) அவர்களின் பாடல் ஒன்றுள்ளது. அது இது.

கயிலாயத் தொரு சித்தர் பொதியிற் சேர்வார்
காவிரி சூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலா நோயுடன் வியத் துயரம் நீடும்
பசுக்களைக் கண்டவன் உடலில் பாய்ந்து போத
அயலாகப் பண்டையுடல் அருளால் மேவி
ஆவடு தண்டுவரை ஆண்டுக்கொரு பாவாக
குயிலாடும் அரசடியில் இருந்து கூறி
கோதிலா வடகயிலை குறுகினாரே.

இப்பாடல் மூலம் நாம் அறிவது:-

திருக்கயிலாயத்திலிருந்து பொதிகை மலையை நோக்கிப் புறப்படுகிறார் ஒரு சித்தர். பலப்பலத் திருத்தலங்களைக் கடந்து காவிரி நதி சூழ்ந்த சாத்தனூர் எனும் ஊரை வந்தடைகின்றார். அவ்விடத்தே இடைக்குலத்தில் பிறந்த மூலன் என்பவன், தன் மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்த போது, இறந்து விட, அதைக் கண்ட அவனுடைய பசுக்கள், அவன் உடலைச் சுற்றிச் சுற்றிக் கதறி அழுவதைக் கண்ட அந்தச் சித்தர், அப்பசுக்களின் துயரை நீக்கிவிடக் கருதி, அந்த மூலன் உடம்பில் தம் உயிரைப் பாய்த்தி, மூலன் உடலோடு, தாம் உயிர் பெற்றெழ, பசுக்கள் துயரம் நீங்கிக் களிப்படைந்தன.

அச்சித்தரது பண்டைய உடல் இறையருளால் மறைந்து விட, அன்று முதல் அச்சித்தர், திருமூலராக மாறி, ஓர அரச மரத்தடியில் அமர்ந்து சிவயோகம் புரிந்து ஆண்டுக்கு ஒரு பாடலாக, 3000 ஆண்டுகள் வாழ்ந்து, 3000 திருமந்திரங்களை அருளிச் செய்து, மீண்டும் திருக்கயிலை சென்றடைந்தார் என்பதை இப்பாடலால் நாம் அறியலாம்.

இதனைச் சேக்கிழார் பிரான் தம் பெரிய புராணத்துள் இருபத்தெட்டு இனிய பாக்களால் விளக்கியுள்ளார். இந்த வரலாறு ஆய்தற்குரியது!

இந்த மகான், சிவயோகி, சிவ ஞானி, புரட்சி மிக்க சீர்திருத்தவாதி, தீர்க்கதரிசி, அவர் தாம் பாடிய திருமந்திரத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட 901 பாடல்களே இந்த நூலில் விளக்கப்பட்டுள்ளன.

தமிழ் கூறும் நல்லுலகம் இதை ஏற்று எனக்கு ஊக்கம் அளிக்கும் என நம்புகிறேன்.

இந்த நூலை அச்சிட்டு, வெளியிட நிதி உதவி செய்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் அவர்கட்கும், எனக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்துதவிய என் கெழுதகை நண்பர் சிங்கப்பூர் திரு. மாயழகு அவர்கட்கும், என் மாணவச் செல்வங்கள் திரு.வ.தங்கவேலு M.A.,B.Ed., திரு.சீனி. நடராசன் M.A., M.A., B.Ed., ஆய கவிஞர் DP நாதன் ஆகிய மூவருக்கும் இந்த நூலை அழகுற அச்சிட்டு வெளியிட்ட என் உடன்பிறவாத தம்பி திரு. மூவேந்தர் முத்து அவர்கட்கும் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

கற்றறி சான்றோர்க்கு என் வணக்கத்துடன்

வே. பசுபதி

*அரக்கோணம்*
*1.12.96*

சிவ! சிவ!

திருச்சிற்றம்பலம்

# மூலமந்திரம்

## பாயிரம்

### (கடவுள் வாழ்த்து)

**1. ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து**
**வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்**
**சென்றனன் தானிருந்தா னுணர்ந் தெட்டே (1)**

*இறைவன் ஒருவனே அவன் அருட்சக்தியோடு கூடி இரண்டாகிறான். சிவமே சத்து; சக்தியே சித்து; இரண்டும் கூடிய ஆனந்தத்தில் உலகம் உளதாகிறது.*

*அவன் இறை; உயிர் தளை; பதி, பசு, பாசம் எனும் முப்பொருளினும் பொருந்தி செயலாற்றுகிறான், அல்லது அவன் சத்து சித்து ஆனந்தம் எனும் மூன்றனுள்ளும் நிலைத்து உள்ளவன். விழிப்பு, கனவு, ஆழ் உறக்கம், துரியம் எனும் நான்கு நிலைகளிலே கடவுளை உணரும் துரிய நிலை உணர்ந்தவன் அவன். ஐந்து இந்திரியங்களை வென்றவன் அப்பரம் பொருள். சமயங்கள் ஆறு; அவை யாவற்றிலும் விரிந்திருப்பவன் அவன்.*

---

*"ஒன்றவன்தானே என எடுத்து", என்று சேக்கிழார் பிரான் தம் திருத்தொண்டர் புராணத்திலே தரும் குறிப்பால் இந்நூலின் முதற்பாடல் இதுவே எனக் கருதப்படுகிறது.*

இறைவன், மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை எனும் உடலின்கண் பொருந்தியுள்ள ஆறு ஆதாரங்களையும் கடந்து ஏழாம் நிலையான சகஸ்ராரத்திலே வீற்றிருப்பவன். எனவே ஏழ் உம்பர்ச் சென்றனன் என்றாராயிற்று. அவன் அட்டமூர்த்தி அழகன் (ஐம்பூதங்கள் + ஞாயிறு + திங்கள் + இயமானன்) இவை எட்டுமாகத்தான் இருந்தான் என்க.

2. **ஒக்க நின்றானை உலப்பிலி தேவர்கள்**
**நக்கன் என்றேத்திடும் நாதனை நாள்தொறும்**
**பக்கம்நின் றார்அறி யாத பரமனை**
**புக்குநின்று உன்னியான் போற்றுகின் றேனே.** (3)

இறைவன், தன் அருட்சக்தியின் விரிவான, உலகம் உயிர்களுடன் ஒருமித்து நிற்கிறான். அழிவற்ற தேவர்கள் அவனைச் சிவனே! சிவனே! என்று ஏத்துகின்றனர். அவன் உயிர்கள் அனைத்திற்கும் நாதன்; பரம்பொருள். உண்மை உணராது ஒரு சமயத்தைச் சார்ந்து (பக்கல் நின்று) நாள்தோறும் வாதமிடுகின்றவர்கள் அறியாத பரமன் அவன். அவனை நான் உள்முகமாகி உள்ளே புகுந்து அங்கேயே நிலைத்து நின்று போற்றி செய்வேன். (நக்கன் = நிருவாணன்)

3. **சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினுமில்லை**
**அவனோடு ஒப்பார்இங் குயாவரு மில்லை**
**புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்**
**தவனச் சடைமுடி தாமரை யானே** (5)

எங்கெங்குத் தேடித் தேடிப் பார்க்கினும் சிவனோடு ஒப்பு சொல்லக் கூடிய எந்தத் தெய்வமும் கிடையாது. அவனுக்கு ஒப்பானவர்கள் இங்கு எவருமே இல்லை. அவனே உலகம்; அனைத்தையும் கடந்து நின்றவன். அவன் ஏழாம் நிலையிலே - சகஸ்ராரத்திலே - வீற்றிருப்பவன். நெருப்புமயமான பொன் போன்று ஒளிமின்னும் சடைமுடியை உடையவன் அப்பரம் பொருள்.

4. தீயினும் வெய்யன் புனலினும் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருள்அறி வார்இல்லை
சேயினும் நல்லன் அணியன்நல் லன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே (8)

*அவன், பண்டைய கருமங்களை எரிப்பதில் தீயைக் காட்டிலும் வெப்பம் - சூடு - மிகுந்தவன். அன்பரை ஆட்கொள்ளும் கருணையிலே அவன் தண்ணீரினும் தட்பம் மிகுந்தவன். அந்த நீண்ட சடைமுடியை உடைய சிவபிரான் குழந்தையைக் காட்டிலும் யாவரிடத்தும் நல்லவன். தன் நல்ல அன்பர்களுக்கு - பக்தர்களுக்கு அணுக்கமான நெருங்கிய தோழன். அது மட்டுமா, அவன் தாயைக் காட்டிலும் மிக நல்லவன். இப்படிப்பட்டவன் சிவன். ஆனாலும் அந்த ஈசன் அருளின் பெருமையை அறிபவர்கள் ஒருவருமிலர்.*

5. பொன்னால் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னால் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றுஅவன்
தன்னால் தொழப்படு வார்இல்லை தானே (9)

*தங்கத்தினால் சுருள் சுருளாக அமைந்ததைப் போல பொன்னிறச் சடை பின்புறம் ஒளிசெய்ய, நம்முள்ளத்துள்ளே வீற்றிருந்த பரம்பொருளின் பெயர் நந்தி என்பதாம். என்னால் இடைவிடாது தொழப்படும் எம் இறைவன் அவனே. அவனையே உலகனைத்தும் தொழும். ஆனால் அவனால் வணங்கப்படுபவர் ஒருவரும் இலர்.*

6. தானே இருநிலம் தாங்கி விண்ணாய் நிற்கும்
தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்
தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்
தானே தடவரை தண்கட லாமே (10)

*அந்த இறைவன், தான் தன் அருள் வல்லமையால் இடமகன்ற இந்த உலகைத் தாங்கியும் அதனால் கட்டுப்படாமல், உள்ளவன் இவ்வண்டங்கள் அனைத்தும் உலாவரும்*

விண்ணாகவும் பரமாகாசமாகவும் நிலைத்துள்ளவன். அப்பரம் பொருளே சுடும் நெருப்பு, சூரியன், சந்திரனாகவும் விளங்குகிறான். அவனே உலகம் வாழ மழை பொழியும் அருட்சக்தியாகவும் விளங்குகிறான். வான் உயர்ந்த மலையும் அவனே. குளிர்ச்சிமிக்க பெருங்கடலும் அவனே.

7. மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்
எண்ணளந் தின்ன நினைக்கிலார் ஈசனை
விண்ணளந் தான்தன்னை மேல்அளந் தாரில்லை
கண்ணளந் தெங்கும் கடந்து நின்றானே (13)

உலகத்தை தன் காலடியால் அளந்த மாலும், தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், பிற தேவர்களும் தம் எண்ணத்தால் அளத்தற்கு அரியவன் இறைவன் என நினைத்தலில்லார். அகில உலகிற்கும் ஆதாரமான விண்ணையும் கடந்து நின்றவனை மேற் சென்று அளந்தவர் யாரும் இலர். அவன் நம் ஊனக் கண்ணைக் கடந்து எங்கும் பரந்து உள்ளவனாவான்.

8. ஆதியு மாய்அர னாய் உடலுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான் அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே (15)

அப்பரம் பொருளாகிய சிவனே யாவற்றுக்கும் ஆதிமுதல்வன். அவனே அரன். நம் அனைவருடைய உடலுள் நிலைத்து நின்று அறிபவனும் அவனே. அவனே உயிர் உலகங்கள் அனைத்திலும் விரிந்து விளங்கி நிற்பவன். அவனே அருட்சோதி. அவன் சுருங்காத தன்மையனாய் நீதியாகவும், நித்தியமாகவும் (அழிவற்றது) நிலைபெற்று விளங்குகிறான்.

9. போற்றி இசைத்தும் புகழ்ந்தும் புனிதன்அடி
தேற்றுமின் என்றும் சிவனடிக்கே செல்வம்
மாற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றி நின்றார்வழி மன்னிநின் றானே (24)

சிவனையே போற்றியும் பண்ணிசைத்துப் பாடியும் புகழ்ந்தும், அந்தப் புனிதமானவன் திருவடிகளைத் தேர்ந்து தெளிமின்கள். எக்காலத்தும் எம் செல்வம் அனைத்தும் சிவனடிக்கே சொந்தமென மாற்றியதென்று, நிவேதனம் செய்யுங்கள். உங்கள் மயக்கமுற்ற சிந்தனையை மாற்றி நிலையிலே நிற்பீராக. அப்படி நின்றவர் வழியிலேயே அப்பரம் பொருள் நிலைத்து நிற்பான்.

**10. பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்**
**இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்**
**துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்**
**மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே** (25)

சிவபிரான் பிறப்பற்றவன். அவனே பிஞ்ஞகன் எனப்படுபவன். எல்லையற்ற அருள்திறம் உடையவன். இறுதியாகும் இறப்பற்றவன். உலகுயிர்கள் அனைத்துக்கும் பேரானந்தம் அருளுகின்ற தன்மையைத் துறவாதவன். அவன் தன்னைத் தொழுமின்கள். அப்படித் தொழுதால் மட்டுமே மறப்பது என்பதேயின்றி உலகை ஆட்டுவிக்கும் மாயா சக்தியைக் கடந்துய்வீர்கள். (பிஞ்ஞகன் = தலைக் கோலமுடையவன்) (விருத்தம் = கடத்தல்)

**11. இணங்கி நின்றான்எங்கு மாகிநின் றானும்**
**பிணங்கி நின்றான் பின்முன்ஆகி நின்றானும்**
**உணங்கி நின்றான் அமராபதி நாதன்**
**வணங்கி நின்றார்க்கே வழித்துணை யாமே** (26)

பக்தர்களுக்கு இணங்கி நிற்பவன் அவன். எல்லா இடங்களிலும் பரவி எங்குமாய் நிற்பவனும் அவனே. அன்பினால் தன்னை அண்டாதவர்களிடம் பிணங்கி நின்றும் பின்முன்ஆகி நிற்பவனும் அவனே. அமராவதிக் காவலனாகிய தேவேந்திரனும் அவன்முன் வணங்கி ஒடுங்கி நிற்பான். அப்படிப்பட்ட ஈசன், தன்னை வணங்கி நிற்பவர்களுக்கே அவர்கள் துறக்கம் அடைய (வீடுபேறெய்த) வழித்துணையாகி நிற்பான்.

12. மண்ணகத் தான்ஒக்கும் வானகத்தான் ஒக்கும்
விண்ணகத் தான்ஒக்கும் வேதகத்தான் ஒக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே (31)

*ஈசன் யாவற்றுள்ளும் உள்ளவன். இந்த நில உலகமா மண்அகம், அகண்ட வான்அகம், விண்ணுலகமாகிய தேவருலகம், வேதஅகம், என்னும் வேதங்கள், உள்ளிடம் யாவற்றுள்ளும் உறைபவன் அவனே என்பது பொருந்தும். பண் அகத்தும் உள்ளவன். அவன் ஏழ் இசையாய் இசைப்பயனாய் உள்ளவன். அவ்விசையாலே அடியார் பரவும் இறைவனும் அவனே. அவனை நான் என் கண்ணுள்ளே நின்று உள்முகமாய்ப் பார்வையைச் செலுத்தி உள்ளத்தால் காதலித்தேன்.*

13. வாழ்த்தவல் வார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும் எம்பெரு மானென்று இறைஞ்சியும்
ஆத்தம்செய் தீசன் அருள்பெற லாமே (39)

*ஈசன், வாழ்த்த வல்லவர்கள் உள்ளத்திலே உள்ளுறையும் சோதியாக இருக்கின்றான். தீர்த்தனும் அவனே. அதாவது உள்ளே உறையும் குரு அவனே. அங்கே நம் இதயத்தில் உள்ளே இருந்து திளைக்கின்றான். அவனை வாழ்த்தி ஏத்தியும் எம்பெருமானே என்று இறைஞ்சியும் ஆரா அன்பினில் திளைத்தும் ஈசன் அருள் பெறலாம்.*

14. விதிவழி அல்லது இவ்வேலை உலகம்
விதிவழி இன்பம் விருத்தமும் இல்லை
துதிவழி நித்தலும் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னாமே (45)

*இக்கடல் சூழ்ந்த உலகம் விதி வழியே இயங்கும் இருள் தன்மை உடையது. அந்த விதி வழியே அடையும்படியான இன்பமும் உண்மையானதன்று. உயிர்கள் நித்த நித்தம்*

இறைவனைத் துதிக்கின்ற வழியில் நின்று வழிபடின் அந்த சோதி வடிவான இறைவனும் மானிடர்க்கு விதி வழி விலக்கி பதி வழியைக் காட்டுகின்ற சூரியனாவான் (அல்லது : அல் + அது; இருள் தன்மையுடையது, விருத்தம் = உண்மை)

15. பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத்து ஒருங்க வல்லார்க்கு
திரைபசு பாவச் செழுங்கடல் நீந்தி
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே (49)

அருட்சக்தி, உயிர், பாசம் ஆகிய இவைகளுக்குத் தலைவனாம் சிவனை நினைத்து, உரைக்கப்படும் பசு பாசம் எனும் இவைகளை ஒருசேர அழிக்க வல்லவர்களுக்குப் பசுவாம் ஆன்மாக்கள் தம் பாவமாகிய பெரிய திரைக் கடலை நீந்த முடியும்; பரிபூரணனை எய்தவும் முடியும். (பரை=பராசக்தி; ஒருங்குதல் = அழித்தல்.)

16 நந்தி இணையடி நான்தலை மேற் கொண்டு
புந்தியின்உள்ளே புகப்பெய்து போற்றி செய்(து)
அந்திமதி புனை அரனடி நாள் தோறும்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே. (73)

என் குருநாதனாம் நந்திபிரான் இருபாதங்களையும் என் தலை மேல்வைத்தும், என் உள்ளத்துள்ளே அதைப் புகச் செய்தும், போற்றி செய்தும், மாலைக் காலத்திலே தோற்றும் பிறை நிலவைச் சூடிய சிவபிரான் பாதமலர்களைத் தினந்தோறும் சிந்தையிலே தியானித்தும் இந்த ஆகமமாகிய திருமந்திர நூலைச் செப்பத் தொடங்குகின்றேன்.

17. பின்னைநின்று என்னே பிறவி பெறுவது
முன்னை நன்றாக முயல்தவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத்தமிழ்செய்யு மாறே (81)

முற்பிறப்பிலே நன்றாக முயன்று தவம் செய்யாதவர்கள் இப்பிறப்பிலே மக்களுள்ளே பிறபட்டு நின்று அடுத்தடுத்து

*பிறவி எடுப்பார்கள் (ஆனால் நானோ முற்பிறப்பிலே முயன்று கடுந்தவம் இயற்றிய காரணத்தினால்) இப்பிறப்பிலே இறைவன் என்னை நன்றாக ஆன்ம பலம் உள்ளவனாகப் படைத்தனன். ஏன் எனில் இறைவனது அருளாற்றலை விளக்கும் ஆகமத்தைத் தமிழில் நன்றாக விளக்கும்படித்தான், என்னைப் படைத்தான் இறைவன்.*

18. **யான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்**
**வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்**
**ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்**
**தான்பற்றப் பற்ற தலைப்படுந் தானே** (85)

*நான் அடைந்த இந்தப் பேரானந்தப் பெருநிலையை இந்த உலகமெல்லாம் அடைக. வானளாவிய பெருமைமிக்க வேத உட்பொருளைச் சொல்லப் போனால், உடம்பிலுள்ள ஊனெல்லாம் பற்றி நின்று கலந்து ஆன்மாவை உணர்ச்சி மயமாக்கும் இந்த மேலான மந்திரப்பொருளை இடையறாது பற்றி நிற்க, உயர்ந்த பதிஞானம் வந்தடையும்.*

19. **ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை**
**மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை**
**ஆயத்தை அச்சிவன் தன்னை அகோசர**
**வீயத்தை முற்றும் விளக்கிவிட் டேனே.** (90)

*அறியப்படு பொருளை-அறியும் அறிவை-அறிகின்ற ஆன்மாவை சுத்த ஆசுத்த பிரகிருதி மாயைகளை, மாமாயை தன்னில் தோற்றமான பராசத்தியை, அப்பராசத்தியின் ஆய்வினை, அப்பரையை சத்தியாய் உடைய சிவனை, அஞ்ஞானத்தின் வீழ்ச்சியை முழுவதுமாக இந்நூலால் விளக்கித் தந்துள்ளேன். அகோசரம் = அறியாமை; வீயம் = வீழ்ச்சி*

20. **ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை**
**யாரறி வார்இந்த அகலமும் நீளமும்**
**பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றுஅதன்**
**வேரறி யாமை விளம்புகின் றேனே** (95)

*எங்களது அண்ணலாகிய சிவபெருமானது பெருமையை யார் அறியவல்லார். அவன் கோடானு கோடி அண்டங்கள்*

இயங்கும் விண்வெளி முழுதும் வியாபித்துள்ளதால் அவனது பரப்பின் அகலத்தையும் நீளத்தையும் யார் அறியவல்லார். அவனது பெயர் இன்னதென அறிய முடியாது. மிகப் பெரிய சோதிவடிவன் அவன். ஒப்பற்றவன் அந்த இரண்டற்ற ஒன்றின் மூலாதாரத்தினை நாம் அறியமாட்டாத தன்மையை இங்கு விளக்கிக் கூறுகிறேன்.

**21. ஈசன் இருக்கும் இருவினைக்கு அப்புறம்**
**பீசம் உலகில் பெருந்தெய்வ மானது**
**ஈசன் அதுஇது என்பார் நினைப்பிலார்**
**தூசுபி டித்தவர் தூரறிந் தார்களே (105)**

பிறப்பு இறப்புகளுக்கு ஏதுவாகிய இருவினைகளைக் கடந்து நிற்பவன் ஈசன். அந்த பெருந்தெய்வமாகிய சிவனே உலகத்துக்கும் வித்தாகியுள்ளவன். நன்கு உணராதவர்கள் ஈசன் அதுதான், இதுதான் எனப் பேசுவார்கள். அவர்கள் மும்மல அழுக்கால் மூடப்பட்டவர்கள். ஈசனின் மூலாதாரத்தை அறிந்தவர்களா என்ன? அறியாதவர்களே அல்லவா?

பீசம்=விதை; தூர் = வேர், மூலாதாரம்

அறிந்தார்களே - ஏகாரம் வினா; அறிந்தார்களோ என்றபடி.

**22. சோதித்த பேரொளி மூன்றுஐந் தெனநின்ற**
**ஆதிக்கண் ஆவது அறிகிலர் ஆதர்கள்**
**நீதிக்கண் ஈசன் நெடுமால் அயனென்று**
**பேதித்து அவரைப் பிதற்றுகின் றாரே (110)**

இலங்குகின்ற பெரிய ஒளி மயமாய் உள்ள ஒன்றே ஆதி காலத்திலே மூன்று ஐந்து என நின்றது என்று அறிவிலிகள் அறியமாட்டார்கள். முறைமையாக ஈசனென்றும் நெடியமால் என்றும், பிரமன் என்றும், வேறுபடுத்தி அச்சிவனைப் பிதற்றித் திரிகின்றனர்.

சோதித்தல் = இலங்குதல்; ஆதர்கள் = அறிவிலிகள்; நீதி = நெறிமுறைமை

23. பரத்திலே ஒன்றாய் உள்ளாய்ப் புறமாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்
தரத்தினுள் தான்பல தன்மைய னாகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே (111)

*தற்பரநிலையிலே அது தானே தானான ஒன்றாகும். ஆன்மாக்களின் உள்ளே உயிர்ப்பதும்-பரமான்மாவாகிப் புறத்தே இலகுவதும் அவ்வீசனே. மாயனாய் உலகைக்காக்கும்; அயனாகி உலகைப் படைக்கும்; பலவகைப்பட்ட தரத்திலே, பல தன்மையனாகி விளங்கும் அவனே, அழித்தல் தொழிலிலே நின்று இந்த உலகம் யாவையும் சங்கரிக்கும் சங்கார கர்த்தாவாகிறான்.*

*(கரம் - அழித்தல்).*

# முதல் தந்திரம்

## உபதேசம்

24. பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதிஅணு கில்பசு பாசம்நி லாவே (115)

*இறைவன் (பதி); உயிர்(பசு); தளை(பாசம்); என்று சொல்லப்படும் மூன்றனுள்ளும், பதியைப் போலவே பசுவும் பாசமும் அனாதி. மூன்றுமே அழிவற்ற அனாதிப் பொருள்களாம். பசுவும் பாசமும் தாமே சென்று பதியினைச் சேரமாட்டா. ஆனால் பதியே தன் அருட்கருணையால் பசுவினை அடையும்போது, பசுவும் பாசமும் நில்லாமல் நீங்கும். பாசம் நீங்கிய பசுவும் இறைமயமாகும்.*

*(பதி, பசு, பாசம் - மூன்றும் அனாதி; நித்தம்)*

25. சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதியிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே (117)

*சூரிய காந்தக் கல்லும், சூழ்ந்துள்ள பஞ்சும் போன்றது இவ்வான்மாவும் மலங்களும். சூரிய காந்தக் கல் தானே தன்னைச் சூழ்ந்துள்ள பஞ்சை சுட்டெரிக்க இயலாது. ஆனால் சூரியன் ஒளியை அதன் மூலம் பாய்ச்சினால் பஞ்சு வெந்து நீறாகும். அதைப்போலவே இறைவன் குரு வடிவாகி வந்து ஆன்மாவை ஆட் கொள்ளும்போது மலங்கள் அற்றுப் போகும்.*

26. மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தான்உள் நயந்தான் அறிந்தே (118)

*மும்மலங்களைக் களைந்து விட்டோம் என ஆன்மாவின் பண்டைய நிலையை மாற்றி அருள் செய்து, நல்ல சதாசிவமான பஞ்ச மூர்த்தங்களை உடையவன் (தலங்கள் ஐந்தான்), அப்போது மன்றிலே விளங்கும் நந்தியெம் பெருமான் ஆகி என்புலன்களைக் களைந்து, முக்குணங்களையும் களைந்து எனை அறிந்து, உள் நயத்து உறைந்தான்.*

27. வித்தைக் கெடுத்து வியாக்கரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்த துடக்கற
ஒத்துப் புலனுயிர் ஒன்றாய் உடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே. (121)

*பிறவிக்கு வித்தாகிய மும்லங்களைக் கெடுத்து துறக்க கதிநான்கனுள் மிக மேலான வியாக்கரத்தே உயர்ந்த சுத்த துரியம் பிறக்க, அப்படிப் பிறத்தலால் பந்த பாசம் அற்றுப் போக, புலன்களும் உயிர்களும் ஒத்து நின்று- உடம்போடு ஒன்றி நின்று-செத்தவர்களைப் போன்று செயலற்றிருப்பார்கள் சிவயோகிகள்.*

*துரியம்-நான்காம் அவத்தை; துடக்கு=கட்டு*

28. இருந்தார் சிவமாகி எங்கும் தாமாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்கு
இருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே (127)

*மேற்கூறிய சிவயோகிகள் தாமே சிவமாகி எவ்விடத்தும் தாமாகி இருப்பார்கள். இந்த உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் நோக்கி யாவும் சிவன் செயல் என்றே உணர்வார்கள். இவர்கள் முக்காலத்தின் இயல்புகளை நன்கு அறிந்தும் இருப்பார்கள். நான் எனது என்னும் செருக்கற்று*

அவைகளை ஒழித்து, இழந்து விட்டதால் சோம்பி இருப்பர். அதாவது உணர்ச்சியற்று ஆனந்த வடிவாகி இருப்பர். (தற்செயலற்று யாவும் சிவன் செயலாகவே கருதி சும்மா இருப்பர்)

**29. சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே**
**சோம்பர் கிடப்பதும் சுத்த வெளியிலே**
**சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடம்**
**சோம்பர் கண்டாரச் சுருதிக்கண் தூக்கமே (128)**

தற்செயலற்று யாவும் சிவன் செயலாகக் கருதி உணர்வற்று இருப்பவர்கள் சோம்பர். இவர்கள் இருப்பதோ ஞானாகாசமாகிய சுத்த வெளியில்தான். இந்த சோம்பர்களின் உணர்வு நிலை வேதங்களின் முடிந்த நிலையாகிய ஓங்கார நிலை. அவர்கள் கண்டறிந்ததோ சுருதிகளின் உட்கிடக்கை யாகிய சுவானுபூதி தூக்கமே ஆகும்.

**30. தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்முள்ளே**
**தூங்கிக்கண் டார்சிவ யோகமும் தம்முள்ளே**
**தூங்கிக்கண் டார்சிவ போகமும் தம்முள்ளே**
**தூங்கிக்கண் டார்நிலை சொல்வ தெவ்வாறே (129)**

மேற்கூறியவாறு சுவானுபூதித் தூக்கமாம் இன்பத் துயிலில், ஆழ்ந்திருப்பவர்கள் தம்முள்ளேயே சிவலோகம் சிவயோகம், சிவபோகம் எனும் மூன்றையும் கண்டவர்கள். எனவே அவர்களுடைய தூங்கிக் காணும் நிலையினைச் சொல்ல இயலாது.

'தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவ தெக் காலம்' என்கிறார் பத்திரகிரியார்.

**31. பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்**
**அருமை எளிமை அறிந்தறி வார்யார்?**
**ஒருமையுள் ஆமைபோல் உள்ஐந் தடக்கி**
**இருமையும் கெட்டிருந் தார்புரை யற்றே (133)**

மேற் சொன்ன தூங்கிக் காணும் நிலையே பேரின்ப நிலை. அதுவே பெருமை. மற்று உலகிலே நாம் துய்க்கும் பிற இன்பங்கள் யாவும் சிறுமையே. மகத்தினும் மகத்தான பெருமை மிக்கவன் இறைவன். அணுவினும் சிறிய பரமாணுவாயும் அமைகின்றவன் இறைவன். இங்குக் கூறப்பட்ட பெருமை சிறுமைகளினும் தன்மை உணர்ந்தும் இறைவனப் போல அருமையானவரும் அன்பர்க்கு எளிமையானவரும் இல்லை என்பதை அறிந்தும், நல்ல சிவநேய அறிஞர்கள், தன் ஐந்து உறுப்புகளையும் உள்ளிழுத்தடக்கும் ஆமை போலத் தம் புலன் உணர்வுகளை உள்ளடக்கி விருப்பு வெறுப்பு, நன்மை, தீமை, சுகம், துக்கம், பந்தம், தொந்தம் ஆகிய இருமைகளின் வகையை நன்குணர்ந்து எவ்விதத் தவறுமின்றி இருப்பார்கள்.

32. புரையற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்
திரையற்ற சிந்தையுள் ஆரியன் செப்பும்
உரையற்று உணர்வோடு உடம்பிங்கு ஒழிந்தார்
கரையற்ற சோதி கலந்த சத்தாமே (164)

புரை குத்தாத பாலிலே நெய் பரவி கலந்துள்ளதைப் போல "பால்படு நெய்போல்" மறைய நின்றுள்ள சிவன், சங்கற்ப விகற்பங்கள் எனும் திரைகள் சற்றும் இல்லாத அமைதியான உள்ளத்திலே, தன் பரநாத ஒலியால் உரையாடுவான். உரை கடந்த மோனிகள், தம் உள்ளுணர்ந்த ஞானிகள், உடம்புணர்வினை, தற்போதத்தை ஒழிந்தவர்கள் ஆவார்கள். அவர்களே கரை இல்லாத சோதியிலே கலந்து சுத்த சத்தாக விளங்குவார்கள்.

33. சத்தம் முதல்ஐந்தும் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றி சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியில் சுடரில் சுடர் சேரும்
அத்தம் இதுகுறித்து ஆண்டுகொள் அப்பிலே (135)

சத்தம் முதலிய ஐந்து தன் மாத்திரைகளும் தான் வந்த வழியாகிய பஞ்ச பூதங்களைச் சார்ந்து செயலற்று நின்றால் சித்தாகிய - சேதனப் பொருளான - ஆன்மாவுக்குச்

சிவத்தோடன்றி சேருமிடம் வேறில்லை. சுத்த வெளியாம் அருள் வெளியிலே, அருட் பெருஞ் சோதியில் நம்முடைய ஆன்ம சோதி கலக்கும். இது குறிக்கும் பொருளை கடல் நீரைக் கொண்டு தெளிக.

34. **அப்பினில் கூர்மை ஆதித்தன் வெம்மையால்**
**உப்பெனப் பேர்பெற்று உருச்செய்த அவ்வுரு**
**அப்பினில் கூடியது ஒன்றாகு மாறுபோல்**
**செப்பினில் சீவன் சிவத்துள் அடங்குமே. (136)**

(கூர்மை- கரித்தல்) கடல் நீரில் அமைந்துள்ள கரித்தலாம் தன்மை, சூரியன் வெப்பத்தினால் (கட்டிய உப்பளப் பாத்தியிலே) உப்பெனும் பேர் பெறும். திரவ உருவமும் மாறி வெண்மையாகிச் சடப் பொருளாகும். அந்த உப்பே தண்ணீரோடு கலந்தால் தன் உரு கெட்டு பண்டைய திரவ உருவத்தையே அடைந்து விடும். அதைப் போலச் சொல்லுங்கால், சீவன் சிவத்துள்ளே அடங்கி நிற்கும்.

35. **தானே புலன்ஐந்தும் தன்வச மாயிடும்**
**தானே புலன்ஐந்தும் தன்வசம் போயிடும்**
**தானே புலன்ஐந்தும் தன்னில் மடைமாறும்**
**தானே தனித்துஎம் பிரான்தனை சந்தித்தே (140)**

மேற்கூறியவாறு சீவன் சிவத்துள் அடங்கும் தன்மை வாய்வதாய் ஆன்மா, தானே தனித்து எம்பிரானாம் சிவனை சந்தித்தால், தன் புலன் ஐந்தும் தன் வசமாகி விடும். ஏனெனில் அந்த ஐந்து புலன்களும் தம்தம் விருப்பு, வெறுப்பின்படி, ஓடும்படியான அதன் வசமான செயலற்றுப் போய்விடும். எப்படி எனில் அந்த ஐம்புலன்களும் தாம் போன புறம்போக்கு மாறி, மடை மாறி, சிவ புலத்தின் கண்ணே ஐம்புல வெள்ளம் சென்று பாயும்.

மடை மாறுதல்= களர் நிலங்களுக்குப் பாயும் நீரை மடை மாற்றி நன்செய் வயல்களுக்குப் பாய்ச்சுதல் போல பிறவிக்கு வித்தாம் பொருள்களில் கொள்ளும் வேட்கையை மாற்றி, நிலையுதலுள்ள திருவடியில் வேட்கையை விளைவித்தலாம்.

## யாக்கை நிலையாமை

36. மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்
திண்ணென் றிருந்தது தீவினைச் சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானால்போல்
எண்ணின்று மாந்தர் இறக்கின்ற வாறே (143)

ஒரே வகையான களிமண்ணால் ஆன பாத்திரங்கள் போன்றவையே ஆண் பெண் எனும் இருவகைப்பட்ட உடம்புகள். சூளையில் சுடாத இப்பாத்திரங்கள் திண்ணென வலிமை வாய்ந்தவையே. தீவினைகள் நிறைந்த பாத்திரங்களே. ஆனால் வானிலிருந்து மழை நீர் அவை மீது பெய்தால் அவை மீண்டும் மண்ணாகி விடுவதைப்போலவே மாந்தர்கள் கணக்கின்றி மாண்டு போகின்றனர்.

37. பண்டம்பெய் கூரை பழகிவிழுந் தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செல்லார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே (144)

பலப்பல வகைப்பட்ட இருவினைகளாம் பண்டங்கள் பெய்து வைத்துள்ள இந்தக் குடிசையாகிய உடல் வினைகளுடன் வாழ்நாளெல்லாம் பழகி ஆண்டு அனுபவித்து அது இறந்து விட்ட காலத்திலே, நம்மிடை நம்மோடு நம் உழைப்பை உண்டு அனுபவித்த மனைவியும் மக்களும் நம் பின் வரமாட்டார்கள். நாம் நம் வாழ்நாளில் கைக்கொண்ட விரதங்களின் பயன்களும், நாம் அடைந்த ஞானமுமே நம்முடன் வரும். பிற எதுவும் அந்த பிரிந்த உயிரின் பின்னே நெருங்கிப் போவதில்லை.

38. ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேசினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே (145)

உயிர் நீங்கிய உடலின் மீது சுற்றத்தார் ஊராரெல்லாம் கூடி ஒலிக்க அழுது, உயிர் போகும்முன் சூட்டப்பட்டிருந்த

*உயிர் நீங்கிய உடலின்மீது சுற்றத்தார் ஊராரெல்லாம் கூடி ஒலிக்க அழுது, உயிர் போகுமுன் சூட்டப் பட்டிருந்த பேரைச் சொல்லாமல் "பிணத்தைத் தூக்குங்கள்" எனப் பிணம் என்பதாகப் பெயர்ச்சூட்டி, சூரைமுட் புதர்கள் மண்டிக் கிடக்கும் சுடுகாட்டுக்குக் கொண்டு போய் சுட்டுவிட்டு, வரும் வழியிலேயே நீரினில் தலைமூழ்கி விட்டுச், செத்த அந்த உயிரின் நினைப்பை ஒழிந்தவராவார்கள்.*

***39.** அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்*
*மடக்கொடி யாரொடு மந்தணம் கொண்டார்*
*இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்*
*கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தாரே (148)*

*தன் மனைவி அடை என்னும் சிற்றுண்டியைச் செய்து வைத்தார். அந்த உணவினைக் கணவன் உண்டான். பிறகு சிலநேரம் தன் மனைவியோடு இரகசிய உரையாடல் நடந்தது. அப்பொழுது ஐயோ எனது இடது மார்பு ஏதோ சிறிது நோவெடுக்கின்றதே என்றான். இப்படிச் சொன்ன கணவன் காலை நீட்டிப் படுத்தான். படுத்தபடியே இறந்து விட்டான்.*

***40.** மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது*
*மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேகினான்*
*மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினான்*
*சென்றத்தா வென்னத் திரிந்திலன் தானே (149)*

*ஊர் நடுவிலே உள்ள மன்றத்திலே இறந்துவிட்ட இந்த நம்பி மாடிவீடு அமைத்தான். இந்த மன்றிலேதான் பல்லக்கு பெற்று அதில் அமர்ந்து ஏகினான். இந்த மன்றத்திடை நின்று அவன் முக்கோடி தானம் செய்தான். இப்போது இறந்த பின், சென்று விட்ட 'அத்தா' என்று மகன் கூவியும் அவன் திரும்பி வரவே இல்லை. போய்விட்டான்.*

***41.** நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைவன்*
*காட்டுச் சிவிகைஒன் றேறிக் கடைமுறை*
*நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட*
*நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே (153)*

மேலே சொன்னபடி மாடம் எடுத்துப் பல்லக்கில் ஏறி முக்கோடி தானம் செய்த நம்பி, இந்த நாட்டுக்கே நாயகன். நம்முடைய ஊருக்கோ தலைவன். ஆனால் இப்பொழுது தன் கடைசி முறையாகக் காட்டு மரங்களால் செய்த சிவிகையாம் பாடையிலே ஏறி, நாட்டுள்ள மக்கள் தன்னைப் பின் தொடர்ந்து வரவும், முன்னே பறைகொட்டவும் சுடுகாடு என்னும் நாட்டுக்கு அந்த நம்பி நடக்கின்றான்.

**42. முப்பதும் முப்பதும் முப்பத்து அறுவரும்**
**செப்ப மதிலுடைக் கோயிலுள் வாழ்பவர்**
**செப்ப மதிலுடைக் கோயில் சிதைந்தபின்**
**ஒப்ப அனைவரும் ஓட்டெடுத் தார்களே** ***(154)***

மூன்று முப்பதும் ஆறும் சேர்ந்து 96. இந்தத் தொண்ணூற்றாறு தத்துவங்களும் செப்பமான மதில் அமைந்த இந்த உடலாகிய கோயிலுள்ளே வாழ்கின்றவராவர். இந்த செப்பமுடைய, மதிலமைந்த, கோயில் அழிந்த பின்னரோ, ஒருங்கே இந்தத் தொண்ணூற்றாறு தத்துவங்களும் இந்தக் கூட்டை விட்டு ஓட்டம் பிடித்தார்கள்.

***43. காக்கைக் கவரிலென்? கண்டார் பழிக்குலென்?***
***பாற்றுளி பெய்யிலென்? பல்லோர் பழிக்கிலென்?***
***தோற்பையுள் நின்று தொழிலுறச் செய்தூட்டும்***
***கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே*** ***(167)***

தோல்பை எனப்படும் இந்த உடம்புள்ளே நிலைத்து நின்று, இரு வினைகளும் கெடும்படிச் செய்து வினைப் பயன்களை ஊட்டுவிக்கும் - திருக்கூத்தாடும் - எம்பிரான் புறப்பட்டுப் போய்விட்ட இந்த வெறும் கூட்டைக், காக்கைகள் கவர்ந்துண்டால்தான் என்ன? பார்த்தவர்கள் பழித்துப் பேசினால்தான் என்ன? பால் துளி பெய்தால் என்ன? பலர் மெச்சிப் புகழ்ந்தால்தான் என்ன? ஒன்றுமே இல்லை.

## செல்வம் நிலையாமை

**44. தன்னது சாயை தனக்குத வாது கண்டு**
**என்னது மாடென்று இருப்பர்கள் ஏழைகள்**
**உன்னுயிர் போம் உடல் ஒக்கப் பிறந்தது**
**கண்ணது காண்ஒளி கண்டுகொள் வீரே** *(170)*

தனது நிழல் தனக்குச் சிறிதும் உதவாது என்பதை அறிந்தும் என்னுடையது இச் செல்வம் என்று கருதி இருப்பார்கள் அறிவிலிகள். உன்னுடைய உயிரோ போய் விடும். எனவே இந்த உடலோடு கூடவே பிறந்தது நம் கண். அது காணும் பேரொளியாம் இறைவனைக் கண்டு கொள்வீர்களாக.

(ஏழை = அறிவிலி; மாடு = செல்வம்)

**45. ஈட்டிய தேன்பூ மணங்கொண் டிரதமும்**
**கூட்டிக் கொணர்ந்துஒரு கொம்பிடை வைத்திடும்**
**ஒட்டித் துரந்திட் டதுவலியார் கொளக்**
**காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே** *(171)*

தேனீக்கள், மலர்களின் மணங்களைக் குறியாகக் கொண்டுச் சென்று தாம் சேகரித்த அனைத்தையும் கூட்டிக் கொணர்ந்து, ஒரு மரக்கிளையில் சேமித்து வைக்கும். வலிமை மிக்க மனிதர்கள், தேனீக்களை ஓட்டித் துரத்தித் தேனைக் கைக் கொள்வர். தாமே தேனின் இருப்பிடத்தைக் காட்டிக் கொடுத்து, அதைக் கைவிட்டுப் பிறர் அனுபவிக்க விட்டு ஓடியதைப் போல நம் செல்வமும் பிறர் அனுபவிக்க நாமும் உலகை விட்டுப் போய் விடுவோம்.

**46. வாழ்வும் மனைவியும் மக்கள் உடன் பிறந்**
**தாரும் அளவேது எமக்கென்பர் ஒண்பொருள்**
**மேவு அதனை விரிவுசெய் வார்கட்குக்**
**கூவுந் துணை ஒன்று கூடலுமாமே** *(174)*

தன் வாழ்வோடு இணைந்தவர்களும் மனைவியும் மக்களும் உடன் பிறந்தார்களும், நம் உயிர் போகும் காலத்தில் சொத்தில் எமக்குரிய பங்கு என்ன என்றே கேட்பார்கள். எனவே நம்மிடையே வந்த அந்தச் சிறந்த பொருட்செல்வம் அறவழியிலே தானத்தால் விரிவடையச் செய்வார்களுக்கு உயிர்த் துணையாகி நம்மைக் கூவி ஆட்கொள்ளும். ஒப்பற்ற துணைதான் நம்மைக் கூடலும் ஆகும்.

## இளமை நிலையாமை

47. கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டும் தேறார் விழிஇலா மாந்தர்
குழக்கன்று மூத்து ஒருதாய்ச் சிலநாளில்
விழக்கண்டும் தேறார் வியன்உல கோரே (177)

அழகிய உலகிலே வாழும் மாந்தர்கள், கிழக்கிலே தோன்றிய சூரியன் மேலெழுந்து ஓடி மேற்கே மறைவதைக் கண்டும் விழி இருந்தும் காணாதவர்களாய், இளமை நிலையாமையை உணர்கிலர். இளைய பசுக்கன்று மூத்து தாயாகி சில நாட்களான பின் அதுவும் இறந்து போகின்றது. இதைக் கண்டும் இளமை நிலையில்லை என்பதை தெளிவுறக் காணார் இவ்வுலகினர்.

48. பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலம் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலம் கடந்து அண்டம் ஊடறுத்தானடி
மேலும் கிடந்து விளம்புவன் நானே (181)

வாழ்நாள் காலம், குழவிப் பருவம், இளமைப் பருவம், கிழப் பருவம் என்று கழிவதைக் கண்டும் அந்த உண்மையை உலகோர் அறிவதில்லை. எனவே இந்த உலகனைத்தையும் கடந்து அண்டங்கள் அனைத்தையும் ஊடுருவித் தாண்டி உள்ள இறைவன் திருவடிகள் மேல் உள்ளம் பொருந்தி அதையே நான் பக்தி செய்வன்.

## உயிர் நிலையாமை

49. தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி எம்பெரு மானடி ஏத்தார்
அழைக்கின்ற போதறியார் அவர் தாமே (187)

குளிர்ச்சியான மரக் கொம்பிலே செந்தளிர்கள் தழைத்துள்ளன. அந்தக் கொம்பிலே தோன்றும் தளிர், இலை, பூ, இவைகள் யாவும் மரத்திலிருந்து கீழே விழுந்து அழிகின்றன. இதைக் கண்டும் மாந்தர்கள் எப்பிழையும் இல்லாமல் எத்தவறும் செய்யாமல், சிவனடியைப் போற்றமாட்டார்கள். காலன் அவர்களை அழைக்கின்ற காலத்தில் அவர்கள் செய்வதறியாது திகைப்பார்கள்.

50. ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது.
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவார்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலைவருத லால்
ஐவரும் அச்செய்யைக் காவல் விட்டாரே. (188)

பஞ்ச பூதங்களால் ஆன இவ்வுடம்பாம் ஒரு வயல் (நிலம்) நல் பழவினையாம் பயிரை வளரவிட்டு விளைந்து கிடந்தது. அந்த ஐவருமோ அந்த விளைநிலத்தைப் பாதுகாத்து வந்தனர். ஐவர்களின் தலைவனாகிய இறைவன் உடம்பினுள் உள்ள ஆத்மாவுக்கு ஓலை அனுப்பி அந்த ஓலை வந்த உடனே அந்தப் பஞ்ச பூதங்களும் அந்த விளைநிலைத்தைக் காவல் காப்பதை விட்டு ஓடிவிட்டார்கள்.

51. அவ்வியம்பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்வியனாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்வியனாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விக் கொடுத்துண்மின் தலைப்பட்ட போதே (196)

பொறாமைச் சொற்களைப் பேசி, அறநெறி கெட பிறவழி நிற்க வேண்டா. மிகக் கொடியனாகிப் பிறர் பொருளை அபகரிக்காதீர். செம்மை சான்ற குணம் உடையவர்களாய் நீங்கள் சிறப்போடு உண்ணும் காலத்திலே, வாழ்விலே வறுமையுற்றவர்கள் எதிர்ப்படும்போது ஓர் அகப்பை உணவையேனும் கொடுத்து உண்ணுங்கள்.

அவ்வியம் - பொறாமை; வெவ்வியன் - கொடியன்; தவ்வி - அகப்பை

## கொல்லாமை

**52. கொலையே களவுகள் காமம் பொய்கூறல்**
**மலைவான பாதகமாம் அவை நீக்கித்**
**தலையாம் சிவனடி சார்ந்தின்பம் சார்ந்தோர்க்கு**
**இலையாம் இவைஞானானந்தத் திருத்தலே (200)**

கொலை செய்தல், பிறர்பொருளைத் திருடுதல், காம வசப்படுதல், பொய்க் கூறுதல் ஆகிய இவைகள் அனைத்தையும் நம்மிடமிருந்து விலக்கி, மேலான சிவபிரான் திருவடிகளை அடைந்து அந்தச் சிவானந்தத்தை அடைந்தவர்களுக்கு அதற்கு மாறான நரகத் துன்பம் இல்லை. இந்த நீக்கலும் அடைதலுமாகிய இவைதாம் ஞானானந்தத்தில் நிலை பெற்றிருத்தல் ஆகும்.

## அந்தணர் ஒழுக்கம்

**53. வேதாந்தம் கேட்கவிரும்பிய வேதியர்**
**வேதாந்தம் கேட்டுந்தம் வேட்கை ஒழிந்திலர்**
**வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்**
**வேதாந்தம் கேட்டவர் வேட்கை விட்டாரே (229)**

வேதாந்தத் தத்துவ ஞானத்தைக் கேட்க விரும்பிய வேதியர்கள் அதைக் கேட்டும் தம் உலக அவாக்களை ஒழித்த பாடில்லை. வேதாந்தமென்பது ஆசை அற்ற நிலையில்

யுமைதலே. எனவே வேதாந்தத்தை உள்ளபடி கேட்டுணர்ந்தவர்களே தம் ஆசையை அறுத்தவர்கள் ஆவார்கள்.

54. **நூலும் சிகையும் நுவலில் பிரம்மமோ**
**நூலது கார்ப்பாசம் நுண்சிகை கேசமாம்.**
**நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்**
**நூலுடை அந்தணர் காணும் நுவலிலே** *(230)*

பூணூல் அணிந்திருத்தலும், முடியிலே உச்சிக்குடுமி உடைமையுந்தான் பிராமணர்களின் அடையாளமோ? நூல் என்பது பஞ்சினால் ஆன நூல்தான். சிறு குடுமியோ தலையிலே வளர்ந்துள்ள சிறு மயிர்த் திரள். மாறாக நூல் என்பதுதான் வேதாந்த நூல்களே ஆகும். நுண்மையான சிகை என்பதுதான் ஞானத்தை உணர்த்தும். பூணூல் அணிந்துள்ள அந்தணர்கள், சொல்லுமிடத்து, இதை உணர்ந்தறிய வேண்டும்.

55. **சத்தியம் இன்றித் தனிஞானம் தானின்றி**
**ஒத்தவிடயம் விட்டுஒரும் உணர்வின்றிப்**
**பத்தியம்இன்றிப் பரன்உண்மை இன்றிப்**
**பித்தேறும் மூடர்பிராமணர் தாமன்றே** *(231)*

மெய்யுணர்தலாம் உண்மையை உணர்ந்தறியும் தன்மை இல்லாமல், ஒப்பற்ற சிவ ஞானத்தை அடைதலும் இல்லாமல், உள்ளத்தோடு ஒத்துப் போகும் விஷய சுகங்களைத் துறத்தலும், சிந்தித்து அறியும் திறனும் இல்லாமல், பத்தியும் இல்லாமல், சிவபிரானாம் பரப்பிரம்மத்தின் உண்மை நிலையும் அறிதலில்லாமல், சாதி, சமயச் சடங்கு, ஆசாரம் என்று பித்தேறி வாது பேசி வாழும் மூடர்கள் பிராமணர் அல்லர்.

## இராச தோடம்

56. **கல்லா அரசனும் காலனும் நேரொப்பர்**
**கல்லா அரசனின் காலன் மிகநல்லன்**
**கல்லா அரசன் அறம்ஓரான் கொல்லென்பான்**
**நல்லாரைக் காலன் நணுகி நில்லானே** *(238)*

கல்லாத மன்னவன் இயமனை ஒத்தவன். மற்று கல்லா அரசனிலும் காலனான இயமன் மிக நல்லவன். ஏனெனில் கல்லாத அரசன் நல்லவர்களின் அறச் செயலை எண்ணாமல் கொலை செய் என்பான். ஆனால் நல்லவர்களை இயமன் அணுகமாட்டான்.

**57. மூடம் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும்புவியும் பெருவாழ்வும் மன்னனும்
பீடொன்று இலனாகும் ஆதலால் பேர்த்துணர்ந்து
ஆடம்பர நூல்சிகை அறுத் தால்நன்றே (241)**

பிறவிக்கு வித்தாகிய அறியாமையை ஒழிக்காதவர்கள், உச்சிக் குடுமியும் பூணூலும் தம் சிறந்த சின்னங்களாக - பொய் வேடமாக - அணிந்து கொண்டால் உலகம் வாட்டமடையும். பெருமைமிக்க வாழ்வுடைய அரசனும் தன் பெருமை குன்றி ஏதுமிலான் ஆவான். ஆகையால் அரசன் இவைகளை மீட்டும் மீட்டும் ஆராய்ந்து பொய் வேடமாக அணிந்த பூணூலையும் உச்சிக் குடுமியையும் அறுத்து விடுதலே நன்று.

**58. கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றி
பால்கொண்டு சோமன் முகம்பற்றி உண்ணாதோர்
மால்கொண்டு தேறலை உண்ணும் மருளரை
மேல்கொண்டு தண்டம்செய் வேந்தன் கடனே (246)**

மூலாதாரத்திலே சுருண்ட பாம்பு வடிவமாகி, உறங்கிக் கிடக்கும் குண்டலி சக்தியை, பிராண வாயுவின் இயக்கமாம் பிராணாயாமப் பயிற்சியால் கட்டி, மூலக் கனலைக் கொண்டு, அதை மேலே மேலே சுவாதிட்டானம் மணி பூரகம் அனாகதம், விசுத்தி என்று படிப்படியாக மேலேற்றி, ஆறாவது ஆதாரமான ஆக்ஞையில் அந்தக் குண்டலி சக்தியைச் செலுத்த, அங்கு அது பொருந்தி நிற்க, அப்போது அங்கு ஊறும் அமுத தாரையினை சந்திரகலையோடு சேர்த்து அருந்தாமல், மயக்கம் கொண்டு கள்ளைக் குடிக்கும் அறிவு மருண்டவர்களை, மேற்சென்று தண்டனை செய்தல் வேந்தன் கடனாகும்.

*கால் - காற்று; கனல் - மூலக்கனல்: பால் = அமுததாரை: சோமன் = சந்திரன்.*

## தானச் சிறப்பு

**59. ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்**
**பார்த்திருந்து உண்மின் பழம்பொருள் போற்றன்மின்**
**வேட்கையுடையீர் விரைந்து ஒல்லை உண்ணன்மின்**
**காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே (250)**

யாவருக்கும் கொடுங்கள். அவர் இவர் என்று எண்ணி வேற்றுமை பார்க்க வேண்டா. உணவு உட்கொள்ளுமுன் நம்மை நாடி, உண்டு பசியாற வருபவர் யார் எனப் பார்த்து உண்ணுங்கள். பரம்பரையான பழைய பொருளாயிற்றே எனக் கருதி அதைப் பாதுகாத்து வைக்காதீர்கள். ஆசை வயப்பட்டவர்களே! உணவை விரைந்து அவசரமாக உண்ணாதீர்கள். காக்கை தன் இனத்தைக் கரைந்து உண்ணும் நேரத்தைக் கருதி உண்ணுவீர்களாக.

**60. யாவர்க்குமாம் இறைவற்குஒரு பச்சிலை**
**யாவர்க்குமாம் பசுவுக்கு ஒருவாயுறை**
**யாவர்க்குமாம் உண்ணும்போது ஒருகைப்பிடி**
**யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே (252)**

இறைவனை ஒரு பச்சிலை இட்டு வழிபடுதல் எல்லாராலும் முடியும் ஒன்றே. அங்ஙனமே பசுவுக்கு ஒரு வாயுணவு அளித்தலும், தாம் உண்ணும்போது வந்து இரந்தவர்க்கு ஒரு கைப்பிடி உணவு அளித்தலும், பிறரிடத்தில் இனிமையான சொல்லாடலும் யாவராலும் இயலக் கூடிய ஒன்றே ஆகும்.

## அன்புடைமை

**61. அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்தி ருப்பாரே (270)**

அன்பு வேறு சிவம் வேறு என்று கருதுபவர்கள் அறிவிலிகள். அன்புதான் சிவமாக விளங்குகின்றது என்பதை

யாரும் அறிந்திலர். அங்ஙனம் அன்புதான் சிவமாகிறது என்பதை அறிந்தவரானால், அன்பே சிவமாக இருப்பதை நுகர்ந்து இனிமையாக இருப்பர்.

**62. என்பே விறகா இறைச்சி அறுத்திட்டு**
**பொன்போல் கனலில்பொரிய வறுப்பினும்**
**அன்போடுருகி அகங்குழை வார்க்கன்றி**
**என்போல் மணியினை எய்ய ஒண்ணாதே (272)**

தம்முடைய எலும்பையே விறகாக்கி எரித்து, தம்முடைய உடல் தசைகளை எல்லாம் அறுத்து, எரியும் பொன் போன்ற தீயிலே பொரிய வருத்துகின்றதைப் போன்ற கடுந்தவத்தால் தம்மையே சித்திரவதைக்குட்படுத்தும் அவர்களாலும் இறைவனை அடைய முடியாது. ஆனால் நெஞ்சத்தில் பக்தி எனும் அன்பால் தம் உள்ளம் உருகி அவனை வழிபடுபவர்களால் மட்டுமே, என்னைப்போல் ஒப்பற்ற மாணிக்கமாம் சிவத்தை எய்த முடியும்.

**63. என்அன்பு உருக்கிஇறைவனை ஏத்துமின்**
**முன்அன்பு உருக்கி முதல்வனை நாடுமின்**
**பின்அன்பு உருக்கி பெருந்தகை நந்தியும்**
**தன்அன்பு எனக்கே தலைநின்ற வாறே (274)**

என் அன்பினை உருக்குபவனான இறைவனையே போற்றுங்கள். அதற்கு முன்னதாகவே உங்கள் அன்பினை உருக்கி முதல்வனை நாடுங்கள். அன்பின் சிவபிரான் என்னை ஏற்று, என் அன்பினை உருக்கிவிட பெருந்தகை வாய்ந்த நந்திப் பிரானும் தன் அன்பை எனக்குத் தலையாக நிலைத்திருக்கச் செய்தான்.

**64. தானொருகாலம் சயம்புவென் றேத்தினும்**
**வானொருகாலம் வழித்துணையாய் நிற்கும்**
**தேனொருபால் திகழ்கொன்றை அணிந்தவன்**
**தானொருவண்ணம் என்அன்பின் நின்றானே (275)**

நாம் ஒருமுறை சயம்புவே, சிவனே என்று ஏத்தித் தொழுதால், அந்த மகத்தானவன் ஒரு காலத்திலே வழித்துணையாக நிற்பான். தேனான உமையம்மையை ஒரு பாகம் வைத்துக் கொன்றை அணிந்த சிவபிரான் என் அன்பிலே ஒரு வண்ணமாகி நிலைத்துள்ளான்.

**65. கருத்துறு செம்பொற் காய்கதிர்ச் சோதி**
**இருத்தியும் வைத்தும் இறைவ என்றேத்தியும்**
**அருத்தியுள் ஈசனை ஆரருள் வேண்டில்**
**விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோவே (277)**

தம் கருத்திலே உறையும் செம்பொன் வடிவான சிவனை, காய்ந்து கதிர்ஒளி வீசும் ஜோதியை, நம் மனத்திலே இருத்தியும் தங்க வைத்தும், இறைவனே சிவபெருமானே என்று ஏத்தியும், அன்பினால் உள்ளத்திலே ஈசனை வைத்தும், அவனது பெறுவதற்கரிய அருள் தன்மையை வேண்டினால் விண்ணுலகில் உள்ள தேவர்களின் தேவன் சித்த சுத்தியுடன் கூடிய சேதன வளர்ச்சியை நமக்குக் கொடுத்தருள்வான்.

**66. நித்தலும் துஞ்சும் பிறப்பையும் செய்தவன்**
**வைத்த பரிசறிந் தேயும் மனிதர்கள்**
**இச்சை யுள்ளேவைப்பர் எந்தை பிரான்என்று**
**நச்சியே அண்ணலை நாடுகி லாரே (278)**

நாள்தோறும் மனிதர்கள் இறக்கின்றனர். நாள்தோறும் குழந்தைகள் பிறக்கின்றன. இப்படி மக்களுக்குப் பிறப்பொடு இறப்பையும் வைத்தவன் இறைவன். இறைவன் ஏன் அப்படி பிறப் பிறப்பென்னும் சகடத்திலே உழல்விக்கிறான்? பிறவிகள் தோறும் சிறிது சிறிதாக பாசான்மாவை சுத்தான்மாவாக மாற்றவே, இறைவன் உலகையும் பல பிறவிகளையும் படைத்திருக்கிறான். இதை அறிந்தும் மனிதர்கள் ஈசனிடத்திலே அருள்பெற நாடவில்லை. மாறாக இச்சையிலே தம் சிந்தையை நிலை நிறுத்துவார்கள்.

67. அன்பின் உள்ளான் புறத்தான் உடலாயுளான்
முன்பின் உள்ளான் முனிவர்க்கும் பிரான் அவன்
அன்பினுள் ஆகிஅமரும் அரும்பொருள்
அன்பின் உள்ளார்க்கே அணைதுணை யாமே (279)

இறைவன் அன்பின் உள்ளே இருக்கிறான். புறத்தும் எல்லா இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்களிலும் உள்ளான். அவனே உடலாக இருக்கிறான் (உடல் பஞ்ச பூத சேர்க்கை. பஞ்ச பூதமும் அவன் வடிவமே). அவன் நம்முன்னே உலகமாகியும் அதனிலே நிலவும் ஜீவ ராசிகளாகவும் இருக்கிறான். நம் பின்னே கட்புலனுக்குத் தோன்றாத அந்தர்யாமியாக உள்ளான். அவன் உலகைத் துறந்த உண்மைத் துறவிகளாம் முனிவர்களுக்கும் தலைவன். அவன் நம் அன்பினுள்ளே அன்பாக வீற்றிருக்கும் அரும்பொருள். எனவே அவன் அன்பினைத் தம்முள்ளத்தே கொண்டு, அந்த அன்பே உயிராகி வாழ்பவர்களுக்கே துணையாகி நின்று அணைத்துக் கொள்வான்.

68. இன்பப் பிறவிக்கு இயல்வது செய்தவன்
துன்பப் பிறவி தொழில் பல என்னினும்
அன்பிற் கலவிசெய்து ஆதிப் பிரான் வைத்த
முன்பிப் பிறவி முடிவது தானே. (281)

நம்முடைய பேரின்பமயமான பிறவிக்கு ஏதுவானவற்றை அளிக்கவே இறைவன் முற்படுகிறான். இந்தத் துன்பமான பிறவியிலே அனுபவிக்க வேண்டிய தொழில் வினைகள் பலவாயினும், நாம் சிவனாகிய ஆதிப்பிரான் அன்பினால் நம்மைத்தானே வந்தாட் கொண்டு, நம்மில் ஒன்றறக் கலந்து நமக்கென வைத்த முன் வினைப்பயனாகிய இப்பிறவியை ஒரு முடிவுக்குக் கொணர்வான்.

69. உற்றுநின் றாரொடும் அத்தக சோதியை
சித்தர்கள் என்றும் தெரிந்தறி வாரில்லை
பத்திமை யாலே பணிந்தடியார் தொழ
முத்தி கொடுத்தவர் முன்பு நின்றானே (284)

தியானத்திலே ஒரே சிந்தையாய் உற்று நின்றவர்களாம் ஞானிகளுடன் விளங்கும் அந்த அருட் ஜோதி வடிவனான சிவத்தைச் சித்தர்கள் கூட எக்காலத்தும் தெரிந்துணர்ந்து அறிதல் இலர். ஆனால், அச்சிவன் தான், பத்தி உணர்வால் தன்னுடைய அடியார்கள் பணிந்தேத்த, அவர்கட்கு முத்தி நிலை அளித்து அவர்முன் நின்று காட்சி தருகிறான்.

சித்தர்கள் = சித்துவிளையாடல் செய்பவர்; பத்தர்கள் தன்னையே இழந்த பத்தர்கள்.

70. நம்பனை நானாவிதப் பொருளாகு மென்று
உம்பரில் வானவர் ஓதும் தலைவனை
இன்புனை இன்பத்து இடைநின்று இரதிக்கும்
அன்பனை யாரும் அறிய கில்லாரே (286)

பரம்பொருளாகிய சிவனே நானாவிதப் பொருளான இவ்வண்டமும் உயிரினங்களும் ஆகும் என்று மேல் உலகில் உள்ள வானோர்களும் ஏத்துகின்றனர். அந்தத் தலைவனை, இன்பவடிவானவனை, இன்பத்தின் இடையிலே நின்று அதை உருசிக்கின்ற அன்பு மயமானவனை, யாருமே அறியாமல் இருக்கின்றார்களே.

நம்பன் = கடவுள் ; இரதித்தல் = உருசித்தல்

71. விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியை
தொட்டுத் தொடர்வன் தொலையாப் பெருமையை
எட்டும் என்ஆருயி ராய்நின்ற ஈசனை
மட்டுக் கலப்பது மஞ்சன மாமே (289)

மேதகு சோதி வடிவினனான இறைவனை விட்டு விட்டுப் பிடிப்பது ஏன்? அந்தத் தொலைவில்லா - அழிவில்லாத பெருமை மிக்க ஈசன் திருவடிகளைத் தொட்டு அதை விடாது தொடர்ந்து செல்வேன். அந்த ஈசன் எனக்கு எட்டுகின்ற

தொலைவிலே உள்ள என் ஆருயிராய் அல்லவோ நின்றுள்ளான். அந்தச் சிவானந்த தேறலிலே (தேனிலே) சென்று ஒன்றறக் கலப்பதுதான் எனக்குத் திருமஞ்சனமாகும்.

மட்டு = தேன் (தேறல்) மஞ்சனம் = திருமுழுக்காட்டு

## கல்வி

**72. நிற்கின்ற போதே நிலையுடையான் கழல்**
**கற்கின்ற செய்மின் கழிந்தறும் பாவங்கள்**
**சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்**
**மற்றொன்றில்லாத மணிவிளக் காமே (292)**

உடலிலே உயிர் நிலைத்து நிற்கின்ற காலத்திலேயே எக்காலும் நிலைத்து நிற்கின்ற ஈசன் பாதங்களைப் பற்றிய திருவடி ஞானத்தைக் கற்கின்ற தொழிலைச் செய்மின். அதனால் உங்களது பாவங்கள் தொலையும் (கழிந்து + அறும்) அவனைச் சொற்குற்றம் இல்லாமல் ஏத்தித் தொழுங்கள். அப்படித் தொழுத பின்னர் தானன்றி வேறில்லாத தன்மையனாய், ஞான மாணிக்க விளக்க சோதியாகி உம் உள்ளத்திலே அவன் பொலிவான்.

**73. துணை அது வாய்வரும் தூயநற் சோதி**
**துணை அது வாய்வரும் தூயநற் சொல்லாம்**
**துணை அது வாய்வரும் தூயநற் கந்தம்**
**துணை அது வாய்வரும் தூயநற் கல்வியே. (294)**

தூய்மைமிக்க நல்ல சோதிவடிவான ஈசன் திருவடிகளே நம் ஆன்மாவுக்குத் துணையாகி நின்று நம்முடனே வரும். தூய நற்சொல்லாகிய ஓரெழுத்து, ஒரு மந்திரமான ஓம் என்னும் பிரணவ மந்திரமே நமக்கு எக்காலத்தும் துணையாகி வரும். தூய்மை மிக்க நல்ல வாசனா மலமே அடுத்த பிறவிக்கு நமக்குத் துணையாகித் தொடர்ந்து வரும். நல்ல கல்வியாகிய பதிஞானக் கல்வியே அடுத்தடுத்து வரும் பிறவிகள் தோறும் துணையாகும்.

74. பற்றது பற்றில் பரமனைப் பற்றுமின்
முற்றது எல்லா முதல்வன் அருள் பெறின்
இற்ற விரகில் இளைரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்று நின்றாரே (298)

இவ்வுலகத்தில் எவ்வகைப் பற்றும் இருத்தலாகாது. அப்படிப் பற்ற வேண்டின் ஈசனையே பற்றிக் கொள்ளுங்கள். அந்த முதல்வனாகிய சிவன் அருளைப் பெற்றால் எல்லாம் முற்றுப் பெறும். வல்லமைமிக்க இந்த உபாயம் அறிந்தவர்கள் ஒளி விளங்கும் வானவர்களே, இதைக் கண்டுப் பற்றினர். எனவே பதிஞானக் கல்வியைக் கற்றவர்கள் பேரின்பம் அடைந்து வாழ்வார்கள்.

75. கடல்உடை யான்மலை யான்ஐந்து பூதத்து
உடல்உடை யான் பல ஊழிதோ றூழி
அடல்விடை ஏறும் அமரர்கள் நாதன்
இடமுடை யார்நெஞ்சத் தில் இருந்தானே (299)

கடலையே தனக்கு ஆடையாக உடையவன், இமய மலையையே தன் இருப்பிடமாக உடையவன், ஐம் பூதங்களையே தன் உடலாக உடையவன் யாரோ, அவனே பலப்பல ஊழிகள்தோறும் போர்த்திறன் மிக்க விடையின் மீது ஏறி ஒடுக்கத் தொழிலாற்றும் ஒடுங்கியாவான். அவனே அமரர்கள் நாதன். அப்படிப்பட்டவனுக்கு மட்டுமே தன் உள்ளத்தில் இடமளித்து அவனை ஏற்றுக் கொண்டவர்களின் நெஞ்சத்திலே நிலைத்து நிற்பான் சிவன்.

## கேள்வி

76. அறங் கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்
மறங் கேட்டும் வானவர் மந்திரம் கேட்டும்
புறங்கேட்டும் பொன்னுரை மேனியெம் ஈசன்
திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே (300)

அறம் இன்னது என்று கேட்டுணர்ந்தும் செந்நெறி அந்தணர்கள் வாய்மொழியைக் கேட்டுணர்ந்தும் பாவமான தீச் செயல், தீச்சொல், தீய எண்ணங்கள் இவை எனக் கேட்டு

விலக்கியும், வானோர்களின் மந்திரங்களைக் கேட்டும், பிறமத நூல் கருத்துகளைக் கேட்டும், பொன்னார் மேனியான் சிவ பெருமானது திறங் கூறும் பதி நூல்கள் அனைத்தையும் கேட்டும், ஒழுகும், அதனால் அடையப்படும் பலன் சிவகதியே ஆகும்.

***77. தேவர் பிரான்தனை திவ்விய மூர்த்தியை***
***யாவர் ஒருவர் அறிவார் அறிந்தபின்***
***ஓதுமின் கேண்மின் உணர்மின் உணர்ந்தபின்***
***ஓதி உணர்ந்தவர் ஓங்கி நின்றாரே. (301)***

தேவர்கள் அனைவருக்கும் தலைவனான பரமேஸ்வரனைத், திவ்விய மூர்த்தியாகிய அவனை, எவர்தான் பொருளுணர்ந்து அறிவார்கள்? அப்படி உள்ளார்ந்து அறிந்த பின்னர் அவனையே ஓதுங்கள். அவன் புகழையே கேளுங்கள். அவனே உலகனைத்தும் புறத்தும் வியாபித்து அனைத்திலும் உயிர்க்கு உயிராய் இருப்பதை உணருங்கள். அவ்வாறு பதி ஞானத்தை நன்கு ஓதி உணர்ந்தவர்களே சிறந்தோங்கி விளங்குவார்கள்.

***78. உறுதுணை யாவது உயிரும் உடம்பும்***
***உறுதுணை யாவது உலகுறு கேள்வி***
***செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை***
***பெறுதுணை கேட்கில் பிறப்பில்லை தானே. (307)***

பிறவியாகிய நோயை ஒழிப்பதற்குத் துணையாக நிற்பது இந்த உயிரும் உயிர் உறையும் இவ்வுடலுமே ஆகும். உலகிலே உற்ற சிவஞானக் கேள்வியே நமக்கு உறுதுணையாக நிற்பதாகும். அதற்கு மேலானதாகப் பொருள் செறிந்த துணையாகி விளங்குவது கற்றல் கேட்டலால் எய்தும் பயனாகிய சிவனடிக்கே சிந்தை வைத்தலாம் சிவாநுபூதியேயாகும். அதன் மூலம் நாம் பெறுவதோ, உயர்ந்த துணையாகி அவன் நின்று, நமது பிறப்பிறப்பற்ற பெருநிலை எய்துவிப்பதே ஆகும்.

## கல்லாமை

79. வல்லார்கள் யாவரும் வழியொன்றி வாழ்கின்றார்
அல்லாதவர்கள் அறிவு பல என்பார்
எல்லா இடத்தும் உளன் எங்கள் தம்மிறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே. (311)

சிவஞானக் கல்வி கேள்வியில் வல்லவர்கள் சிவ நெறியை ஒன்றி வாழ்கின்றவர்க ளாவார்கள். மேற்கூறிய சிவஞானக் கல்வியாம் பதிஞானம் அற்றவர்கள் பசுஞானமாம் உலக அறிவைப் பற்றி நின்று, அறிவு பலவகைப்படும் என்பார்கள். எம் இறைவன் எல்லா இடத்திலும் நீக்கமற நிறைந்துள்ளான். ஞானமற்ற - கல்லாதவர்களோ அவனது கலந்துள்ள தன்மையை அறிய மாட்டார்கள்.

80. நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலைஎன் றுணர்வீர்காள்
எல்லா உயிர்க்கும் இறைவனே ஆயினும்
கல்லாதார் நெஞ்சத்து காண வொண்ணாதே. (312)

நில்லாத - நிலையற்ற - இந்த உலகத்தை நிலையானது என்றும் நில்லாத இவ்வுடலையே நிலையானது என்றும் தம் நெஞ்சத்திலே உணருகின்ற மாந்தர்களே! சிவபிரான் எல்லா உயிர்க்கும் இறைவனாகவே உள்ளான். ஆயினும் நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவு வாய்ந்த சிவஞானக் கல்வி கல்லாதார் நெஞ்சிலே அவனைக் காண முடியாது. (நிலை - உலகம்)

81. கணக்கறிந் தார்க்கு அன்றி காண ஒண்ணாது
கணக்கறிந் தார்க்கு அன்றி கைக்கூடாக் காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டு அண்ட நிற்கும்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந்தாரே. (316)

ஞான நூல்களைக் கற்று, உண்மையை உணர்ந்தவர்களே மெய்யறிவு பெற்றவர்களே - கணக்கறிந்தவர்கள். இப்படிப் பட்டவர்களுக்கல்லாமல் பிறருக்குக் காண ஒண்ணாதது அது.

இக்கணக்கறிந்தவர்க்கே இறைவனது தரிசனம் கிடைக்கும். இந்தத் தத்துவக் கணக்கறிந்து, திருவருள் உண்மை கண்டு, அது தம்மை நெருங்கி நிற்கும் கணக்கறிந்தவர்கள் தாம் கல்வி கற்றவராவார்.

**82. கல்லாத மூடரைக் காணவும் ஆகாது**
**கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன் அன்று**
**கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்.**
**கல்லாத மூடர் கருத்தறி யாரே.** *(317)*

சிவஞானக் கல்வியைக் கல்லாதவர்கள் அறிவிலிகள், மூடர்கள். இவர்கள் நன்னெறி விட்டுத் தீ நெறி செல்வதால் இவர்களைக் காணவும் கூடாது. இவர்கள் சொல் கேட்கவும் கூடாது. (அதுநம் கடமையன்று) இவர்களுக்குத் தம்மை ஒத்த அறிவிலிகளே நல்லவர்கள். இவர்கள் நல்லோர் கருத்தை அறியும் தன்மையற்றவர்கள்.

**83. கற்றும் சிவஞானம் இல்லாக் கலதிகள்**
**சுற்றமும் விடார் துரிசறார் மூடர்கள்**
**மற்றும் பலதிசை காணார் மதியிலோர்**
**கற்றன்பில் நிற்போர் கணக்கறிந் தார்களே.** *(318)*

பற்பல நூல்களைக் கற்றறிந்தும் சிவஞானம் அமையப் பெறாதவர்கள் மூடர்களே ஆவார்கள். அவர்கள் தம்மைப் பந்தப் படுத்தி நிற்கும் சுற்றத்தையும் பிற பந்தங்களையும் துறத்தல் இலர். தம் மன மாசுகளையும் களையமாட்டார். உலகின் பல திசைகள் தோறும் உள்ள பக்தர்கள் ஞானிகளின்

தன்மைகளை உள்ளபடி காண மாட்டார்கள். இவர்கள் மதியில்லாதவர்கள். மாறாகச் சிவஞான நூல்களைக் கற்றுச் சிவ பத்தியிலே திளைத்தவர்களோ தத்துவ ஞானக் கணக்கறிந்த சிவ யோகியர் ஆவர்.

**84. ஆதிப் பிரான் அமரர்க்கும் பரஞ்சுடர்**
**சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்**
**ஓதி உணர வல்லோம் என்பர் உள்நின்ற**
**சோதி நடத்தும் தொடர் வறியாரே (319)**

பரம்பொருள் ஆதிப்பிரான் அனைத்து அமரர்களுக்கும் மேலான சோதி வடிவானவன். தன் அடியவர்கள் தொடர்ந்து சென்று போற்றுகின்ற சோதி வடிவான பெருந்தெய்வம். அவனை ஓதி, நாம் உணர முடியும் என்று கருதுகின்றவர்களின் உள்ளத்தினுள்ளே சோதி வடிவாய் நின்று அவர்களை இயக்குகின்றான். அவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பினைப் பிறர் யாரும் அறிய மாட்டார்கள்.

## நடுவு நிலைமை

**85. நடுவு நின்றார்க் கன்றி ஞானமும் இல்லை**
**நடுவு நின்றார்க்கு நரகமும் இல்லை**
**நடுவு நின்றார் நல்ல தேவருமாவார்**
**நடுவு நின்றார்வழி நானும் நின்றேனே. (320)**

நியாயத்திலிருந்து சற்றும் வழுவாத நடுநிலை நின்ற வர்க்கே ஞானம் பிறக்குமே அல்லாது பிறர்க்கு ஞானம் உண்டாகாது. நடுநிலை நின்றவர்க்கு நரகத் துன்பம் இல்லை. அது மட்டுமின்றி நடு நின்றவர்கள் வானுறையும் தெய்வமாகவும் மக்களால் மதிக்கப்படுவார்கள். எனவே அப்படிப்பட்ட நல்ல நடுநிலையார்கள் வழியிலே நானும் நிற்கின்றேன்.

86. தோன்றிய எல்லாம் துடைப்பன் அவனன்றி
ஏன்று நின்றார்என்றும் ஈசன் இணையடி
மூன்று நின்றார் முதல்வன்திரு நாமத்தை
நான்று நின்றார் நடுவாகி நின்றாரே. (323)

இவ்வுலகத்திலே தோன்றிய எல்லாப் பொருள்களையும் துடைத்தழிப்பவன் அவனே. அவனுடைய நல்ல திருவருளை எய்தி நின்றவர்களும், அந்தப் பரமசிவனது இரண்டு மலர்ப் பாதங்களையும் முயன்று, தியானத்திலே நிலைபெற்று நின்றவர்களும், அவன் திருநாமமாகிய பஞ்சாட்சரத்தை உறுதியாகப் பற்றி நின்றவர்களும், நடு நின்றவர்களாவார்கள்.

ஏன்று = எய்தி: மூன்று = முயன்று; நான்று = பற்றி.

## கள்ளுண்ணாமை

87. உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்
வள்ளன்மை நாதன் அருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகம் சேர்வுறார்
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே. (328)

கள்ளுண்ணும் மாந்தர்கள் உள்ளத்தினுள்ளே நிலைத்து நின்ற உண்மைப் பொருளைச் சிந்தித்தல் இலர். அப்பதிப் பொருளை உணரமாட்டாமையின், பசுபாசம் என்னும் பொருள்களையும் உணரமாட்டார். வள்ளல் தன்மை மிக்க கருணாமூர்த்தியின் திருவருள்வழி நின்று வாழ்தலிலர். உண்மைப் பொருளான, தெளிந்த சிவஞான சிவபோகத்தையும் சேர மாட்டார்கள். எனவே இறைவனது சீரிய கருத்தினையும் அறிய மாட்டார்கள்.

89. சத்தன் அருள் தரில் சக்தி அருளுண்டாம்
சக்தி அருள்தரில் சத்தன் அருளுண்டாம்
சக்தி சிவமாம் இரண்டும்தன் உள்வைக்கச்
சத்தியம் எண்சித்தி தன்மையுமாமே. (333)

சத்தி வடிவமாகி நிற்கும் சத்தன் ஆகிய சிவபிரான் அருள் தந்தால் சத்தியாகிய பரையின் அருள் உண்டாகிவிடும். அவ்வண்ணமே சத்தியாம் அன்னை தன் அருளைத் தந்து விட்டால் சத்தனாம் அத்தன் அருள் உண்டாகிவிடும். இவ்வகையில் சத்தி சிவம் இரண்டையும் தம் சித்தத்திலே வழிபடுவார்க்கு மெய் உணர்வாம், உண்மையும் எண்வகைச் சத்திகளும் வாய்த்துப் பொருந்திவிடும்.

*எண்வகைச் சித்திகள்:- அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராசத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன.*

**90. தத்துவம் நீக்கி மருள் நீக்கித் தானாகிப்**
**பொய்த்தவம் நீக்கிமெய்ப் போகத்துட் போகியே**
**மெய்த்த சகமுண்டு விட்டுப் பேரானந்தச்**
**சித்திய தாக்கும் சிவானந்தத் தேறலே. (334)**

தொண்ணூற்றாறு தத்துவங்களின் தன்மைகளைக் கண்டறிந்து அவைகளை நீக்கிவிட்டு, மெய்யுணர்தலாம், தன்மையற்ற மயக்க நிலையாம் இருளை நீக்கித் தன்னை உணர்ந்து தானாகி, பொய்த்தவமாகிய வேள்வி முதலிய சடங்குகளை நீக்கி, திருவடி இன்பமாகிய போகத்துள்ளே சென்றடைந்து, அதனால் உண்மையான, உலகத்திலேயே, நாம் அடைய வேண்டிய, பதி ஞானமாகிய நுகர்ச்சியை உண்டு விட்டுப், பேரானந்தப் பெருவாழ்வாகிய சித்தியை உண்டாக்கும் சிவானந்தத் தேறலாகிய (தேன்) கள்.

## இரண்டாந் தந்திரம்

**91. அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்**
**முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்**
**முப்புரமாவது மும்மல காரியம்**
**அப்புரம் எய்தமை யார் அறி வாரே. (343)**

கங்கை நீரைத் தம் சிவந்த சடையிலே தாங்கிய ஆதியான மிகப் பழையோன், முப்புரங்களை எரிசெய்தான் என்று மூடர்கள் சொல்லுகிறார்கள். 'முப்புரம் என்பது யாதெனில்,

அது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களே. அவைகளை ஆன்மாவிலிருந்து நீக்கும் செயலே முப்புரம் செற்றதாகும். மற்று அந்த முப்புரங்களை அழித்த தன்மையினை அறிவார் யாருளர்.

**92. திரிகின்ற முப்புரம் செற்ற பிரானை**
**அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டா**
**புரிவடை யாளர்க்கு பொய்யலன் ஈசன்**
**பரிவொடு நின்று பரிசறி வானே (348)**

விண்ணிலே திரிதலைச் செய்கின்ற முப்புரங்களை எரித்து அழித்த் சிவபிரானை அணுகுதற்கு அரியவன் என்று நினைத்து மனத்தளர்ச்சியடைதல் வேண்டா. பேரன்பு என்னும் பக்தி உடையவர்களுக்கு ஈசன் பொய்த்தலிலன். உள்ளபடியே அவன் அருள் செய்வான். அவன் அன்போடு, உயிருக்கு உயிராய் நின்று நாம் வேண்டுவன அறிந்து அருள் செய்வான்.

திரிகின்ற முப்புரம் = மும்மல வசமாகி இயங்கும் உடல்.

**93. ஆதி யோடந்தம் இலாத பராபரன்**
**போதம தாகப் புணரும் பராபரை**
**சோதி அதனில் பரந்தோன்ற தோன்றுமாம்**
**தீதில் பராபரை பால்திகழ் நாதமே. (381)**

ஆதியும் அந்தமுமில்லாத பராபரப்பொருளான சிவ பெருமானுக்குப் பேரறிவுப் பெரும் பொருளாகக் கூடி நிற்கும் சக்தியே பராபரையாகும். சத்தி சிவம் கூடிய அச்சோதியாம் பேரொளியிலே சிவமூர்தம் தோன்றும். இதையே பரம் என்றும் கூறுவர். மற்று தீதற்ற பரையாம் சக்தியின் கூறாகி நாதம் தோன்றி நிற்கும்.

**94. நாதத்தில் விந்துவும் நாதவிந்துக் களில்**
**தீதற்றகம் வந்த சிவன் சக்தி என்னவே**
**பேதித்து ஞானம் கிரியை பிறத்தலால்**
**வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே. (382)**

நாதத்தில் இருந்து விந்து தோன்றும் (ஒலியிலிருந்து ஒளி தோன்றும்) நாத விந்துக்களிலிருந்துதான் மலமாசகன்ற அன்பர் உள்ளத்திலே பரம் தோன்றும். சிவன் சக்தி என அது இரண்டாக பேதித்து ஞானமும் - பேரறிவும்; கிரியையும் - பேராற்றலும்; அவற்றிலிருந்து பிறத்தலால் சொல்லப்பட்ட விச்சையாம் ஞானத்திலிருந்து விந்துவாம் பேரொளி பிறக்கும்.

## பேரொளி

**95. இல்லது சத்தி இடத்தனில் உண்டாகிக்**
**கல்லது போலக் கலந்துள் இருந்திடும்**
**வல்லது வாகவழி செய்த அப்பொருள்**
**சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே. (383)**

இல்+அது = தன, கரணம், புவனம் தோன்றக் காரணமாகி இடமாகி (இல்லாகி) இருப்பது மாயை. அம்மாயை சத்தியினிடத்தே உண்டாகும். மற்று அச்சத்திதான் கல் (மாணிக்கம்) போலவும், அதன் ஒளியைப் போலவும் சிவமாகவும் சத்தியாகவும் கலந்து உள்ளுக்குள்ளே நிலவி நிற்கும் மாயையை வல்லமை உடையதாகும்படி வழி செய்த அந்தச் சத்தியின் புகழைச் சொல்வதாயின் மிகத் தூராதி தூரமானது; எல்லையற்றதென்க.

**96. மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்**
**கானின்கண் நீரும் கலந்து கடினமாய்த்**
**தேனின்கண் ஐந்தும் செறிந்தைந்து பூதமாய்ப்**
**பூவின்கண் நின்று பொருந்தும் புவனமே. (385)**

மூலப்பகுதி எனப்படும் அசுத்த மாயையாம் மானிலிருந்து வான் தோன்றி, அதனில் வாயு வளர்ந்திடும். அதிலிருந்து தீயும் நீரும் கடினமான நிலமும் தோன்றும். இவற்றின் நிலைக்களமே ஓசை ஊறு சுவை நாற்றம் என்ப.

தேனாகிய இறைவன் திருவருளின்கண் இவ்வைந்தும் செறிந்து கூடி உலகிலும் உடலிலும் ஐந்து பூதமாகி நிலவுலகமாக நின்று உலகமாகப் பரிணமிக்கிறது.

(கானின் - கானலின் இடைக்குறை)

**97. புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி**
**புவனம் படைப்பார்க்கு புத்திரர் ஐவர்**
**புவனம் படைப்பானும் பூமிசை யானாய்**
**புவனம் படைப்பானப் புண்ணியன் தானே. (386)**

ஒருவனும் ஒருத்தியுமாகி (சிவனும் சத்தியுமாகி) நின்று இறைவன் இவ்வுலகத்தைப் படைக்கின்றான். அவ்வண்ணம் புவனம் படைப்பவருக்கோ ஐந்து மக்கள் உளர். (அவர்கள்முறையே பிரமன், மால், உருத்திரன், சதாசிவன், மகேச்சுரன் என்ப) படைத்தல் தொழில் செய்யும் சிவனே பிரமனாகி நின்று புவனத்தைப் படைத்தலால் அப்புண்ணிய மூர்த்தியே பிரமனாகத் தொழில் படுகிறான் என்க.

**98. உண்டுல கேழும் உமிழ்ந்தான் உடனாகி**
**அண்டத் தமரர் தலைவனும் ஆதியும்**
**கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும்**
**பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. (389)**

ஏழுலகங்களையும் உண்டு உமிழ்ந்தவனாகிய அரியும் அவன் உடன் வைத்தெண்ணப்படும் தேவர்களுக்கெல்லாம் தலைவனாகி விளங்கும் உருத்திரனும் ஆதியாம் பண்டைக் காலம் தொட்டு நான்கு தலைகளைக் கொண்ட பிரம்மதேவனும், ஆகிய ஐவரும் மிகப் பண்டைக் காலந்தொட்டு உலகைப் படைக்கும் காரணர்களாகச் சிவபெருமானால் முன்னே படைக்கப்பட்டவராவர்.

**99. ஒருவனுமே உலகேழும் படைத்தான்**
**ஒருவனுமே உலகேழும் அளித்தான்**
**ஒருவனுமே உலகேழும் துடைத்தான்**
**ஒருவனுமே உலகோடுயிர் தானே. (404)**

ஒப்பில்லாத சிவபெருமானே உலகங்கள் ஏழையும் படைத்தான். அவன்தானே உலகங்கள் ஏழையும் காத்தளிக்கிறான். அவன்தானே உலகங்கள் ஏழினையும் துடைத்துச் சங்கரிக்கின்றான். அவன் ஒருவனே உலகங்கள் அனைத்துமாய் உயிர்கள் அனைத்துமாய் விளங்குகின்றவன் என்க.

***100. ஓராயமே உலகேழும் படைப்பதும்***
***ஓராயமே உலகேழும் அளிப்பதும்***
***ஓராயமே உலகேழும் துடைப்பதும்***
***ஓராயமே உலகோடுயிர் தானே. (407)***

சிவமும் சத்தியும் இணைந்துள்ள நிலையாகிய ஓராயமே உலகேழும் படைப்பதும், அவைகளைக் காப்பதும், அவைகளைத் துடைத்து அழித்தலைச் செய்வதுமாகும். மற்று அந்த ஓராயமாகிய சத்தி சிவக்கலப்பே உலகத்தையும் உயிர்களையும் நின்று இயக்குவதாகும்.

***101. தானே திசையொடு தேவருமாய் நிற்கும்***
***தானே உடலுயிர் தத்துவமாய் நிற்கும்***
***தானே கடல்மலை ஆதியுமாய் நிற்கும்***
***தானே உலகில் தலைவனு மாமே. (412)***

சிவன் சத்தியோடு கூடிய அக்கலப்பே - அபின்னமான ஓராய நிலையே - திசைகள் அனைத்துமாகவும், தேவர்கள் அனைவர்களாகவும் நிற்பதாம் அவனே உடலாகவும் உயிராகவும், ஏனைய தத்துவங்களாகவும் நிற்பான். அவன் தானே கடல் மலை முதலாகிய உலகில் உள்ள எல்லாப் பொருளுமாய் நிற்பன். அவன்தானே இவை அனைத்துக்கும் தலைவனாகி நிற்பவனாவான்.

***102. அன்பும் அறிவும் அடக்கமுமாய் நிற்கும்***
***இன்பமும் இன்பக் கலவியுமாய் நிற்கும்***
***முன்புறு காலமும் ஊழியுமாய் நிற்கும்***
***அன்புற ஐந்தில் அமர்ந்து நின்றானே. (416)***

அன்புருவாகவும் அறிவுப் பேரொளியாகவும் அடக்க முடைத் தன்மையான உயர் பண்பாகவும் நிற்பவன் அவன். இன்ப நிலையும் அந்த இன்பக் கலவியிலே எய்துகின்ற பரமானந்தமாகவும் நிற்பவன் அவன். கணித்தற்கரிய, மனத்தால் நினைக்க ஒண்ணாத, காலவடிவாகவும், இனி வருங்காலத்து ஊழிக்காலமாகவும் நிற்பவன் அவன். அவன்தானே அன்பு வடிவாகி பஞ்ச பூதங்களாய் ஐந்திலே கலந்து நிற்பவனாவான். (ஐந்தாகிய பஞ்சாட்சரத்தில் அமர்ந்திருப்பவன் எனினுமாம்)

**103. உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை**
**உள்ளம் விட்டோரடி நீங்கா ஒருவனை**
**உள்ளமும் தானும் உடனே இருக்கினும்**
**உள்ளம் அவனை உருவறி யாதே. (431)**

நம்முள்ளத்திடத்தே நீங்காது நிலைபெற்று நிற்கும் ஒப்பற்றவனை, நம்முள்ளத்திலே பொருந்தியுள்ள சோதி வடிவானவனை, நம்முடைய உள்ளத்தைவிட்டு ஓரடியும் நீங்காமல் நிலைத்து நிற்கும் ஒப்பற்ற சிவபெருமானை உள்ளமெனும் (பசு) ஆன்மாவும் தானாகிய பதியும் உடனாகக் கலந்து இருப்பினும், அந்தப் பதியாகிய சிவபெருமானை நம் உள்ளம் உள்ளபடி அறியமாட்டாது.

**104. எட்டுத் திசையும் எறிகின்ற காற் றொடு**
**வட்டத் திரையனல் மாநிலம் ஆகாய**
**ஒட்டி உயிர்நிலை என்னும் இக் காயப்பை**
**கட்டி அவிழ்ப்பன் கண்ணுதல் தானே. (441)**

எட்டுத் திசைகளிலும் பரவி வீசிக் கொண்டிருக்கும் காற்று, வட்டமிட்டு உலகை ஆடையாகச் சூழ்ந்திருப்பது கடல் நீர். அதோடு நெருப்பு ஆகாயம் எனும் இவைகளது கூட்டுறவால் ஆனதே உயிர்நிலை. இதையே காயப்பை என்கிறோம். இந்தக் காயப்பையினை இருவினையால் கட்டுபவனும், இருவினை ஒப்பு உற்ற காலத்திலே

அவிழ்ப்பவனும் நெற்றியினிடத்தே கண்ணை உடைய சிவபெருமானே ஆவன்.

**105. ஆரும் அறியாத அண்டத் திருவுருப்**
**பார் முதலாகப் பயிலும் கடத்திலே**
**நீரினில் பால் போல் நிற்கின்ற நேர்மையைச்**
**சோராமல் காக்கும் சுகம் அறிந்தேனே. (450)**

அவன் யாராலும் அறிய ஒண்ணாதவன். இந்த அண்டத்தையே தன் திருவுருவமாகக் கொண்டவன் சிவபெருமான். அவன் இந்த மண் முதலாக எண்ணப்படும் பஞ்ச பூதங்களில் பயின்று விளங்குபவன். அவன் குடத்திலே உள்ள தூய நீரிலே பால் கலந்திருப்பதைப் போன்று கலந்து நிற்கும் தன்மையன். அத்தன்மையினைச் சிறிதும் மறத்தலின்றித் துய்க்கும் பேரின்ப நிலையை, அத்திருவருளால் அறிந்துள்ளேன் யான்.

## கரு உற்பத்தி

**106. கண்ணுதல் நாமம் கலந்துடம் பாயிடும்**
**பண்ணுதல் செய்தப் பசுபாசம் நீங்கி**
**எண்ணிய வேதம் இசைத்த பரப்பினை**
**மண் முதலாக வகுத்து வைத்தானே. (474)**

கண்ணுதலானாகிய சிவபெருமான் திருநாமமாகிய திருவைந்தெழுத்தே ஒன்று கலந்து இந்த உடம்பாக உருவெடுக்கும்படிச் செய்து வைத்துப் பின் இந்த உடம்புள்ளே உறைகின்ற ஆன்மாவின், பசு ஞானம், பாச ஞானம், நீங்கும்படியாக எண்ணத்தக்க வேத ஆகம நெறிகளாய்ச் சொல்லிய பரப்பினையும் சொல்லி வைத்து, மண்முதலாக-தனு, கரண புவன போகங்களாக இறைவனே வகுத்து வைத்தான்.

107. குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக் கூட்டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின்றது போல்
இயக்கில்லை போக்கில்லை ஏனென்ப தில்லை
மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே. (488)

குயில் தன் முட்டையைக் காக்கைக் கூட்டிலே இட்டுவிட அதைக் காக்கையும் தன் முட்டை என்றே சந்தேகமின்றி நினைத்து அடைகாத்துக் குஞ்சு பொறிக்கின்றது. அதைப்போலவே இறைவனும் (குயிலும்) தன் முட்டையை மனித யோனிக்குள் இட அதைத் தன் முட்டை எனவே சந்தேகமின்றி ஏற்று, இயக்கமோ, போக்குவரவோ, ஏன், எப்படி என்ற ஐயப்பாடோ இன்றி, காக்கை வளர்க்கின்றதைப் போல மயக்கத்தால் மக்கள் தம் மக்களை வளர்க்கின்றனர்.

108. பரத்திற் கரைந்து பதிந்த நற்காயம்
உருத்தரித் திவ்வுடல் ஓங்கிட வேண்டித்
திரைக்கடல் உப்புத் திரண்டது போலத்
திரித்துப் பிறக்கும் திருவரு ளாலே. (491)

பரத்தினிலே கரைந்து மறைந்து நின்று உருவாகி நிற்கும் இவ்வுடல். இது உருத்தரித்து ஓங்கி நிற்கும் வண்ணம், திரை கடலிலே தண்ணீரோடு கலந்துள்ள உப்புத் திரண்டு நின்று உப்பு எனும் பருப்பொருளாக உருமாறுவதைப்போல, இறைவனது சங்கற்பத்தினால் மீண்டும் மீண்டும், இந்த ஆன்மா பிறவி எடுக்கும்.

## மூவகைச் சீவர்

109. சக்தி சிவன் விளையாட்டால் உயிராக்கி
ஒத்த இருமாயா கூட்டத்திடை பூட்டிச்
சுத்த மதாகும் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே. (492)

சக்தியும் சிவனும் ஒருங்கிணைந்து தம் திருவிளையாடலால் ஆன்மாக்கள் தம் மலமகற்ற உயிர் வாழ்கின்ற உடலாக்கினான்.

பின், ஒத்த தன்மை உடைய தூமாயை தூவாமாயை எனும் இரண்டு மாயக் கூட்டத்திடையே பூட்டி வைத்தான். பின்னர் ஆன்மாவைச் சுத்தமாக்கும் துரியநிலையில் மலமகற்றிச் சித்தத்தினுள்ளே இறைவன் புகுந்தருள் செய்து இந்த ஆன்மாவைச் சிவமயமாக்கி அருள்வான்.

***110. சிவமாகி ஐவகைத் திண்மலம் செற்றோர்***
***அவமாகார் சித்தர் முத்தாந்தத்து வாழ்வார்***
***பவமான தீர்வோர் பசுபாசம் அற்றோர்***
***நவமான தத்துவம் நாடிக் கண்டாரே. (497)***

ஐவகை மலங்கள்:- ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம். தாமே சிவமாகி ஐவகைப்பட்ட இத்திண்ணிய மலங்களை அழித்தவர்கள் வீணாதலில்லை. அவமாக மாட்டார்கள். அவர்களே சித்தர்கள். அவர்கள் முத்தாந்தம் எனும் சாயுச்சியத்தில் வாழ்வார்கள். பிறப்பு எனும் பாவத்திலிருந்து நீங்கியவர்கள். பசுபாசம் அற்றவர்கள்.

நவமான சிவம்:- சத்தி, நாதம், விந்து அருளோன் ஆண்டான், அரி, அயன், மகேஸ்வரன், சதாசிவன் இந்த ஒன்பது தத்துவங்களைத் திருவருட் கண்ணால் ஆய்ந்து உணர்ந்தவர்கள்.

***111. ஆவன ஆவ அழிவ அழிவன***
***போவன போவ புகுவ புகுவன***
***காவலன் பேர்நந்தி காட்டித்து கண்டவன்***
***ஏவன செய்யும் இளங்கி ளையோனே. (504)***

ஆவன அனைத்தும் ஆகி நிற்கும். அழிய வேண்டியவை அனைத்தும் அழியும். போக வேண்டியவை அனைத்தும் போகும். நமக்கு வந்து தங்குவன அனைத்தும் வந்து பொருந்தும். நம் உயிர்க்குக் காவலன் பேர் நந்தி எம்பெருமானாம் சிவபெருமானே. அவன் நமக்குக் காட்டி அருள் செய்பவன். உடனாகி நின்று கண்டு அருளுவான். அவன் ஏவியபடி நின்று தொண்டு செய்பவர்கள் புத்தடியார்களாம் இளங்கிளைஞர்கள் ஆவார்கள்.

**112. ஈவது யோக இயம நியமங்கள்**
**சார்வ தறிந்தன்பு தங்கும் அவர்க்கன்றி**
**ஆவதறிந் தன்பு தங்காதவர்களுக்கு**
**ஈவ பெரும்பிழை என்று கொளீரே. (506)**

யோகத்தையும் அதைச் சார்ந்த இயம நியமங்களையும் சார்ந்து அறிந்து அன்பு உள்ளத்திலே தங்கும் அவர்களுக்கே ஈவது மேலானதாகும். அன்றி ஆவக் கடவது யாது என்பதறிந்து கொள்ளாமல், தத்தம் உள்ளத்திலே அன்பு தங்காதவர்களுக்கு ஈதல் பெரும்பிழை என்பது அறிந்து கொள்க.

**113. உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்**
**மெள்ளக் குடைந்து நின்றாடார் வினைகெடப்**
**பள்ளமும் மேடும் பரந்து திரிவரே**
**கள்ள மனமுடைக் கல்வி யில்லாரே. (509)**

நம்முடைய உள்ளத்துள்ளேயே பல தீர்த்தங்கள் உள. தம் வினைகள் அழிந்து போகும்படி அவைகளிலே மெள்ளக் குடைந்து அத்தீர்த்தங்களிலே நீராட மாட்டார்கள். ஆனால் பள்ளமும் மேடும் பரந்து திரிந்து பற்பல தீர்த்தங்களிலே நீராடச் சுற்றித் திரிவார்கள். இவர்கள் கள்ள மனமுடையவர்கள். கல்வியறிவற்றவர்கள்.

**114. உள்ளத்தி னுள்ளே உணரும் ஒருவனை**
**கள்ளத்தி னாரும் கலந்தறி வாரில்லை**
**வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்**
**பள்ளத்தி லிட்டதோர் பந்தருள் ளானே. (511)**

உள்ளத்தின் உள்ளே நிலவுகின்ற ஒப்பற்ற இறைவனை, மெய்யடியார் தம் உள்ளமாம் பள்ளத்திலே இட்ட பந்தலிலே வைகும் சிவபிரானைக், கள்ளமாம் தீ நெறியிலே செல்பவர்கள் உள்ளம் கலந்து உணரமாட்டார்கள். உள்ளத்துள்ளே உள்ள வெள்ளத்தை நாடினால், அவர்களது தீவினை அவர்களை விட்டு அகலும்.

115. அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானை
செறிவான் உறைபதம் சென்று வலங்கொள்
மறியார் வளைக்கை வருபுனல் கங்கைப்
பொறியார் புனல்மூழ்கப் புண்ணியம் ஆமே. (512

ஆதிப் பிரானான சிவபிரானை நன்கு அறிந்து உணர்ந்தவர்கள் தேவரோடொப்பார்கள். அவர்கள் உலக மெங்கும் பரந்து விளங்கும் சிவபிரான், தம் அடியார் பொருட்டு காட்சி தரும் திருத்தலங்களைச் சென்று வலங்கொண்டு வழிபடுவார்கள். அலைகளால் மறிக்கப்பட்டு வளைந்து செல்லுதலை உடைய கங்கை எனும் புண்ணிய நீர் மூழ்குவதால் மேலும் புண்ணியராவார் என்க.

116. பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தனை அர்ச்சித்தால்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமும்ஆம் என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. (519)

ஏந்த நாட்டிலே பார்ப்பான் எனும் பேரைக் கொண்டவராய், அந்தணராம் தன்மையற்றவர்கள் எம்பெருமானை அர்ச்சனை செய்து பூசிக்கின்றார்களோ அந்த நாட்டிலே போர் செய்தலைத் தம் கடமையாகக் கொண்ட வேந்தர்களுக்குப் பொல்லாத வியாதி வந்துறும். அதோடு அந்த நாட்டுக்குப் பஞ்சமும் வந்தெய்தும் என்றே சீர்மிக்க நந்தி எம் பெருமான் தெரிந்துரைத்தான்.

117. பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடும்
சத்தியம், ஈது சதாநந்தி ஆணையே. (532

கற்புடை மகளிராம் பத்தினிப் பெண்டிரையும், சிவ பக்தர்களையும், தத்துவ ஞானிகளையும் அவர்கள் சித்தம் கலங்கும்படித் தீமைகள் செய்த தீவினையாளர்களின் செல்வங்களும் ஆவியும் ஓராண்டிலே அழிவெய்தும். இதுவே சத்தியம். இதுவே நந்தி எம்பெருமான் ஆணையாகும்.

**118. பற்றிநின்றார் நெஞ்சில் பல்லிதான் ஒன்றுண்டு**
**முற்றிக் கிடந்தது மூக்கையும் நாக்கையும்**
**தெற்றிக் கிடந்தது சிதைக்கின்ற சிந்தையுள்**
**வற்றா தொழிவது மாகமை யாமே. (539)**

உலகப் பற்றிலே ஆழ்ந்திருப்பவர்கள் நெஞ்சிலே விடாப் பிடியாப் பற்றிக் கொண்டுள்ள உடும்பு (பல்லி) ஒன்றுண்டு. அந்த உடும்பு மூக்கையும் நாக்கையும் இணைந்து நிற்கின்ற மனதை அலைக்கழிக்கும். பொறாமையை உண்டாக்கும். இச்செயலால் அழிகின்ற சிந்தையினைக் காக்க அது தங்காமல் ஒழிப்பதுவே சிறந்த பொறுமையாகும். மூக்கையும் நாவையும் சொன்னதனால் ஐம்புலன்களையும் கொள்க. பொறாமை ஐம்புலன்களையும் அலைக்கழிக்கும். அதை அழித்துவிடுதலே மேலான பொறுமையாகும்.

தெற்றல் = அலைத்தல்: மா + கமை = மிக்கப் பொறுமை.

**119. அருமை வல்லான் கலைஞானத்துள் தோன்றும்**
**பெருமை வல்லோன் பிறவிச்சுழி நீந்தும்**
**உரிமை வல்லோன் உணர்ந்தூழி இருக்கும்**
**திருமை வல்லாரொடு சேர்ந்தனன் யானே. (548)**

மனவாக்குக் கெட்டாத, அருமையான, எல்லாம் வல்ல சிவபெருமான் கலைஞானமாம் சிவஞானத்திடத்தே தோன்றுவான். அவனை மறவாது பக்தி செய்வதில் வல்ல பெருமைமிகு அடியவர்களோ பிறவியாம் சுழியில் சிக்காமல் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கடப்பார்கள். சிவனடியாராம் உரிமையில் வல்ல பக்தர்கள் சிவஞானத்தையும் சிவனருளையும் நன்குணர்ந்து ஊழிக்காலம் வாழ்வார்கள்.

மேற்கூறிய திருவருள் தன்மை உடையவர்களோடு நானும் சேர்ந்திருந்தேன்.

## மூன்றாந்தந்திரம். அட்டாங்க யோகம்

**120. அந்நெறி இந்நெறி என்னா தட்டாங்கத்**
**தன்னெறி சென்றுச் சமாதியிலே நின்மின்**
**நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்**
**புன்னெறி ஆகத்திற் போக்கில்லை தானே. (551)**

அந்த வழி என்றும் இந்த வழி என்றும் (ஞானநெறி பக்தி நெறி) செல்லாமல் அட்டாங்க யோகம் என்று சொல்லப்படும் யோக நெறியிலே சென்று அதன் முடிந்த முடிவாம் சமாதியிலே நிலைத்து நில்லுங்கள். இந்தச் சுத்த தவம் என்னும் நல்ல நெறியிலே செல்பவர்கள் ஞானமார்க்கத்திலே செல்லக் கூடும். பிற புன்நெறிகளைப் பின்பற்றிச் செல்கின்றவர்களுக்கு வேறு எந்தப் போக்கும் இல்லை.

**121. இயம நியமமே எண்ணிலா ஆதனம்**
**நயமுறு பிராணாயா மம்பிரத்தி யாகாரம்**
**சயமிகு தாரணை தியானம் சமாதி**
**அயமுறு அட்டாங்க மாவது மாமே. (552)**

இயமம் - தீது நீக்கல். நியமம் நல்லன செய்தல்; எண்ணிலடங்கா ஆசனப்பயிற்சிகள் - பிரணாயாமப் பயிற்சிகள் (வளி நிலை); பிரத்தி யாகாரம் - நினைவுகளின் தொகுப்பு நிலை; தாரணை - மனவலைகளை ஒருமுகப் படுத்துதல்; தியானம் - இடையறாது நினைத்தல்; சமாதி நிலை இவை எட்டுமே அட்டாங்க யோகம் எனப்படும்.

## இயமம்

**122. கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்**
**நல்லான் அடக்கம் உடையான் நடுச்செய்ய**
**வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கள்காமம்**
**இல்லான் இயமத் திடையின்நின் றானே. (554)**

கொல்லாதவன், பொய்க் கூறாதவன், களவு செய்யாதவன், எண்ணத் தக்க நற்குணங்களுடையவன்,

நல்லவனாயிருத்தல், அடக்கம் உடையவன், நடுவுநிற்பவன், வல்லவன், பகுத்து உண்பவன், கள், காமம் இல்லாதவன் எவனோ, அவனே இயமத்திடை நிற்பவன்.

## நியமம்

**123. தூய்மை, அருள், ஊண் சுருக்கம், பொறை செவ்வை**
**வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை**
**காமங் களவு கொலை எனக் காண்பவை**
**நேமி யீரைந்து நியமத்தனாமே (556)**

உளத்தூய்மை, உடற்தூய்மை, அருளுடைமை, உண்டி சுருக்கல், பொறுமை, செம்மை, நிலையுதலுள்ள மானம், மற்றும் காமம், களவு, கொலை என இவைகளை அகற்றிவிடுதல், என்று நியமிக்கப்பட்ட இவையறிந்து இவை பத்தும் கடைப் பிடிப்பவனே நியமத்தைக் கடைப்பிடிப்பவனாவான்.

**124. தவம்செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்**
**சிவன்தன் விரதமே, சித்தாந்தக் கேள்வி**
**மகம் சிவபூஜை யொண்மதி சொல்லீர் ஐந்து**
**நிவம் பல செய்யின் நியமத்தனாமே.**

தவம் செய்தல், செபம் செய்தல், எந்நிலையிலும் மகிழ்வோடிருத்தல், மெய்ப் பொருள் உண்மை உணர்தலாம் ஆத்திகமும், தானம் செய்தலும், சிவனை வழிபடும்படியான சிவ விரதங்களும், தத்துவ ஞானமும் சித்தாந்த கேள்விகளைச் செவிமடுத்தலும், பிறருக்கு உதவுதலால் சீவ பூசையும், ஒட்பம் நிறைந்த மதியும், சொல்லும், ஆய இவை பத்தும் இவையோடொத்த நற்பணிகளையும் செய்பவனே நியமத்தனாவன்.

## ஆசனம்

**125. ஓர் அணை அப்பதம் உருவின் மேலேறிட்டு**
**ஆரவலித் ததன் மேல்வைத் தழகுறச்**
**சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்**
**பார்திகழ் பத்மா சனமென லாகுமே. (559)**

சொல்லப்படும் ஆசனவகைகளுள் ஓர் அணை (ஓர் ஆசனம்) நம் பாதங்களை வலது தொடைமேல் இடக்காலும் இடது தொடை மேல் வலக்காலும் பொருந்தியபடி மிக வலித்து வைத்து அழகு மிகும்படி இருகைகளையும் கோத்து அதன்மீது வைத்தல் வேண்டும். இதுவே உலகம் புகழும் பத்மாசனமாகும்.

**126. ஒக்க அடியிணை யூருவில் ஏறிட்டு**
**முக்கி உடலை முழங்கைகளில் ஏற்றி**
**தொக்க அறிந்து துளங்கா திருந்திடில்**
**குக்குட ஆசனம் கொள்ளலும் ஆமே. (561)**

முன்னே சொன்னபடி பத்மாசனத்தில் உள்ளதுபோல் இருபாதங்களையும் மாற்றித் தொடை மேல் ஏற்றியபின் இரண்டு கைகளையும் தரையிலே ஊன்றி வைத்து முழு உடலையும் முழங்கை வரை ஏற்றித் தாங்குறுமாறு அறிந்து அசையாமலிருப்பதுவே குக்குட ஆசனமாகும்.

**127. பத்திரம் கோமுகம் பங்கயம் கேசரி**
**சொத்திரம் வீரம் சுகாதனம் ஓரேழும்**
**உத்தமமாம் முது ஆசனம் எட்டெட்டும்**
**பத்தொடு நூறுபல் ஆசன மாமே. (563)**

பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சொத்திரம், வீரம், சுகாதனம் எனும் ஏழு ஆசனங்கள் உள. இவைகளோடு முழுமையாக வழங்கி வரும் (எட்டெட்டு) அறுபத்தி நான்கு ஆசனங்களும் உள. மற்று நூற்று பத்து எண்ணடங்கா ஆசனங்களும் உளவாம்.

### பிராணாயாமம்

**128. பிராணன் மனத்தொடு பேரா தடக்கிப்**
**பிராணன் இருக்கில் பிறப்பிறப் பில்லை**
**பிராணன் மடைமாறி பேச்சறி வித்துப்**
**பிராணன் நடைபேறு பெற்றுண்டீர் நீரே. (567)**

பிராண வாயுவின் இயக்கமாகிய உயிர்ப்பு, மனத்துடன் பொருந்தி மனம் அடக்கப்பட்டிருக்குமானால் பிறப்பும் இறப்பும் இல்லையாகி விடும். பிராண வாயுவின் இயக்கம் இடைகலை பிங்கலைகளில் மாறி மாறி, மடைமாறிப் போய் வருங்காலத்திலே பேச்சற்றுப் பேசும் நிலையுண்டாகும். இவ்வாறு மடைமாறிப் போகும் பிராணன், இயங்குகின்ற பேற்றினைப் பெற்றுள்ளீர்களே! என்ன விந்தை!

***129.*** ***ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்***
***ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்***
***ஊறுதல் முப்பத்தி ரண்டதி ரேசகம்***
***மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே. (568)***

வாமமாகிய இடப்பக்க மூக்குத்துளையின் மூலம் பிராண வாயுவை மெல்ல ஏற்றுதலே பூரகமாகும். அதன் கால அளவு பதினாறு மாத்திரையாகும். ஏற்றப்பட்ட பிராண வாயுவைத் தன் இதயத்திலே (தம்பம்) அடக்கி நிறுத்துதல் கும்பமாகும். இதன் கால அளவை அறுபத்தி நான்கு மாத்திரைகளாகும். பிறகு வலது மூக்குத் துளைவழியே நிறுத்தப்பட்ட மூச்சை மெல்ல வெளி விடுதலே ரேசகமாகும். இதன் கால அளவை முப்பத்திரண்டாகும். இவ்வண்ணமே வலத்துளையில் பூரகித்து மீண்டும் கும்பகம் செய்து பின்னர் ரேசகம் செய்தல் வேண்டும். இது ஒரு சுற்று பிராணாயாமம். மாறுதலாகிய மடை மாற்றம் செய்தல் வஞ்சிக்கும் செயலாகக் கருதப்படும்.

***130.*** ***வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்***
***பளிங் கொத்த காயம் பழுக்கினும் பிஞ்சாம்***
***தெளியக் குருவின் திருவருள் பெற்றால்***
***வளியினும் வேட்டு அளியனு மாமே. (569)***

மேற்கூறியபடி பிராண வாயுவை உள்வாங்கித் தன் வயமாக்கி உள்ளே அடக்கினால் பளிங்கைப் போன்ற உடல் வெளுத்துப் பழுத்தாலும் பிஞ்சாகவே - இளமையாகவே இருக்கும். இந்த வளிப்பயிற்சிக்கு ஏற்ற குருவை அடைந்து

அவர் திருவருளைப் பெற்றவர்கள் காற்றைப் போல விண்ணிடைப் பறக்கும் ஆற்றல் பெறுவர். அளியனாகி மென்மைத் தன்மை வாய்த்தவராவர்.

131. ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாறில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியது வாமே. (571)

பிராண வாயுவை உள்ளே ஏற்றியும், அதைப் பின் கும்பகம் செய்து நிறுத்தியும், பின் இறக்கியும், முன் சொன்ன முறைப்படி மூக்கின் இடது துளை வலது துளை என்று இருகாலும் பூரகம், கும்பகம், ரேசகம் செய்கின்ற கணக்கினை அறிந்தவர்கள் இலர். அங்ஙனமாக காற்றைப் பிடித்தடக்கும் கணக்கறிந்தவர்களுக்குக் கூற்றை உதைத்து வெல்வதே குறியாகும் என்க.

132. புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட உள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே. (575)

உள்ளே இருந்து வெளியே புறப்பட்டுத் திரும்பவும் புகுந்து திரிகின்ற பிராண வாயுவை, முன் சொன்ன நெறியின்படி உள்ளே நிறுத்தித் தூய்மையாக்கினால் ஆன்மாவின் உறுப்பாகிய இவ்வுடல் பொன்மயமாகி விடும். உரோமம் கறுத்துவிடும் புரிசடையாளனாம் சிவபெருமானும் இவ்வுடலை விட்டுப் போகான்.

133. கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண்டு அங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற் கோலஅஞ் செழுத்தாமே. (576)

கூடமாகிய இந்த உடம்பெடுத்து அதிலே குடிபுகுந்த இரு மங்கையராகிய இடகலை பிங்கலை என்பவர் மூக்கு வாயிலாக பன்னிரண்டங்குலம் ஓடி ஓடி மீள்வார்கள். அப்பன்னிரண்டங் குலத்திலே. எண் விரலாம் எட்டங்குலமே தாம் எடுத்துக் கொண்டு நாலங்குலத்தினைப் போக்கி விடுவார்கள். அந்த நான்கு விரலாம் நான்கு அங்குல பிராணனை வீணே போக்காமல் முன்னே சொன்ன பூரக, கும்பக ரேசக முறைப்படி நாம் கூட்டிக் கொண்டால், அழகுமிக்க அஞ்செழுத்தின் பயனை அடையலாம்.

## பிரத்தியாகாரம்

பிரத்தியாகாரம் - புறத்தே அலையும் பொறி புலன்களை ஒன்று குவித்தல்.

**134. கண்டு கொண்டுள்ளே கருத்துற வாங்கிடில்**
**கொண்டு கொண்டுள்ளே குணம்பல காணலாம்**
**பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை**
**இன்று கண்டிங்கே இருக்கலு மாமே. (578)**

இந்தப் பிரத்தியாகாரமெனும் அகத்தவ பயிற்சி முறையால், மனக் கண்ணால், சிவபிரானைக் கண்டு கண்டு தன் உள்ளத்தின்கண்ணே வாங்கி, கருத்தோடு இருத்துதல் வேண்டும். அப்படி வாங்கினால் நம் அகத்தே அவனைக் கொண்டு கொண்டு அதனால் உண்டாகும் பல குணங்களை நாம் காணலாம். பண்டைக் காலம் தொட்டு, பழ மறைகள் தேடியும் எங்கும் காணாத சிவபிரானை மேற்சொன்னவாறு உள்ளத்தே இழுத்து நிறுத்தினால் இன்றே, இங்கேயே, கண்டு, அவனருளிலே நிலைபெற்றிருக்கலாம்.

135. நாபிக்குக் கீழே பன்னிரெண்டங் குலம்
தாபிக்கு மந்திரம் தன்னை அறிந்திலர்
தாபிக்கு மந்திரம் தன்னை அறிந்தபின்
கூவிக் கொண்டீசன் குடி இருந்தானே. (579)

நாபி என்னும் கொப்பூழுக்குப் பனிரெண்டங்குலம் கீழே உள்ள மூலாதாரத்திலே நிலைத்துள்ள குண்டலியை எழுப்புகின்ற, நிலை பெற்ற மந்திரம் தன்னை, மக்கள் அறிகின்றாரிலர். அந்த தாபிக்கும் மந்திரமான ஓங்காரத்தை அறிந்து தொழிற்படுத்தும் அவர்களை, ஈசனே கூவிக் கொண்டு அவர்கள் உடலிலே கோயில் கொண்டருளுவான்.

136. நாசிக் கதோமுகம் பன்னிரெண்டங் குலம்
நீ சித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்தும்
தேகத்துக் கென்றும் சிதைவில்லை தானே. (581)

மூக்குத் துளைகட்கு உட்புறமாகப் பனிரெண்டங்குலம் தள்ளி உள்ளது இதய கமலம். இந்த இதய கமலத்தின்கண் நீ சித்தம் வைத்து அதையே ஒரே சிந்தனையுடன், பிற எண்ணச் சிதரல்களை ஒழித்து, மனதை ஒருமுகப்படுத்தி, சிவனை தியானம் செய்ய வல்லையேல் மகா சித்திகளும் சிறப்புமிக்க யோகமும் கை கூடும். இந்த உடலுக்கு எக்காலத்தும் அழிவில்லை.

137. மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லும் கருத்து இதுதானே. (583)

மூலத்துவாரம் எனப்படும் குண்டலினி பீடத்தின் மேல் நிமிர்ந்தமர்ந்து, மூச்சடக்கி அழுத்தி இரு. மேலே இந்திரியம் முதுகந்தண்டு வழியே சென்று பாயும் துவாரமாகிய ஆக்ஞா சக்கரத்திலே உன் உள்ளத்தை நிலை நிறுத்துக. வேலை

ஒத்துள்ள கண்களை வெளியாம் புருவ மத்தியில் நிறுத்தி அகமுகப் பார்வையோடு விழித்திரு. இவைகளே காலத்தை வெல்லும் கருவிகளாகும்.

**138.** ***எருவிடும் வாசற்கு இருவிரல் மேலே***
***கருவிடும் வாசற்கு இருவிரல் கீழே***
***உருவிடும் சோதியை உணரவல் லார்க்குக்***
***கருவிடும் சோதி கலந்து நின்றானே. (584)***

எருவாகிய மலங்கழியும் வாசல் குதத்திற்கு இரு விரல்கடை மேலாகியும் கருவிடும் யோனித்துவாரத்திற்கு இருவிரல்கடை கீழாகியும் அமைந்துள்ளது குண்டலி சக்தியின் பீடமாகும். அக்குண்டலியை மேலெழுப்பி ஆக்ஞையில் செலுத்தச், சோதி மயமாக உருவங் கொண்டுள்ள சிவப் பேரொளியை புருவமத்தியிலே நிறுத்தி, நினைப்பற நினைத்தலாம் தாரணையில் ஈடுபட வல்லவர்களுக்குக் கருவை விடுவிக்கும் சோதியான சிவபெருமான் விளங்கித் தோன்றுவான்.

**139.** ***ஒருக்கால் உபாதியை ஒண்சோதி தன்னைப்***
***பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவைக்***
***கரைத்துணர் உன்னல் கரைதல் உள்நோக்கல்***
***பிரத்தியா காரப் பெருமைய தாமே. (585)***

ஒருபகுதி உபாதியாகிய மாயையை, ஒளிமயமான சிவபெருமானை வேறு பிரித்துணர்கின்ற மாயையுடன் கூடிய உயிரைத், தெளிந்து, நீள நினைத்து, அத்தவத்தால் உள்ளம் கரைதல், உண்முக நோக்கம் அடைதல், ஆகிய இவைகளே பிரத்தியாகாரம் எனும் பெருமை பெற்ற நெறியாகும்.

## தாரணை

(உள்ளத்தினை ஒருவழிப்படுத்துதல்.)

**140.** ***கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க் கட்டி***
***வீணாத் தண்டூடே வெளியுறத் தானோக்கிக்***
***காணாக் கண்கேளாச் செவியென் றிருப்பார்க்கு***
***வாணாள் அடைக்கும் வழியது வாமே. (588)***

எக்காலமும் கோணல் தன்மை வாய்ந்த மனத்தை ஒருவழிப்படுத்தும் குறியினை மேற்கொண்டு கீழ்நிலையாம் மூலாதாரத்தினைக் கட்டுப்படுத்தி அங்குள்ள குண்டலினியை வினைத் தண்டெனப்படும். முள்ளந்தண்டின் வழியே ஆறாதாரத்துள், வெள்ளியாம் சுக்கிலத்தை மேலெழுப்பி ஆக்ஞா சக்கர இருப்பிடமாம் புருவ நடுவை நோக்கற நோக்கி, காணாக் கண்ணும் கேளாச் செவியுமாய், உலகம் முற்றும் மறந்திருப்பவருக்கு, இனி வரும் மறுபிறப்பு எனும் வாழ்நாளை வழியடைக்கும் வழி அதுவே ஆகும் என்க. கோணா = கோணுதல் தன்மை உடைய.

***141.*** ***கடை வாசலைக் கட்டி காலை எழுப்பி***
***இடை வாசல் நோக்கிஇனிதுள் இருத்தி***
***மடை வாயிற் கொக்குபோல் வந்தித்திருப்பார்க்கு***
***உடையாமல் ஊழி இருக்கலு மாமே. (591)***

பிராணாயாமப் பயிற்சியால் மூலாதாரத்தை அடைத்து பூரக, கும்பக, ரேசகம் மூலமாகப் பிராண வாயுவை மேலெழுப்பி இடை வாசலாகிய சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி இவை பொருந்தியுள்ள முள்ளந்தண்டின் வழியே உயிர்ச் சத்தி மேலெழும் தன்மையை, நோக்கற நோக்கி உள்ளத்தினை ஒருமுகப்படுத்தி இனிதாக, அதை நிலைபெறச் செய்து மடைத்தலையில் காத்திருக்கும் கொக்கினைப்போல, சத்திநிபாதம் தன்மேல் பதியும்வரை சிவ சிந்தனையோடு அவனையே - அவனது திருவருளையே தியானம் செய்து கொண்டிருப்பவர்களுக்கு, இறத்தலே இல்லை. அவர்கள் அழியாமல் ஊழிக்காலம் வாழ்வர்.

***142.*** ***வாய் திறவாதார் மனத்திலே மாடுண்டு***
***வாய் திறப்பாரே வளிப்பட்டு பாய்ச் சுவர்***
***வாய் திறவாதார் மதிவிட்டு மூட்டுவர்***
***கோய் திறவாவிடில் கோழையு மாமே. (592)***

வாய் திறவாது பேசாமல் மௌனநிலையில் உள்ளவர்கள் உள்ளத்திலே ஒப்பற்ற (மாடு) செல்வம் உண்டு. அச்செல்வமே

சிவபெருமான் எனப்படும் செம்மணியாம். மாறாக வாய் திறந்து ஓயாது உரைத்தலைச் செய்பவர்கள் ஒப்பற்ற ஜீவனாம் பிராண வாயுவை வெளியே, சிந்தி பாய்ச்சி வீணாக்குபவர்களே. மேற்கூறிய வாய் திறவாத மோன ஞானிகள் அமிர்த தாரை பொழியும் சந்திரப்பூ எனும் மதியிட்டு ஞானக்கனலை மூட்டுவார்கள். கோய் (மும்மின் அடுப்பு போன்ற) பரணியாம் முக்கண்களிலே ஞானக் கண் திறவா விடிலோ, ஒருவன் கோழையாவான். ஞானியாம் வீரன் ஆதல் இலன்.

***143.*** ***முன்னம் வந்தனர் எல்லாம் முடிந்தனர்***
***பின்னம் வந்தவர்க் கென்ன பிரமாணம்***
***முன்னூறு கோடி உறுகதி பேசிடில்***
***என்ன மாயம் இடிகரை நிற்குமே? (596)***

முன்னமே பிறந்தவர்கள் அனைவரும் இறந்து பட்டனர். பின்னர் இப்போது வந்து பிறந்தவர்களுக்கு நாம் எக்காலும் வாழ்வோம் என்பது என்ன நிச்சயம்? நாம் சென்றடையும் கதிகளைப் பற்றி முன்னூறு கோடி வகையாக நாம் பன்னிப் பன்னி பேசினாலும் இடிகரை போன்ற இவ்வுடல் நிற்குமோ? இது என்ன மாயம் என்பது?

***144.*** ***அரித்த உடலை ஐம்பூதத்தில் வைத்துப்***
***பொருத்த ஐம்பூதம் சத்தாதியிற் போந்து***
***தெரித்த மனாதி சத்தாதியிற் செல்லத்***
***தரித்தது தாரணை தற்பதத் தோடே. (597)***

ஐம்புலன்களாலும் அந்தக்கரணங்களாலும் அரிப்புண்ட உடலை ஐம் பூதத்திலே ஒடுக்கி வைத்து, இவ்வுடலைப் பொருத்த ஐம் பூதங்களையும் சத்தாதி ஐந்திலே ஒடுக்கிப் போந்து, விஷயங்களைத் தெரிவிக்கும். மன முதலிய அந்தக் கரணங்களை மூலப் பகுதியிலே ஒடுக்கி வைக்கத் தற்பரமாம் சிவபெருமானோடு தாரணை கூடிற்று என உணர்க. இவ்வகையில் தாரணை என்பது உடலை ஐம்பூதத்தில் ஒடுக்கி, அடுத்து ஒவ்வொன்றாக, ஒன்றிலொன்று ஒடுக்கிச் சிவத்தைச் சிந்தித்தல் என்பதாம்.

## தியானம்

145. ஒரு பொழு துன்னார் உடலோடு உயிரை
ஒரு பொழு துன்னார் உயிருட் சிவனை
ஒரு பொழு துன்னார் சிவனுரை சித்தையை
ஒரு பொழு துன்னார் சந்திரப் பூவே. (601)

உலக மக்களில் பெரும்பாலோர் உடலோடு உயிரை ஒரு பொழுதும் நினைத்துப் பார்க்க மாட்டார். அந்த உயிருள்ளே கோயில் கொண்டருளும் சிவபெருமானை ஒரு பொழுதும் நினைத்தலிலர். அந்தச் சிவபிரான் கோயில் கொண்டுள்ள சிந்தையைக்கூட ஒரு பொழுதும் நினைத்துப் பார்த்தலிலர். ஆறாதாரத்தின் முடிவாம் ஆக்ஞையில் உள்ள சந்திரனைப் போன்ற வெண்ணிறமான பூவையும் ஒரு பொழுதும் நினைத்துப் பார்த்தலிலர்.

146. மனத்து விளக்கினை மான்பட ஏற்றி
சினத்து விளக்கினைச் செய்ய நெருக்கி
அனைத்து விளக்கும் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்கது மாயா விளக்கே. (602)

மனமாகிய விளக்கினை மான் என்னும் மூலப்பகுதியாம் அவிச்சை அழியும்படி ஏற்றுதல் வேண்டும். சினம் என்னும் பெருந்தீயைப் புறஞ்சென்றொழிய நெருக்குதல் வேண்டும். பின்னர் பிற கருவி காரணங்களாம் விளக்கினை இறைவழிச் செல்லும்படித் திரியினை நன்கு தூண்டிவிட வேண்டும். இங்ஙனம் செய்து தியானிப்போமானால் மனத்தின்கண் ஒளிரும் விளக்கு அணையா விளக்காக அமையும்.

147. எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதனைக் கண்டறிவார் இல்லை
உண்ணாடி உள்ளே ஒளிபெற நோக்கில்
கண்ணாடி போலக் கலந்து நின்றானே. (603)

எண்ணற்ற ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் யோகத்திலே நிலை பெற்றிருந்தாலும், கண் போன்ற ஆர் அமுதத்தினை ஒத்துள்ள, இறைவனைக் கண்டு உணர்ந்து கொள்ளும் தன்மை வாய்த்திலர். இறைவனாம் சிவபிரானை நாம் உள்ளத்துள்ளேயே நாடி ஒளி அமையும்படி நோக்கினால் அவ்விறைவன்தான் கண்ணாடியில் காண்பது போல் நம்முள் கலந்தருள் செய்வான். கண்ணாடியைக் காணும் கண்ணே தன்னையும் காணும். அதைப் போல ஆன்மா தன்னையும் தன் தலைவனையும் ஒரு சேர தியானத்தால் காணும்.

**148. நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்**
**வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை**
**ஓட்டமு மில்லை உணர்வில்லை தானில்லை**
**தேட்டமும் இல்லை சிவனவனாமே. (604)**

இருகண்களின் பார்வையையும் புருவ நடுவாம் மூக்கில் அடிப்பாகத்தில் வைத்தல் வேண்டும். அப்படிப்பட்ட நிலையில் தியானம் செய்தால் உடலுக்கு எவ்வித வாட்டமுமில்லை; இந்த மனையாகிய உடலுக்கும் அழிவில்லை. உயிர்ப்படங்கி தியானத்தால் மனம் ஒருமுகப்பட்டபோது ஐம்புலன்களின் ஓட்டமும் இல்லை. புலன் உணர்வுகளும் இல்லை. தான் என்னும் முனைப்பும் இல்லை. எவ்வகை ஆராய்ச்சியும் இல்லை. அவனே, தன் தியானத்தால் சிவனாகிறான். 'நான் வேறெனாதிருக்க நீ வேறேனாதிருக்க' எனும் நிலை உண்டாகும்.

**149. நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்டு**
**உயர்வெழா வாயுவை உள்ளே அடக்கி**
**துயரற நாடியே தூங்க வல்லார்க்குப்**
**பயனிது காயம் பயமில்லை தானே. (605)**

முன் சொன்னபடி இரண்டு கண்களின் பார்வையையும் மூக்கின் தொடக்கமாம் புருவ மத்தியில் வைத்து, உடலில் இருந்து உயர்ந்து எழுகின்ற வாயுவை உயர எழாமல் உள்ளே

அடக்கிப் பிறவித் துயரம் அறும்படியாகச் சிவனருளை நாடியே, சிவபெருமானின் தியானத்துடனே, நினைவுடன் நிலைத்து நிற்க வல்லவர்க்கு (தூங்கவல்லவர்க்கு) இந்த உடல் பயன் உடைத்தாகின்றது. அவன் கூற்றுவனுக்கு அஞ்ச வேண்டுவதில்லை.

**150. மணி கடல் யானை வார்குழல் மேகம்**
**அணிவண்டு, தும்பி வளை பேரிகை யாழ்**
**தணிந் தெழு நாதங்கள் தாமிவை பத்தும்**
**பணிந்தவர்க் கல்லது பார்க்க ஒண்ணாதே. (606)**

மணி, கடல், யானை, நீண்ட புல்லாங்குழல், மேகம், அழகிய வண்டு, தும்பி, சங்கு, பேரிகை, யாழ் இந்த பத்தினால் உண்டாகும் நாதங்கள் அனைத்தும், இறைவனருள் நாடி தியானத்தில் ஈடுபட்டு முதிர்ந்தவர்களுக்கே, தியானகாலத்தில் கேட்கப்படும், பிறரால் இதை உணர முடியாது. இதையே திருவடிச் சிலம்போசை என்பர்.

**151. நாதமுடிவில் நல்லாள் இருப்பது**
**நாதமுடிவில் நல்யோகம் இருப்பது**
**நாதமுடிவிலே நாட்டம் இருப்பது**
**நாதமுடிவிலே நஞ்சுண்ட கண்டனே. (609)**

நாத முடிவான இடமே நல்லாள் எனப்படும் சத்தியின் திருவருள் இருப்பது. அந்த நாத முடிவே நல்ல யோகம் எனப்படும் தியானம் பொருந்தி இருப்பது. அந்த நாதமுடிவே நம் நாட்டமாம் திருவடி உணர்வு கிடைக்குமிடம். அந்த நாதமுடிவான இடமே நஞ்சுண்ட கண்டனான சிவபெருமான் வெளிப்படும் இடமாகும்.

**152. முக்குண மூடற வாயுவை மூலத்தே**
**சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டு**
**தக்க வலமிடம் நாழிகை சாதிக்க**
**வைக்கும் உயிர்நிலை வானவர் கோனே. (615)**

சத்துவ, ரஜோ, தமோ குணங்களென்னும் முக்குணங்களும் மூடிக்கிடக்கும் அம் மூடுதலை அற்றுப் போகும்படி பிராண வாயுவை வளிப்பயிற்சியால் மூலாதாரத்திலே சிக்கெனப் பிடித்துப், பின் தக்க முறையிலே வலமிடமாக மாறிமாறிப் பயின்றுப், பூரக, கும்பக, ரேசகங்களை நாழிகையாம் கால அளவறிந்து பயின்று தியானம் சாதிக்கில் வானவர் கோனாகிய சிவபெருமான், உயிர்நிலையாம் உடம்பை நிலையுதலாக்குவான்.

## சமாதி

153. சமாதி யமாதியில் தான்செல் லல்கூடும்
சமாதி யமாதியில் தானெட்டு சித்தி
சமாதி யமாதியில் தங்கினோர்க் கன்றே
சமாதி யமாதி தலைப்படுந் தானே. (618)

சமாதி சிவபரம் பொருளோடு கூடிய மனோலயம். யமாதி - யமம் (இயமம் முதலியவை மூலமாக ஒருவன் சமாதி எய்தல் கூடும்) இந்தச் சமாதி மூலமாக எண்வகைச் சித்திகளும் சித்திக்கும். இந்த யமாதியாம் சமாதியில் நிலைபெற்றுள்ள அனுபூதிமான்களுக்கு அல்லவா பேரின்பம் தலைப்படும்.

யமம் என்னும் வடச்சொல் த்மிழில் வழங்கும்போது இயமமாயிற்று.

154. மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு
மன்மனம் எங்கில்லை வாயுவும் அங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே. (620)

தூல சூக்கும உடல்களில் பொருந்தியுள்ள, சலிக்கும் மனம் பொருந்தியுள்ள இடத்திலேயே, காற்றின் இயக்கமும் உண்டு. மனச்சலனம் எங்கில்லையோ அங்குக் காற்றின் இயக்கமும் இல்லை. வளிப்பயிற்சியால் மூச்சை அடக்கி

ஒருமுகப்படுத்தி அதனாலாம் சமாதி நிலையில் நிலை பெற்ற மனத்துள்ளே சிவத்தையே சிந்தித்திருப்பவர்க்குச் சிவனருள் கலந்த மனோலயம் வாய்க்கும்.

***155. மூலத்து மேலது முச்சதுரத் தது***
***காலத் திசையில் கலக்கின்ற சந்தினில்***
***மேலைப் பிறையினில் நெற்றி நேர் நின்ற***
***கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே. (627)***

மூலாதாரத்துக்கு மேலுள்ள ஐந்து நிலங்களும் முக்கோணமும் நாற்கோணமும் கொண்டவை. பிராணாயாமப் பயிற்சியிலே உயிர்மூச்சு ஒத்து இசைந்து அதனால் மனமும் வளியும் கலந்து நிற்கும் சந்திப்பிலே ஏற்படும் சமாதியால், மேலேயுள்ள திங்கள் மண்டிலம் நெற்றியின் நேராக நின்றதால் தோன்றுகின்ற காட்சியின் அழகுகள் வெவ்வேறு வகைப்பட்டனவாம் (முன்னர் திருவடிச் சிலம்போசை - நாத ஒலியைப்பற்றிச் சொல்லப்பட்டது. இப்போது சமாதியில் காட்சி சொல்லப்பட்டது)

***156. கற்பனை யற்றுக் கனல்வழியே சென்று***
***சிற்பனை எல்லாம் சிருட்டித்தப் பேரொளிப்***
***பொற்பினை நாடிப் புணர்மதியோ டுற்றுத்***
***தற்பர மாகத் தகுந்தான் சமாதியே. (628)***

மனோ விகாரங்களால் உதிக்கின்ற கற்பனைகள் எதுவுமே யற்று, மூலக் கனல்வழியே செல்லும் தியானத்திலே நிலைத்து நின்றால், அண்டங்கள் யாவற்றையும் உண்டாக்கிய பேரொளிப் பிழம்பு மலையாம் சிற்பியைக் காணக்கூடும். திருவடி உணர்வு உண்டாகும். அந்த உணர்வால் உண்டாவதுதான் சிவத்தோடு கலந்து நிற்கும் அனுபூதி நிலை. அந்தக் குளிர்ந்த சமாதி நிலையே, ஒருவனைச் சிவத்தோடு சேர்த்துத் தற்பரமாக்கும் தகுதி வாய்ந்தது.

***157. சமாதி செய்வோர்க்குத் தகும்பல யோகம்***
***சமாதிகள் வேண்டா இறையுடன் ஏகில்***
***சமாதி தானில்லை தானவன் ஆகில்***
***சமாதியில் எட்டெட்டு சித்தியும் எய்துமே. (631)***

சமாதியில் நிலை பெற்று நிற்பவர்களுக்குப் பலப்பல ஞான பக்தி யோகங்கள் வந்தடையும். இறைவனுடன் ஏகம் அனுபூதி நிலை அடையும் ஒருவனுக்குச் சமாதிகள் தேவையில்லை. ஆன்மா அவன் மயமாகி விட்டாலோ, சமாதி என்பது அங்கே கிடையாது. அச்சமாதி நிலையால் அடையத் தக்க எண்வகைச் சித்திகளும் அவன் அடையலாம் (எட்டும், எட்டு சித்திகள் என்க)

## அட்டமாசித்தி

**158. தானே அணுவும் சகத்துத்தன் நொய்ம்மையும்**
**மானாக் ககனமும் பரகாய தேகமும்**
**தானாவதும் பரகாயஞ் சேர் தன்மையும்**
**ஆனாத உண்மையும் வியாபியுமாம் எட்டே. (649)**

எண் சித்திகளாவன தானே அணுவாக உள்ள தன்மை (அணிமா); சகம் - மகிமா (பருமையாம் தன்மை); நொய்ம்மை - கரிமா; (வின்தன்மை); ககனம் - லகிமா (மென்மை); பரகாயதேகம் - பிராப்தி (விரும்பியது எய்தல் அதாவது இஷ்ட லோகம் சென்று மீளுதல்) தானாவது - பிரகாமியம் (நிறை உண்மை); பரகாயப் பிரவேசமும்; ஆனாத உண்மை - ஈசத்துவம் (ஆட்சியனாதல்); வியாப்பியம் - வசித்துவம் - (கவர்ச்சி); இவைகள் அட்டமா சித்திகளாகும்.

**159. சித்தந் திரிந்து சிவமய மாகியே**
**முத்தந் தெரிந்துற்ற மோனர் சிவமுத்தர்**
**சுத்தம் பெறலாம் ஐந்தில் தொடக்கற்றோர்**
**சித்தம் பரத்தில் திருநடத் தோரே. (652)**

ஐம்புலன்களால் அலைந்து திரியும் சித்தம் மாறுபட்டு மடங்கி சிவமயமாகி நிற்க, முத்தியை நன்கறிந்து நிலைபெற்ற மௌன சிவமுத்தர்கள் திருவருட் சத்த நிலையினைப் பெறலாம். ஐம்மலத்தினது தொடர்பினை அறுத்தவர்கள், தம் சித்தத்தைப் பரத்திலே நிறுத்திச் செம்பொருளுணர்ந்து திருநடங் கண்டவராவர்.

160. ஓடிச் சென்றங்கே ஒரு பொருள் கண்டவர்
நாடியின் உள்ளாக நாதம் எழுப்புவர்
தேடிச் சென்றங்கே தேனை முகந்துண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டுமே. (661)

தியானப் பயிற்சியால் உலக அவாக்கள், ஐம்புல விஷயங்களின் பின்னோடுதல் நீங்கி, மெய்யுணர்வினைத் தேடி ஓடிச் சென்று அங்கே ஒப்பற்ற சிவமெனும் பேரொளிப் பொருளைக் கண்டவர் தம் நாடியின் உள்ளே குண்டலினிமேல் எழும் நாத ஒலியை எழுப்புவார்கள். புருவ நடுவின்கண் உண்டாம் தேனை (அமிர்தத்தை) தேடிச் சென்று முகந்துண்டு, ஐம்புலன் அந்தக்கரணங்களாம் பகைவர்களைத் தம் ஞானக்கயிற்றால் கட்டிச் செயலிழக்கச் செய்வர்.

161. விரிந்து குவிந்து விளைந்த இம் மங்கை
கரந்துள் எழுந்து கரத்தங்கு இருக்கில்
பரந்து குவிந்தது பார்முதல் பூதம்,
இரைந் தெழு வாயு விடத்தில் ஒடுங்கே. (664)

உலகத்திற்கும் உயிர்கட்கும் வியாபகமாய், இறைவனிடத்து வியாப்பியமாய் இறையருட் சக்தியாய்த் தோன்றிய இம்மங்கை, சிவபிரானிடத்திலேயே ஒடுங்கி மறைந்து, மீண்டும் எழுந்து வெளிப்படும். கரந்து அங்கு மீண்டும் சிவத்திலே ஒடுங்கினால், பார் முதல் ஐம்பூதமும் குவிந்து ஒடுங்கும், ஓசையுடன் மேலெழும் பிராணவாயுவும் அங்கனே சத்தியுள் ஒடுங்கும்.

162. இடையொடு பிங்கலை என்னும் இரண்டும்
மடைபடு வாயுவும் மாறியே நிற்கும்
தடையவை ஆறும் எழுந் தண்சுடருள்ளே
மிடைவளர் மின்கொடி தன்னில் ஒடுங்கே. (665)

முன் மந்திரத்தில் உயிர்ப்பு ஒடுங்குவதன் விளக்கமே இது. இடைகலை பிங்கலை எனும் இரண்டு மூக்குத்துளைகளின் வழியாக இயங்கும் வாயுவும், கும்பகத்தால் உள்ளே அடைக்கப்படும் வாயுவும், உள்ளே அடங்கியே நிற்கும். யோகப் பயிற்சிக்குத் தடையாக உள்ள ஆறு குற்றங்களாம்

கு-6

காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மாச்சர்யம் எனும் இவைகள் புருவ மத்தியிலே எழுகின்ற, தண்சுடராம் நிலவின் இடையிலே நிலவுகின்ற, மின்னற் கொடியாம் சத்தியிலே ஒடுங்கி மறையும்.

**163. ஒடுங்கி ஒருங்கி உணர்ந்தங் கிருக்கில்**
**மடங்கி அடங்கிடும் வாயு அதனுள்**
**மடங்கி அடங்கிடு மன்னுயி ருள்ளே**
**நடங் கொண்ட கூத்தனும் நாடுகின் றானே. (666)**

முன் சொன்னபடி ஒடுங்கி, ஒரேதன்மையதாய் உணர்ந்து அங்குச் சமாதியில் நிலை பெற்றால், அதனுள் உயிர்ப்பாகிய வாயுவும் மடங்கி அடங்கி நிற்கும். அங்ஙனம் உயிர்ப்படங்கி நிலை பெற்றுள்ள உயிருள்ளே கருவி கரணங்கள் செயலற்று அடங்கும். அத்தகைய உயிரின் உள்ளே நடஞ் செய்கின்ற கூத்தப்பிரானும் குடிகொள்ள நாடுகின்றான்.

**164. நாடியின் உள்ளே நாதத் தொனியுடன்**
**தேடியுடன் சென்ற திருவினைக் கைக்கொண்டு**
**பாடியுள் நின்ற பகைவரைக் கட்டிட்டு**
**மாடி ஒருகை மணிவிளக் கானதே. (667)**

குண்டலினி சத்தி மேலெழும்பிச் செல்லும் நடு நாடியுள்ளே நாத ஒலியோடு ஆய்ந்து, குண்டலினியுடன் சென்ற, அத்திருவருளாம் சத்தியைக் கைக் கொண்டு பகைவர்கள் தங்கியுள்ள பாடிவீட்டிலே நிலைத்து நிற்கும் பகைவர்களாம் ஐம்புலன்களைக் கட்டி வைத்துச் சமாதியில் நிலைத்து நிற்கவே, இவ்வுடம்பாகிய மாடிவீடு ஒப்பற்ற, ஒழுங்கு மிகுத் தூண்டாத மணிவிளக்காக ஒளிர்கின்றது.

**165. ஓதம் ஒலிக்கும் உலகை வலம் வந்து**
**பாதங்கள் நோவ நடந்தும் பயனில்லை**
**காதலின் அண்ணலைக் காண இனியவர்**
**நாதன் இருந்த நகர்அறி வாரே. (707)**

குளிர்ந்த அலை ஒலிக்கும் கடல் சூழ்ந்த உலகத்தைச் சுற்றி வலம் வந்தாலும் பயன் ஏதும் இல்லை. பக்தியாம் காதலினால், அண்ணலைக், காணத்தக்க இனிய சிவபிரானை, தியானத்தில் சமாதி நிலை அடைந்தோர், நம் நாதனாம் சிவபிரான் திருக் கோயிலை அறிவார்கள்.

## கலைநிலை

**166. காக்கலு மாகும் கரணங்கள் நான்கையும்**
**காக்கலு மாகும் கலைபதி னாறையும்**
**காக்கலும் ஆகும் கலந்த நல் வாயுவும்**
**காக்கலும் ஆகும் கருத்துற நில்லே. (713)**

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கையும் காத்தல் வேண்டும். அமிர்த கலை பதினாறையும் காத்தல் வேண்டும். நல்ல முறையில் பூரகம், கும்பகம், ரேசகம் மூலமாக நல்ல பிராணவாயுவைக் காத்தல் வேண்டும். இங்ஙனமாக இறைவன் திருவடி உணர்விலே கருத்தூன்றி நின்று அகத் தவத்தைக் காத்தல் வேண்டும்.

**167. நிலைபெற நின்றது நேர்தரு வாயு**
**சிலைபெற நின்றது தீபமும் ஒத்துக்**
**கலைவழி நின்ற கலப்பை அறியில்**
**மலைவற வாகும் வழியிது வாமே. (714)**

குண்டலினியினின்றும் மேலெழுந்து முள்ளந் தண்டாகிய நாடி வழியே வாயு நிலை பெற்று ஒடுங்கி நின்றது. அது மலையைப்போல அசைவற்றும், ஒளிதரும் தீபத்தைப்போல மேலோங்கி ஒளிர்ந்து நின்றும், அமைந்துள்ளது. அமுத கலையினிடத்தே சிவமும் சத்தியும் பொருந்தியுள்ள இந்தக் கலப்பினைத் தெளிந்து உணர்ந்தால், நெஞ்சம் மலைவற்றுத் தெருளடையும். இதுவே இறைவனை அடையும் நெறியாகும்.

**168. இருக்கின்ற காலங்கள் ஏதும் அறியார்**
**பெருக்கின்ற காலப் பெருமையை நோக்கி**
**ஒருக்கின்ற வாயு ஒளிபெற நிற்கத்**
**தருக் கொன்றி நின்றிடும் சாதக னாமே. (716)**

வாழ்ந்த காலங்கள் போக இனிமேல் வாழ்ந்திருக்கின்ற காலங்களை ஒன்றும் அறிய மாட்டார்கள் மக்கள். இனி வாழும் நாட்களைப் பெருக்கும் காலத்தினது பெருமையை உணர்ந்து, வெளியே வீணே சென்று அழிக்கின்ற உயிர்ப்புச் சத்தியாம் வாயு, தன்னுள்ளே ஒளிமிகுந்து நிலைத்து நிற்கும்படிச் செய்ய வேண்டும். அப்படிப்பட்டவனே தான் என்னும் தருக் ககன்று இறைவழி நிற்கும் தொண்டனாவான்.

**169. சாதகமான அத்தன்மையை நோக்கியே**
**மாதவமான வழிபாடு செய்திடும்**
**போதகமாகப் புகலுறப் பாய்ச்சினால்**
**வேதகமாக விளைந்து கிடக்குமே. (717)**

ஆன்மா இறைவனோடு கூடச் சாதகமான அந்தத் தன்மையை உணர்ந்து, சிறந்த நெறியாம் அகத் தவம் செய்கின்ற சாதகன், தன் நடு நாடியிற் செல்லும் உயிர்ப்பினால் உண்டாம் அமுத தாரையினைச் சகஸ்ராரமாம் ஆயிரம் இதழ் தாமரையில் பாய்ச்சினால், செம்பாகிய ஆன்மா, பொன்னாகிய சிவமாகி விளைந்து விடும். (வேதகம் - மாற்றம் அடைதல்)

**170. கிடந்தது தானே கிளர்பயன் மூன்று**
**நடந்தது தானே உன்நாடியுள் நோக்கிப்**
**படர்ந்தது தானே பங்கய மாகத்**
**தொடர்ந்தது தானே அச் சோதியுள் நின்றே. (718)**

முப்பயனாம் அறம் பொருள் இன்பம் மூன்றும் விளங்கிக் கிடந்தன. உள்ளே நடு நாடியை நோக்கித்தான் உயிர்ப்பாம் வளி நிலையும் வளிப் பயிற்சியால் நடந்தது. பங்கயமாகி நிற்கும் ஆயிரம் இதழ்த் தாமரையாம் ஆக்ஞா சக்கரத்திலே சென்றடைய ஆன்மா படர்ந்து நின்றது. சிவபெருமானாம் அச்சோதி வடிவத்துள் நிலைபெற்று நின்ற இந்த ஆன்மா தன் பயிற்சி வழியே சிவனைத் தொடர்ந்து நின்றது.

171. தானே எழுந்த அத்தத்துவ நாயகி
ஊனே வழிசெய் தெம்உள்ளே இருந்திடும்
வானோர் உலகீன்ற அம்மை மகிழ்ந்திட
தேனே பருகிடச் சிவாலய மாகுமே. (719)

தானாகவே கிளைத்தெழுந்த அந்தத் தத்துவங்களின் நாயகி இந்த உடம்பையே வழியாகச் செய்து என் நெஞ்சகத்துள்ளே அமர்ந்திருப்பாள். வானோர் உலகையும் இவ்வுலகையும் படைத்தருளிய என் அன்னையின் அருளின்பத்தைக் கருதினால் திருவருட் சிந்தனையாம் தேனைப் பருகி சிவத்திலே லயிப்பதாகும்.

172. ஈராறு கால்கொண்டு எழுந்த புரவியை
பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லீரேல்
நீராயிரமும் நிலமாயிரத் தாண்டும்
பேராது காயம் பிரான்நந்தி ஆணையே. (722)

பதினாறு மாத்திரை அளவாக இயங்கும் உயிர்வளி, உள்முகமாக நான்கும் வெளிமுகமாகப் பனிரெண்டுமாக இயங்கும். வெளியே இயங்கும் இந்த பன்னிரண்டு மாத்திரை அளவான உயிர்ப்பினை வெளியே பெயர்ந்து போகாமல் பிராணாயாமப் பயிற்சியால் கட்டிப் பெரிதும் அதைத் துய்க்க வல்லவரானால், நீரினும் நிலத்திலும் ஆயிரம் ஆண்டு காலம் வாழ்ந்தாலும், இவ்வுடம்பு அழியாது. இது எந்தைப் பிரான் நந்தியெம் பெருமான் ஆணை.

## காயசித்தி உபாயம்

173. உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ் ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே. (724)

இந்த உடல் அழிந்து போனால் உயிரும் உடலை விட்டு ஓடிவிடும். அற்ப ஆயுள் உடையவர்கள் திடமான உண்மையறிவையும் மெய்ஞ்ஞானத்தையும் அடைய மாட்டார்கள். எனவே உடம்பை வளர்க்கும் உபாயத்தை அறிந்தே நான் உடம்பை வளர்த்தேன். அதன் மூலமாக உயிரையும் வளர்த்து மெய்யுணர்வடைந்தேன்.

***174. உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்***
***உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்***
***உடம்புளே உத்தமன் கோயில் கொண்டா னென்று***
***உடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே. (725)***

முன்னம் இந்த உடம்பினை குற்றமுடைய அருவருப்பானதென இருந்தேன். பின்னர் உடம்புக்குள்ளே கோயில் கொண்டு பொருந்தியுள்ள சிவபரம்பொருளை நான் கண்டு கொண்டேன். இவ்வகையில் இவ்வுடம்பினுள்ளே உத்தமனாகிய சிவபிரான் கோயில் கொண்டிருக்கும் காரணத்தால், இவ்வுடம்பை இவ்வுலகிலே தங்கியிருந்து ஓம்புகின்றேன்.

***175. சத்தியார் கோயில் இடம்வலம் சாதித்தால்***
***மத்தியா னத்திலே வாத்தியம் கேட்கலாம்***
***தித்தித்த கூத்தும் சிவனும் வெளிப்படும்***
***சத்தியம் சொன்னோம் சதாநந்தி ஆணையே. (730)***

மகா சத்தியார் உறைகின்ற கோயிலாகிய இவ்வுடம்பிலே சஞ்சரிக்கின்ற வாயுவை இடமாக வலமாக பூரக கும்பக ரேசகம் செய்து தியானித்துச் சமாதியில் நின்றால், மத்திய ஸ்தானமாகிய (மத்தியானத்திலே) புருவ நடுவிலே, நாத ஒலியினை நாம் கேட்கக் கூடும். அந்த நாத ஒலிக் கேற்பத் தித்தித்தா எனக் கூத்தாடும் சிவனும் வெளிப்பட்டுத் தோன்றுவான். இது சதா நந்தி எம்பிரான் ஆணை. சத்தியம் சொன்னேன்.

***176. மாறா மலக்குதம் தன்மேல் இருவிரல்***
***கூறா இலிங்கத்தின் கீழே குறிக் கொண்மின்***
***ஆறா உடம்பிடை அண்ணலும் அங்குளன்***
***கூறா உபதேசம் கொண்டது காணுமே. (733)***

மாறாத எருவாய்க்கு இருவிரல் மேலாகவும், நம் குறியாம் இலிங்கத்திற்குக் கீழாகவும், உள்ள இடத்தைக் குறியாகக் கொண்டு கவனிக்கவும். ஒழியாத உடம்பிடையே உறையும் அண்ணலாம் சிவனும் அங்கே வெளிப்படையாகத் தோன்றுவான். அவனைப் பேசா எழுத்தைக் கொண்டு கண்டு கொள்வீராக.

***177.*** ***நீல நிறனுடை நேரிழை யாளொடும்***
***சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு***
***ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்***
***பாலனு மாவன் பராநந்தி ஆணையே.*** ***(734)***

நீல நிறத்தினையுடைய மகா சக்தியோடு மிகவும் பொருந்தி ஒருங்கிணைந்து, அச் சக்தியையே தன் சதமாகக் கொண்டிருப்பவர்களுக்கு உலகம் அறிய நரையும் திரையும் மாறிவிடும். அவர் வயோதிகத் தன்மை விட்டுப் பாலனாக மாறுவார்கள். இது நந்தி எம்பெருமான் ஆணையாகும்.

***178.*** ***அண்டம் சுருங்கில் அதற்கோர் அழிவில்லை***
***பிண்டம் சுருங்கில் பிராணன் நிலைபெறும்***
***உண்டி சுருங்கில் உபாயம் பலஉள***
***கண்டம் கறுத்த கபாலியு மாமே.*** ***(736)***

அண்டம் எனப்படும் நம் விதை வாயிலாக விளையும் உடலுறவு குறைந்தால், இந்த உடம்புக்கு எவ்வித அழிவுமில்லை. பிண்டமாகிய தேகம் மெலிந்து, சுக்கானால், பிராணன் நிலைத்து நிற்கும். அதாவது பிராணவாயுவாம் உயிர்ப்பு நிலை பெறும். நாம் உண்ணும் உணவு சுருங்கினாலோ, பலவகைப்பட்ட உபாயங்களை, நாம் யோகப்பயிற்சியால் அடையலாம். அதன் மூலம், நாம் கண்டம் கறுத்த கபாலியும் ஆக மாறிவிடலாம்.

***179.*** ***பிண்டத்தில் உற்றப் பிழக்கடை வாசலை,***
***அண்டத்துள் உற்று அடுத்தடுத்து ஏகினால்***
***வண்டிச்சிக்கும் மலர்க்குழல் மாதரார்***
***கண்டிச்சிக்கும் நற் காயமு மாமே.*** ***(736)***

இந்த உடலினிடத்தே புறக்கடை வாயிலாகப் பொருந்தியுள்ள மூலாதார வாயிலிலே உள்ள குண்டலினியை அண்டமாகிய நடு நாடி வழியாக அடுத்தடுத்துச் செலுத்தும் பயிற்சி உடையவர்கள், வண்டு இச்சிக்கும் மலர் சூடிய கூந்தலையுடைய மாதர்கள் கண்டு இச்சிக்கின்ற உடலைப் பெறுவார்கள்.

### காலச்சக்கரம்

180. முறை முறை அறிந்து முயன்றிலர் ஆகில்
இறை இறை யார்க்கும் இருந்தல் அரிது
மறையது காரணம் மற்றொன்றும் இல்லை
பறை பறையாது பணிந்து முடியே. (748)

யோகத்தியானப் பயிற்சியில் பயில்பவர்கள், தம் உடல் நன்னிலையிலே விளங்க முறை முறையாக ஆராய்ந்து முயன்று, தம் பயிற்சியை இடையறாது செய்தல் வேண்டும். இல்லையேல் யாருக்கும் தமக்கென வகுத்துள்ள ஆயுள் காலத்தினை நீட்டித்துச் சிறிதளவேனும் இருத்தல் இயலாது. இதுதான் யோக ஞானமறைப் பொருள் உணர்த்தும் காரணமாகும். இதை வெளியிலே பறைசாற்றாமல் பணிவோடு தியானத்தில் அமர்ந்து முடித்தல் வேண்டும்.

181. ஓவியமான உணர்வை அறிமின்கள்
பாவிகள் இத்தின் பயனறிவா றில்லை
தீவினையா முடல் மண்டல மூன்றுக்கும்
பூவில் இருந்திடும் புண்ணியத் தண்டே. (751)

சுவரில் எழுதிய சித்திரம் போல, உணர்வு உயிர்ப்படங்கி உள்ள தன்மையினை அறிந்து கொள்ளுங்கள். பாவிகள் இதனது பயனை அறிய மாட்டார்கள். ஏனெனில் அவர்களது உடல் தீவினைப்பட்ட உடல் ஆகும். சூரியன், சந்திரன், தீ, எனும் மூவகைப்பட்ட மண்டலத்திற்கும் ஆயிரம் இதழ் தாமரைப்பூஎன்னும் ஆக்ஞா சக்கரத்திற்கும் ஆதாரமாகி நிற்பது வீணாத்தண்டு எனப்படும் முதுகின் முள்ளந் தண்டு வழியே செல்லும் சுழிமுனை நாடியே ஆகும்.

182. தண்டுடன் ஓடித் தலைப்பெய்த யோகிக்கு
மண்டலம் மூன்றும் மகிழ்ந்துடல் ஒத்திடும்,
கண்டவர் கண்டவர் காணார் வினைப்பயன்
பிண்டம் பிரியப் பிணங்கு கின்றாரே. (752)

பிராணாயமத்தின் மூலம் தன் குண்டலினி சத்தியை முள்ளந்தண்டின் வழியே செலுத்தி அதனுடன் தன் தியானத்தினைத் தொடர்ந்து தலைப்பாகிய ஆக்ஞையைச் சென்று அடைந்த யோகிக்கு, மும்மண்டலமாகும் சூரியன், சந்திரன், தீ, மூன்றும் ஆனந்தத்துடன் ஒத்திருக்கும். இதை நன்கு உணர்ந்து கண்டவர்களே மெய்ப் பொருள் கண்டவர்கள். இதைக் காணாதவர் தம்வினைப்பயனால் இந்த உடல் தம்மை விட்டு நீங்குமே என இறுதி காலத்தில் துயரமடைவர்.

183. காணகிலா தார்கழிந் தோடிப்போ வார்கள்
நாணகிலா தார் நயம் பேசிவிடு வார்கள்
காணகிலா தார் கழிந்தபொரு ளெல்லாம்
காணகிலா மல் கழிகின்ற வாறே. (761)

மேற்கூறிய மெய்ப்பொருள் உண்மையினைக் காணாத் தன்மை உடையவர்கள், இந்த உடலைவிட்டு இறந்தபின், அடுத்த பிறவிக்கென ஓடிப் போவார்கள். இப்படி அடுத்தடுத்துப் பிறவி எடுப்பதில் வெட்கப்படாதவர்கள் உலக இலக்கிய நயங்களைப் பேசி வாழ்நாளை விடுவார்கள். மெய்ப்பொருள் உண்மையினைக் காணாதவர்கள் இவ்வுலகிலே நிலையற்றுக் கழிந்த பொருள்களின் தன்மையையும் அவை அழிந்தொழியும் வகையினையும் காணமாட்டாதவர்களே ஆவர்.

184. கழிகின்ற அப்பொருள் காணகி லாதார்
கழிகின்ற அப்பொருள் காணலு மாகும்
கழிகின்ற உள்ளே கருத்துற நோக்கில்
கழியாத அப்பொருள் காணலு மாமே. (762)

உடலைவிட்டுக் கழிந்தோடிப் போகும் அப்பொருளாம் ஆன்மாவைக் காண மாட்டாதவர்கள், அப்பொருளைத்

திருவருளால் காணவும் கூடும். கழிந்து போகும் உடலுள்ளே உறைகின்ற ஆன்மாவை, கருத்து அதிலே நிலைத்து நிற்கும்படி சிந்தனையை ஒருமுகப்படுத்தி, நோக்கித் தியானித்தால், எக்காலமும் கழிதல் இல்லாத சிவனாகிய அப்பொருளைக் காணவும் கூடும்.

**185. நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை**
**நாடவல் லார்கள் நரபதியாய் நிற்பார்**
**தேடவல் லார்கள் தெரிந்த பொருளிது**
**கூடவல் லார்கட்குக் கூறலு மாமே. (764)**

இறைவனை, தியான யோகத்தினால் நாடவல்லார்களுக்கு நமனது துன்பமுமில்லை. பிறப்பிறப்பாம் கேடுகளுமில்லை. அப்படிப்பட்டவர்கள் மக்களுக்குள்ளே தெய்வமாகக் கருதப் படுவார்கள். இறைவனைத் தேடுந்தன்மையிலே வல்ல யோகியர் ஞானியர் கண்டறிந்த உண்மை இது. இறைவனான சிவபெருமானுடன் இரண்டறக் கலக்கின்ற அருள் பெற்றவர்களுக்குக் கூறத்தக்கது ஏதுமில்லை.

**186. அண்ணல் இருப்பிடம் ஆரும் அறிகிலார்**
**அண்ணல் இருப்பிடம் ஆய்ந்து கொள்வார்கட்கு**
**அண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்**
**அண்ணலைக் காணின் அவனிவன் ஆகுமே. (766)**

நம் அண்ணலாம் சிவபெருமானின் இருப்பிடத்தை எவருமே அறிதல் இலர். அவ்வண்ணலின் இருப்பிடத்தைத் தம் ஞானத்தால் தெளிய வல்லவர்களுக்கு அவன் சிறிதும் மறைவில்லாமல் அவர்கள் உள்ளத்திலேயே அறிவுக்கறிவாய் அமர்ந்திருப்பவனாவான். அந்த அண்ணலை நேருக்கு நேராக உள்ளத்துள்ளே உணரும் தன்மை வாய்ந்தவர்கள் 'அவனே இவன்' எனும் தன்மை அடையப் பெறுகிறார்கள்.

**187. அவனிவன் ஆகும் பரிசறி வாரில்லை**
**அவனிவன் என்னும் பரிசது கேள்நீ**
**அவனிவன் ஓசை ஒளியினும் ஒன்றிடும்**
**அவனிவன் வட்டம தாகிநின் றானே. (767)**

அவனாம் சிவன் இவனாம் ஆன்மாவாகி நிற்கும் உயர்ந்த சாயுச்ச நிலையை அறிந்தவர்கள் இலர். அவன் சிவனாகும் தன்மையினை நீ கேட்பாயாக. சிவனும் ஆன்மாவும் ஓசையும் (நாதம்) ஒளியும் (விந்து) போல கலந்து நிற்கும். அதுதான் பிரணவத்திலே அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் கலந்து வட்டமாய் நிற்பதைப் போன்று ஒட்டி உண்டாம், ஒட்டாகிய திருவடிப்பேறு.

## ஆயுள் பரிட்சை

**188. ஓசையும் ஈசனும் ஒக்கும் உணர்வின்கண்**
**ஓசை இறந்தவர் ஈசனை உள்குவர்**
**ஓசை இறந்தவர் நெஞ்சினுள் ஈசனும்**
**ஓசை உணர்ந்த உணர்வது வாமே. *(771)***

சிவஞானமாகிய உணர்வினிடத்திலே, உயிர்ப்பாகிய ஓசையும், ஈசனும் ஒப்பாகி விளங்குவர். ஓசையாம் உயிர்ப்பை அடக்கியவர்கள் சிவபெருமானை தியானிப்பவர்களாவார்கள். அப்படி உயிர்ப்படக்கிச் சமாதியிலிருந்து தியானிப்பவர் நெஞ்சிலேதான், ஈசன் உளன். உயிர்ப்பின் தன்மையினை உணர்ந்த மெய்யுணர்வே இதுவாகும்.

**189. ஆமே அழிகின்ற வாயுவை நோக்கிடில்**
**நாமே லுறைகின்ற நன்மை யளித்திடும்**
**பூமேல் உறைகின்ற போதகம் வந்திடும்**
**தாமே உலகின் தலைவனு மாமே. *(722)***

ஆகும் தன்மை வாய்ந்தும், அழிகின்றதாய் வெளியிலே புறப்பட்டுப் போம் நால் விரல் உயிர்ப்பையும் நோக்கி அடக்கினால், அது அண்ணாக்கு மேல்நோக்கி (நாமேல் எழுகின்ற) எழுந்து, மூக்கு வழியினை அடைக்கும் தன்மையைத் தரும். அக்காலை ஆயிரம் இதழ் தாமரை மலராம் சகஸ்ராரத்தினால் சிவஞானம் விளங்கப் பெறும். அச்சிவஞானம் கைகூடப் பெற்றவர்களே உலகின்கண் செந்நெறித் தலைவர்களாகத் திகழ்வார்கள்.

## கேசரியோகம்

**190. நாவின் நுனியை நடுவே சிவிறிடின்**
**சீவனும் அங்கே சிவனும் உறைவிடம்**
**மூவரும் முப்பத்து தேவரும் தோன்றுவர்**
**சாவதும் இல்லை சதகோடி யூனே. (803)**

நுனி நாக்கினை நடு அண்ணத்தின் மேல் மலர்த்தி மூக்கு உச்சித் துளையினை அடைத்து வைத்தால், சிவனும் ஆன்மாவும் இணைந்து உறைகின்ற இடமாக அது மாறும். அக்கால் மூவராகிய பிரமன், மால், உருத்திரனும் அனைத்து தேவர்களும் தோன்றுவார். சத கோடி ஊனுடம்பு எடுத்துச் சாகும் தன்மையும் அங்கே இல்லை.

**191. ஊன்ஊறல் பாயும் உயர்வரை உச்சிமேல்**
**வான்ஊறல் பாயும் வகையறி வாரில்லை**
**வான்ஊறல் பாயும் வகையறி வாளர்க்குத்**
**தேன்ஊறல் உண்டு தெளியலு மாமே. (804)**

ஊனது ஊறலாகிய சுக்கிலத்தைப் பிராணாயாமம் முதலிய பயிற்சியால் தியான மெய்தி, அதனால் அதை ஆறாதாரத்தின் வழி நடுநாடியில் மேலெழச் செய்து, உச்சிக்கண் உள்ள ஆயிரம் இதழ் தாமரையாகிய ஆக்ஞையில் பாயச் செய்தல் வேண்டும். அப்படிப் பாயும் வகையினை அறிபவர்கள் சிலரே. அந்த வகையினை நன்கு அறிந்த யோகியர், தேன் ஊறலாகிய அமுதத்தின் சுவையினை உண்டு தெளிவார்கள்.

**192. தீவினை யாடத் திகைத்தங் கிருந்தவர்**
**நாவினை நாடின் நமனுக் கிடமில்லை**
**பாவினை நாடிப் பயனறக் கண்டவர்**
**தேவினை யாடிய தீங்கரும் பாமே. (807)**

தீய வினைகளின் ஆட்சியால் திகைப்படைந்து வாழ்க்கையிலே கிடப்பவர்கள் கேசரி யோகப்பயிற்சியால் நாவினை நாடி, உள்நாக்குத் துளையை அடைக்கப் பயின்றால், நமனுக்கு வேலையற்றுப் போம். தோத்திரப் பாக்களை நாடி பக்தி செய்து அதன் பயனை முழுமையாகக் கண்டவர்கள், தேவனாம் சிவபெருமானைச் சென்றடைந்திடும் தீங் கரும்பாவார்கள்.

193. ஊனீர் வழியாக உள்நாவை ஏறிட்டுத்
தேனீர் பருகிச் சிவாயநம வென்று
கானீர் வருவழி கங்கை தருவிக்கும்
வானீர் வருவழி வாய்ந்தறி வீரே. (809)

ஊன் நீர் ஆகிய விந்து மேலேறும் வழியாக உண்ணாக்கினை மேற்செலுத்தித் தேன் போல் நீராகிய அமிர்த தாரையைப் பருகி, சிவாயநமவென்று தியானித்து வந்தால், கானாகிய மேல் வீட்டிலிருந்து உச்சித் துளை அமிழ்தம் வரும் வழியைத் திருவருட் சக்தி அமைக்கும். வான் நீர் என்று சொல்லப்படும் பேரருள் சக்தியின் பேரின்ப நிலை எய்தும் வழி இது என அறிக.

194. கோயிலினுள்ளே குடிகொண்டு வாழ்பவர்
தாயினும் நல்லார் தரணி முழுதுக்கும்
காயினும் நல்லவர் காய்ந்தவர் தம்முளும்
தீயினும் தீயரத் தீவினை யாளர்க்கே. (811)

நமது உள்ளமாகிய கோயிலிலே கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமான் இவ்வுலகம் யாவற்றிற்கும் தாயைக் காட்டிலும் தயை மிக்க நல்லவர். அவர்தம் பக்தர்களுக்கு உண்டாகும் தீவினைகளைக் களையத் துன்பம் தரும் காலத்திலும் அவர் நல்லவரே. ஆனால் அந்தத் தீவினையாளர்களாகிய கொடியவர்களைத் துன்புறுத்தும் காலத்தில் அவர்களும் உய்தி யடையவே தீயினும் கொடியராகி அதிக துன்பத்தினைத் தருவர்.

**195. தீவினை யாளர்தம் சென்னியில் உள்ளவன்**
**பூவினை யாளர்தம் பொற்பதி ஆனவன்**
**பாவினை யாளர்தம் பாவகத் துள்ளவன்**
**மாவினை யாளர் மதியி லுள்ளானே (812)**

முத்தீயினை வளர்த்தி வழிபடுவர்களின் தலைமிசை விற்றிருப்பவன். பூவால் பூசனை செய்து வழிபடுபவர் களுடைய பொன் போன்ற உள்ளத்தையே பதியாகக் கொண்டுறைபவன். தோத்திரப் பாக்களால் துதித்து வழிபாடு செய்பவர்களின் பாவனையிலே அமர்ந்துறைபவன். மாவினையாம் யோக முயற்சி உடையவர்களின் மதியிலே உள்ளவனே சிவபெருமானாவான்.

**196. பையினில் உள்ளே படிக்கத வொன்றிடின்**
**மெய்யினின் உள்ளே விளங்கும் ஒளியதாம்**
**கையினுள் வாயுக் கதித்தங் கெழுந்திடின்**
**மையணி கோயில் மணிவிளக் காமே. (820)**

உடலாகிய இப்பையினுள்ளே உள்ள படிக்கதவாகிய கேசரி யோகத்தின் மூலமாக நாக்கை மேலண்ணத்திற்பதிய வைத்துப் பயின்று தியானித்தால், இந்த மெய்யினுள்ளே இறைவன் விளங்கி ஒளிர்வான். நம் கை வயப்பட்ட வாயுவும் ஒலித்து மேல் எழும் நிலை யடைந்தால், அருளாகிய மழை மேகம் தவழும் கோயிலின் மணிவிளக்காக இவ்வுடல் ஆகும்.

# நான்காம் தந்திரம்

## அசபை. (பேசா எழுத்து)

197. ஓரெழுத் தாலே உலகெங்கும் தானாகி
ஈரெழுத் தாலே இசைந்தங் கிருவராய்
மூவெழுத் தாலே முளைக்கின்ற சோதியை
மாவெழுத் தாலே மயக்கமே உற்றதே. (885)

'ஓ' என்னும் ஓர் எழுத்தால் எல்லா உலகங்களின் கலப்பாய்த் தானாகி, அந்த ஓரெழுத்தின் கூறாகிய 'அ', 'உ' எனும் ஈரெழுத்தால் சிவம் என்றும் சக்தி என்றும் பேர்பெற்று, மூவெழுத்தாகிய அகர உகர மகரங்களின் கலப்பாகிய ஓம் எனும் பிரணவத்தால் உதித்தெழுகின்ற சோதி வடிவான சிவபிரானது 'ம்' என்று சொல்லப்படும் மாயையைக் குறிக்கும் சொல்லால் ஆன்மாவுக்கு மயக்கம் வந்தடைந்தது.

198. தானே பரஞ்சுடர் தத்துவமாய் நிற்கும்
தானே அகார உகாரமதாய் நிற்கும்
தானே பரஞ்சுடர் தத்துவக் கூத்துக்கு
தானே தனக்குத் தராதலம் தானே. (889)

மேலான பேரொளிப் பிழம்பு அது ஒன்றேதான். அதுவே தத்துவப் பொருளாய் நிற்கும். அதுதானே அகார உகாரமாய் அதாவது சிவம் சக்தியாகிப் பரிணமிக்கும். அப்பரஞ்சுடர்தானே இறைவன் அம்பலத்தாடும் திருக்கூத்தாம்; தத்துவக் கூத்திற்குத் தனி முதலாகும். தானே தனக்கு இந்த அகில உலகமுமாய் வியாபித்து விளங்கும்.

199. தானே தனக்கு தலைவியுமாய் நிற்கும்
தானே தனக்குத் தனமலையாய் நிற்கும்
தானே தனக்குத் தன்மயமாய் நிற்கும்
தானே தனக்குத் தலைவனு மாமே. (896)

ஒருருவாய் நிலவுகின்ற சிவபெருமானே தனக்குச் சக்தி என்னும் பெயரிய தலைவியுமாகி நிற்கும். அவன்தானே தனக்கு அழிவற்ற பெரிய தனமலையாய் திருவடிப் பெருஞ்

செல்வமாகி விளங்கும். அவன் தானே தனக்குச் சிவமாகி விளங்குபவன். அவனே தான் தனக்குத் தலைவனாவான். இங்ஙனம் அவனே யாவுமாகி நிற்பன்.

200. தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனை
தலைவனு மாய்நின்ற சற்பாத் திரத்தை
தலைவனு மாய்நின்ற தாதவிழ் ஞானத்
தலைவனு மாய்நின்ற தாளிணை தானே. (897)

உலகம் அனைத்தினுக்கும் தலைவனாகி நிற்பவன் தற்பரக் கூத்தன். அவன் ஒருவனே அழிவற்ற சற்பாத்திரம், சத்சொரூபன். ஒப்பற்ற தலைவனாகி நிற்கின்ற அவனே பதி ஞானத் தேனினைச் சிந்துகின்ற இரண்டு அருட்டிருவடிகளைத் தாங்கிய தலைவனாய் நிற்கின்றவ னாவான்.

201. இருக்கின்ற மந்திரம் ஏழாயிர மாம்
இருக்கின்ற மந்திரம் எத்திறம் இல்லை
இருக்கின்ற மந்திரம் சிவன்திரு மேனி
இருக்கின்ற மந்திரம் இவ்வண்ணம் தானே. (900)

எண்ணிலடங்காது ஏழாயிரமாகி விளங்கும் மந்திரங்க ளெல்லாம் இங்கே சொல்லப்படுகின்ற, நிலைத்துள்ள இம்மந்திரமாகிய அசபா மந்திரமாகும் ஓம் என்ற சொல்லுக்கு ஒப்பான திறம் வாய்ந்தன அல்ல. அப்படிப் பொருந்தி இருக்கின்ற அந்த ஓம் என்னும் அசபா மந்திரமே சிவனது திருமேனி ஆகும். பிற மந்திரங்கள் யாவுமே சிவனது திருமேனியையே குறிக்கும்.

202. தானே தனக்குத் தகுநட்டந் தானாகும்
தானே அகார உகார மதாய் நிற்கும்
தானே ரீங்காரத் தத்துவ கூத்துக்குத்
தானே உலகில் தனிநடந் தானே. (901)

தானாகி நிற்கும் 'சிவ' என்னும் சொல்லே ஒப்பற்ற சிறந்த திருக் கூத்தாகும். அவன்தானே அகார உகாரங்களாகிச் சிவ மாகியும் சத்தியாகவும் விளங்கும். அவன்தானே கிரீம் என்னும் மாயையின் பீஜ மந்திரமாகி, உலகத் தோற்ற ஒடுக்கங்கட்கு

முதற் காரணமாகிய தத்துவ திருக்கூத்துக்குக் காரணமாகும். அவன்தானே உலகின் ஒப்பற்ற நடமாகி விளங்கும் சிவபெருமான்.

**203. பொன்னான மந்திரம் புகலவும் ஒண்ணாது**
**பொன்னான மந்திரம் பொறிகிஞ் சுகத்தாகும்**
**பொன்னான மந்திரம் புகையுண்டு பூரிக்கில்**
**பொன்னாகும் வல்லோர்க்கு உடம்பு பொற்பாதமே. (906)**

இந்த அசபை என்னும் பொன்போன்ற மந்திரத்தின் (ஓம்) பெருமையை எடுத்துச் சொல்ல இயலாது. இம்மந்திரத்தின் செயல் ஐம்பொறிகளுள் ஒன்றாகிய உதட்டளவே நிற்கும். இப் பொன்னான மந்திரத்தின் உயிர்ப்பினை உள்ளே உட்கொண்டு பூரித்தலைச் செய்தால் சாதக வல்லோர்களுக்கு உடம்பு பொற் பாதமாம் சிவனருளிற் சென்று சேரும். (கிஞ்சுகம் = சிவப்பு) (உதடு)

**204. பொற்பாதம் காணலாம் புத்திரர் உண்டாகும்**
**பொற்பாதத் தாணையே செம்புபொன் னாகிடும்**
**பொற்பாதங் காணத் திருமேனி ஆகிடும்**
**பொற்பாத நன்னடம் சிந்தனை செல்லுமே. (907)**

மேற்கூறிய அசபையாம் பொன்னான மந்திரத்தால் சிவனது பொற்பாதம் காணலாம். சற்புத்திர பாக்கியம் உண்டாகும். அந்த அழகிய திருவடிகளின் ஆணை, செம்பு பொன்னாவதை ஒப்ப, இவ்வான்மா மும்மலம் நீங்கி இனற நிலையடையும். இப் பொற்பாதங்களைக் காணும்படியான திருமேனி வந்தெய்தி விடும் (சாரூபநிலை). அப்பொற் பாதம் செய்கின்ற நல்ல நடனத்திலே சிந்தனை சென்று லயிக்கும்.

**205. ஒன்றிரண் டாடஓர் ஒன்றும் உடனாட**
**ஒன்றினின் மூன்றாட ஓரேழும் ஒத்தாட**
**ஒன்றினால் ஆடஓர் ஒன்பதும் உடனாட**
**மன்றினில் ஆடினான் மாணிக்கக் கூத்தே. (913)**

மூ-7

ஒன்று இரண்டு எனப்படும் நிலமும் நீரும் ஆடவும் அவைகளுடன் ஒப்பற்ற சிவமும் திருவருள் விரவி உடனாட, ஒன்றினில், மூன்று எனப்படும் ஒளிவிளக்கம் செய்வதில் மூவகையினதாய சூரிய, சந்திர, தீ, என்னும் மூன்றும் ஆட, அதனோடு ஒப்பற்ற ஏழு உலகங்களும் ஒத்து உடனாடவும், பரவெளியாகிய சிதாகாசத்திலே அவன் ஆட, அவனது ஒன்பது சிவவடிவங்களும் (அருவம் நான்கு, அருவுருவம் ஒன்று, உருவம் நான்கு) இடையீடின்றி ஆடும்படித் தன் மாணிக்கக் கூத்தைத் திருவம்பலத்திலே ஆடினான்.

## திருவம்பலச் சக்கரம்

**206. அரகர என்ன அரியதொன் றில்லை**
**அரகர என்ன அறிகிலர் மாந்தர்**
**அரகர என்ன அமரரும் ஆவர்**
**அரகர என்ன அறும்பிறப் பன்றே.** **(916)**

அரகர என்று தோத்தரிப்பவர்களுக்கு அரிய செயல் யாதொன்றும் இல்லை. அரகர என்ற சொல்லின் மெய்ப் பொருளை மாந்தர் பலர் அறிகிலர். அரகர என்று ஓதுபவர்கள் அமரரும் ஆவார்கள். அரகர என்று துதிப்பதனால் பிறப்பறும்.

**207. ஆலயமாக அமர்ந்த பஞ்சாக் கரம்**
**ஆலயமாக அமர்ந்த வித்தூலம் போய்**
**ஆலயமாக அறிகின்ற சூக்கு மம்**
**ஆலயமாக அறிந் திருந் தானே.** **(919)**

திருக்கோயிலாக அமைந்திருப்பது நமசிவாய என்னும் பஞ்சாக்கரமே. அந்த பஞ்சாக்கரம் தூலபஞ்சாக்கரம் ஆகும். அந்தத் தூல பஞ்சாக்கரம் உலகியலைக் கருதுவது. அந்தத் தூலபஞ்சாக்கரம் அகன்று போய் திருக்கோயிலை அறியும். சிவஞானத்தை நல்கும். சூக்ம பஞ்சாட்சரமாம் சிவாயநம என்பதை ஜெபித்தல் வேண்டும். இதுவே இறைவன் உறையும் திருக்கோயில்.

**208. நாடும் பிரணவ நடுஇரு பக்கமும்**
**ஆடும் மலர்வாய் அமர்ந்தங்கு நின்றது**
**நாடு நடுவுண் முக நமசிவாய**
**வாடும் சிவயநம புறவட்டத் தாயதே (922)**

நாடித் துதிக்கின்ற பிரணவ மந்திரத்தின் நடுவின் இருபுறத்திலும், பேசுகின்ற - உச்சரிக்கின்ற மலர்போன்ற வாயினிலே, அமர்ந்து நின்றது நமசிவாய எனும் தூல பஞ்சாட்சரத்து மந்திரமாகும். மேல் வட்டத்துள்ளே நின்றது சூக்கும பஞ்சாட்சர மந்திரமான 'சிவாயநம என்பதாம்.'

**209. அமர்ந்த அரகர வாம்புற வட்டம்**
**அமர்ந்த அரிகரி யாம் அதனுள் வட்டம்**
**அமர்ந்த அசபை யாம் அதனுள் வட்டம்**
**அமர்ந்த ரேகையும் ஆகின்ற சூலமே (925)**

மூன்று வட்டங்களுள் அமைக்கப்படும் அம்பலச் சக்கரம் வருமாறு. புறவட்டத்திலே அரகர என்றும், அதனுள் வட்டத்திலே அரிகரி என்றும், அதை அடுத்துள்ள உள் வட்டத்திலே ஓம் எனும் அசபா மந்திரமும், சூலமே குறியென அமைந்திருக்கும்.

**210. அஞ்செழுத் தாலே அமர்ந்தனன் நந்தியும்**
**அஞ்செழுத் தாலே அமர்ந்தபஞ் சாக்கரம்**
**அஞ்செழுத் தாகிய அக்கர சக்கரம்**
**அஞ்செழுத் துள்ளே அமர்ந்திருந் தானே. (934)**

அஞ்செழுத்தாம் பஞ்சாட்சரத்தாலே அமர்ந்திருப்பவன் நந்தி எம்பெருமானாம் சிவன். எனவே அஞ்செழுத்தாலாகியதே 'நமசிவாய' என்னும் பஞ்சாட்சர மந்திரம். அந்த அட்சரத்தினாலே அமைந்திருப்பது தான் பஞ்சாட்சர சக்கரம். அந்தப் பஞ்சாட்சர சக்கரத்தினுள்ளே உள்ள பஞ்சாட்சர மந்திரத்துள்ளே இறைவன் அமர்ந்திருக்கிறான்.

211. கூத்தனைக் காணும் குறிபல பேசிடில்
கூத்தன் எழுத்தின் முதலெழுத் தோதினால்
கூத்தனோடு ஒன்றிய கொள்கை யராய் நிற்பர்
கூத்தனைக் காணும் குறியது வாமே. (935)

கூத்தனாம் சிவபெருமானைக் காண்பதற்குரிய அடையாளம், பல பேசினாலும், கூத்தன் எழுத்தாம் பஞ்சாட்சரத்தின் முதலெழுத்தாம் சிவ என்பதனை இடையறாது உச்சரித்தலேயாம். இதை ஓதினால் கூத்தனோடு ஒருங்கு சேர்கின்ற கொள்கையராக நிலைத்திருப்பர். இதுதானே சிவன் திருவடிச் சேரும் திருநெறியாகும்.

212. அத்திசைக்குள் நின்ற அனலை எழுப்பியே,
அத்திசைக் குள்நின்ற அவ்வெழுத் தோதினால்
அத்திசைக் குள்நின்ற அந்த மறையனை
அத்திசைக் குள்ளுற வாக்கினன் தானே (936)

மூலதாரமாம் அத்திசையினுள்ளே நின்ற, மூலக் கனலாய், மூலாதாரத்தில் உறங்கிக் கிடக்கும், குண்டலினியை எழுப்பியே, அத்திசைக்கு உரியதாம் பஞ்சாக்கர மந்திரத்தை ஓதியே தியானித்தால், அத்திசைக்குரிய வேத முதல்வனாம் சிவபிரான் நம்முள் உறைகின்ற ஆன்மாவுக்கு உள்ளுறவாகின்றவனாவான்.

213. தானே எழுகுணம் தண்சுடராய் நிற்கும்
தானே யெழுகுணம் வேதமுமாய் நிற்கும்
தானே எழுகுண மாவதும் ஓதிடில்
தானே எழுந்த மறையவ னாமே (939)

தானே, முகிழ்த் தெழும் குணமாகிய நாதமும், அருள் சுடர்வடிவாகி நிற்கும். அந்த நாத வடிவே, வேத வடிவாகவும், அமையும். தானே எழுங்குணங்களாவதும், அவனே. சொல்லப் புகுந்தால் தானே சுயம்புவாகத் தோன்றிய வேத வித்தானவனும் அவனே.

**214. மந்திரம் ஒன்றுஉள் மலரால் உதிப்பது**
**உந்தியின் உள்ளே உதயம் பண்ணா நிற்கும்**
**சந்தி செய்யா நிற்பர் தாமதறி கிலர்**
**நந்தி தொழுது போய் ஆர்த்தகன் றார்களே. (958)**

ஒப்பற்ற மந்திரமாகிய பஞ்சாக்கரம், உள்ளத்தாமரை மலரினின்றே உதிப்பதாகும். இந்த மந்திரமாகிய ஐந்தெழுத்தினை, உந்திக்கு நேர் உள்ள மணிபூரகத்திலே, தம் உள்ளத்தினை நிலை நிறுத்தி, கும்பகத்தின் போது உச்சரித்தால், 'சிவஜோதி' உதயம் செய்யும். இதை யறியாதவர்கள் சந்தியாவந்தனம் செய்வதே தம் கருமம் எனக் கருதிச் செய்கிறார்கள். மற்றும் சிலர் கோயிலிலே சிவ தரிசனம் செய்து ஆரவாரத்தோடு விலகிப் போவார்கள்.

**215. ஐந்தின் பெருமையே அகலிட மாவதும்**
**ஐந்தின் பெருமையே ஆலய மாவதும்**
**ஐந்தின் பெருமையே அறவோன் வழக்கமும்**
**ஐந்தின் வகை செயப் பாலனு மாமே. (969)**

இந்த அகலிடமாகிய விண்வெளியும் அதனுள் இயங்கும் அண்ட கோளங்களும் ஐந்தெழுத்தின் பெருமையிலே தான் உள்ளன. பஞ்சாட்சர மந்திரத்தின் திருக்குறிப்பே இறைவனது திருக்கோயிலாகும். அந்த அறக்கடவுளின், அருள் செய்கின்ற வழக்கமும், ஐந்தெழுத்தின் பெருமையினாலேயே ஆகும். இந்த ஐந்தெழுத்தினை வகையோடு முறையாக உச்சரிப்பதனால் அவனே உயிர்க் காவலனுமாவான்.

**216. அஞ்சாக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்**
**நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்**
**வஞ்சக மில்லை மனைக்கும் அழிவில்லை**
**தஞ்சம் இதுவென்று சாற்றுகின் றேனே. (980)**

புலனைந்தின் செயல்கள் அற்றுப்போகத் திருவைந் தெழுத்தினது உண்மை நிலையை உணர்ந்த பின்னர், பராபரனாகிய சிவன் நம் நெஞ்சத்தினிடத்தே நிறைந்து நிற்பான். அதன்பின் வஞ்சக எண்ணங்கள் உள்ளத் துதிக்கா. இந்த உடம்புக்கும் அழிவென்பதில்லை. இவ்வகையில் இதுவே நம் அடைக்கலமாம் இடம் என நான் உரைக்கிறேன்.

## அருச்சனை

**217.** ***எய்தி வழிப்படில் எய்தாதன வில்லை***
***எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமும்***
***எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்***
***எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே (1006)***

எம்பிரானைச் சேர்ந்து அவனை வழிபட்டால், நாம் அடைய முடியாதது ஒன்றுமே கிடையாது. இந்திரன் செல்வமும் எண் வகைப்பட்ட சித்திகளும் நம்மை வந்து அடையும். அதோடு அந்த வழிபாட்டால் பிறர் அடைதற்கரிய வீடு பேறும் கிடைக்கும்.

**218.** ***வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்***
***வேண்டார்கள் கன்மம் அதிலிச்சை யற்றபேர்***
***வேண்டார்கள் கன்மம் மிகுசிவ யோகிகள்***
***வேண்டார்கள் கன்மம் மிகுதியோர் ஆய்ந்தன்பே (1008)***

சிவபெருமானுக்கு ஆட்பட்டவர்கள் தான் எனும் அகந்தையோடு செய்கின்ற வினைகளை வேண்டார். கர்ம பலனில் இச்சையற்ற உண்மையான நிஷ்காம்ய கர்ம யோகிகள், காமிய கர்மங்களை வேண்டார்கள். சிறந்த சிவயோகியர்கள் எவ்வினையும் விரும்ப மாட்டார்கள். மிகுதியாக ஆய்ந்து மெய்யுணர்வடைந்த அன்பர்கள், ஞானிகள், எக்கருமங் களையும் ஏற்றுக் கொள்வதில்லை.

**219.** ***தானவ னாக அவனே தானாயிடப்***
***ஆனஇரண்டில் அறிவன் சிவமாகப்***
***போனவன் அன்பிது நாலாம் மரபுறத்***
***தானவ னாகுமோ ராதித்த தேவரே (1011)***

தான் இறை மயமாகி நிற்கும் சுட்டு நிலையினும், (இறைவனே உயிரைத் தன்னுள்ளடக்கி நிற்கும் நிலையினும்) அவன் தானாகி நிற்கவும் ஆன ஒட்டு நிலையினும், ஆய இருவகை நிலையிலும், இரண்டாவதாகக் கூறப்பட்ட, வீட்டு நிலையாம் ஒட்டு நிலையே உயர்ந்தது. இங்ஙனம் சிவமாகப் போனவர் நிலை, அன்பாகிய பக்தி நிலை, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்பவற்றில், நான்காம் நிலையாகிய தானாதலாம் சாயுச்சிய நிலையாம். இந்த நிலையே தான் அவன் ஆதல் ஆகும். எனவே அவர், ஆதித்த தெய்வமாம் சிவசூரியன் நிலை அடைவார் என்க.

## நவகுண்டம்

**220. முக்கணன் தானே முழுச்சுடர் ஆயவன்**
**அக்கணன் தானே அகிலமும் கண்டவன்**
**திக்கணன் ஆகித்திசை எட்டும் கண்டவன்**
**எக்கணன் தானுக்கும் எந்தை பிரானே. (1025)**

முக்கண்களையுடையவனான சிவபெருமானே முழுச் சுடர் மயமாகி - தேஜோமயமாகி - நிற்பவனாவான். அந்த முக்கண்களை உடைய அவனே அகில மனைத்தையும் ஊழிக் காலத்திலே தன் சங்கார கிருத்தியத்தால் தன் ஆற்றலாம் சத்தியுள் அடக்கியவன். எட்டுத் திக்குகள் அனைத்தையும் பொருந்தி திசைகள் அனைத்தையும் கண்டவன் அவனே. எக்காலத்தும் கண்ணன் எனப்போற்றப்படும் காக்கும் கடவுட்கும் அவனே தந்தையாவான்.

**221. நல்லொளியாக நடந்துல கெங்கும்**
**கல்லொளி யாகக் கலந்துள் இருந்திடும்**
**சொல்லொளி யாகத் தொடர்ந்த உயிர்க்கெலாம்**
**கல்லொளி கண்ணுளு மாகி நின்றானே (1028)**

நல்ல திருவருள் ஒளியாக உலகெங்கும் பரந்து நடந்து, நிலைபெற்ற ஒளியாகியே நம் ஆன்மாவிலே கலந்து, உள்ளே நிலைத்துள்ளது எதுவோ அதுவே. திருவருள் திருமொழியாகிய சொல்லொளியாகத் தொடர்ந்து ஆன்மத் திரள்களுக்கெல்லாம் புறத்தே நிலை பெற்ற சோதி வடிவமாகியும், கண்ணுள்ளே திகழும் கண்ணொளியாகவும் திகழ்கின்றது. அதுசிவனேயாம்.

**222. நின்ற இக்குண்டம் நிலையாறு கோணமாய்ப்
பண்டையில் வட்டம் பதைத்தெழு மாறாறும்
கொண்டஇத் தத்துவம் உள்ளே கலந்தெழ
விண்ணுளும் என்ன எடுக்கலும் ஆமே (1029)**

அமைந்துள்ள இந்த ஓம குண்டம் ஆறு கோணமானது. இந்த ஆறு கோணங்களும் மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களைக் குறிக்கும். இதுதான், பண்டைக்கால முதன் முதல். முதலாகிய வட்டமாய் நிலவிய, ஓம் எனும் ஒலி உலக சத்த பிரபஞ்ச வட்டமாகும். அதனோடு ஒருங்கே கிளைத்தெழும் முப்பத்தி ஆறு தத்துவங்களும் உள்ளத்துள்ளே கலந்து மேலெழு அவைகளை வெட்ட வெளியினூடும் உள்ளதாம்படிக் காணுதல் வேண்டும்.

**223. அந்தமிலா தானுக்கு அகலிடம் தானில்லை
அந்தமிலா தானை அளப்பவர் தாமில்லை
அந்தமிலா தானுக்கு அடுத்தசொல் தானில்லை
அந்தமில்லானை அறிந்துகொள் பத்தே (1031)**

முடிவென்பதே இல்லாத சிவனுக்கு இடம் என்பது ஒன்றுமில்லை. அவன் தேசாதீதன். அந்த அந்தம் என்பதே அற்றவனை அளந்தறியும் தன்மை வாய்ந்தவர் யாருமிலர். அவன் அளத்தற்கரியவன். அந்தம் என்பதே இல்லாதவனைக் குறிக்கும் சொல் ஒன்றுமில்லை. நாம ரூப மற்றவன் அவன். அவனைக் குறிக்கும் சொல் பத்து என்பதே. அதாவது யகரமே ஆகும். அதாவது சூக்கும பஞ்சாக்கரத்தின் நடு எழுத்து சிவாயநமவின் நடு எழுத்து ய என்பதாம்.

**224. பார்த்திடம் எங்கும் பரந்தெழு சோதியை**
**ஆத்தம தாகவே ஆய்ந்தறிவார் இல்லை**
**காத்து உடல்உள்ளே கருதி இருந்தவர்**
**மூத்து உடல்கோடி யுகங்கண்ட வாறே (1042)**

நாம் பார்க்கின்ற இடம் எல்லாம் பரந்தெழும் ஜோதியை, அருள் செய்யும் இறையாக, மெய்யுணர்வுடன் ஆராய்ந்து, அறிபவர் யாருமிலர். தம் உடலுக்குள்ளே நவகுண்டத்தைக் காத்து இறைவனையே உள்ளத்தால் கருதி இருந்தவர்கள், தம் உடல் மூத்து கோடியுகம் கண்டவர்களாக வாழ்வார்கள்.

## சத்திபேதம் - திரிபுரை சக்கரம்

**225. திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரம்**
**பரிபுரை நாரணி யாம்பல வண்ணத்தி**
**இருள்புரை ஈசி மனோன்மணி என்ன**
**வருபல வாய்நிற்கும் மாமாது தானே (1046)**

மும்மலம் நீங்க அருள் செய்யும் சத்தி அழகே உருவானவள். ஆன்மாவுள் உரையும் இறைவி, சிவந்த நிறம் வாய்ந்தவள், காற்சிலம்பணிந்தவள், நாரணி என்னும் பெயரால் காத்தல் செய்பவள். பற்பல நிறத்தினை உடையவள். கரியநிறமுள்ள இவள் சக்தி, மனோன்மணி என்று பற்பலவாய் நிற்கும் முழு முதல் தலைவியாகும்.

**226. நின்ற திரிபுரை நீளும் புராதனி**
**குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை**
**நன்றறி கண்டிகை நாற்காற் கரீடணி**
**துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே (1051)**

உயிருக்குயிராய் நிலைத்துள்ள திரிபுரை நிலைபெற்ற புராதனமானவள். குறைவில்லாத அழகியாம் மோகினி. அழகுமிக்க கூந்தலை உடையவள். நன்கு அறியப்படுவதாய கண்டிகை அணிந்தவள். நாலுகின்ற (தொங்குகின்ற)

துதிக்கையே தன் கால் போல் விளங்கும் யானை (கரி) வாகனம் உடையவள். நெருங்கிய இதழ் அமைந்த தாமரை மலரிலே வீற்றிருக்கும் தூய்மையே உருவானவள்.

**227.** ***அவளை அறியா அமரரு மில்லை.***
***அவள் அன்றிச் செய்யும் அருந்தவமில்லை***
***அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை***
***அவளன்றி ஊர்ப்புகு மாறறி யேனே. (1053)***

சக்தியின் திருவருள் ஆற்றலை அறியாத தேவர்கள் யாருமிலர். அவள் துணையில்லாமல் செய்கின்ற அருந்தவம் யாதொன்றுமில்லை. அத் திருவருட் சக்தியில் துணை யில்லாமல், ஐந்தொழிலைச் செய்கின்ற ஆதார மூர்த்திகள் ஐவர்களாலும், செய்யும் கருமம் எதுவுமே இல்லை. அவள் அருளின்றி விடடையும் நெறியினை நான் அறிந்திலேன்.

**228.** ***அறிவார் பராசக்தி ஆனந்தம் என்பர்***
***அறிவார் அருவுரு வாமவள் என்பர்***
***அறிவார் கருமம் அவளிச்சை என்பர்***
***அறிவார் பரனும் அவளிடத் தானே. (1054)***

மெய்யுணர்வு கைவரப் பெற்ற ஞானிகள் பராசக்தியின் வடிவம், ஆனந்த வடிவம் எனக் கூறுவர். மற்றும் அவள் அருவுருவானவள் என்றும் பகர்வார்கள். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்து வகைக் கருமங்களும் அவள் இச்சையாலேயே (சங்கற்ப மாத்திரத்தாலே) நடைபெறுகின்றன எனவும் கூறுவர். பரம் பொருளாகிய சிவபிரானும் அவளிடத்தவனே என்றும் கூறுவர். (உடையாள் உன்றன் நடுவிருக்கும்; உடையாள் நடுவில் நீ இருத்தி - திருவாசகம்)

**229.** ***தான்எங் குளன்அங் குளன்தையல் மாதேவி***
***ஊன்எங் குளதங் குளன்உயிர்க் காவலன்***
***வான்எங் குளஅங் குளேவந்தும் அப்பாலாம்***
***கோன்எங் கும்நின்ற குறிபல பாரே! (1055)***

இறைவனாகிய சிவன், தான் எங்கெங்குள்ளானோ அங்கு எல்லாம் அவள் சக்தி வடிவாம் தையல் மாதேவியும் உளள். ஊனோடு கலந்த உயிர்கள் யாண்டு யாண்டு உளவோ ஆண்டெல்லாம் உயிர்க்குயிராக விளங்கும் உயிர்க் காவலன் சிவன் உளன். வான் வெளி எங்கும் நிறைந்து வீசுகின்ற மந்தமாருதம் போன்று சிவன் எங்கும் நிறைந்துள்ளான். அவன் தோற்றம் பல வகைத்து என்பதை ஓர்க.

**230. போகம்செய் சக்தி புரிகுழ லாளொடும்**
**பாகம்செய் தாங்கே பராசக்தியாய் நிற்கும்**
**ஆகம்செய் தாங்கே அடியவர் நாடொறும்**
**பாகம்செய் ஞானம் படர்கின்ற கொம்பே.** *(1057)*

உயிர்களுக்கு வினைக்கீடாகப் போகம் நுகர்விக்கும் கிரியா சக்தி, புரிகுழலை உடைய இச்சா சக்தியுடன் இணைந்து பராசக்தியாக விளங்கி நிற்பாள். அவளை உள்ளத்துள்ளே வைத்துத் தியானிக்க, அங்கே நின்று, திருவடி ஞானம் முதிர்ச்சியடையும்படி, நமக்குக் கொழுக்கொம்பாக விளங்கி நிற்பாள் அவள்.

**231. கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை**
**வம்பவிழ் கோதையை வானவர் நாடியை**
**செம்பவளத் திரு மேனிச் சிறுமியை**
**நம்பிஎன் உள்ளே நயந்து வைத்தேனே.** *(1058)*

கொம்பினைப் போன்று நுடங்கும் இடையாளை, குவிந்த மார்பினை உடையவளை, மணம் வீசும் மலர்ச் சூடிய கூந்தலாளை, வானகத் தேவர்கள் பூசிக்க நாடுகின்றவளை, சிவந்த பவளம் போன்ற அழகிய திருமேனி உடைய கன்னிகையை, உயிர்த்துணை என நம்பி, என் உள்ளத்துள்ளே விரும்பி வைத்துள்ளேன்.

**232.** ***வைத்த பொருளும் மருஉயிர்ப் பன்மையும்***
***பத்து முகமும் பரையும் பராபரைச்***
***சித்தக் கரணச் செயல்களும் செய்திடும்***
***சத்தியும் வித்தைத் தலையவ ளாமே*** ***(1059)***

இவ்வுலகத்திலே சிருட்டித்து வைக்கப்பட்ட எண்ணற்ற பொருள்களும், அவற்றோடு இணைந்துள்ள உயிர்த் திரள்களும் எட்டுத்திசை மேல் கீழ் என்று சொல்லப்படும் பத்துப் பக்கம் நோக்கும் பத்து முகங்களும், கிரியா சத்தியாம் பரையும், ஞான சத்தியாம் பராபரையும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் அந்தகரணங்களைச் செயற்படுத்துபவளும் இறையாம் சிவன்தன் சக்தியும், வித்தை எனப்படும் பதிஞானத்தின் தலைவியும் அவளேயாம்.

**233.** ***உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி***
***மணங்கமழ் பூங்குழல் மங்கையும் தானும்***
***புணர்ந்துட னேநிற்கும்; போதரும் காலைக்***
***கனிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே.*** ***(1063)***

நம்மை உணரவைத்து உடனாகி நிற்கும் உள்ளொளியாகியும் மணம் வீசும் மலர் அணிந்த கூந்தலையுடைய சக்தியும் தானுமாகி ஒன்றாகியும் விளங்குபவன் சிவனே. அவன் தான் வெளிப்படுங் காலத்திலே, சிந்தித்து மேனிலையிலே எழுச்சியுள்ளவர்களுக்கு மேலான கதி அருள்பவள் சத்தியே!

**234.** ***நின்றான் அவன்தான் உடலும் உயிருமாய்***
***சென்றான் சிவகதி சேரும் பராசக்தி***
***ஒன்றாக என்னுட் புகுந்துணர் வாகியே***
***நின்றான் பரஞ்சுடர் ஏடங்கை யாளே.*** ***(1066)***

உடலும் உயிரும் போல சிவன் என் ஆன்மாவில் கலந்து நின்றிருக்கிறான். சிவகதியிலே தன் அடியவர்களைக் கொண்டு சேர்க்கின்ற பராசத்தி, சிவனோடு ஒன்று கலந்து என்

உள்ளத்துள்ளே புகுந்து பேருணர்வாகி நின்றனள். அவளே பரஞ்சுடர். வேதாகமங்களைச் சுவடி வடிவாக்கி அவ்வேட்டினைத் தன் கையிலே வைத்தவள் ஆவாள்.

**235.** ***ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி***
***வேடம் படிகம் விரும்பும் வெண்டாமரை***
***பாடும் திருமுறை பார்ப்பதி பாதங்கள்***
***சூடுமின் சென்னிவாய் தோத்திரம் சொல்லுமே. (1067)***

திருமறைத் திருமுறைகளைத் தாங்கும் ஏட்டைக் கையில் ஏந்திய நங்கை மனோன்மணியாம் எம் தலைவி, முக்கண்களை உடையவள். அவள் வடிவமோ படிக நிறத்தது. வெண்டாமரை மலரைத் தன் இருக்கையாக விரும்புகின்றவள். திருமறைகளைப் பாடும் வாயினள். அந்த அந்தணாட்டியின் பாதங்களை நும் தலையிலே சூடுங்கள். அப்படிச் சூடிய அளவிலே உங்கள் வாய் தோத்திரங்களைச் சொல்லித் துதிக்கும்.

(பார்ப்பதி = அந்தணாட்டி)

**236.** ***ஓங்காரி என்பாள் அவளொரு பெண் பிள்ளை***
***நீங்காத பச்சை நிறத்தை உடையவள்***
***ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு***
***ரீங்காரத் துள்ளே இனிதிருந் தாளே. (1073)***

ஓம் என்னும் பிரணவத்துக்கு உரியவள் என்று சொல்லப்படும் அவ்வொப்பற்றவள் ஒரு பெண் வடிவமாவாள். நீங்காத பச்சை நிறத்தை உடையவள் அவள். அந்தச் சக்தி வடிவமாகிய அவள் எழுச்சி பெற்று ஐவரை - பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசன், சதாசிவன் எனும் இவர்களை - ஈன்றுத் தொழிற் படவைத்தவள். இச்சத்திதான் ரீங்காரம் என்னும் பீஜ எழுத்துள்ளே இனிதாக விற்றிருப்பாள் என்ப.

## வயிரவி மந்திரம்

**237. காணும் பலப்பல தெய்வங்கள் வெவ்வேறு**
**பூணும் பலப்பல பொன்போலத் தோற்றிடும்**
**பேணும் சிவனும் பிரம்மனும் மாயனும்**
**காணும் தலைவிநற் காரணி காணே. *(1087)***

நாம் உலகிலே காண்கின்ற பலப்பல தெய்வங்களும், நாம் அணிகின்ற பலப்பல அணிகலன்கள் பொன்னிலிருந்து தோன்றியதையே ஒத்துத் தோற்றமளிப்பார்கள். இவ் வுலகத்திலே முத்தொழிலுக்கு முதல்வராக விளங்கும் சிவன் பிரம்மன், மால் மூவருமே ஆதிகாரணமாகி விளங்கும் தலைவியாம் பராசக்தியின் அம்சமே ஆவார்கள்.

**238. தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற**
**வேமத் திருளற வீசும் இளங்கொடி**
**ஓமம் பெருஞ்சுடர் உள்ளெழு நுண்புகை**
**மேவித்து அமுதொடு மீண்டது காணே. *(1091)***

முத்து வடம் சூடிய கூந்தலை உடையவள். அருள் வழியும் கண்களை உடையவள். நம் உள்ளத்துள்ளே நிலை பெற்றுள்ள அஞ்ஞான இருள் அழியும்படி வீசி விலக்குகின்ற, என்றும் இளமை மிக்க, மின்னற்கொடிபோன்றவள். நம் உடலின் உள்ளே கொப்பூழ் கண்ணே பஞ்சாட்சர மந்திரத்தால் எழுப்புகின்ற ஓமப் பெருஞ்சுடரின் நின்று மேல்எழுகின்ற ஒண்மையான புகையாம் பிராணனை அச்சக்தி அமுதநிலையுடன், மேவச் செய்து மீண்டு வருவதாகும் தன்மையினைக் காணலாம்.

**239. கோலக் குழலி குலாய புருவத்தள்**
**நீலக் குவளை மலரன்ன கண்ணினாள்**
**ஆலிக்கும் இன்னமு தானந்த சுந்தரி**
**மேலைச் சிவத்தை வெளிப்படுத்தாளே *(1100)***

அழகிய கூந்தலையும் வளைந்த புருவத்தையும் நீல நிறக்குவளை மலர்களை ஒத்த கண்களையும் உடையவள் சத்தி.

ஆன்மாக்கள் ஆனந்தத்தில் திளைக்கவே ஆனந்த வடிவமான அழகியானவள் அச்சக்தி. அவளே தன் திருவருளாற்றலால் அருவமான சிவத்தின் தன்மையை வெளிப்படுத்தி உணர்த்துபவள். (குலாயம் - வளைவு, ஆலித்தல் - மகிழ்தல்)

240. வேயன்ன தோளி விரையுறு மென்மலர்
ஏயகுழலி இளம் பிறை ஏந்திழை
தூய சடை முடிச் சூலினி சுந்தரி
ஏயென துள்ளத் தினி திருந்தாளே. (1104)

வேய் (மூங்கில்) போன்ற தோள்களை உடையவள். மணமிக்க மலர் சூடிய கூந்தலை உடையவள். இளம்பிறை அணிந்தவள். அணிகலம் பூண்டவள். தூயதான சடைமுடியினையுடையவள். சூலத்தை ஏந்திய பேரழகி. இத்தகு பராசக்தி என் உள்ளத்திலே பொருந்தி இன்ப மயமாகி அமர்ந்துள்ளனள் (ஏய் - பொருந்தி)

241. உபாயம் அளிக்கும் ஒருத்திஎன் உள்ளத்து
அபாயம் அறக்கெடுத் தன்பு விளைத்துச்
சுவாவை விளக்கும் சுழியகத் துள்ளே
அவாவை அடக்கிவைத் தஞ்சல் என்றாளே (1108)

ஆன்மாக்கள் ஈடேற உபாயத்தை அளிக்கின்ற ஒப்பற்ற பராசக்தி என்னுடைய உள்ளத்தினுள்ளே இடர்கள் அனைத்தும் அறக்கெடும்படிச் செய்து, அங்கே அன்பினை விளைவித்து நாய் ஒத்த உள்ளத்தினை விளக்கம் செய்வதாய மெய்யுணர்வு கொளுவிச், சுழியகமான ஆதார சக்கரத்துள்ளே என் ஆசைகளை அடக்கி வைத்து, எனை அஞ்ச வேண்டா என்றருளிச் செய்தாள் (சுவா - நாய்)

242. கன்னியும் கன்னி அழிந்திலள் காதலி
துன்னியங் கைவரைப் பெற்றனள் தூய்மொழி
பன்னிய நன்னூற் பகவரும் அங்குள
என்னே இம்மாயை இருளது தானே. (1118)

எக்காலத்திலும் கன்னி கழியாத கன்னியாகவே உள்ளவள் பராசக்தி. உயிர்களிடத்தில் மாறாத அருட்காதல் உடையவள் அவள். சிவத்தோடு பொருந்தி அந்தத் தூய அருள் மொழிகளை உதிர்க்கும் வாயினள், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், சதாசிவன், மகேஸ்வரன் என்னும் ஐவரைப் பெற்றெடுத்தாள். ஆயினும் அவள் கன்னியே. அவள், சொல்லப்படும் நன்மை விளைவிக்கும், ஆகமங்களை அருளிச் செய்தவள். இப்படியிருப்பினும், இருளதுதானே அங்கு உண்டு. இம்மாயையின் சக்திதான் என்னே?

''சிவன்சக்தி தன்னை ஈன்றும் சக்திதான் சிவத்தை ஈன்றும் உவந்திருவரும் புணர்ந்திங் வுலகுயிர் எல்லாம் ஈன்றும் பவன் பிரம்மசாரியாகும் பான்மொழி கன்னியாகும்'' சிவஞான போதம் *1:2:3* சித்தியார் *2:45*

**243. இருளதுசக்தி ஒளியது அண்ணல்**
**பொருளது புண்ணியர் போகத்தும் இன்பம்**
**தெருளது சிந்தையை தெய்வமென் றெண்ணில்**
**அருளது செய்யும்எம் ஆதிப் பிரானே. (1119)**

அறிவாற்றலாம் சக்தியின் நிறம் இருளாகும் (கருமை). நம் அண்ணலாம் சிவபிரான் நிறமோ ஒளிமயமாகும். சிவ புண்ணியரது போகத்தினுள்ளே பொருளாகப் பயன்படுவது திருவடிப் பேரின்பமாகும். மெய்யுணர்வு பெற்ற சிந்தையை சிவபிரானுடைய நாட்டமாக்கி எண்ணிச்சிந்தித்தால் ஆதிப்பி ரானாம் சிவபிரான் தன் அடியவர்களுக்கு அருள் செய்வான்.

**244. வினைகடிந்தா ருள்ளத்து உள்ளொளி மேவி**
**தனையடைந் தோர்க் கெல்லாம் தத்துவமாய் நிற்பள்**
**எனையடிமை கொண்ட ஏந்திழை ஈசன்**
**கணவனைக் காண அனாதியு மாமே. (1123)**

இருவினைகளையும் தம்மிடமிருந்து நீக்கிய அடியார் உள்ளத்திலே ஒளிமயமாகி வீற்றிருப்பவள் தன்னைச் சரணாக

அடைந்தவர்களுக் கெல்லாம் தத்துவப் பொருளாகி - உண்மைப் பொருளாகி நிற்பவள். அவளே, என்னை அடிமை கொண்ட இழையணி இறைவி. ஈசனாம் கணவனை நோக்கும் போது அவள் மிக மிகத் தொன்மை வாய்ந்தவளாம். (இழை = ஆபரணம்)

## பூரண சக்தி

**245. அளந்தேன் அகலிடத்து அந்தமும் ஆதியும்**
**அளந்தேன் அகலிடத்து ஆதிப் பிரானை**
**அளந்தேன் அகலிடத்து ஆணொடு பெண்ணும்**
**அளந்தேன் அவளருள் ஆய்ந்துணர்ந் தேனே (1125)**

அளப்பரும் தன்மை வாய்ந்த விண்ணாம் அகலிடத்தே நில உலகின் ஒடுக்கமும் தோற்றமும் அளந்தறிந்தேன். இந்த பிரகாசமாகிய அகலிடத்திலேதான் ஆதிப் பிரானாம் சிவனையும் திருவருளால் அளந்துணர்ந்தேன். அதனாலே ஆணாம் சிவனையும் பெண்ணாம் சக்தியையும் உணர்ந்தேன். அவள் தன் அருள் திறத்தையும் அளந்தறிந்தேன். அவ்வருள் தன்மையையும் ஆய்ந்துணர்ந்தேன்.

**246. உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சக்தி**
**புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்**
**கணங்களைத் தன்னருள் செய்கின்ற கன்னி**
**கொணர்ந்த வழிகொண்டு கும்பக மாமே. (1126)**

ஊழிக் காலத்தும் (பஞ்ச கிருத்தியங்களைச் செய்யும் மூர்த்திகளை) ஈசனை உண்டாக்கும் சக்தியை யாரும் உணர்ந்திலர். அச்சக்தியோடு இறைவன் இரண்டறக் கலந்து சிவசக்தியாக எங்கும் நிறைந்தருளினார். சிவபுண்ணியப் பேறடைந்தவர்களைத் தன்னுடைய அருளால் ஆட்கொள்ளும் கன்னியாம் சக்தி, இவ்வுலகத்தைத் தோற்றுவித்த வழிப்படியே ஒடுக்கமும் செய்வாள்.

ம-8

**247. தானே எழுந்த இத்தத்துவ நாயகி**
**வானோர் எழுந்து மதியை விளக்கினள்.**
**தேனேர் எழுகின்ற தீபத் தொளியுடன்**
**மானே நடமுடை மன்றறி யீரே. (1132)**

மற்றோர் இயக்கமின்றித் தானாகவே தன் அளவற்ற பேரருளால் ஓங்கி உயர்ந்த இத்தத்துவ நாயகியாம் சக்தி அருள் வெளியூடே உயர்ந்தெழுந்து ஞானத்தை விளக்கி அருளினாள். பேரின்பத் தேனை நல்குகின்றதற்கெனத் தோன்றும் சோதிமயமான பேரொளியுடன், அவள் நம் ஆன்ம உணர்வை மன்றமாக்கி நடமாடுகின்ற உண்மையை உணரமாட்டீர்.

**248. நின்ற பராசக்தி நீள்பரன் தன்னொடு**
**நின்றறி ஞானமும் இச்சையுமா நிற்கும்**
**நன்றறி யும்கிரியா சக்திநண்ணவே**
**மன்றன் அவற்றுள் மருவிடும் தானே. (1136)**

உலகத்துக்கொரு முதலாய் நின்ற பராசக்தி முழு முதலாம் சிவபிரானோடு கலந்து நன்றாக அறியப்படும் ஞான சக்தியாகவும், இச்சா சக்தியாகவும், விளங்குவாள். நன்கு தெளிவுணர்வுடைய கிரியா சக்தி சிவனுடன் பொருந்தவே, மன்றத்தில் நடமிடும் சிவபிரான் அவ்விரு சத்திகளுடன் கூடி வெளிபட்டருள்வான்.

**249. சிந்தையின் உள்ளே திரியும் சிவசக்தி**
**விந்துவும் நாதமும் ஆயே விரிந்தனள்**
**சந்திர பூமி சடாதரி சாத்தவி**
**அந்தமொ டாதியதாம் வண்ணத் தானே (1138)**

ஆன்மாக்கள் சிந்தையுள்ளே இயங்கி, இயக்கும், சிவசக்தி விந்து நாதங்களைத் தொழிற்படுத்தி, அவை மயமாகி விரிந்துள்ளனள். அவள் சந்திர மண்டலத்துள்ளும் இருப்பாள். சடாமுடியணிந்தவள். எல்லாவற்றுக்கும் தலைமை பூண்டவள். முடிவும் முதலுமாக இவ்வுலகம் விளங்கக் காரணமானவள்.

250. முச்சதுரத்தே எழுந்த முளைச்சுடர்
எச்சது ரத்தும் இடம்பெற ஓடிடக்
கைச்சது ரத்துக் கடந்துள் ஒளிபெற
எச்சது ரத்தும் இருந்தனள் தானே. (1145)

இச்சக்தி முச்சதுரமாகிய மூலாதாரத்திடத்தே முளைத்து மேலெழுகின்ற சுடரே ஆகும். எல்லா இடங்களிலும் இது இடம் பெற்று விளங்கும்படி ஓடிடவும், கைச்சதுரமாம் பிரம்ம ரந்திரத்தினையும் தாண்டி இவ்வான்மா மிக்க ஒளிபெறும்படியும், எல்லா இடங்களிலும் இச்சக்தி நிறைந்திருப்பாள்.

251. அதுஇது என்பார் அவளை அறியார்
கதிவர நின்ற காரணம் காணார்
மதுவிரி பூங்குழல் மாமங்கை நங்கை
திதமது உன்னார்கள் தேர்ந்தறி யாரே. (1154)

இறைவியாம் சிவசக்தியை அதுவென்றும் இதுவென்றும் கூறுவார்கள். ஆனால் அவளை மெய்யுணர்வுடன் உணரமாட்டார்கள். தேன் பிலிற்றும் மலர்ச்சூடிய கூந்தலை யுடைய மங்கையாம் சக்தியின் உறுதிநிலைத் தன்மையினையும் நினைத்தலிலர். இவர் அம்மையின் செம்மை அறியார் (திதம் = உறுதிநிலை)

## ஆதார ஆதேயம்

### தாங்குவதும் - தாங்கப்படுவதும்

252. பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை
மாச்சற்ற ஜோதி மனோன்மணி மங்கையாம்
காச்சற்ற ஜோதி கடவுளுடன் புணர்ந்து
ஆச்செற்றென் உட்புகுந்து ஆவிக்கும் தானே. (1160)

அவன் பேச்சற்ற மோன நிலையின் உட்பொருளாகிய நற்பொருள். அம்மோன நிலை வாய்ந்தோர் காணும் பெருந்தகையாளன். அவன் மாசற்ற ஜோதிமயமானவன். பராசக்தி மனோன்மணி மங்கையாம் பகையற்ற பேராற்றல், அச்சிவனோடு ஒருங்கிணைந்து என்னை நெருங்கி என் உட்புகுந்து என்னை ஆனந்தமயமாக்குவாள். (மாச்சற்ற = மாசற்ற; காச்சற்ற = பகைமையற்ற; ஆ - வியப்பிடைச் சொல்; ஆ + செற்ற = ஆச்செற்ற; செற்றல் = நெருங்குதல்)

**253. தானே இருநிலம் தாங்கிவிண் ணாய் நிற்கும்**
**தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்**
**தானே மழைபொழி தையலுமாய் நிற்ம்**
**தானே வடவரைத் தண்கடற் கண்ணே. (1165)**

அச்சிவன்தானே இப்பெரு உலகத்தைத் தாங்கி விண்வெளியாகி விளங்குகின்றவன். அவன்தானே வெம்மை செய்யும் அக்கினியும், ஞாயிறும், திங்களுமாவான். அதோடு அவனேதான் அருள்மழை பொழிகின்ற மனோன்மணி மங்கையுமாவன். அவன்தானே வடதிசைக் கண்ணுள்ள வடகடலிடத்தே மேல் தோன்றி நிற்கும் இமயமலையுமாகி விளங்குகின்றவனாவான். (ஒரு காலத்தில் இமயமலை இருந்த இடத்திலே கடல் சூழ்ந்து இருந்ததாகச் சரித்திரம் கூறும்)

**254. யோகநற் சக்தி ஒளிபீடம் தானாகும்**
**யோகநற் சக்தி ஒளிமுகம் தெற்காகும்**
**யோகநற் சக்தி உதர நடுவாகும்**
**யோகநற் சக்தி உத்தரந் தேரே. (1172)**

யோக உருவாகி விளங்கி யோகியரை உய்விக்கும் சக்திதான், ஒளிமிக்க யோகத்தின் இருக்கையாகி விளங்குகிறாள். அந்த யோக சக்தியின் ஒளிவீசும் திருமுகமோ தெற்கு நோக்கிய தட்சிணாமூர்த்தி சொரூபமானது. அச்சக்திதான் உதர நடுவாம் கொப்பூழ் ஆகும். அச்சக்தியே பேராற்றல். அதுவே யாவற்றினும் உயர்ந்[illegible]தை உணர்க.

**255. வாயும் மனமும் கடந்த மனோன்மணி**
**பேயும் கணங்களும் பெரிதுடைப் பெண்பிள்ளை**
**ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்**
**தாயும் மகளும் நல்தாரமும் ஆமே. (1178)**

வாக்கும் மனமும் கடந்து நிற்பவள் மனோன்மணியம்மை. அவள் திருவடித் தாமரைகளை, எண்ணிலடங்காப் பேயும் கணங்களும் போற்றி நிற்கும். ஆய்கின்ற மனமும் அறிவும் சென்றண்டமுடியாத சிவனுக்கு அவள்தான் தாயாகவும் மகளாகவும் தாரமாகவும் அமைவாள்.

தாய் - சத்தியிலிருந்து சதாசிவம் தோன்றுதலால்; மகள் - சிவதத்துவத்தினின்று சக்தி தோன்றுதலால்; தாரம் - ஆதி சக்தியாம் சிவனுடன் ஒன்றித்து நிற்பதால் என்க.

**256. தாரமு மாகுவன் தத்துவமாய் நிற்பள்**
**காரண காரியம் ஆகும் கலப்பினள்**
**பூரண விந்து பொதிந்த புராதனி**
**பாரன வாம்திசை பத்துடை யாளே (1179)**

பரமசிவனுக்குத் தாரமாகி விளங்கி நிற்கும் பராசக்தியே, அவனுடைய அருளாற்றலின் தத்துவமாகவும் விளங்குகிறாள். இந்த உலகத் தோற்ற இயக்கங்களின் காரணகாரியத் தொடர்பாகவும் அவள் திகழ்கிறாள். அவள்தான் சுத்த மாயையுடன் கூடி மறைந்து இயக்கும் தன்மையள். மிகமிகத் தொன்மை வாய்ந்தவள். இவ்வண்ட கோளத்தை யளாவுகின்ற பத்து திக்குகளாகவும் (எட்டு திசையும் மேலும் கீழும்) விளங்கி நிற்பவள் அவளே ஆகும்.

**257. உள்ளத்தி னுள்ளே உடனிருந் தைவர்தம்**
**கள்ளத்தை நீக்கி கலந்துடனே புல்லி**
**கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து**
**வள்ளல் தலைவி மருட்டிப் புரிந்தே. (1183)**

தூயதான உள்ளத்துள்ளே வீற்றிருந்து ஐம்புலன்களுடைய கள்ளத்தையெல்லாம் போக்கி, ஞானம் என்னும் தவநெறியை மேற்கொள்ளுமாறு செய்து, அதனால் அடையும்படியான திருவடிப் பேறாம் ஆனந்தத்தை, வள்ளல்களுக்கெல்லாம் பெருவள்ளலாக விளங்கும் பராசக்தி வியப்புறும் வண்ணம் அருளினாள்.

**258. சடங்கது செய்து தவம்புரி வார்கள்**
**கடந்தனி னுள்ளே கருதுவ ராகில்**
**தொடர்ந்தெழு ஜோதி துளைவழி ஏறி**
**அடங்கிடும் அன்பின தாயிழைபாலே. (1192)**

வேள்வி யாகம் முதலிய சடங்குகளை (சாங்கியங்களை)ச் செய்துத் தவநெறியை மேற்கொள்பவர்கள், வேள்வித் தீயை மேலெழுப்புவதைப் போல் உடம்புள்ளே எழும் குண்டலினி சக்தியை எழுப்பக் கருதுவார்களானால், மூலாதாரத்திலிருந்து தொடர்ந்து மேலெழும் குண்டலினியாம் ஜோதி, முதுகுத்தண்டாம் துளைவழியே சென்று, அன்பின் வடிவாகிய பராசக்தியின்பால் அடங்கி நிற்கும்.

**259. சக்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை**
**முத்திக்கு நாயகி என்பது அறிகிலர்**
**பத்தியைப் பாழில் உகுந்த அப்பாவிகள்**
**கத்திய நாய்போல் கதறு கின்றாரே. (1199)**

சக்தி என்று போற்றித் துதிக்கப்படும் அவள், ஆருயிர்கள், சரியை கிரியை, யோகம், ஞானம் என்று படிப்படியாகச் சாதகம் செய்து உய்வடையக் காரணம் ஆவாள். ஒரு பெண் பிள்ளை அவள். அதோடு அவளே முத்திக்கு நாயகியு மாவாள் என்பதை சற்றும் உணராத பாவிகள், அவளைத் துதித்துப் பக்தி செய்து தியானித்து வீட்டையடைய முயலாமல், பக்தியைப் பாழ் நிலத்திலே கொட்டி வீணாக்கி, நாய் கத்துவதைப்போலப் பொருளற்ற வேதமந்திரங்களை வாய்கிழிய கதறுகின்றார்களே அந்தோ பரிதாபம்!

**260. சிந்தையில் வைத்துச் சிராதியிலே வைத்து**
**முந்தையில் வைத்துத் தம்மூலத்திலே வைத்து**
**நிந்தையில் வையா நினைவதிலே வைத்துச்**
**சந்தையில் வைத்துச் சமாதி செய்வீரே. (1201)**

பராசத்தியாம் அம்மையை சிந்தையிலே நிலைபெற நிறுத்தியும், சிரம் முதலிய பல உறுப்புகளின் மேல் வைத்தும் தன் மனக் கண் முன்னாலே வைத்தும், தம்முடைய மூலாதாரத்திலே வைத்தும், சற்றும் நிந்தைகள் பொருந்தாத உள்ளத்திலே வைத்தும், இரு புருவங்கள் ஒன்று கூடும் சந்தியாம் புருவக்கலை நடுவிலே வைத்தும், சமாதி கூடுவீராக.

**261. சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகி**
**சிவாதியில் ஆகும் சிலை நுதலாளை**
**நவாதியில் ஆக நயந்தது ஓதில்**
**உவாதி அவளுக்கு உறைஇல் அதுவாமே. (1202)**

இங்ஙனமாக சமாதி செய்பவர்களுக்கு தான் தானே முதலாகி மூலகாரணமாகி நின்று, - சிவமாம் ஆதியிலே நிலைத்திருப்பவள் சக்தி. வில்லை ஒத்த புருவத்தை உடையவளான அவள் ஒன்பது உருவங்களாகக் கோலங்கொண்டு (ஈஸ்வர பேதங்களாம் சிவன் சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேஸ்வரன், உருத்திரன், விட்டுணு, பிரம்மன்) அருள் செய்யும் அம்மை அவள். அவளது உருவங்களில் ஒன்றை விரும்பி, ஓதி தியானித்தால், உவாத்தியாம் ஞான ஆசிரியைக்கு அருள் செய்யும் உறைவில் (இருப்பிடம்) அதுவாகவே விளங்கும். உவாதி - உவாத்தி என்பதின் இடைக்குறை.

(உவாத்தி - ஆசிரியை)

**262. ஆமைஒன் றேறி அகம்படியான் என**
**ஓமஎன் றோதி எம் உள்ளொளியாய் நிற்கும்**
**தாமநறுங் குழல் தையலைக் கண்டபின்**
**சோமநறு மலர்ச் சூடி நின்றாளே. (1206)**

ஆமைபோல் ஐந்தவித்து மேனிலை மேலேறி நான் அகம்படித் தொண்டன் என்று (அந்தர் முகமாக நின்று வழிபடும் தொண்டன்) தன்னைக் கருதி, ஓம் என்று இடையறாது ஓதி நின்று; எம் உள்ளத்தினுள்ளே நிலைத்து நிற்கும் முத்து மாலை அணிந்துள்ள கருங்கூந்தலை உடைய சத்தியைக் கண்ட பின்னர்; அவள் பிறைச்சந்திரனைச் சூடியுள்ள காட்சியோடு அர்த்த நாரியாக நம்முன்னர்க் காட்சி தருவாள். (ஓம் - ஓம என விகாரமாயிற்று)

**263. சூடும் இளம்பிறை சூலி கபாலினி**
**நீடும் இளங்கொடி நின்மலி நேரிழை**
**நாடி நடுவிடை ஞானம் உருவ நின்று**
**ஆடும் அதன்வழி அண்டம் முதல்வியே. (1209)**

இறைவியாம் அம்மை இளம் பிறை சூடியவள். சூலத்தை ஏந்தியவள். பிரம கபாலத்தை ஏந்தியவள். எக்காலமும் இளமையோடு விளங்கும் கொடி போன்றவள். இயல்பாகவே மலமற்ற நின்மலி. தூய அணிபணி பூண்டவள். மூன்று நாடிகளில் இடைநாடியாம் சுழி முனையிலே ஞானமாகிய குண்டலி சக்தி உருவ நின்று முதல்வியாகிய அவள் (நடனம்) சிவசக்தி தாண்டவம் புரிவாள். அவ்வாட்டத்தின் வழியே அண்டமே இயங்கும்.

**264. கலந்துநின் றாள்கன்னி காதலனோடும்**
**கலந்துநின் றாள்உயிர் கற்பனை செய்யும்**
**கலந்துநின் றாள்கலை ஞானங்கள் எல்லாம்**
**கலந்துநின் றாள்கன்னி காலமு மாயே. (1215)**

எக்காலமும் கன்னியாகவே உள்ள சக்தி, சிவத்தோடும் கலந்து நின்றாள். அவளே ஆன்மாவிலும் கற்பனைகளிலும் கலந்து நின்றாள். கலைகள் அனைத்திலும் ஞானத்திலும் பிற எல்லாவற்றிலும் கலந்துள்ளவள் அவளே. அந்தக் கன்னியாம் சத்தியே எல்லையற்ற காலமுமாக விளங்கி நிற்கின்றவளாவாள். (காலாதீதன் - சிவன்)

காலம் ""ஞாலமே, விசும்பே இவை வந்து போம் காலமே'' திருவாசகம்.

265. பாகம் பராசக்தி பைம்பொன் சடைமுடி
ஏகம் இருதயம் ஈரைந்து திண்புயம்
மோக முகமைந்து முக்கண் முகந்தோறும்
நாகம் உரித்து நடம்செய்யும் நாதற்கே. (1217)

யானையின் தோலை உரித்துப் போர்த்தி நள்ளிரவில் நடனமாடுகின்ற, உயிர்க்கெல்லாம் நாதனாக விளங்கும் சிவபிரானுக்குப் பாகமாக விளங்குபவள் பராசக்தியே ஆவாள். அவள் பசும் பொன் நிறமுடைய சடைமுடி உடையவள். ஒரே ஒப்பற்ற இருதயத்தை உடையவள். ஆனால் பத்து திருக்கரங்களையும், வசீகரிக்கும் ஐந்து திருமுகங்களையும் பெற்றவள். அந்த ஐந்து திருமுகந்தோறும் முக்கண்களையும் உடையவள் ஆவள். (நாகம் = யானை)

266. உணர்ந்தெழு மந்திரம் ஓம்எனும் உள்ளே
மணந்தெழும் அங்கதி யாகிய தாகும்
குணர்ந்தெழு சூதனும் சூதியும் கூடி
கணந்தெழும் காணுமக் காமுகை யாமே. (1222)

உள்ளத்திலே உணர்ந்தெழுகின்ற ஒப்பற்ற மந்திரம் 'ஓம்' என்பதே. அது உள்ளத்தினைப் பொருந்தி மேலெழும். அதுவே நாம் அடைய வேண்டிய கதியை (வீட்டின்பத்தை) அடைவிக்கும். சகல மேன்மைப் பண்புகளோடு ஆன்மாவில் கிளர்ந்தெழும் சிவனும் சக்தியும் ஒருங்கிணைந்து கலந்து மேலெழுவர். அக்காமுகையே (அருள் விருப்பம் உள்ள) சத்தியே இச் செயல்கள் அனைத்தும் நிறைவேற்றக் காணுவள்.

267. நுண்ணறி வாகும் நுழைபுலம் மாந்தர்க்கு
பின்னறி வாகும் பிராணன்றி வத்தடம்
சென்னறி யாகும் சிவகதி சேர்வார்க்குத்
தன்னெறி யாவது சன்மார்க்க மாமே. (1228)

நுண்மான் நுழைபுலம் வாய்ந்த அறிவாளர்களுக்கு ஞானசக்தியானவள், நுண்ணறிவு மயமாகி விளங்குவாள். அந்த நுண்ணறிவும் பிரானையறியும் அறிவுக்குப் பின் அறிவாகி விளங்கும். அத்தடமே (வழியே) சிறந்த நெறியாகும். சிவகதியாம் வீட்டின்பத்தை எய்துபவர்களுக்குத் தம் நெறியாக விளங்குவது சன்மார்க்கமே.

**268. சத்தியும் நானும் சயம்புவும் அல்லது**
**முத்தியை யாரும் முதலறி வாரில்லை**
**அத்திமேல் வித்திடில் அத்தி பழுத்தக்கால்**
**மத்தியிலேற வழியது வாமே. (1230)**

சத்தியும், நானும், சிவபிரானாகிய பரப்பிரம்மமும், அல்லாமல் முத்தியை சென்றடையக் காரணமாவார் வேறு யாருமிலர். அத்தியாம் உடலிலே வித்தெனும் உயிரை இணைத்து வைத்தால், அந்த அத்தி சிவ ஞானத்தால் பழுத்தால், நடு நாடியாகிய வீணாத்தண்டு சுழிமுனை வழிச் சென்று, உயிர்ப்பு உயர்ந்து பேரானந்தம் சித்திக்கும்.

**269. அதுஇது என்று அவமே கழியாமே**
**மதுவிரி பூங்குழல் மங்கை நல்லாளை**
**பதிமது மேவிப் பணிய வல்லார்க்கு**
**விதிவழி தன்னையும் வென்றிட லாமே. (1231)**

இவ்வழியே வழி, அவ்வழியே சரி, என்று கணந்தோறும் குழம்பி வீணாக நாளைப் போக்காது, தேன் வழி பூங்குழலாள் அம்மை பராசக்தியைப் பதிமதுவாம் சந்திர மண்டலத் தமுதினை யோக நெறிச் சென்று அடைந்து பருகிப் பணிய வல்லவர்களுக்குத் தம் விதி வழியைக்கூட வென்றிடக் கூடும்.

**270. வென்றிடலாகும் விதிவழி தன்னையும்**
**வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை**
**வென்றிட லாகும் விழைபுலன் தன்னையும்**
**வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே. (1232)**

மேன்மைமிக்க வெற்றி மங்கையாம் பராசக்தியின் மெய்யுணர்வாளர்களுக்கு விதி வழி தன்னையும், இருவினைகளால் ஏற்படுகின்ற பாசங்களையும், ஆசைப்பெருக்கோடு விஷயாதிகள் மேல் ஓடுகின்ற புலன் உணர்வுகளையும் வென்றிடலாகும்; வெற்றி கொள்ளக்கூடும்.

**271. நெறியது வாய்நின்ற நேரிழை யாளை**
**பிறிவது செய்யாது பின்னுக னோடும்**
**குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கும்**
**அறிவொடும் ஆங்கே அடங்கிட லாமே (1240)**

வீட்டின்ப நெறிக்கே உரியவளாய் நின்ற அழகிய அணி பூண்ட அம்மையை, சிவபிரானை விட்டுப் பிரித்துப் பேசாது அபின்னமாய், அவ்வம்மையின் குறிப்பின் வழியே கூடிச் சென்று, அவள் காட்டிய குறியினையே அடையாளமாகக் கொண்டு நோக்கும் அறிவு, அவன்தன் திருவருள் அறிவோடு அடங்கி நிற்கும்.

**272. தாங்கி உலகில் தரித்த பராபரன்**
**ஓங்கிய காலத் தொருவன் உலப்பிலி**
**பூங்கிளி தங்கும் புரிகுழலாள் அன்று**
**பாங்குடன் ஏற்பப் பராசக்தி போற்றே. (1241)**

பராபரனாகிய சிவபிரான் உலகனைத்தையும் தாங்கியும் அதையே தரித்தும் (அண்டமே தன் உருவாகியும்) உள்ளவன். அனைத்தும் அழிந்த ஊழிக் காலத்தும், தான் அழியாது ஒருவனாகி இருப்பவன். அவனே அழிவற்றவன். பசுங்கிளியைக் கையில் ஏந்திய அம்மை, சுருண்ட குழல் கொண்ட பராபரிதான். அன்று அவ்விறைவனில் இணைந்து தன் பாகத்தே கொண்டனள். அப்பராசக்தியினைப் போற்றுவாயாக.

**273. உணர்ந்தொழிந்தேன் அவனாமெங்கள் ஈசனை**
**புணர்ந்தொழிந்தேன் புவனாபதி யாரை**
**அணைந் தொழிந்தேன் எங்கள் ஆதி தன்பாதம்**
**பிணைந் தொழிந்தேன் தன்அருள் பெற்றவாரே. (1250)**

அவன் எங்கள் ஈசன். அவனை என் மெய்யுணர்வால் உணர்ந்து என் பண்டை இருவினைகளையும் ஒழித்தேன். புவன முதல்வனாகிய அவனை நான் கலந்து நின்றதால், என் ஆத்ம போதத்தை ஒழித்து விட்டேன். என் ஆதிப் பிரான் தன் பாதத்தை நான் அணைந்து கொண்டு விட்டதால், என் பற்றுகள் அனைத்தையும் அடியோடு ஒழித்து விட்டேன். அவனுடைய சக்தியின் அருள் பெற்ற வழியிலேயே அந்த அருள் சக்தியினைப் பிணைந்து, அதனால் என் பிறவியை அறவே ஒழித்து விட்டேன்.

**274. பெற்றான் பெருமை பெரிய மனோன்மணி**
**நற்றான் இறைவனை நற்பயனே என்பர்**
**கற்றான் அறியும் கருத்தறி வார்கட்கு**
**பொற்றான் உலகம் புகழ் தனியாமே. (1251)**

சத்திகள் அனைத்திலும் முதன்மையானவள் மனோன்மணி. அம்மனோன்மணியின் கூறான இறைவனே - இறைவன் நற்றாளே - நம்பிறவியின் நற்பயனாம் என்று நவிலப்படும். கற்ற கல்வியின் பயனாகிய வாலறிவனை அறிகின்ற கருத்தறிவார்கட்கு இறைவன் பொற்றாள் எனும் வீட்டுலகம் சித்திக்கும். (முத்தி யின்பம் சென்றடைதலே தனிச் சிறப்புடைதாகும்).

## ஐந்தாம் தந்திரம்
## சுத்த சைவம்.

**275. ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற**
**பேரறி வாளன் பெருமை குறித்திடின்**
**மேருவும் மூவுலகாளி இலங் கெழும்**
**தாரணி நால்வகைச் சைவமு மாமே. (1419)**

ஊரையும் உலகத்தையும் ஒரு சேரப் படைக்கின்ற முற்றுணர்ந்த பேராறிவாளனாகிய சிவபிரானது அளவிலாப் பெருமையைக் கூறப் புகின் மாமேரு மலையையும் மூவுலகங்களையும் ஒருங்கே ஆளும் தன்மை வாய்ந்தவனாம் அவனுக்கு, இவ்வுலகத்தையும் (புவனம்) நால்வகைச் சைவமார்க்கங்களையும் ஒப்பாகச் சொல்லலாம்.

**276. சத்தும் அசத்தும் சதசத்தும் தான்கண்டு**
**சித்தும் அசித்தும் சேர்வுறா மேநீத்த**
**சுத்தம் அசுத்தமும் தோய்வுறாமே நின்று**
**நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே. (1420)**

மாறுபாடற்ற செம்பொருளான சிவத்தையும் (சத்தும்) மாற்றம் உள்ளதான, உலகப் பொருள்களாம் (அசத்தையும்) சத்தைச் சார்ந்து சத்தாயும் அசத்தைச் சார்ந்து அசத்தாயும் விளங்கும் ஆன்மாவை (சதசத்து) யும் கண்டு உணர்ந்து, சித்தாம் அறிவுடைமையும் அசித்தாம் அறிவின்மையும் சார்வுறாமல் நீங்கி நின்று, அசுத்த மாயை சுத்த மாயையிலிருந்து முற்றும் நீங்கி நின்று இவைகளை நித்தம் கடைப்பிடித்தலே சுத்த சைவர்க்குக் கடமைகளாகும்.

**277. கற்பன கற்று கலைமன்னும் மெய்யோகம்**
**முற்பத ஞானம் முறைமுறை நண்ணியே**
**சொற்பத மேவித் துரிசற்று மேலான**
**தற்பதங் கண்டோர் சைவசித் தாந்தரே. (1421)**

கற்க வேண்டிய மெய்யுணர்வு நூல்களைக் கற்றுத் தேர்ந்து, அக்கலை நூற்களில் கண்ட உண்மையான சிவ யோகத்திற்கு முன்னதாகக் கைக் கொள்ள வேண்டிய சரியை, கிரியைகளை மேற்கொண்டு, அதனால் ஞானத்தினை முறையாகச் சேர்ந்தடைந்து, தொல்பதமாகிய மெய்யுணர்வு அனுபூதி நிலையினை மேவி, குற்றமற்ற மேலான தற்பரமாம் சிவனைக் கண்டோரே சைவ சித்தாந்திகளாவர்.

**278. வேதாந்தம் சுத்தம் விளங்கிய சித்தாந்தம்**
**நாதாந்தம் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்**
**பூதாந்தம் போதாந்த மாகப் புனஞ்செய்ய**
**நாதாந்த பூரணர் ஞான நேயத்தரே. (1422)**

வேதாந்த மென்பது தான், ஐயம் திரிபின்றி நன்கு விளக்கமாக அறிந்த சித்தாந்தமே. அந்த நாதாந்தமாம் சிவனைக் கண்டுச் சிறிதும் சலனமில்லாக் காட்சியை உடையவர்கள் அச்சித்தாந்திகளே. பூதாந்தமாகும் ஐம்பூதங்களின் எல்லை, தத்துவ ஞானத்தின் எல்லையாகி, ஐம்புலக் காட்டினை பண்படுத்தும் தன்மையை அடைவிக்கும். இவர்களே ஓம் என்னும் நாதத்தின் அந்தத்தினை, திருவருட்பயனை, நன்கு உணர்ந்த பூரணர். இவர்களே ஞானத்தினால் உணரும் பரம்பொருளை உணர்ந்தடைந்தவராவர்.

## மார்க்க சைவம்

**279. சுத்தம் அசுத்தம் துரியங்கள் ஒரேழும்**
**சத்தும் அசத்தும் தணந்த பராபரை**
**உய்த்த பராபரை உள்ளாம் பராபரை**
**அத்தன் அருட்சத்தி யாய் எங்கு மாமே. (1430)**

அசுத்தமாம் கேவலத்திலே, ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்றும், சுத்தமான நிலையிலே ஜாக்கிரம் சொப்பன மென்றும், துரியம் துரியாதீதம் எனும் ஏழும் நிலைப்பதாகிய காரண மாயையும், நிலையாததாகிய காரிய மாயையும், நீக்கி நின்ற பராபரை அவளே உண்மை உய்தல் செய்யும் பராபரை. அவளே தான் அத்தன் சிவ பிரானின் அருட்சக்தி வடிவாய் அண்டங்கள் அனைத்தும் பரவி உள்ளவளாவாள். (கேவலம் சுத்தம் எனும் இரு காரண அவத்தைகளும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப் படக்கம் எனும் காரிய அவத்தைகள் ஐந்தும் இங்கு குறிக்கப்பட்டன) கேவலத்திலிருந்து சகலத்தைத் தலைப்படும் நெறியிலே மேலே

காட்டிய உயிர்ப் படக்கம், பேருறக்கம், உறக்கம், கனவு, நனவு, எனும் ஐந்து ஆக்க நிலைகளும் இவ்வாறு ஏறுவரிசையில் நிகழும்.

280. தன்னைப் பரமனை சதாசிவன் என்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற
முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை
உன்னத் தகும் சுத்த சைவர் உபாயமே. (1432)

தன்னை, அதாவது தான் ஆகிய ஆன்மாவை, பரம் பொருளாம் சிவனை, ஆன்மாவுக்கு அருள் செய்பவனாகிய சதாசிவன் என்னும் மேலோனை, பதிபசு, பாசம் எனப்படும் முப்பொருள் உண்மையினை, அனாதியே ஏற்பட்டுள்ள பழமலமாம் ஆணவக் கட்டினை, வீடு எனப்படும் சாயுச்சிய நிலையை (ஆன இவை எட்டினை) சுத்த சைவரானவர் உன்ன வேண்டிய உபாயமாகும்.

281. விண்ணினைச் சென்றணுகா வியன்மேகங்கள்
கண்ணினைச் சென்றணுகா பல காட்சிகள்
எண்ணினைச் சென்றணு காமல் எணப்படும்
அண்ணலைச் சென்றணுகாபசு பாசமே. (1436)

விண்வெளியிலே சஞ்சரித்திருந்த போதிலும், அழகிய மேகங்கள் ஆகாயத்தைப் போய் ஒட்டிக் கொள்ளவில்லை. நம் கண்ணால் பல காட்சிகளைக் கண்டபோதிலும் நாம் கண்ட காட்சிகள் கண்களிலே ஒட்டுவதில்லை. அவை போல எண்ணப்படுதலாம் பாவனைக்கு அப்பாற் பட்டவனாகிய சிவபிரானை - அண்ணலைச், சிந்தித்து பாவனை செய்யும் காலத்தும் பசு பாசங்கள் அவனைச் சென்றடைவதில்லை.

282. ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக
நின்று சமய நிராகாரம் நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தால்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. (1437)

ஒன்றாகிய ஏகான்ம வாதமும், இரண்டாகிய துவிதவாதமும், இலதாகிய சாங்கியமும், வேறன்மையாகி, சுத்த அத்துவிதமாய் நின்று, சமய நிராகாரமாம் மத நிந்தை நீங்கித் திருவருளிலே நின்று, பராபரையாம் சத்தியின் நேயமாம், சத்திநிபாதத்தால் சிவத்தைச் சென்றடைந்துச் சிவமாதலே சித்தாந்திகளின் சித்தியாகும்.

## கடுஞ் சுத்த சைவம்

**283. வேடங் கடந்து விகிர்தன் பால் மேவி**
**ஆடம்பர மின்றி ஆசாபாசம் செற்றுப்**
**பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்**
**சாடும் சிவபோதகர் சுத்த சைவரே. (1438)**

வெளி ஆடம்பர வேடங்கள் அனைத்தையும் விட்டு விலகி, முழு முதலாம் சிவ பிரானைச் சென்று உளத்தால் பொருந்தி, ஆடம்பரமில்லாமல் ஆசைகளையும் பாசங்களையும் அழித்து விட்டுத் துன்பம் பொருந்திய பாசமும், பசுத்துவமும், அதாவது வாசனாமலமும், நான் எனது என்னும் முனைப்பும், பாழ்பட்டுப் போக அழிக்கும் சிவஞானிகளே சுத்த சைவராவர்.

**284. உடலான ஐந்தையும் ஓராறும் ஐந்து**
**மடலான மாமாயை மற்றுள்ள நீவப்**
**படலான கேவல பாசம் துடைத்துத்**
**திடமாய்த் தலையுறல் சித்தாந்த மார்க்கமே. (1439)**

ஐம்பூதங்களான உடலும், வெல்லற்கரிய ஒப்பற்ற காம குரோத, லோப, மோக, மத, மாச்சரியம் எனப்படும் அறுவகைக் குற்றங்களும், ஐவகைப் புலன்களும், இவைகளுக்கு நிலைக்களமான காரணமாயையும் இவைகளோடு ஒழிக்கப்பட வேண்டியதான சகசமலத்தையும் நீக்கித் திடமாகத் தன்னை அறிதலே சித்தாந்த மார்க்கமாகும்.

285. சாற்றரிதாகிய தத்துவம் சித்தித்தால்
ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்.
மேற்றிகழ் ஞானம் விளங்கொளியாய் நிற்கும்
பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. (1442)

சொல்லற்கு அரிதாகிய சிவத்தினைச் சென்று ஒன்றுகின்ற உண்மை நிலை வந்தடைந்தால், அடக்குதற்கு அரிதான ஐம்புலச் சேட்டைகள் அடங்கிப் போகும். மிக மேலோங்கி விளங்குகின்ற ஞானப் பேரொளி ஒளிர்ந்து நிற்கும். உயர்வற உயர்ந்த பெரு நிலமாகும் சாயுச்சிய நிலையாம் சிவப் பேறு எய்தும்.

## யோகம்

286. பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு
நாவி அணைந்த நடுத்தறி யாமே. (1459)

மலரிடத்து மணம் பொருந்தியுள்ளதைப் போல நம் ஆன்மாவினுள்ளே சிவமணம் பூத்துள்ளது. இத்தன்மையினை ஓவியம்போல், பொறி புலன்களில் இயக்க மற்றுள்ளவர்களே (சிவனையே) உணர்ந்தறிவார்கள். அவர்களே நாவியாம் புனுகு பூனை அணைந்த நடுத்தறிபோல் அசையா திருப்பர்.

287. விரும்பி நின்றே செயின் மெய்த்தவ ராகும்
விரும்பி நின்றே செயின் மெய்யுரையாகும்
விரும்பி நின்றே செயின் மெய்த்தவமாகும்
விரும்பி நின்றே செயின் விண்ணவனாகுமே. (1462)

சிவ சாயுச்சியமாம் வீட்டு நெறியை அதற்குத் தக நிலை நின்று யோகப் பயிற்சியைச் செய்பவர்கள் உண்மையான தவசிகளாவார்கள். இவ்வொழுக்கமே உண்மை உரையாகி மெய்யுணர்வளிக்கும். அதுதானே உண்மையான தவ

6-9

ஆதார வழிதோறும் மேலேறிச் சென்று, கூனல் மதியாம் சந்திர மண்டிலத்துத் தம் கண் எதிரே தோன்றும் அமுத நீரைக் கண்டு, அதனால் தம்முடைய ஊனம் மிக்க மாயா மலத்தினை அறுத்து அந்த ஞானியர் சிவஜோதியில் கலப்பர்.

**293. நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்**
**புண்ணிய பாவம் கடந்த பிணக் கற்றோன்**
**கண்ணிய நேயம் கரை ஞானம் கண்டுளோன்**
**திண்ணிய சுத்தன் சிவமுத்தன் தானே.**

பொருந்திய பதி ஞானத்தின் ஞானமாகிய மேல் நிலையை அடைந்தவன் பிறவிக்கு வித்தாம் புண்ணிய பாவம் என்னும் இருமைகளைக் கடந்தவன். மாறுபாடாம் குழப்பநிலையை நீத்தவன், பரம்பொருளாம் சிவபிரானுடன் பொருந்திய அன்பினால் பரஞான எல்லையைக் கண்டறிந்தவனாவான். அவன் தான் திட்பமான தூய உள்ளத்தினன். அவனே சிவ முத்தனாவான்.

**294. ஞானச் சமயமே நாடும் தனைக்காண்டல்**
**ஞான விசேடமே நண்ணும் பரோதயம்**
**ஞான நிர்வாணமே நன்றறிவா னருள்**
**ஞானா பிடேகமே நற்குரு பாதமே. (1476)**

ஞானச் சமயம் என்பதுதான் தான் நாடிநிற்கின்ற தன்னைக் காண்டல். தன்னை அறிதலாம் ஆத்ம தரிசனம் பெறல். அதே ஞானத்தினது விசேடம்தான் சென்றடைய வேண்டிய பர உதயமாம் இறைவன் சிவதரிசனம். அடுத்து ஞான நிர்வாணம் என்பதோ நன்றறியும் வாலறிவாளன் திருவருள் தன் மேல் பதிதல் (சத்திநிபாதம்). ஞான அபிடேகம் என்பதோ, குரு மூர்த்தமாய் வந்து எழுந்தருளி ஆட்கொண்டருளிய நல்ல குருவின் திருவடித் தாமரைகளே ஆகும்.

**285. சாற்றரிதாகிய தத்துவம் சித்தித்தால்**
**ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்.**
**மேற்றிகழ் ஞானம் விளங்கொளியாய் நிற்கும்**
**பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. (1442)**

சொல்லற்கு அரிதாகிய சிவத்தினைச் சென்று ஒன்றுகின்ற உண்மை நிலை வந்தடைந்தால், அடக்குதற்கு அரிதான ஐம்புலச் சேட்டைகள் அடங்கிப் போகும். மிக மேலோங்கி விளங்குகின்ற ஞானப் பேரொளி ஒளிர்ந்து நிற்கும். உயர்வற உயர்ந்த பெரு நிலமாகும் சாயுச்சிய நிலையாம் சிவப் பேறு எய்தும்.

## யோகம்

**286. பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்**
**சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது**
**ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு**
**நாவி அணைந்த நடுத்தறி யாமே. (1459)**

மலரிடத்து மணம் பொருந்தியுள்ளதைப் போல நம் ஆன்மாவினுள்ளே சிவமணம் பூத்துள்ளது. இத்தன்மையினை ஓவியம்போல், பொறி புலன்களில் இயக்க மற்றுள்ளவர்களே (சிவனையே) உணர்ந்தறிவார்கள். அவர்களே நாவியாம் புனுகு பூனை அணைந்த நடுத்தறிபோல் அசையா திருப்பர்.

**287. விரும்பி நின்றே செயின் மெய்த்தவ ராகும்**
**விரும்பி நின்றே செயின் மெய்யுரையாகும்**
**விரும்பி நின்றே செயின் மெய்த்தவமாகும்**
**விரும்பி நின்றே செயின் விண்ணவனாகுமே. (1462)**

சிவ சாயுச்சியமாம் வீட்டு நெறியை அதற்குத் தக நிலை நின்று யோகப் பயிற்சியைச் செய்பவர்கள் உண்மையான தவசிகளாவார்கள். இவ்வொழுக்கமே உண்மை உரையாகி மெய்யுணர்வளிக்கும். அதுதானே உண்மையான தவ

ம-9

ஆதார வழிதோறும் மேலேறிச் சென்று, கூனல் மதியாம் சந்திர மண்டிலத்துத் தம் கண் எதிரே தோன்றும் அமுத நீரைக் கண்டு, அதனால் தம்முடைய ஊனம் மிக்க மாயா மலத்தினை அறுத்து அந்த ஞானியர் சிவஜோதியில் கலப்பர்.

**293. நண்ணிய ஞானத்தின் ஞானதி நண்ணுவோன்**
**புண்ணிய பாவம் கடந்த பிணக் கற்றோன்**
**கண்ணிய நேயம் கரை ஞானம் கண்டுளோன்**
**திண்ணிய சுத்தன் சிவமுத்தன் தானே.**

பொருந்திய பதி ஞானத்தின் ஞானமாகிய மேல் நிலையை அடைந்தவன் பிறவிக்கு வித்தாம் புண்ணிய பாவம் என்னும் இருமைகளைக் கடந்தவன். மாறுபாடாம் குழப்பநிலையை நீத்தவன், பரம்பொருளாம் சிவபிரானுடன் பொருந்திய அன்பினால் பரஞான எல்லையைக் கண்டறிந்தவனாவான். அவன் தான் திட்பமான தூய உள்ளத்தினன். அவனே சிவ முத்தனாவான்.

**294. ஞானச் சமயமே நாடும் தனைக்காண்டல்**
**ஞான விசேடமே நண்ணும் பரோதயம்**
**ஞான நிர்வாணமே நன்றறிவா னருள்**
**ஞானா பிடேகமே நற்குரு பாதமே. (1476)**

ஞானச் சமயம் என்பதுதான் தான் நாடிநிற்கின்ற தன்னைக் காண்டல். தன்னை அறிதலாம் ஆத்ம தரிசனம் பெறல். அதே ஞானத்தினது விசேடம்தான் சென்றடைய வேண்டிய பர உதயமாம் இறைவன் சிவதரிசனம். அடுத்து ஞான நிர்வாணம் என்பதோ நன்றறியும் வாலறிவாளன் திருவருள் தன் மேல் பதிதல் (சத்திநிபாதம்). ஞான அபிடேகம் என்பதோ, குரு மூர்த்தமாய் வந்து எழுந்தருளி ஆட்கொண்டருளிய நல்ல குருவின் திருவடித் தாமரைகளே ஆகும்.

## சன்மார்க்கம்

295. சாற்றும் சன்மார்க்கமாம் தற்சிவ தத்துவத்
தோற்றங் களான சுருதிச்சுடர் கண்டு
சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. (1477)

ஞானிகளால் புகழ்ந்து கூறப்படும் சன்மார்க்கியர்களே, சிவ தத்துவ கூறுகளாம் சுத்தவித்தை, ஈஸ்வரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் உண்மைகளை உணர்த்தும் சைவாகமங்கள் கூறுகின்ற பதியிலக்கணத்தின் உண்மைச் சுடரை உணர்ந்து காம, கோபம், மோக, மதம், மாச்சர்யம் எனும் அறுவகைப்பகை கடிந்து சிவ யோக சித்தர்களாய் வாழ்பவர்கள் ஆவர். அவர்கள் தாம் கூற்றத்தை வென்றவர்கள். இறைவன் திருக்குறிப்பறிந்து அவனிலே வாழ்பவர்களாவர்.

296. தெளிவறி யாதார் சிவனை அறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதார் தீரார் பிறப்பே. (1480)

சன்மார்க்க நெறியில் ஒழுகி சிவஞானத்தெளி வெய்தாதவர்கள் சிவனை நன்குணரார். அவர்கள் ஆன்மா இன்னதெனத் தாம் கண்டுணராத் தன்மையினால், அவர்கள் ஜீவனுமாக மாட்டார்கள் (அவர்களைப் பொருத்தவரை அவர்கள் உடம்பே ஆவார்கள். சிவமாம் பெருநிலை எய்தார்.) எனவே அவர்களுக்குப் பிறப்பிறப்பு அற்ற தன்மையும் இல்லை.

297. சன்மார்க்க சாதனம் தான்ஞான ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்கும்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றார்
சன்மார்க்கம் தானவ னாகும் சன்மார்க்கமே. (1483)

சன்மார்க்க சாதனம் என்பதுதான் ஞானத்தை அறியும் தன்மையை உடையதாம். அதையடுத்து சொல்லப்படும் மார்க்க

சகமார்க்கத்தினைத் தோழமை நெறி என்றும், பக்தி நெறி, என்றும் கூறலாம். தலைவன் தலைவி எனும் முறையில் நெஞ்சைச் செலுத்துவதும் அது. சகமார்க்கத்திலே - பக்தி யோகத்தினால் சமாதி நிட்டை கூடி உள்ளவர்கள், தம் அகக் கண்முன்னே பரந்த அகலிடமாம் விண்வெளியை சிதாகாசத்தைக் காண்பார்கள். அதைப் போன்றே அவர்கட்கு உள்ளொளியாம் ஜோதி ஒளி தோன்றும். அச்சமாதிக் கண்ணே சகமார்க்கத்தினர் தம்முன்னே சிவ சக்தியின் தோற்றம் காண்பர். இச் சமாதியில் உயர்ந்தோர் சித்தராவர்.

**303. யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்**
**யோகம் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்**
**போகம் புவியிற் புருடார்த்த சித்திய**
**தாகும் இரண்டும் அழியாத யோகிக்கே. (1491)**

யோக நெறி நிற்றலும் போகத்துள்ளே புவன போகங்களை அனுபவித்தலும் யோகியர்களுக்கே இயலும். இச்சக மார்க்கப் பயன் சிவரூபம் அடையும் சாரூப நிலையே. போகத்தினின்றே புருடார்த்தங்களாம் அறம், பொருள், இன்ப வீட்டுநெறி ஒழுகுபவர்கள் புருடார்த்த சித்தி பெற்றவர்களாவர். இவ்விரு நிலைகளையும் அழியாத சக மார்க்க யோகநிலையுற்றோர் அடைவார்கள்.

**304. ஆதார சோதனையால் நாடி சுத்திகள்**
**மேதாதி ஈரெண் கலாந்தத்து விண்ணொளி**
**போதாலயத்துப் புலன் கரணம் புந்தி**
**சாதாரணம் கெடலாம் சகமார்க் கிக்கே. (1492)**

(சக மார்க்கம் என்ன? இதில் விளக்கப்படுகிறது) ஆறு ஆதாரங்களை - மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை - எனும் இவைகளைச் சோதனை செய்தலால், ஆய்ந்துணர்வதால் நாடி சுத்தியாம். மேதை முதலிய தாதுக்களும் (இரத்தம், மாமிசம், மேதஸ், சத்தி, மச்சை, சுக்கிலம்), முதற் பொருள்களும், பதினாறு கலைகளும், விண்ணொளியாம் சூரியன் சந்திரனும், அறிவாலயம்

## சன்மார்க்கம்

295. சாற்றும் சன்மார்க்கமாம் தற்சிவ தத்துவத்
தோற்றங் களான சுருதிச்சுடர் கண்டு
சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. (1477)

ஞானிகளால் புகழ்ந்து கூறப்படும் சன்மார்க்கியர்களே, சிவ தத்துவ கூறுகளாம் சுத்தவித்தை, ஈஸ்வரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் உண்மைகளை உணர்த்தும் சைவாகமங்கள் கூறுகின்ற பதியிலக்கணத்தின் உண்மைச் சுடரை உணர்ந்து காம, கோபம், மோக, மதம், மாச்சர்யம் எனும் அறுவகைப்பகை கடிந்து சிவ யோக சித்தர்களாய் வாழ்பவர்கள் ஆவர். அவர்கள் தாம் கூற்றத்தை வென்றவர்கள். இறைவன் திருக்குறிப்பறிந்து அவனிலே வாழ்பவர்களாவர்.

296. தெளிவறி யாதார் சிவனை அறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதார் தீரார் பிறப்பே. (1480)

சன்மார்க்க நெறியில் ஒழுகி சிவஞானத்தெளி வெய்தாதவர்கள் சிவனை நன்குணரார். அவர்கள் ஆன்மா இன்னதெனத் தாம் கண்டுணராத் தன்மையினால், அவர்கள் ஜீவனுமாக மாட்டார்கள் (அவர்களைப் பொருத்தவரை அவர்கள் உடம்பே ஆவார்கள். சிவமாம் பெருநிலை எய்தார்.) எனவே அவர்களுக்குப் பிறப்பிறப்பு அற்ற தன்மையும் இல்லை.

297. சன்மார்க்க சாதனம் தான்ஞான ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்கும்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றார்
சன்மார்க்கம் தானவ னாகும் சன்மார்க்கமே. (1483)

சன்மார்க்க சாதனம் என்பதுதான் ஞானத்தை அறியும் தன்மையை உடையதாம். அதையடுத்து சொல்லப்படும் மார்க்க

சகமார்க்கத்தினைத் தோழமை நெறி என்றும், பக்தி நெறி, என்றும் கூறலாம். தலைவன் தலைவி எனும் முறையில் நெஞ்சைச் செலுத்துவதும் அது. சகமார்க்கத்திலே - பக்தி யோகத்தினால் சமாதி நிட்டை கூடி உள்ளவர்கள், தம் அகக் கண்முன்னே பரந்த அகலிடமாம் விண்வெளியை சிதாகாசத்தைக் காண்பார்கள். அதைப் போன்றே அவர்கட்கு உள்ளொளியாம் ஜோதி ஒளி தோன்றும். அச்சமாதிக் கண்ணே சகமார்க்கத்தினர் தம்முன்னே சிவ சக்தியின் தோற்றம் காண்பர். இச் சமாதியில் உயர்ந்தோர் சித்தராவர்.

**303. யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்**
**யோகம் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்**
**போகம் புவியிற் புருடார்த்த சித்திய**
**தாகும் இரண்டும் அழியாத யோகிக்கே. *(1491)***

யோக நெறி நிற்றலும் போகத்துள்ளே புவன போகங்களை அனுபவித்தலும் யோகியர்களுக்கே இயலும். இச்சக மார்க்கப் பயன் சிவரூபம் அடையும் சாரூப நிலையே. போகத்தினின்றே புருடார்த்தங்களாம் அறம், பொருள், இன்ப வீட்டுநெறி ஒழுகுபவர்கள் புருடார்த்த சித்தி பெற்றவர்களாவர். இவ்விரு நிலைகளையும் அழியாத சக மார்க்க யோகநிலையுற்றோர் அடைவார்கள்.

**304. ஆதார சோதனையால் நாடி சுத்திகள்**
**மேதாதி ஈரெண் கலாந்தத்து விண்ணொளி**
**போதாலயத்துப் புலன் கரணம் புந்தி**
**சாதாரணம் கெடலாம் சகமார்க் கிக்கே. *(1492)***

(சக மார்க்கம் என்ன? இதில் விளக்கப்படுகிறது) ஆறு ஆதாரங்களை - மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை - எனும் இவைகளைச் சோதனை செய்தலால், ஆய்ந்துணர்வதால் நாடி சுத்தியாம். மேதை முதலிய தாதுக்களும் (இரத்தம், மாமிசம், மேதஸ், சத்தி, மச்சை, சுக்கிலம்), முதற் பொருள்களும், பதினாறு கலைகளும், விணனொளியாம் சூரியன் சந்திரனும், அறிவாலயம்

எனப்படும் உடலும் அதில் அமைந்துள்ள ஐம்புலன், அந்தக்கரணங்கள் புத்தி எனும் இவை கொண்ட ஜீவ இயல்பு கெட்டொழிவதே சக மார்க்கம் என்க.

### சற்புத்திர மார்க்கம் - கருமயோகம்

**305. மேவிய சற்புத்திர மார்க்க மெய்த் தொழில்**
**தாவிப்பதாம் சகமார்க்கம் சகத்தொழில்**
**ஆவதிரண்டும் அகன்று சகமார்க்கத்**
**தேவியோ டொன்றல் சன்மார்க்கந் தெளிவதே. (1495)**

சற்புத்திரமார்க்கம் என்பது தான் கருமத்தை அறநெறியிலே (பயன் கருதாது முனைப்பின்றி) செய்வதாகும். முன்னர்க் கூறிய சகமார்க்கம் அகத்தவம். இது மனைத்தவம். இக்கூறிய இரண்டும் அகன்று அகத்தவமாம் சன்மார்க்கத்திலே தேவியாம் சக்தியுடன் கூடல் சன்மார்க்கமாம்.

**306. அருங்கரை யாவது அவ்வடி நீழல்**
**பெருங்கரை யாவது பிஞ்ஞகன் ஆணை**
**வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லாம்**
**ஒருங்கு அரையாய் உலகேழின் ஒத்தானே. (1498)**

பிறவிப் பெருங்கடலின் அருமையான கரையாக அமைந்துள்ளது இறைவன் திருவடி நிழலாகும். அனைத்துயிர்களுக்கும் பேரெல்லையாகத் திகழ்வது சிவபிரானது ஆணையாகும். இருவினைகளால் உண்டாகும் எழுவகைப் பிறவிகளை அடையும் உயிர்களுக்கு ஒப்பற்ற அரசனாக விளங்குகின்றவன் ஏழுலகங்களையும் தன் பரந்து விளங்கும் தன்மையால் ஒப்ப நின்ற சிவனே ஆகும்.

### தாசமார்க்கம்

**307. அது இது வாதிப் பரமென் றகல்வர்**
**இதுவழி என்றங் கிரைஞ்சின ரில்லை**
**விதிவழி யேசென்று வேந்தனை நாடு**
**மதுவிது நெஞ்சில் தணிக்கின்ற வாறே. (1503)**

மருட்டித் தெளிவினை உண்டாக்கி ஆன்மாவுடன் கூடி அவ்வான்மாவின் பழமலப் பிணிப்பாம் மாயையின் மயக்கத்தையும் விலக்கி, ஆன்மாவின் பழவினைகளை எல்லாம் அச்சுறுத்தி, வேரறுத்துத் திருவடி இன்பத்தினை விளைவித்து, ஆன்மாவின் ஞானக்கண் குருட்டினை ஆணவமான படலங் கிழித்து நீக்கி, நல்நலன் பலவற்றையும் கூட்டித் திருவருள் திகழ்கின்ற பர ஞானத்தினைச், சக்தி, ஆன்மாவுக்குப் புரிந்தருளினாள்.

**313. எய்திய காலங்கள் எத்தனை யாயினுந்**
**தையலுந் தானும் தனிநா யகமென்பர்**
**வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக்**
**கையிற் கருமஞ்செய் காட்டலு மாமே. (1521)**

எத்தனை எத்தனை ஊழிக் காலங்கள் கழிந்து போயினும், பராசத்தியும் சிவபிரானும் ஒப்பற்ற முழு முதல்வர் எனக் கூறும் உலகம். தன்னை எக்காலத்தும் வழிபடும் அன்பர்களுக்குக் குரு வடிவாகி, தன் கையினால் சின்முத்திரை செய்து காட்டி அவனே ஆட்கொண்டருளுவான்.

**314. அண்ணிக்கும் பெண்பிள்ளை, அப்பனார் தோட்டத்தில்,**
**எண்ணிக்கும் ஏழேழ் பிறவி உணர்விக்கும்**
**உண்ணிற்ப தெல்லாம் ஒழிய முதல்வனைக்**
**கண்ணுற்று நின்ற கனியது வாமே. (1523)**

திருவருள் பொருந்தியுள்ள பெண்பிள்ளையாம் பராசக்தி ஐயன் சிவபிரானது தோட்டமாம் நம் உடலின்கண், எண்ணுக்கடங்காத எழுவகைத் தோற்றத்து, ஏழ் பிறவிகளும் கழியத், திருவருள் உணர்வினைப் பதியச் செய்து (சத்திநிபாதம் செய்து) உள்ளே நிலவியுள்ள இருவினைகளின் பயன்களும் கருவி கருமக் கூட்டங்களும் ஒழியும்படிச் செய்வள். அதனால் முதல்வனாம் சிவபிரான் தோட்டத்திலே பழுத்துள்ள சிவக் கனி நம் கண்ணுறப் பொருந்தி நிற்கும்.

எண்ணிக்கும் - எண்ணிடும் எண்ணுக்கடங்காது.

எனப்படும் உடலும் அதில் அமைந்துள்ள ஐம்புலன், அந்தக்கரணங்கள் புத்தி எனும் இவை கொண்ட ஜீவ இயல்பு கெட்டொழிவதே சக மார்க்கம் என்க.

## சற்புத்திர மார்க்கம் - கருமயோகம்

305. மேவிய சற்புத்திர மார்க்க மெய்த் தொழில்
தாவிப்பதாம் சகமார்க்கம் சகத்தொழில்
ஆவதிரண்டும் அகன்று சகமார்க்கத்
தேவியோ டொன்றல் சன்மார்க்கத் தெளிவதே. (1495)

சற்புத்திரமார்க்கம் என்பது தான் கருமத்தை அறநெறியிலே (பயன் கருதாது முனைப்பின்றி) செய்வதாகும். முன்னர்க் கூறிய சகமார்க்கம் அகத்தவம். இது மனைத்தவம். இக்கூறிய இரண்டும் அகன்று அகத்தவமாம் சன்மார்க்கத்திலே தேவியாம் சக்தியுடன் கூடல் சன்மார்க்கமாம்.

306. அருங்கரை யாவது அவ்வடி நீழல்
பெருங்கரை யாவது பிஞ்ஞகன் ஆணை
வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லாம்
ஒருங்கு அரையாய் உலகேழின் ஒத்தானே. (1498)

பிறவிப் பெருங்கடலின் அருமையான கரையாக அமைந்துள்ளது இறைவன் திருவடி நிழலாகும். அனைத்துயிர்களுக்கும் பேரெல்லையாகத் திகழ்வது சிவபிரானது ஆணையாகும். இருவினைகளால் உண்டாகும் எழுவகைப் பிறவிகளை அடையும் உயிர்களுக்கு ஒப்பற்ற அரசனாக விளங்குகின்றவன் ஏழுலகங்களையும் தன் பரந்து விளங்கும் தன்மையால் ஒப்ப நின்ற சிவனே ஆகும்.

## தாசமார்க்கம்

307. அது இது வாதிப் பரமென் றகல்வர்
இதுவழி என்றங் கிறைஞ்சின தில்லை
விதிவழி யேசென்று வேந்தனை நாடு
மதுவிது நெஞ்சில் தணிக்கின்ற வாறே. (1503)

மருட்டித் தெளிவினை உண்டாக்கி ஆன்மாவுடன் கூடி அவ்வான்மாவின் பழமலப் பிணிப்பாம் மாயையின் மயக்கத்தையும் விலக்கி, ஆன்மாவின் பழவினைகளை எல்லாம் அச்சுறுத்தி, வேரறுத்துத் திருவடி இன்பத்தினை விளைவித்து, ஆன்மாவின் ஞானக்கண் குருட்டினை ஆணவமான படலங் கிழித்து நீக்கி, நல்நலன் பலவற்றையும் கூட்டித் திருவருள் திகழ்கின்ற பர ஞானத்தினைச், சக்தி, ஆன்மாவுக்குப் புரிந்தருளினாள்.

**313. எய்திய காலங்கள் எத்தனை யாயினுந்**
**தையலுந் தானும் தனிநா யகமென்பர்**
**வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக்**
**கையிற் கருமஞ்செய் காட்டலு மாமே. *(1521)***

எத்தனை எத்தனை ஊழிக் காலங்கள் கழிந்து போயினும், பராசத்தியும் சிவபிரானும் ஒப்பற்ற முழு முதல்வர் எனக் கூறும் உலகம். தன்னை எக்காலத்தும் வழிபடும் அன்பர்களுக்குக் குரு வடிவாகி, தன் கையினால் சின்முத்திரை செய்து காட்டி அவனே ஆட்கொண்டருளுவான்.

**314. அண்ணிக்கும் பெண்பிள்ளை, அப்பனார் தோட்டத்தில்,**
**எண்ணிக்கும் ஏழேழ் பிறவி உணர்விக்கும்**
**உண்ணிற்ப தெல்லாம் ஒழிய முதல்வனைக்**
**கண்ணுற்று நின்ற கனியது வாமே. *(1523)***

திருவருள் பொருந்தியுள்ள பெண்பிள்ளையாம் பராசக்தி ஐயன் சிவபிரானது தோட்டமாம் நம் உடலின்கண், எண்ணுக்கடங்காத எழுவகைத் தோற்றத்து, ஏழ் பிறவிகளும் கழியத், திருவருள் உணர்வினைப் பதியச் செய்து (சத்திநிபாதம் செய்து) உள்ளே நிலவியுள்ள இருவினைகளின் பயன்களும் கருவி கருமக் கூட்டங்களும் ஒழியும்படிச் செய்வள். அதனால் முதல்வனாம் சிவபிரான் தோட்டத்திலே பழுத்துள்ள சிவக் கனி நம் கண்ணுறப் பொருந்தி நிற்கும்.

எண்ணிக்கும் - எண்ணிடும் எண்ணுக்கடங்காது.

**315. பிறப்பை யறுக்கும் பெருந்தவம் நல்கும்**
**மறப்பை யறுக்கும் வழிபட வைக்கும்.**
**குறப்பெண் குவிமுலை கோமள வல்லி**
**சிறப்பொடு பூசனை செய்ய நின்றார்க்கே. (1524)**

குறிஞ்சி நிலக்கிழத்தியாம் அழகிய பெண்கொடி பார்வதியம்மையார், சிவத்தினை நோக்கி சிறப்பொடு பூசனை செய்து வழிபடும் அடியவர்களுக்குப் பிறப்பினை நீக்குவள். பெருமை மிக்கத் தவ நெறியை நல்குவள். ஆணவமலத்தால் ஏற்படும் மறவியை அறுத்தெறிவாள். பரம் பொருளாம் சிவபிரானை வழிபடும் பெரும் பணியில் ஈடுபடுத்துவாள்.

**316. தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்**
**பூங்கமழ் கோதைப்புரி குழலா ளொடும்**
**ஆங்கது சேரும் அறிவுடை யார் கட்குத்**
**தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே. (1525)**

எட்டுத் திசைக்குந் தலைமகனாகிய சிவபிரானை, அவன் அருட்சத்தியாம் பூமணம் கமழும் மாலை சூடிய, இருண்ட கூந்தலையுடைய திருவருளம்மையோடும் உங்கள் உள்ளக் கமலத்தே தாங்குங்கள். இந்த வகையில் இடையறாது சிவசக்தியை உள்ளக் கமலத்திலே தாங்கி வழிபடும் ஞானம் உடையவர்களுக்கு, மேலிருந்து கீழ் சொரிந்து விழும் நிலவொளிமயமான திருவருள் வீழ்ச்சியாம் சத்திநிபாதம் ஏற்படும்.

**317. இருவினை நேரொப்பின் இன்னருட் சக்தி**
**குருவென வந்து குணம் பல நீக்கித்**
**தரு மெனும் ஞானத்தால் தன்செயலற்றால்**
**திரிமலம் தீர்ந்து சிவனவ னாமே. (1527)**

வேண்டுதல் வேண்டாமை, புண்ணிய பாவம், நன்மை தீமை, ஆகிய இருமைகளில் சம உணர்வு ஒப்பாகி, இருவினை ஒப்பு அமையப் பெற்றால், இனிமை தரும் அருட்சக்தியே குருவடிவாக வந்து ஆன்மாக்களிடத்துள்ள மருட்குணம் பலவற்றையும் நீக்கி, அருளைத் தருமென்று சொல்லப்படும். அவ்வருள் ஞானத்தால் தன் செயலற்ற தன்மை அமையப்

**323. அரநெறி அப்பனை ஆதிப் பிரானை**
**உரநெறி யாகி உளம்புகுந் தானை**
**பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம்**
**பரன் அறியாவிடில் பல்வகைத் தூரமே. (1543)**

அரன் நெறியாகிய சன்மார்க்க நெறித் தலைவனாம் சிவ பெருமானை, ஆதிப்பிரானை மனத் திண்மையாம் உரநெறி (ஞான நெறி) தானேயாகி உள்ளத்துள்ளே புகுந்து கோயில் கொண்டவனை, முத்தி நெறியினைத் தேடுகின்ற பத்தர்கள் முத்தி நெறியாளர்கள், சித்தமாகி நிற்கும் சிவனை, அறியாவிடில், அப்படிப் பட்டவர்கள் முத்தி நெறிக்குப் பல்வகைப்பட்ட தூரமானவர்க ளாவார்கள்.

**324. ஆனசமயம் அதுஇது நன்றென்றும்**
**மாய மனிதர் மயக்கமது ஒழி**
**கானம் கடந்த கடவுளை நாடுமின்**
**ஊனங்கடந்த உருவது வாமே. (1545)**

வடிவங்கள் பலவான சமயங்களிலே அச்சமயம் நன்று இச்சமயம் நன்று என்று பிதற்றும் வஞ்ச மனிதர்கள் தருகின்ற மார்க்கங்களினை அழித்து, விலகுங்கள். தத்துவங்களைக் கடந்த கடவுளாம் சிவனையே சென்றடைமின். குற்றம் அனைத்தும் கடந்து நிற்பீர். அவன் வடிவமாகவே மாறி சாரூபநிலை அடைவீர்.

**325. உறுமா றறிவதும் உள்நின்ற சோதி**
**பெறுமா றறிவில் பிணக்கொன்றும் இல்லை.**
**அறுமா றதுவான அங்கியுள் ஆங்கே**
**இறுமாறு அறிகிலர் ஏழைகள் தாமே. (1547)**

சென்றடையத்தக்க வழியாவதும், உள்ளத்துள்ளே ஒளிர்ந்து நிற்கின்ற சோதி வடிவான சிவபிரானைப் பெறும் வழியினை நன்குணர்வதுமான, ஞான வழிநின்றால், மாறுபாடு இல்லை. பிறவி அறும் வழியான சோதி வடிவினனான சிவபிரானிடத்தில் இலயிக்கின்ற வித்தினை அறியாதவர்கள் அறிவற்ற அஞ்ஞானிகளே ஆவர்.

**315. பிறப்பை யறுக்கும் பெருந்தவம் நல்கும்**
**மறப்பை யறுக்கும் வழிபட வைக்கும்.**
**குறப்பெண் குவிமுலை கோமள வல்லி**
**சிறப்பொடு பூசனை செய்ய நின்றார்க்கே. *(1524)***

குறிஞ்சி நிலக்கிழத்தியாம் அழகிய பெண்கொடி பார்வதியம்மையார், சிவத்தினை நோக்கி சிறப்பொடு பூசனை செய்து வழிபடும் அடியவர்களுக்குப் பிறப்பினை நீக்குவள். பெருமை மிக்கத் தவ நெறியை நல்குவள். ஆணவமலத்தால் ஏற்படும் மறவியை அறுத்தெறிவாள். பரம் பொருளாம் சிவபிரானை வழிபடும் பெரும் பணியில் ஈடுபடுத்துவாள்.

**316. தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்**
**பூங்கமழ் கோதைப்புரி குழலா ளொடும்**
**ஆங்கது சேரும் அறிவுடை யார் கட்குத்**
**தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே. *(1525)***

எட்டுத் திசைக்குந் தலைமகனாகிய சிவபிரானை, அவன் அருட்சத்தியாம் பூமணம் கமழும் மாலை சூடிய, இருண்ட கூந்தலையுடைய திருவருளம்மையோடும் உங்கள் உள்ளக் கமலத்தே தாங்குங்கள். இந்த வகையில் இடையறாது சிவசக்தியை உள்ளக் கமலத்திலே தாங்கி வழிபடும் ஞானம் உடையவர்களுக்கு, மேலிருந்து கீழ் சொரிந்து விழும் நிலவொளிமயமான திருவருள் வீழ்ச்சியாம் சத்திநிபாதம் ஏற்படும்.

**317. இருவினை நேரொப்பின் இன்னருட் சக்தி**
**குருவென வந்து குணம் பல நீக்கித்**
**தரு மெனும் ஞானத்தால் தன்செயலற்றால்**
**திரிமலம் தீர்ந்து சிவனவ னாமே. *(1527)***

வேண்டுதல் வேண்டாமை, புண்ணிய பாவம், நன்மை தீமை, ஆகிய இருமைகளில் சம உணர்வு ஒப்பாகி, இருவினை ஒப்பு அமையப் பெற்றால், இனிமை தரும் அருட்சக்தியே குருவடிவாக வந்து ஆன்மாக்களிடத்துள்ள மருட்குணம் பலவற்றையும் நீக்கி, அருளைத் தருமென்று சொல்லப்படும். அவ்வருள் ஞானத்தால் தன் செயலற்ற தன்மை அமையப்

**323. அரநெறி அப்பனை ஆதிப் பிரானை
உரநெறி யாகி உளம்புகுந் தானை
பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம்
பரன் அறியாவிடில் பல்வகைத் தூரமே. (1543)**

அரன் நெறியாகிய சன்மார்க்க நெறித் தலைவனாம் சிவ பெருமானை, ஆதிப்பிரானை மனத் திண்மையாம் உரநெறி (ஞான நெறி) தானேயாகி உள்ளத்துள்ளே புகுந்து கோயில் கொண்டவனை, முத்தி நெறியினைத் தேடுகின்ற பத்தர்கள் முத்தி நெறியாளர்கள், சித்தமாகி நிற்கும் சிவனை, அறியாவிடில், அப்படிப் பட்டவர்கள் முத்தி நெறிக்குப் பல்வகைப்பட்ட தூரமானவர்க ளாவார்கள்.

**324. ஆனசமயம் அதுஇது நன்றென்றும்
மாய மனிதர் மயக்கமது ஒழி
கானம் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங்கடந்த உருவது வாமே. (1545)**

வடிவங்கள் பலவான சமயங்களிலே அச்சமயம் நன்று இச்சமயம் நன்று என்று பிதற்றும் வஞ்ச மனிதர்கள் தருகின்ற மார்க்கங்களினை அழித்து, விலகுங்கள். தத்துவங்களைக் கடந்த கடவுளாம் சிவனையே சென்றடைமின். குற்றம் அனைத்தும் கடந்து நிற்பீர். அவன் வடிவமாகவே மாறி சாரூபநிலை அடைவீர்.

**325. உறுமா றறிவதும் உள்நின்ற சோதி
பெறுமா றறியில் பிணக்கொன்றும் இல்லை.
அறுமா றதுவான அங்கியுள் ஆங்கே
இறுமாறு அறிகிலர் ஏழைகள் தாமே. (1547)**

சென்றடையத்தக்க வழியாவதும், உள்ளத்துள்ளே ஒளிர்ந்து நிற்கின்ற சோதி வடிவான சிவபிரானைப் பெறும் வழியினை நன்குணர்வதுமான, ஞான வழிநின்றால், மாறுபாடு இல்லை. பிறவி அறும் வழியான சோதி வடிவினனான சிவபிரானிடத்தில் இலயிக்கின்ற வித்தினை அறியாதவர்கள் அறிவற்ற அஞ்ஞானிகளே ஆவர்.

326. வழிநடக்கும் பரிசொன் றுண்டு வையம்
கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர்
சுழி நடக் கும்துயரம் மது நீக்கிப்
பழிநடப் பார்க்குப் பரவலு மாமே. (1548)

சிவபிரானை அடையும் வழியாம் சன்மார்க்க நெறிச் செல்லும் சாதனம் ஒன்றுண்டு. இந்த உலகிலே வரம்பு கடந்து செல்லும் நடத்தை உள்ளவர்களால் கற்பிக்கப்பட்ட மதங்களை அனுசரித்துச் சுழியாம் குழப்பங்கள் மிக்க வழி நடத்துகின்ற தம் துயரத்தினை நீக்கலும், துன்ப நெறியாம் புறச் சமயத்தினைப் பழித்துச், சிவ நெறி நடப்பவர்களைத் தொழுதலும், சிவனையே தொழும் செந்நெறியாம்.

"மாலறநேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே" - சிவஞானபோதம்.

## நிராகாரம்

327. பாங்கமர் கொன்றை படர்சடை யானடி
தாங்கு மனிதர் தரணியில் நேர் ஒப்பர்
நீங்கிய வண்ணம் நினைவுசெய் யாதவர்
ஏங்கி உலகில் இருந்தழு வாரே. (1551)

அழகு மிக்கக் கொன்றை மலர் படர்ந்துள்ள சடையுடைய சிவபெருமானடிகளைத் தம் மனதிலே தாங்கி வழிபடுகின்ற மனிதர்கள் தமக்கு நிகர் தாமாக உலகில் விளங்குவார்கள். சிவஞானம் அற்றவர்கள், அகவிருள் தம்மிடம் நீங்கப் பெறாதவர்கள். அவர்கள் தம் உள்ளத்திலே சிவபெருமானை நினையாதவர்கள் ஆவர். அவர்கள் உலகத்திலே உள்ள பொன் பொருள் போகம் என்னும் பலவற்றுக்காக ஏங்கி, உலகிலே வாழ்ந்து அழுவார்கள்.

328. துறறி வானர் துணைவர் நினைப்பிலர்
பற்றிவானர் படுபயன் தான்உண்பர்
காறறிவானர் கலந்து பிறப்பர்கள்
நீறறி வார்நெடு மாமுனி வாமே. (1553)

ஈசனைத் தமக்குப் புறம்பாக நினைக்கும் குற்றமாம் தூர்வையை, அறிவாக உடைய கீழோர் தமக்கு எக்காலமும் எவ்விடத்தும் துணையாகி நிற்கும் அச் சிவபிரானின் நினைப்பினை ஒழிந்தவர்கள். பார் அறிவாம் உலக ஞானத்திலே மேம்பட்டவர்கள் உலகியலால் உண்டாகும் படியான பொருள் பொன் போகம் இவைகளின் பயனை அனுபவிப்பார்கள். அறியாமையே அறிவாகக் கருதும் அஞ்ஞானிகள் செத்துச் செத்துப் பிறப்பார்கள். இறைவன் தன்மையை (நீர்மையை) உள்ளவாறு உணர்ந்தவர்கள் பெருமைமிக்க கார்முகில் போன்று அருட்கடல் முகந்துண்டு அருள் வடிவாவர்.

**329. மன்னும் ஒருவன் மருவு மனோமயன்**
**என்னின் மனிதர் இகழ்வரிவ் வேழைகள்**
**துன்னி மனமே தொழுமின் துணையிலி**
**தன்னையு மங்கே தலைப்பட லாமே. (1555)**

உலகனைத்தும் தானாகவே பொருந்தியுள்ள ஒப்பற்றவனே அடியார்களின் உள்ளக் கமலத்திலே பொருந்தியுள்ள மனோ மயன் ஆவான் என்று ஒப்பற்ற மெய்யடியார்கள் சொன்னக்கால், அறிவற்ற மக்கள் அவ்வடியார்களை இகழ்வார்கள். எனவே உள்ளமானது அவனைச் சென்று பொருந்தும்படி தொழுது ஏத்துங்கள். அந்த ஒப்பற்றவன் தன்னையும், நீங்கள் கூடி இன்புற வெளிப்படுவான்.

**330. ஓங்காரத் துள்ளொளி உள்ளே உதயமுற்(று)**
**ஆங்கார மற்ற அனுபவம் கைகூடார்**
**சாங்கால முன்னார், பிறவாமை சார்வுறார்,**
**நீங்காச் சமயத்துள் நின்றொழிந் தார்களே. (1556)**

ஓங்காரம் என்னும் பிரணவத்தின் உள்ளே ஒளிவண்ணமாக உதயமுற்று எழுகின்றவன் சிவபெருமான். அவ்வருள் ஜோதி வடிவம் கண்டோர் ஆங்கார மற்றவர். இந்த ஆங்கார மற்ற அனுபவத்தை அடையாதவர்கள் தம் சாங்காலமாகிய மரணத்தை நினைத்துப் பார்ப்பதில்லை. எனவே பிறவாமையைச் சென்றடையார். மயக்கம் நீங்காத

சமயமாம் புறச் சமயங்களைச் சார்ந்து நின்று அறிவு ஒழிந்து உழல்வார்கள்.

### உட்சமயம்

331. ஒன்றது பேரூர் வழி ஆறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயை ஒத்தார்களே. (1558)

இறைவனது பேரூராகும் வீட்டு நெறி ஒன்றுதான். அதை அடையும் வழிகள் ஆறு உள்ளனவாம். அகச் சமயம் எனப்படும் (1) பாடான வாதம் (2) சங்கிராந்தவாதம் (3)அவிகார வாதம் (4) பரிணாம வாதம் (5) சுத்த சைவம் (6) பேதவாத சைவம் எனும் ஆறும், சைவத்தின் சமயத்துள் இது நல்லது இது தீயது என்று கூச்சலிடுவார்கள். இவர்கள் குன்றெதிர் நின்று குரைக்கின்ற நாயை ஒத்தவர்களே.

332. ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தன் ஒருவனாம் என்பது அறிந்திலர்
அத்தன் ஒருவனாம் என்பது அறிந்திடின்
முத்தி விளைக்கும் முதல்வனு மாமே. (3054)

அகச் சமயங்கள் ஆறும் தம்முள் ஒத்தவைகளே. அவைகள் தமக்குள்ளே அமைந்துள்ள வழிக்குப் பரம்பொருள் சிவன் ஒருவனே என்பதைப் பிறர் அறிய மாட்டார்கள். அப்படி அகச் சமயங்கள் ஆறனுள் வைக்கப்பட்டுள்ளவன் பரம சிவனே என்பதை நன்குணர்ந்த அடியவர்களுக்கு வீடுபேற்றினை அளிக்கின்ற முதல்வனாகச் சிவனே விளங்கிடுவான்.

333. ஈரு மனத்தை இரண்டற வீசுமின்
ஊரும் சகாரத்தை ஓதுமின் ஓதியே
வாரும் அரனெறி மன்னியே முன்னியத்
தூரும் சுடரொளித் தோன்றலு மாமே. (1564)

ஐம்புலனால் ஈர்க்கப்பட்டுழல்கின்ற மனத்தை இரண்டற்ற ஒரே சிந்தையிலே நிற்கும்படிச் செலுத்துங்கள். ஊரும் சகாரம்

'சி' என்னும் எழுத்தை உச்சரியுங்கள். ஓதிய பின்னர் வாரும் அரனெறி ஆகிய 'வ' என்னும் எழுத்தைக் கூட்டி, சிவ என ஆக்கி, அதனோடு 'ய' வை உடன் சேர்த்து சிவய என்றாக்கி அதன் பின் சிவ சேர்த்து சிவயசிவ எனத் தியானித்தால், உள்ளத்துள்ளே மண்டியுள்ள சுடரொளி மேலெழத் தோன்றும்.

334. இத்தவம் அத்தவம் என்றிடும் பேசிடும்
பித்தரை காணில் நகுமெங்கள் பேர் நந்தி
எத்தவ மாகிலென் எங்கு பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை ஊர்புகலாமே. (1568)

இத்தவத்தால் தான் இறைவனை எய்தலாம், இல்லை, இல்லை, அத்தவத்தால் தான் அவனை அடைய முடியும், என இருவகையாக நின்று வேறுபடுத்தி, பேர் வைத்துப் போரிடும் பித்தர்களைக் கண்டால் எங்கள் பிரான் பெருமை மிக்க நந்தி ஏளனச் சிரிப்பு உதிர்ப்பார். ஏனெனில் எவ்வகைத் தவமானால் என்ன? இறைவனது தன்மையினை உள்ளபடி ஒத்து உணரும் மெய்யுணர்வாளர்கள் அவன் திருவடி ஞானத்தால் விரைவில் அவன் ஊர் (வீடு) சென்று அடைவார்கள்.

335. ஆதிப் பிரான் உலகேழும் அளந்தவன்
ஓதக் கடலும் உயிர்களுமாய் நிற்கும்
பேதிப் பிலாமையின் நின்ற பராசக்தி
ஆதிக் கண்தெய்வமும் அந்தமு மாமே. (1570)

ஆதிப் பிரானாகிய சிவபிரான், மால்வடிவத்தோடு உலகேழும் அளந்து முடித்தவன். அவனே சக்தியின் கூறான மால் வடிவமான கடலாகவும் உலகனைத்தும் உள்ள உயிர்களுமாகியும் நிற்பவன். அவனோடு வேற்றுமையின்றி நிற்கும் பராசக்திதான் ஆதிக்கண் (முதற்கண்) உள்ளதெய்வமாம் சக்தியும் - அந்தமுமாகி நிற்கும் - ஒடுக்கத்தைச் செய்யும், சிவனாகியும் அமைவான்.

336. அறிய வொண்ணாதவ் உடம்பின் பயனை
அறிய ஒண்ணாத அறுவகை யாக்கி
அறிய ஒண்ணாத அறுவகை கோசத்து
அறிய ஒண்ணாத தோர் அண்டம் படைத்தே. (1572)

இந்த உடம்பினை நாம் அறிய ஒண்ணாது. வீடு பேறடைதலே உடம்பின் பயன் என்பதை நாம் சிந்திப்பதில்லை. இந்த அறிய ஒண்ணாத வீடு பேற்று நிலையை விளக்க ஆறுவகை உட்சமயங்களை இறைவன் படைத்துள்ளான். யாவராலும் அறிதற்கரிய ஆணவ மலத்தினை அறும்படியான வகையைச் செய்து இந்த உடம்புள்ளே அறிதற்கரிய ஓர் ஒப்பற்ற அண்டத்தைப் படைத்தருளினான். (அண்டத்தினுள்ளே உள்ளவை பிண்டத்தினுள்ளே உள என்பதைக் காணலாம்)

ஐந்தாம் தந்திரம் முற்றும்.

## ஆறாம் தந்திரம்
## சிவகுரு தரிசனம்.

**337. பத்திப் பணித்துப் பரவும் அடிநல்கி**
**சுத்த வுரையால் துரிசறச் சோதித்துச்**
**சத்தும் அசத்தும் சதசத்தும் காட்டலால்**
**சித்தம் இறையே சிவகுரு வாமே. (1578)**

பக்தியாம் அன்பு உள்ளத்திலே கனியச் செய்து துதித் தேத்துவதற்காகத் தன் திருவடி யிணைகளைத் தந்தருளி, சுத்த உரையாம் பஞ்சாட்சர உபதேசத்தால் மலபந்தங்கள் நீங்க, அத்துவா சோதனை செய்து, சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசம் சதசத்தாகிய ஆன்மா, இவைகளைத் தன் அருளால் உணர்த்தி ஆட்கொள்வதால் உள்ளத்திலே கோயில் கொண்டுள்ள இறைவனே சிவகுருவாவான்.

**338. எல்லா உலகுக்கும், அப்பாலோன் இப்பாலாய்**
**நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்**
**எல்லாரும் உய்யக் கொண்டிங்கே அளித்தலான்,**
**சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே. (1576)**

அண்டங்கள் அனைத்தினையும் கடந்து நின்ற பரம் பொருளாம் சிவபிரான், இங்கு இவ்வுலகத்திலே உள்ள மெய்யடியவர்கள் உள்ளத்துள்ளே வீற்றிருந்து தன்னுடைய மிக்க அருளைத் தந்து ஆட்கொள்ளலாலும், யாவரும்

ஈடேறும்படி இங்கேயே அருள் செய்தலாலும், சொல்லுக் கடங்காத நற்குரு என்பவர் சுத்த சிவபிரானே என்ப.

**339. சுத்தசிவன் குருவாய் வந்து தூய்மைசெய்து**
**அத்தனை நல்கருள் காணா அதிமூடர்**
**பொய்த்தரு கண்ணால் நமரென்பர்; புண்ணியர்**
**அத்தன் சிவனென் றடிபணி வாரே. (1578)**

ஞான வடிவினான சிவபிரான் குருவாக எழுந்தருளி வந்து ஆன்மாவின் மலத்தினை நீக்கித் தூய்மை செய்து அருள்வான். அந்த இறைவனை, அவன் அருள் நல்கும் திறத்தினைக், காணாத மிக்க மூடர்கள், தம்முடைய பொய்த்தோற்றங்களையே காணும் ஊனக் கண்ணால், இவர் நம்போன்ற மானுடரே என்பார்கள். ஆனால் இப்பேறு அடையும் புண்ணியம் வாய்க்கப் பெற்றவர்களோ, இறைவனே இவன் என அக்குருவின் திருவடிகளை வணங்கி நிற்பார்கள்.

**340. குருவே சிவமென்று கூறினான் நந்தி**
**குருவே சிவமென்பது குறித் தோரார்**
**குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்**
**குருவே உரையுணர் வற்றதோர் கோவே. (1581)**

குருமூர்த்தமாக எழுந்தருளி வந்து சத்திநிபாதத்தால் அருட்பாலித்து ஆட்கொள்பவன் சிவபிரானே என்று கூறினார் நந்திப் பிரான். அத்தகு குருவே சிவபிரான் என்பது குறித்து மெய்யுணர் வற்றோர் கருதமாட்டார்கள். அந்தக் குருதான் சிவமாகவும் ஆன்மாக்களின் முழு முதல் தலைவனாகியும் நிற்பன். அந்தக் குருதான் சுட்டுணர்வாலும் சிற்றறிவாலும் அறியப்படா முற்றுணர்வாம் சிவபிரான் என்ப.

**341. திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை**
**மருளா தருளும் மயக்கறும் வாய்மைப்**
**பொருளாய வேதாந்த போதமும் நாதன்**
**உருவாம் வராவிடில் ஓரஒண் ணாதே. (1584)**

மிகச் சிறந்த திருவாகிய - திருவடிப் பேறாகிய சித்தியும், வீட்டின்பமும் இவற்றின் சீர்மையும் மருளின்றிச் சிவமே அருள்

செய்யும். பொய்ப் பொருள்களில் மயக்குறுத்தலும் மெய்யுணர்வருளுதலும் சிவபிரான் உருவங் கொண்டு, குரு வடிவாய் வந்து, ஆட்கொண்டு, அருளா விட்டால், யாவராலும் உணர முடியாதாம்.

342. சிவமான ஞானம் தெளிய ஒண் சித்தி
சிவமான ஞானம் தெளிய ஒண்முத்தி
சிவமான ஞானம் சிவபரத்தே யேகச்
சிவமான ஞானம் சிவானந்தம் ஆமே. (1587)

சிவத்தைப் பொருந்திய ஞானத்தினை, மருள் அற்றுத் தெளிந்திட, ஒளி மிக்கச் சித்தி கைகூடா நிற்கும். அப்படித் தெளிவடைந்தால் - மேலும் மேலும் முற்றத் தெளிந்தால் - முத்தி எனப்படும் வீட்டின்பம் எய்தும். இந்தச் சிவஞானமாம் பதிஞானமே சிவபரமாம் சாயுச்சிய நிலையை அடைவிக்கும். அப்பதி ஞானமே சிவானந்தமாகும் பேரின்பத்தை அடைவிக்கும்.

343. அறிந் துணர்ந்தோர் இவ்வகலிடம் முற்றும்
செறிந் துணர்ந்தோதித் திருவருள் பெற்றேன்
மறந் தொழிந்தேன் மதிமாண்டவர் வாழ்க்கை
பிறந் தொழிந்தேன் இப்பிறவியை தானே. (1588)

மேலே சொன்ன அப்பதி ஞான வலிமையால், இந்த இடமுள்ள உலகில் உள்ளவர்களை அறிந்துணர்ந்தேன். உள்ளத்தினது செறிவாம் தியானத்தினால் திரு எழுத்து ஐந்தோதிச் சிவன் தன் திருவருள் பெற்றேன். தம் மதியைச் சிவபிரான் நினைப்பின்றி மறந்த அதனால் அழித்துக் கொண்டவர்களின் பெரு வாழ்க்கையை மறந் தொழிந்தேன். இவ்வகையிலே இவ்வுலகிலே பிறந்த இப் பிறவியிலேயே மறுப்பிறப்பிலிருந்து விடுபட்டுப் பிறப்பிறப்பு வேரறப் பெற்றேன்.

## திருவடிப் பேறு

**344. இசைந் தெழும் அன்பில் எழுந்தபடியே**
**பசைந்தெழும் ஈசனைப் பாசத்துள் ஏகச்**
**சிவந்த குருவந்து சென்னி கைவைக்க**
**உவந்த குருபாதம் உள்ளத்து வந்ததே. (1590)**

ஆன்மாவோடு திருவருள் கூடி இசைந்து மேலெழும் அன்பின் முதிர்ச்சியால், அவ்வன்பு மேலோங்க மேலோங்க விரும்பித் தோன்றும் பராபரனாம் ஈசனைப் பாசமாம் பொருள் வழிச் செல்லும்படி ஏக, அஞ்ஞானத்தை ஒடுக்கும் குருவடிவான சிவபிரான் நம்முன் தோன்றி நம் சென்னியின் மேல் கை வைத்துத் தீட்சை செய்து அருள்வான். அப்படி அருள் செய்த உடனே, ஆன்மாவின் உள்ளத்திலே குருபாதம் இடம்பெற்று, அதனால் ஆன்மா அருள் பெறும்.

**345. தான்தந்த போதே தலைதந்த எம்மிறை**
**வான்தந்த ஞான வலிமையும் தந்திட்டு**
**வீடந்த மின்றியே ஆள்கென விட்டருள்**
**பாடின் முடிவைத்துப் பார்வந்து தந்ததே. (1591)**

தன்னுடைய திருவடியை என் தலை மீது வைத்துத் தீக்கை அருளிய, அக்காலத்திலேயே எம் இறைவனாம் சிவ பிரான் பிற ஆன்மாக்களின் தலைமை இடத்தை எனக்குத் தந்தருளினான். அதோடு அஞ்ஞானத்தைக் கெடுக்கும் ஞானவாளினது வலிமையும் எனக்குத் தந்திட்டான். முடிவற்ற வீட்டின்ப ஆனந்தத்தை நீ நித்தியமாக அனுபவி' என்று எனக்குத் தந்துவிட்டு, அருள்பாடின் (தன் பேரருளினால்) தன் திருவடியை என்முடி மீது வைத்து அருள் தந்தான்.

**346. தான் அவனாகிச் சொரூபத் துவந்திட்டு**
**ஆன செரூபங்கள் நான்கும் அகற்றின**
**ஏனைய முத்திரை ஈந்தாண்ட நன்னந்தி**
**தானடி முற்சட்டித் தாபித்த துண்மையே. (1592)**

தான் ஆகிய ஆன்மா, அவனாகிய சிவமாகி சிவரூபமாம் சாரூபம் என்னும் இரண்டற்ற ஒருநிலையில் நிற்கும்.

அக்காலை மலம், மாயை, கன்மம், மாயேயம் என்னும் நான்கு மலங்களின் இயல்புகளும் நீங்கின நிலையடையும் ஆன்மா. சிவனடிக்கு அடிமையாம் மற்றைய முத்திரைகளை கொடுத்தாட் கொண்ட நல் நந்தி எம் பெருமான் தான், தன்னடிகளை முன்னதாக என் தலையின் மேல் வைத்து ஆண்டருளியது உண்மையே ஆகும்.

**347. உரையற்று உணர்வற்று உயிர்ப்பர மற்றுத்**
**திரையற்று நீர்போல் சிவமாதல் தீர்த்துக்**
**கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த**
**சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. (1593)**

திருவருள் வலத்தால் சிவபிரானே குருவடிவாய் வந்து ஆட்கொண்டதால், பிறப்புக்கேதுவாம் உரையும் உணர்வும் அகன்றோடின. சிவன் சீவன் என்ற வேறுபாடும் அற்று விட்டது. திரையும் கடலும் போல வேறு வேறாக தான் எண்ணப்படும் நிலைமாறி, திரை தான் கடலிலே அடங்கி நிற்கும் நிலையை ஒப்ப, சிவமாகும் நிலையினால் கரையில்லாத நுண்ணோசை, நினைவோசை, மிடற்றோசை, செவிஓசை எனும் நான்கு வகை நாதங்களையும் கடந்து சிவசொரூபத் திருத்தினன் ஆனோம். அதனால் மனமும் பேசாநிலை யடைந்தோம்.

**348. பேச்சற்ற இன்பத்துப் பேரானந்தத்திலே**
**மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மான்வித்துக்**
**காச்சற்ற சோதிக் கடன் மூன்றும் கைக்கொண்டு**
**வாச்ச புகழ்மானத் தான்தந்து மன்னுமே. (1595)**

பேச்சற்ற பேரின்ப நிலையாம் பெருவாழ்வில் என்னை நிலைக்கச் செய்து, அங்ஙனம் ஒடுங்கச் செய்த சிவ சொரூபமாக்கி பசுத்துவத்தை ஒழித்து, காய்ச்சற்ற கொடுமையற்ற - திருவருட் சோதிதான், மனம் வாக்கு காயமாம் முக்கரணங்களால் செய்யப்படும் வினைகள் அனைத்தையும் தன்பணியாக மாற்றிக் கைப்பற்றிக் கொண்டுவிட, அதனால் இதுவரையில் நிலவுலகத்திலே தன்முனைப்பால் வாய்த்த (வாய்ச்ச), புகழ் அனைத்தும் மாண்டு போகத், தன்னுடைய திருவடித் தாமரைகளைத் தந்தருளி நிலைக்கும்.

**349. இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்
பதிவித்தப் பாதப் பராபரன் நந்தி
கதிவைத்த வாறும் மெய்காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்ப ஒண்ணாதே. (1596)**

என்னுடைய உள்ளத்திலேயும் கண்ணிலும் தலைமீதும் தன் பாதத்தினைப் பதிய வைத்த நந்தி எம்பெருமானாம் பராபரப்பொருள், தன்னுடைய திருவடிப் பெருகிய கதியை எனக்கு வைத்த தன்மையும், பதிஞான விதி முறைகளை வைத்த தன்மையும் சொல்லுதற் கியலாவே!

**350. திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானம் திண்சித்தி முத்தியே. (1598)**

திருவடி ஞானமே ஆன்மாக்களைச் சிவனோடு ஒன்றறக் கலக்கும் தன்மை வாய்ந்தது. அதுவே சிவலோகமாம் மோட்சத்தினை எய்துவிக்கும். எங்ஙனமெனில் திருவடி ஞானந்தான் ஆன்மாக்களைச் சிறை செய்துள்ள மூல மலப்பிணிப்பை அறுத்து அவைகளிலிருந்து மீட்டுவிக்கும் ஆகையால் என்பதாம். எனவே அத்திருவடி ஞானம்தான் அசைக்க முடியாத திண்மையான சித்தியும் முத்தியுமாகும்.

**351. வைத்தேன் அடிகள் மனத்தினுள்ளே நான்
பொய்த்தே எரியும் புலன்வழி போகாமல்
எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு
மெய்த்தேன் அறிந்தேன் அவ்வேதத்தின் அந்தமே.
(1602)**

நான் என் மனத்தினுள்ளே இறைவனது திருவடித் தாமரைகளைப் பதிய வைத்தேன். பொய்மயக்கத்தினால் பொருள் மேல் பற்று வைத்துப், பற்றி எரிகின்ற ஐம்புலன்களின் வழியே மனம் போகாமல் மனமயக்கம் ஒழிந்தேன். அதனால் இரு வினைகளால் உழன்று பிறப்பிறப்பு மாறிவரும் தன்மையை மாற்றிவிட்டேன். இவைகளின் பயனாய் மெய்த்தேன் என்னும் உண்மையான நிலைத்த பேரின்பமும்,

வேதங்களில் கூறப்படும் முடிவான பொருளாம் சிவத்தினையும், அறிந்து கொண்டேன்.

**352. அடிசாரலாம் அண்ணல் பாத மிரண்டும்**
**முடி சார வைத்தனர் முன்னை முனிவர்**
**படிசார்ந்த இன்பப் பழவடி வெள்ளக்**
**குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே.**

முன்னைய சிவனடியார்களாம் மெய்ஞ்ஞான முனிவர்கள் தாம் சார வேண்டிய இறைவன் திருவடிகள் இரண்டினையும் தம்முடி மீது பதிய வைத்தனர். அந்த வகையிலே, படிப்படியாக மேலெழும் சோபான முறைப்படி, இன்பமடைந்த அடியவர்கள், இன்ப வெள்ளக் குடியாம் மோட்ச இன்பநிலை மூழ்கும் அடியவர்களோடு சேர்த்தற்குரிய சன்மார்க்க நெறியில் நிற்பதே அவர்களின் சிறந்த கொள்கை என்க.

**353. மந்திர மாவதும் மாமருந் தாவதும்**
**தந்திர மாவதும் தானங்க ளாவதும்**
**சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்**
**எந்தை பிரான்தன் இணையடி யாமே. (1604)**

எந்தைபிரான் இறைவன்தன் இணையடிகளே இருவினைப் பயனாய் எய்திய பிறவிப்பிணி நீக்கும் மந்திர மாகும். அந்நோய் நீங்க உட்கொள்ள வேண்டிய வீரியமிக்க மருந்தாக அது விளங்கும். தந்திரமாம் வேதாகமநூல் உணர்வும் செய்கின்ற தானங்களின் பயனாக விளங்குவதும் அவன் திருவடிகளே. உடல், உள்ளம், உயிர் அனைத்தையும் மாசகற்றித் தூயதாக்கும் தன்மையால் சுந்தரமாவதும், பிற புறச்சமய நெறிகளைப் போலன்றி குழப்பமற்ற காரிய காரண முறைப்படி வகுக்கப்பட்டுள்ளதால் தூய நன்னெறியான சித்தாந்த நெறியாவதும் அவன் திருவடிகளேயாம்.

## ஞாதுரு, ஞான, ஞேயம்

(1). அறியும் ஆன்மா (2) அறியும் அறிவு (3) அறியப்படும் பொருளாம் இறை.

354. ஞேயத்தே நின்றார்க்கு ஞானாதி நின்றிடும்
ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தின் வீடாகும்
ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்தை உற்றவர்
ஆயத்தின் நின்ற அறிவறி வாரே. (1606)

இறைவனது திருவருளாம் ஞேயத்திடத்தே (அறியப்படு பொருளிடத்தே) அசையாது நிற்பவர்க்கு, ஞானம் முதல் அனைத்தும் நிலை பெறும். உண்மைப் பொருளாம் இறைவனை, உண்மையாக உணர்ந்த ஆன்மா (ஞாதுரு)வின் அறிவே, முத்தியைப் பயக்க உதவியாகும். அறியப்படும் பொருளாம் பரசிவத்தினது (ஞேயத்தின்) உட்பொருளாம் சத்தியை (ஞேயத்தை) அதாவது சிவத்தையும் சத்தியையும் அறிபடு பொருளாக அறிந்தவர்கள், ஆராய்ந்து நின்ற சிவப்பேறாகி நிற்கும் உண்மையறிவினை, உள்ளபடி உணர்ந்தவர்களாவார்கள்.

355. தானென் றவனென்று இரண்டாகும் தத்துவம்
தானென் றவனென்று இரண்டும் தனிற்கண்டு
தானென் றபூவை அவனடி சாத்தினால்
நானென் றவனென்கை நல்ல தொன்றன்றே. (1607)

உண்மைப் பொருள் என்பது; தான் என்றும் அவன் என்றும் இரண்டாகும் தன்மைத்து. தான் என்பதையும் அவன் என்பதையும் - இரண்டையும் - தன்னிலே காணல் வேண்டும். அதாவது தன்னை அறிந்து (ஆத்ம தரிசனத்துடன்) தலைவனை அறிதல் வேண்டும். (சிவ தரிசனம் செய்தல் வேண்டும்) அதற்குத், தானென்ற மலரினை அவனடி சாத்தி, ஆத்ம நிவேதனம் செய்தல் வேண்டும். நான் என்றும் அவனென்றும் சொல்வது அதாவது சீவன், சிவன் என வேற்றுமையுற இயம்புவது நன்மை தரும் செயலாகாது.

356. முன்னையறி வறியாத அம்மூடர் போல்
பின்னையறி வறியாமையைப் பேதித்தான்
தன்னை அறியப் பரனாக்கித் தற்சிவத்து
என்னை அறிவித் திருந்தனன் நந்தியே. (1609)

திருவடித் தீக்கையை தாம் பெறாத முன்னர், அறிய வேண்டிய உண்மைகளை அறிய - மெய்யுணர் வெய்தாத

மூடர்களுக்குப், பின்னர்த் - திருவடி தீக்கையை அளித்த பின்னர், அறிவு அறியாமையும் ஆம் இரண்டினையும் அழித்து விட்டான். ஆன்மாவாகித் தன்னைத்தான் அறியும்படி ஆன்மாவைச் சிவமயமாக்கி அச்சிவனிடத்தே என்னைக் (ஆன்மாவை) காணும்படி அருள்செய்தான் நந்தி யெம்பெருமான் (போல் - உரையசை)

**357. காணாத கண்ணுடன் கேளாத கேள்வியும்**
**கோணாத போகமும் கூடாத கூட்டமும்**
**நாணாத நாணமும் நாதாந்த போதமும்**
**காணாய் எனவந்து காட்டினான் நந்தியே. (1610)**

உலகியற் பொருளாகிய அநித்தியப் பொருள்களைக் காணாத கண்ணாம், ஞானக் கண்ணையும், சிவஞானம் அல்லாத அஞ்ஞான மொழிகளைக் கேளாத கேள்வியாம் உபதேச மொழிகளையும், உலக போகத்திற்கு மாறான, குறைவு நிறைவற்ற சிவபோகமும், உலகத்துறுகின்ற மெய்யுறு புணர்ச்சிக்கு மாறான பிரிதல் கூடுதலற்ற சிவபோகமும், கருமத்தால் நாணும் நாணமும் திருநுதல் நல்லவர் நாணமும் அற்ற, இயற்கையான அடிமைநிலை நாணமும், நாத முடிவினதாகிய அருள் ஞான உணர்வும் காண் என, எனக்குக் காட்டியருளினான் எம்பிரான் நந்தி.

**358. மோனம் கைவந்தோர்க்கு முத்தியும் கைகூடும்**
**மோனம் கைவந்தோர்க்கு சித்தியும் முன்னிற்கும்**
**மோனம் கைவந்தூமை யாமொழி முற்றுங்காண்**
**ஞானம் கைவந்து ஐங்கருமம் முன்னுமே. (1611)**

வாய் பேசா மௌனம் மட்டுமல்ல, மனம் முற்றும் (1)அடங்கிய முழு மௌன, நிலை வாய்த்தவர்களுக்கு முத்தி நிலையும் வந்தடையும். (2) அவர்கட்குச் சர்வசித்தியும் வந்து முன்னே நிற்கும். இந்த மௌனநிலை முற்றும் நன்கெய்தியவர்களுக்குப் பேசாத மந்திரமாம் அஜபா மந்திரமும் முற்றிலும் கைவரப் பெறும். இத்திறத்தினை உடையவர்கள் ஞானம் எய்தி ஐந்தொழில்களையும் இயற்றும் ஆற்றலையும் கைவரப் பெறுவார்கள்.

359. மேலைச் சொரூபங்கள் மூன்றும் மிகுசத்தி
பாலித்த முத்திரை பற்றும் பரஞானி
ஆலித்த நட்டமே ஞேயம்புகுந் தற்ற
மூலச்சொரூபன் மொழிஞா துருவனே. (1613)

மேலே சொல்லப்பட்ட சொரூபங்களாம் ஞாதுரு, ஞானம், ஞேயம் ஆகிய - அறிவு, அறிவன், அறியப்படு பொருள் இவைகளை மெய்யுணர்வால் ஆய்ந்து உளம் கொண்டவனும், மேலான சிவசித்தி அருளிய சாம்பவி யாதி முத்திரைகளைப் பற்றி நிற்பவனுமான மேலான ஞானியானவன், இறைவன் சிற்றம்பலத்தே ஆடுகின்ற நடனத்தின் ஊடே சென்று, ஞேயத்தில் படிந்து (அற்ற மூலச் சொரூபன்) மூலப் பிரக்ருதி அற்ற, சொரூபத்தையுடைய, ஆன்மா, சொல்லப்படும் அறிவு மயமான சிவஞான சொரூபமாய் விடுவான்.

## துறவு

360. இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கி
துறக்கும் தவம் கண்ட சோதிப் பிரானை
மறப்பிலராய் நித்தம் வாய் மொழிவார் கட்கு
அறப்பதி காட்சியாம் ஆதிப் பிரானே. (1614)

இறப்பும் பிறப்பும் இவைகளோடு வைத்தெண்ணப் படும் இருமையாம், நன்மை தீமை, பகல் இரவு, சுகம் துக்கம், எனும் இவைகளை விட்டு நீங்கித் துறக்கும் படியான தவ நிலையினைக் கண்டருளிய சோதிப் பிரானான சிவபிரானைச் சிறிதும் மறத்திலராய், தினம் தோறும் வாய் மொழியாம் தோத்திரப் பாக்களால் துதிப்பவர்களுக்கு அறப்பதி காட்சியாம் முத்தி யுலகத்தைத் தந்தருளுவான் சிவபிரான்.

361. பிறந்தும் இறந்தும் பல்பேதமை யாலே
மறந்து மலஇருள் நீங்க மறைந்து
சிறந்த சிவனருள் சேர் பருவத்துத்
துறந்த உயிர்க்குச் சுடரொளி ஆமே. (1615)

பிறந்தும், இறந்தும், அறியாமை வயத்தால் சிவபிரானை மறந்தும், உழல்கின்ற ஆன்மாவின், ஆணவம் கன்மம் மாயை ஆய மல இருள் நீங்கும்படி ஆன்மாவிலே மறைந்து நின்றுப் பின் மல பரிபாகத்தினால் வெளிப்பட்டுச் சிறந்து விளங்கும் திருவருட் சக்தி சேர், பருவ நிலையாகிய சத்திநிபாத நிலையிலே துறவுக்குரிய துறவொழுக்கத்தைக் கைக்கொண்ட உயிர், அருட் சுடரொளியோடு திகழும்.

**362. நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்**
**நெறியில் வழுவில் நெருஞ்சி முன்பாயும்**
**நெறியில் வழுவா தியங்க வல்லார்க்கு**
**நெறியில் நெருஞ்சி முன் பாயகில்லாவே. (1617)**

துறவற நெறியை வகுத்தருளிய இறைவனே அதன் பக்கத்திலேயே நெருஞ்சி முள்ளையும் (பழி, பாவம் அச்சம் முதலியன) படைத்துள்ளான். துறவு நெறியில் சற்றும் வழுவாமல் நடந்தால் அவர்கள் பழிபாவம், அச்சம், அவமானம் எனும் நெருஞ்சியால் துன்பங்கள் அடைந்து வருந்துவதில்லை.

**363. உழவன் உழஉழ வானம் வழங்க**
**உழவன் உழவிற் பூத்தது வேளை**
**உழவன் உழத்தியர் கண்ணோக்கம் என்றிட்டு**
**உழவன் அதனை உழவொழிந்தானே. (1619)**

உழவனாகிய ஆன்மா, சரியை கிரியை யோகம் ஞானம் எனும் நாற்பாதங்களிலே பயிலப் பயில, வானமாகிய திருவருட் சக்தி கருணையாகிய மழையினைப் பொழிய, ஆன்மாவாம் உழவினிலே (பயிற்சியினால்) வேளைப் பூவாம் ஞானம் மலர்ந்தது (பக்குவக் காலத்தால் ஞானம் மலர்ந்தது) அத்தகு ஞானம் மலர்ந்த பின் ஆன்மா அதைத் திருவருட் சக்தியின் (உழத்தியின்) அருள் கண்ணோக்கம் காத்தளிக்கும் என்று, தன் உழத்தலை (வருத்தத்தினை) ஒழித்துப், பேரின்ப பெருவாழ்வில் சும்மா கிடந்தான்.

**364. நாகமும் ஒன்று படம் ஐந்து நாலது**
**போகமுட் புற்றில் பொருந்தி நிறைந்தது**
**ஆகம் இரண்டும் படம்விரித் தாட் டொழிந்து**
**தேகம் படம் செய் துடம்பிடமாமே. (1621)**

ஆன்மாக்களுக்கு உடலாம் நாகம் ஒன்று. ஆனால் அது ஐந்துதலை நாகம். படம் ஐந்தாகி எழுந்தாடும். ஐம்பொறிகள் வாயிலாய்ப் புலன்கள் ஆட்டப் போடும். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் போகங்களோ நான்கு. உளம் எனும் புற்றிலே பொருந்தி நிறைந்திருப்பவன் சிவபிரான். ஆகமாம் தேகம் இரண்டிலும், சூக்கும காரண சரீரங்களிலும், படம் விரித்தாடும் தன் முனைப்பாம் ஆட்டம் ஒழிந்து நிற்கப், புலன்களிற் பொறி சென்றோடுவதை ஒழிந்து நிற்கப், பக்குவப் படுத்திட இந்த உடம்பு இடமாகி நிற்கும்.

## தவம்

**365. ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்**
**நடுங்கு வதில்லை நமனுமங்கு இல்லை**
**இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை**
**படும்பயன் இல்லை பற்று விட்டோர்க்கே. (1624)**

தம்புலன் ஒடுங்கி, மனம் ஒடுங்கி, தவநிலையிலே ஈடுபட்டுள்ள உத்தமர்களின் உள்ளம்தான் நடுக்க மடைவதில்லை. நமனால் துன்பம் நணுகுதல் இல்லை. பிறப்பிறப்பாம் இடும்பையும் (துன்பமும்) இல்லை; சிவனை நினைத்தல் மறத்தலாம் இரவும் பகலும் அவர்கட்கில்லை. தம்மை மறந்து, முனைப்பற்றுத் தாம் செய்யும் வினைகளால் அடைகின்ற பயனும் சேர்தல் இல்லை. ஏனெனில் அவர்கள் பற்றுக்களை அறுத்துத், துறந்தவர்களாதலினென்க.

**366. பிறப்பறியார்பல பிச்சை செய் மாந்தர்**
**சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்**
**மறப்பில ராகி மாதவம் செய்வார்**
**பிறப்பினை நீக்கும் பெருமை பெற்றாரே. (1626)**

பிறவித் துன்பத்தினைத், துறவிகளாய்த் தவமியற்றிப் பிச்சை புகுந்துண்ணும் பலர் அறியார். ஆனால் அத் தவசியர்கள் புகழோடு பல்வகையான, தாம் வேண்டிய செல்வத்தினை அடைவார்கள். சிவபெருமான் திருவருளை மறத்தல் இலாத சிறப்பு மிக்க தவத்தினை மேற்கொள்ளும் உண்மைத் தவசியர்கள், தம் பிறப்பினை நீக்கி விடும்படியான பெருமை பெற்றவர்களாவர்.

**367. கரந்தும் கரந்திலன் கண்ணுக்குத் தோன்றான்**
**பரந்த சடையன் பசும்பொன் நிறத்தான்**
**அருந்தவர்க் கல்லால் அணுகலும் ஆகான்**
**விரைந்து தொழப்படும் வெண்மதி யானே.** *(1628)*

பரம் பொருளாம் சிவபிரான் வாக்கு மனங்களுக்கு எட்டாமல், நம் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்திருப்பினும் பற்றற்ற மெய்யடியார்களுக்குத் தோன்றுபவன். எனவே கரந்திலன். ஆனால் ஊனக் கண்களுக்குத் தோன்றான். அவன் எண்திசையும் பரந்த சடை முடியைக் கொண்டவன். பசும் பொன்னினை ஒத்த நிறத்தை உடையவன். அவனைக் கடுமையான தவமுயற்சியுடையவர்கள் மட்டுமே அணுக முடியும். பிறரால் முடியாது. ஆன்மாக்கள் உய்தி யடையும் பொருட்டு, நம் வாழ்நாள் மிகக் குறுகிய தாதலினால் விரைந்து தொழப்பட வேண்டியவன், அவ்வெண் மதியைச் சூடிய சிவனே என்க.

**368. சாத்திரம் ஓதும் சதுர்களை விட்டுநீர்**
**மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்**
**பார்த்தவப் பார்வை பசுமரத் தாணிபோல்**
**ஆர்த்த பிறவி அகலவிட் டோடுமே.** *(1631)*

பற்பல சாத்திரங்களை ஓதுகின்ற பெருமைகளை அடியோடு கைவிட்டு நீர் (இமை) மாத்திரைப் போதாயினும், வெளிப் பார்வையை மறித்து உள்முகமாக இறைவனை நோக்குவீர்களாக. அப்படிப் பார்க்கும் உள்முகப் பார்வை பசுமரத்தாணியைப் போல உள்ளத்திலே பதிந்து நிற்கவே, நம்மைப் பந்தித்து நிற்கும், பிறவிப் பிணியை அது அகல விட்டு ஓட்டி விடும்.

தி—11

369. தவம் வேண்டும் ஞானம் தலைப்பட வேண்டில்
தவம் வேண்டா ஞானம் சமாதி கைகூடில்
தவம் வேண்டா அச்சக சன்மார்க்கத் தோர்க்குத்
தவம் வேண்டா மாற்றம் தனையறி யாரே. (1632)

சரியை கிரியை, யோகம், ஞானம் எனும் நான்களுள் ஞானம் நாம் அடைய வேண்டியதானால், அதற்குத் தவநெறி நிச்சயமாகத் தேவைப்படுவதாகும். ஆனால் ஞானமும் சமாதியும் ஒருங்கே கைவரப் பெற்வர்க்குத் தவம் வேண்டா. அந்த யோக ஞானமாம் அச்சக மார்க்க சன் மார்க்கத்தார்க்குத் தவம் தேவையற்றதாம். மற்று இந்தப் பொருள் மொழிகளை நன்குணராத மாந்தர்களுக்கும், தவநெறி தேவையற்றது. ஏனெனில் அவர்கள் தவநெறியின் உயர்வும் நன்மையும் உணரமாட்டா ராகையின் என்க.

## தவநிந்தை

370. ஓதலும் வேண்டா உயிர்க்குயிர் உள்ளுற்றால்
காதலும் வேண்டா மெய்க்காய மிடங்கண்டால்
சாதலும் வேண்டா சமாதி கைகூடினால்
போதலும் வேண்டா புலன்வழி போகார்க்கே. (1633)

ஆன்மாவின் உள்ளே பிரகாசிக்கும், உயிருக்குயிராம் சிவம் உள்ளே நிலை பெற்று விட்டால், மேற்கொண்டு எவ்வித வேத ஆகமங்களும் ஓத வேண்டியதில்லை. (கற்பனவும் இனி அமையும்) இந்த மெய்யாகிய உடலைத் தன் இருப்பிடமாகக் கொண்டு (உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்) விட்டால், அதன் பின்னர், பத்தி செய்தொழுகும் காதல் நிலை கை கூடிவிட்டால், கருவி கரணங்கள் சாதல் தன்மை எய்த வேண்டா. தம் பொறிகள் புலன் வழிச் செல்லாதவர்கள் தம் வீட்டை விட்டு காட்டுக்குத் தவமியற்றச் செல்லத் தேவையுமில்லை.

371. விளைவறிவார் பண்டை மெய்த்தவம் செய்வார்
விளைவறிவார் பண்டை மெய்யுரை செய்வார்
விளைவறிவார் பண்டை மெய்யறம் செய்வார்
விளைவறிவார் விண்ணின் மண்ணின் மிக்காரே.
(1635)

இவ்வுடலின் பயனாகிய வினைவினை, அதாவது சிவஞானம் பெற்றுச் சிவன் சிவமாதலை அறிபவர்கள் யாரெனில், உண்மையான தவ நெறி நின்று தவமியற்றும் தவசியர்களும், மெய்யுணர்வெய்தி அதன் பயனாக மெய்ப்பொருள் உண்மையினைப் பிறர்க்கு உணர்த்துபவர்களும் தன் முனைப்பற்று, உண்மையான அறஞ் செய்பவர்களுமே ஆவார்கள். இவ்வுண்மையினை உணர்ந்தவர்கள் மண்ணிலும் விண்ணிலும் மிக்குயர்ந்து வாழ்வார்கள்.

**372. கூடித் தவம் செய்து கண்டேன் குரைகழல்**
**தேடித் தவம் செய்து கண்டேன் சிவகதி**
**வாடித் தவம் செய்வ தேதவம் இவைகளைந்(து)**
**ஊடில் பலஉல கோர் ஒத்தவரே. (1636)**

சத்திநிபாதம் கூடிய வதனால் திருவருளுடன் கூடித்தவ மியற்றி இறைவனின் ஒலிக்கும் கழல் அணிந்த பாதங்களைக் கண்டு கொண்டேன். அத் தவநெறியே ஒழுகித் தேடித் தவம் செய்த அதனால், சிவகதியை அடைந்தேன். தவம் என்பது தான் யாதெனில் உடல்வாட பொறிபுலன்கள் வாட்டமுற மனமடக்கிச் செய்வதே தவம் ஆகும். மாறாக (புலன்களை வெல்லாமல்) இவ்வாறு தவம் செய்யாமல், ஊடி நின்றால் அவர்கள் தவ வேடம் ஏற்றிருப்பினும் உலகில்வாழ் பலரை ஒத்தவர்களே யாவர்.

**373. மனத்திடை நின்ற மதிவாள் உருவி**
**இனத்திடை நீக்கி இரண்டற ஈர்த்துப்**
**புனத்திடை அஞ்சும் போகாமல் மறித்தால்**
**தவத்திடை யாறொளி தன்னொளியாமே. (1630)**

மனத்திடையே உள்ள அறிவாகிய வாளை உருவிக் கையிலேந்திக் காமம் முதலிய அறுவகைப் பகைவர்களையும் ஒழித்து விலக்கித் தான், நான் என்னும் இரண்டென்னும் (சீவன், சிவன்) எனும் பாவனை ஒழித்து, சிவோகம் பாவனையை ஏற்றுப் புலன்களின் வழியே ஐம்பொறிகளும் செல்லாமல் தடுத்து விட்டால், தவத்திடையே தோன்றும் ஒளிதான் தன்னொளியாகிச் சிவ ஒளியாகி விடும்.

**374. ஒத்து மிகவும் நின்றானை உரைப்பது**
**பத்தி கொடுக்கும் பணிந்தடியார் தொழ**
**முத்தி கொடுக்கும் முனிவன் எனும் பதம்**
**சத்தான செய்வதுதான் தவம் தானே. *(1639)***

சிவன், சீவனோடு இரண்டறக கலந்து; ஒத்து நின்றும், சீவனிலும் மேலாக ஓங்கி நின்றும் இருப்பவன். அவனைத் திருவைந்தெழுத்தால் ஓதித் துதிப்பதும், பத்தியை அடியவர்கள் மாட்டு உண்டாக்குவதும், முத்தியைத் தருகின்ற நன்மை தீமைகளாம் இருமைகளை முனிந்த முனிவன் எனும் நிலையினைத் தருவதும், சத்தாம் மெய்யறிவினைச் செய்கின்றதும், தவநிலை ஒன்றேயாகும்.

**375. படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்கு**
**இடர் அடை யாவண்ணம் ஈசன் அருளும்**
**இடர் அடை செய்தவர் மெய்த்தவ நோக்கில்**
**உடர் அடை செய்வது ஒருமனத் தாமே. *(1641)***

படர்ந்த சடையினை உடைய, மாதவமே வடிவான பரம் பொருளாம் சிவனைத், தம் உள்ளத்தில், அருளுடைமை இனியவை கூறல், அடக்கமுடைமை, தவம் உடைமை, அழுக்காறின்மை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, வாய்மை, நிலையாமை உணர்தல், மெய்யுணர்தல், துறவுடைமை என்றும் பதின்மூன்று துறவற அறங்களைக் கொண்ட பக்தர்களுக்கு, இடர் அடையாதபடி ஈசன் அருள் செய்வான். எனவே உண்மைத் தவநிலையுற்றவர் துன்பத்தை இன்பமாகக் கருதுவார். இவ்வண்ணமாக மெய்யான தவத்தினர் பார்வையிலே இவ்வுடலை மறுபிறப்பிலிருந்து மாற்றவல்லது ஒருமைப்பட்ட மனம் என்பதே ஆகும். (உடல் - உடர். ரகரப் போலி)

**376. ஆற்றின் கிடந்த முதலைகண் டஞ்சிப் போய்**
**ஈற்றுக் கரடிக்கு எதிர்ப்பட்ட வாறொக்கும்**
**நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்**
**சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே. *(1642)***

பொய்த்தவ வேடம் பூண்டவர்கள் தவநெறி நில்லாமல் அவநெறியே சென்று, இறைவனை நோக்கித், திட சித்தத்தோடு நின்று, தவம் செய்யாமலும், வேதாகம நூல்களைப் பயிலாமலும், உலகர் இடையிலே தவசிகளைப் போல் திரிந்து, தம் பசியாற வேண்டிச் சோற்றுக்காக மனைதோறும் நின்று அலைந்து திரிவார்கள். இவர்கள் ஆற்றிலே நீந்தித் திரியும் முதலையைக் கண்டு பயந்து நடுங்கிக் காட்டுக்கு ஓடிப் போய்க் குட்டிகளை ஈன்றெடுத்த, கரடியிடம் அகப்பட்டுக் கொண்டவர்களைப் போன்றவர்கள் ஆவார்கள்.

**377. பழுக்கின்ற வாறும் பழம்உண்ணு மாறும்**
**குழக்கன்று துள்ளியக் கோணியைப் புல்கால்**
**குழக்கன்று கொட்டிலிற் கட்டவல் லார்க்குள்**
**இழுக்காது நெஞ்சத் திடல் ஒன்று மாமே. *(1643)***

செய்தவத்திலே முதிர்ந்து பழுக்கின்ற வகையிலும், அல்லாமல், அந்தத் தவத்தின் பயனைத் துய்க்கின்ற விதமும் இன்றித் துள்ளிக்குதிக்கும் இளங்கன்றாம் தீயமனம் இக்கோணியான உடலைப்பல்கால் அலைக் கழிக்கும் விதத்தினை உணர்ந்து, குழக் கன்றாம் மனத்தினை, அக்கொட்டிலாகிய கட்டுமிடமாகிய, புருவமத்தியில் நிலைக்கச் செய்ய வல்லவர்க்கு உள்ளத்தில் தவறு - குற்றம் உண்டாகாது. நெஞ்சத்திலே திடம் - வலிமை - ஒன்றி நிற்கும்.

**378. சித்தம் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்**
**சித்தம் சிவாநந்தம் சேர்தலால் உறவுண்டால்**
**சித்தம் சிவமாக வேசித்தி முத்தியாம்**
**சித்தம் சிவமாதல் செய்தவப் பேறே. *(1644)***

சித்தம் சிவமயமாகி விட்டால் வேறு செய்யத்தக்க தவமும் வேண்டியதில்லை. சிவாநந்தம் சித்தத் திடத்திலே சென்றடைதலால் சிவனடியார் உறவுண்டாகும். சித்தம் முழுதும் சிவமாகி விட்டால், சித்தி உண்டாகும், வீடு பேறும் எய்தும். இங்ஙனமாகச் சித்தம் சிவமாதலே செய்கின்ற நல்ல தவத்தின் பேறு - பலன் ஆகும்.

## அருளுடைமையில் ஞானம் வருதல்

379. புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்
நண்ணும் பொழுதறி வார்சில ஞானிகள்
எண்ணி இரண்டையும் வேறறுத் தப்புறத்து
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்து கொள் வீரே. (1647)

இவ்வுலகத்தில் புண்ணியம் என்றும் பாவம் என்றும் இரண்டு உண்டு. சில ஞானிகள் இவ்விரண்டின் தராதரங்களை, உலகை நண்ணும் காலத்திலே நன்கறிவர். எனவே நீர் நன்காராய்ந்து பிறப்புக்கு வித்தாம் இரண்டையும் நும்மிடம் அண்டாமல், வேரறுத்து, அதன் பிறகு அண்ணலாம் சிவ பிரானின் இருப்பிடம் எது என்பதை ஆராய்ந்து அறிந்து கொள்வீராக.

380. சிவனரு ளால்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற் சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால் வினை சேர கிலாமை
சிவனருள் கூடில் அச்சிவலோக மாமே. (1649)

மாந்தர்களுள் சிலர் தத்தம் பக்குவ நிலைக்கேற்ப சிவனருளால் தேவர்களாகி அந்த இன்பம் துய்ப்பர். மற்றும் சிலர் இந்த உலகிலேயே தேவரோடு ஒப்ப வைத்து எண்ணப் படுவர். அச்சிவன் அருள் பெற்ற வேறு சிலருக்கு இருவினைகளும் சேர்தலில்லை. அவர்களே இருவினை ஒப்பு அடைந்தவர்களாவர். மற்று இருவினை ஒப்பு மலபரிபாகம் அடைந்தவர்களாகிய சிலர், அச்சிவலோக மாகிய சிவ சாயுச்சிய நிலை எய்திவிடுவர்.

381. புண்ணியன் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவ ராவதும் வானவ ராவதும்
அண்ணல் இறைவன் அருள் பெற்ற போதே. (1650)

இறைவனாம் சிவபிரான் புண்ணிய வடிவினன். எந்தையான அவன் வாலறிவன். அதாவது இயல்பாகவே தூயவன். அவனது இணையடிகளைத் தியானித்து, பத்தியால்

சார்ந்து அறிவு விளக்கத்திற்கு வேண்டி நிற்க, அவனருளால் ஞானம் உள்ளத்தின் கண் விளைந்தது. அவன் அருளால் ஞானம் விளைந்த தொப்பவே, இவ்வுலகில் மண்ணுலகத்தவராகப் பிறப்பதும், வானவராகத் தேவப் பிறவி எய்துவதும் அவ்வண்ணலாம் சிவ பிரானின் அருள் பெற்ற அப்போதே நிறைவேறும்.

**382. காயத் தேரேறி மனப்பாகன் கைகூட்ட**
**மாயத் தேரேறி மயங்கும் அவை யுணர்**
**நேயத் தேரேறி நிமலன் அருள் பெற்றால்**
**ஆயத் தேரேறி அவன் இவன் ஆமே. (1651)**

ஆன்மாக்கள் இந்த உடம்பாகிய தேரின் மேல் ஏறி மனம் என்னும் தேரோட்டி இந்த உடலோடு மனத்தையும் சேர்த்து ஓட்டிச் செல்லுகின்றன. இந்த உலக வாழ்க்கையாம் மாயத் தேரின் மேல் ஏறிச் சவாரி செய்து, மயங்குகின்ற உயிர் இனங்களைக் கண்டுணரும் தன்மை வாய்ந்தது ஆன்மா. இந்த ஆன்மாதான் சிவபிரான் பால், அன்பு எனும் பக்தியாம் தேரேறி இயல்பாகவே மலம் சிறிதும் தன்னிடமற்ற, நிமலனது அருளைப் பெற்றுவிட்டால், ஆயமாம் சிவனடியார் கூட்டத்தைச் சார்ந்துவிடும். பின் சீவனே சிவமாகி விடும் என்க.

**383. நாடும் உறவும் கலந்தெங்கள் நந்தியை**
**தேடுவன் தேடிச் சிவபெருமான் என்று**
**கூடுவன் கூடிக் குரைகழற்கே செல்ல**
**விடு மனவும் விடுகின்றி லேனே. (1654)**

நாடுகின்ற தியானத்தையும், உறவு கொள்ளும் பத்தியையும், கலந்து என் உள்ளத்தினால் நந்தி எம்பெருமானாம் சிவனைத் தேடுவன். தேடித்தேடி அவனைக் கண்டு சிவபெருமான் என்று கூவிய வண்ணம் அவனைச் சென்று கூடுவன். கூடியபின் அவனது ஒலிக்கின்ற கழல் அணிந்த சேவடிகளாம் அருள் சத்தியிலே இணையவேண்டி, உயிர்போமளவும் அத்திருவடிகளை விடவே மாட்டேன்.

## அவவேடம்

**384. ஞானம் இல்லார் வேடம் பூண்டிந்த நாட்டிடை**
**ஈனம் அதே செய்து இரந்துண்டு இருப்பினும்**
**மானநலம் கெடும் அப்புவி யாதலால்**
**ஈனவர் வேடம் கழிப்பித்தல் இன்பமே. (1656)**

திருவருள் ஞானமாம் சிவஞானத்தினை சற்றும் தம்மிடம் பூணாராய் தவவேடம் பூண்டு, இந்த நாட்டிடை உலாவி ஈனமானச் செயல்களைச் செய்து இரந்துண்டு பிழைத்திருந்தால், இந்த நாடுதான் மானமும் கெட்டு, நலமுங்கெட்டு சீரழிந்து கெடும். எனவே ஈனமிக்கவர், தவவேடம் பூண்டு நாட்டைச் சீரழித்தலைத் தவிர்த்தலே நலம். அதுவே இன்பமுமாகும்.

**385. இன்பமும் துன்பமும் நாட்டா ரிடத்துள**
**நன்செயல் புன்செயலால் அந்தநாட் டிற்காம்**
**என்ப இறைநாடி நாடொறும் நாட்டினில்**
**மன்பதை செப்பம் செயின் வையம் வாழுமே. (1657)**

மக்கள் செய்கின்ற நன்செயலால் இன்பமும் புன்செயலால் துன்பமும் நாட்டின் வாழும் மக்களுக்கு அமைந்துள்ளன. எனவே நற்செயல் ஆம் இன்பமும் புன்செயலால் ஆம் துன்பமும் இந்த நாட்டிற்கே ஆம் என்று உலகோர் கூறுவர். ஆகையினால், நாட்டை ஆளும் அரசன், மக்களின் நன்செயல் புன்செயல்களைச் சீர்தூக்கிப் பார்த்து உண்மைத் தவத்தார்களையும், பொய்த் தவத்தார்களையும் ஆய்ந்தறிந்து, பொய்த் தவசிகளை நாட்டினின்றும் அகற்றி, சமுதாயத்தைச் செப்பம் செய்தால், உலகம் இன்புற்று நன்கு வாழும்.

**386. பொய்த்தவம் செய்வார் புகுவர் நரகத்துப்**
**பொய்த்தவம் செய்தவர் புண்ணியர் ஆகாரேல்**
**பொய்த்தவம் மெய்த்தவம் போகத்துள் போக்கியம்**
**சத்திய ஞானத்தால் தங்கும் தவங்களே. (1659)**

உண்மையான துறவியாகாமல் தவவேடம் பூண்டு உலக மக்களிடை ஏமாற்றிப் பிழைக்கும் எத்தர்களே பொய்த்தவம்

செய்பவர்கள். அவர்கள் நரகத்திற்குத்தான் செல்வார்கள். அதோடு அவர்கள் எக்காலத்தும் புண்ணியராக இயலாது. பொய்த்தவம் பூண்டவர்களும் அத்தவ வேடத்தின் பயனால் தாம் அடையும் பலனையும் சீர்த்திகளையும் கண்டு தம்மனம் மாறி மெய்த் தவசிகளானால், போகமும் போக்கியமும் கிட்டும். அவர்களே சத்தியமான உண்மையான சிவஞானத்தினைக் கைக்கொள்வாரானால் அவர்களிடம் தவம் நிலைப் பெற்று நிற்கும்.

**387. ஞானமிலார் வேடம் பூண்டும் நரகத்தர்**
**ஞானம் உள்ளார் வேடம் இன்றெனில் நன்முத்தர்**
**ஞானம் உளதாக வேண்டுவோர் நக்கன் பால்**
**ஞானம் உளவேடம் நண்ணி நிற்பாரே. *(1668)***

திருவருள் ஞானம் சிறிதும் அமையப் பெறாதவர் தவவேடம் பூண்டிருந்தாலும் நரகத்தவர்களே. மாறாகத் திருவருள் ஞானம் உடையவர்கள் தவவேடம் பூணாமலிருப்பினும் நல்ல முத்திக்குரியவர்களே. தம்மிடம் ஞானம் எக்காலும் நிலை பெற்று அமைய வேண்டும் என விரும்பி நிற்போர் சிவபிரானிடத்திலே, எக்காலத்தும் உண்மை ஞான மயமாகி திருவைந்தெழுத்து ஓதுகின்ற உள்ளத் துறவான வேடத்தையே வேண்டி நிற்பார்கள்.

**388. புன்ஞானத் தோர் வேடம் பூண்டும் பயனில்லை**
**நன்ஞானத் தோர் வேடம் பூணார் அருள் நண்ணித்**
**துன் ஞானத் தோர்சமயத் துரிசுள் ளோர்**
**பின் ஞானத் தோர் ஒன்றும் பேசகில்லாரே. *(1669)***

அற்பமான சிற்றறிவுடையவர்கள் பொய்ச் சிவவேடம் பூண்டும் பயனில்லை. நல்ல திருவருள் ஞானம் வாய்க்கப்பெற்ற சிவஞானிகள் சிவனருள் தம்பால் அடைதற்காகவே சிவஞானிகள் வேடம் பூண்பார்கள். துன்மார்க்கிகளாம் பொய்ஞ் ஞானம் உடையவர்கள், சமயங்களில் அமைந்துள்ள குற்றங்களைத் தம்மிடம் அமையப் பெற்றவர்களாம். பின்னிய ஞானமாம், ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் சுத்தாத்துவித நிலையாம் சிவஞானிகள் ஏதும் பேசா மௌனநிலையிலே, நிற்பார்கள்.

389. சிவஞானி கட்கும் சிவயோகி கட்கும்
அவமான சாதனம் ஆகாது தேரில்
அவமா மலர்ந்தது சாதன நான்கும்
உவமான மில்பொருள் உள்ளுறவாமே. (1670)

ஆராய்ந்து பார்க்குமிடத்து, சிவஞானிகளுக்கும் சிவ யோகியர்களுக்கும் அவமான சாதகம் ஆகாதாம். அவர்களுக்குப் பொருந்திய சாதனம் நான்குதான். அந்த நான்கு சாதனங்களைக் கடைப் பிடித்துத் தனக்கு நிகரில்லாத பொருளான சிவபரம் பொருளைத் தேரில் அதுதான் சிவஞான சிவயோகியர்களின் உள் உறவாகும்.

390. ஞானத்தினால் பத நண்ணும் சிவஞானி
தானத்தில் வைத்த தனியா லயத்தனாம்
மோனத்தன் ஆதலின் முத்தனாம் சித்தனாம்
ஏனைத்தவசி இவனென லாகுமே. (1674)

சிவஞானத்தினால் தான், சிவஞானி சிவபதம் எய்துவான். தன்னுடைய ஸ்தானமாம் உள்ளத்தின் உள்ளே சிவத்தை வைத்துள்ள ஒப்பற்ற ஆலயம் போன்றவன் அவன். மோன நிலைக் கண்ணே அச்சிவஞானி நிலைபெற்றிருப்பதால், அவனே முத்தி எய்தும் தன்மையன். அவனே அனைத்தும் கைவரப்பெற்றவன். பிற தவசிகள் பொய் வேடத்தை உடையவர்கள். அப்பொய்த் தவசியர்களைச் சிவன் எனக் கூறத் தகுமோ? சிவன் ஆகார் என்பதாம்.

(ஆகுமே என்பது ஆகுமோ என்னும் வினாப்பொருள் கொண்டது)

391. தானற்ற தன்மையும் தானவன் ஆதலும்
ஏனைய அச்சிவ மான இயற்கையும்
தானுறு சாதக முத்திரைச் சாத்தலும்
ஏனமு நந்தி பதமுத்தி பெற்றதே. (1675)

நான் எனது என்னும் பற்றின் நீங்கிய தன்மையும், சிவனே சிவன் ஆதலாம் தன்மையும், (அவனேதானே ஆகிய அந்நெறி) தன்னையல்லாத பிற யாவுமே அச்சிவ சொரூபமே ஆன

இயற்கையும், தான் ஏற்றுக் கொண்ட (சாதகமும் முத்திரையும்) தவவேடமும், பழக்கமும், ஏனமாம் பிச்சை ஏற்கும் பாத்திரமும், நந்தியாம் சிவனருள் பெற்றவர்களின் அடையாளங்களும்.

## சிவவேடம்

392. அருளால் அரனுக்கு அடிமைய தாகிப்
பொருளாம் தனதுடல் பொற்பதி நாடி
இருளான தின்றி இருஞ்செய லற்றோர்
தெருளாம் அடிமைச் சிவவேடத் தாரே. (1676)

திருவருளின் வல்லமையால் தன் ஆன்மா அரனுக்கு அடிமைத் தொண்டாகிவிட, அந்த அரன் உடைமையாம் தனது உடலை இறைவன் கோயில் கொண்டுள்ள அழகிய ஆலயமாகக் கருதித், தன் உள்ளத்திடத்தே மும்மல இருள் சிறிதுமின்றி கடிய, இருவினைகளின் செயற்பாடுகளிலிருந்து விடுவித்துக் கொண்டவர்கள், தெளிவான சிவனடியவ ராவார்கள். இப்படிப்பட்டவர்களே சிவவேடம் பூணத் தக்கவர்கள்.

393. உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா
உடல் கழன்றால் வேடம் உடனே கழலும்
உடலுயிர் உண்மை யென்றோர்ந்து கொள்ளாதார்
கடலில் அகப்பட்ட கட்டை ஒத்தாரே. (1677)

உடலுக்கென போடப்பட்ட வேடமாம் பொய்ச்சிவ வேடம் உயிருக்குச் சென்று பொருந்தாது. உடல் இந்த ஆன்மாவிலிருந்து கழன்று விட்டால் உடனே வேடமும் அத்துடனே கழன்று போய்விடும். இந்த உடல் உள்ளே குடிகொண்டுள்ள உயிர்தான் உண்மைப் பொருளான ஆன்மா எனச் சிந்தித்து உணரமாட்டாதார் கடல் அலையிலே அகப்பட்டு அலைப்புண்ட கட்டையைப் போன்றவர்களே ஆவர்.

394. மயலற்று இருளற்று மாமன மற்று
கயலுற்ற கண்ணியர் கையிணைக் கற்று
தயலற்ற அவரோடும் தாமே தாமாகிச்
செயலற் றிருந்தார் சிவ வேடத்தாரே. (1678)

நிலையற்ற பொய்ப் பொருள்களை உண்மைப் பொருள் எனக் கருதும் மருளாகிய மயக்கம் அற்று, அதன் காரணமாகி விளங்கும் ஆணவ மலமாம் இருளற்று, அதன் வசமாகிச் செயல்படும் கரிய மனத்தின் செயற்பாடுகளிலிருந்து விலகி, கயல்போன்ற கண்ணியர்களின் கூட்டுறவு இல்லாமல் விலகி, தம்மை ஒத்த, தையலாம் பெண்ணாசையற்றவர்கள் கூட்டுறவில் பொருந்தி, அவரே, தாமாகி தன் முனைப்பற்றுச் செயலற்று இருப்பவர்களே உண்மையான சிவவேடத்தார் ஆவர். மா = இருள்: தயல் = தையல்.

**395. ஓடும் குதிரைக்குசை திண்ணம் பற்றுமின்**
**வேடங்கொண் டென் செய்வீர் வேண்டாமனிதரே**
**நாடுமின் நந்தியை நம்பெருமான் தன்னை**
**தேடுமின் பப்பொருள் சென்றெய்த லாமே. (1679)**

நம் உடலிலிருந்து வெளியே ஓடுகின்ற பிரான வாயுவாம் குதிரையினது இயக்கத்தைப் பிராணாயாமமாம் கடிவாளத்தினால் திண்ணமாக, உறுதியாகப் பற்றி - உயிர்ப் படக்கித் தியானம் செய்யுங்கள். இது இல்லாமல் வேடம் மட்டும் பூண்டு என்ன செய்ய வல்லீர்? மனிதர்களே இது வேண்டா. நந்தியை - நம் பெருமானான சிவபெருமானை நாடுங்கள். அப்படி நாடினால் நாம் தேடுகின்ற பேரின்பப் பொருளான சிவ சாயுச்சியத்தைச் சென்றடையலாம்.

(குசை - கடிவாளம்)

## அபக்குவன்

**396. குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்**
**குருட்டினை நீக்காக் குருவினை கொள்வார்**
**குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்**
**குருடும் குருடும் குழிவிழு மாறே. (1680)**

தன் ஆன்மாவிடத்தே பதிந்துள்ள அஞ்ஞானக் குருட்டினை அகற்றும் ஞான குருவினைத் தேடிக் கண்டு, ஏற்றுக் கொள்ளார்கள் அபக்குவார்கள். மாறாகத் தம் குருட்டுத் தன்மையைச் சிறிதும் மாற்ற இயலாத, பொய்க் குருவினையே தம் குருவாக ஏற்றுக் கொள்வார்கள். குருடும் குருடும்

சேர்ந்தால் இருவருமாகக் குழியில் விழுவது போல, அஞ்ஞானத்தை அகற்ற இயலாத குருவைக் கொண்டவனும் அவன் குருவும் பிறவிக் குழியில் விழவேண்டியவர்களே ஆவர்.

**397.** ***வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து***
***நீயொன்று செய்யல் உறுதி நெடுந்தகாய்***
***நீயென் றுன்னைத் தெளிவன் தெளிந்தபின்***
***பேயென்றிங்கு என்னைப் பிறர்தெளி யாரே. (1683)***

*மிக்குயர்ந்து உறுதி வாய்ந்த தகைமை மிக்க ஆன்மாவே! நீ குடிகொண்டுள்ள உடலின் வாய் ஒன்று சொல்லி முணுமுணுக்க, மனம் வேறொன்றைப் பற்றிச் சிந்திக்க, நீ உன் உடலது கையைக் கொண்டு பிறிதோர் செயலைச் செய்யற்க! இறைவனே! நான் உன்னைத் தீவண்ணன் என்று கருத்துட் கொண்டேன். அதனால் தெளிவு பெற்றேன். அத்தெளிவடைந்த பின்னர் இந்த உலகில் உள்ளவர்கள் என்னைப் பேய் போன்றவன். சிவப்பித்தன் எனக் கூறி, என்னைத் தெளிந்துணர மாட்டார்கள்.*

**398.** ***தவத்திடை நின்றவர் தாம் உண்ணும் கன்மம்***
***சிவத்திடை நின்றது தேவர் அறியார்***
***தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்***
***பவத்திடை நின்றதோர் பாடது வாமே. (1685)***

*தவத்தினை மேற்கொண்டு அதிலே நிற்பவர்கள், தம் கரும பலன்களை இப்பிறப்பிலேயே அனுபவித்துத் தீர்த்து விடுவர். தவத்தினை மேற்கொண்டு சிவத்திடை அனுபவிக்கும் இன்ப நிலையைத் தேவராகப் பிறந்தவர்களும் அறிதற்கியலாது. ஏனெனில் இது தேவர்களறியாத சிவானந்த நிலையாகும். இந்த மேலான தவத்திடையே நின்று அதன் அனுபவ நிலையை- அநுபூதி நிலையை அறியாதவர்கள் யாவரும், பாவத்திடையே பிறந்து இறந்து உழலும் துன்பத்திலே உழல்வர்.*

**399.** ***கன்றலும் கருதலும் கருமம் செய்தலும்***
***தின்றலும் சுவைத்தலும் தீமை செய்தலும்***
***பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்***
***என்றிவை இறைவன்பால் இயற்கை யல்லவே. (1686)***

நற்றவத்தால் சிவத்தைத் தம் சிந்தையிலே எக்காலும் கொண்டுள்ளவர்கள், கோபித்தலும், பல்வேறு வகைப்பட்ட சிந்தனைகளை மேற்கொள்ளுதலும், பல கருமங்களைச் செய்தலும், உணவிலே இச்சைக் கொண்டு தின்றலும், வாழ்க்கையைச் சுவைத்து அனுபவித்தலும் பிறருக்குத் தீமைகளைச் செய்தலும், தாழ்ச்சியடைதலும் மேன்மை யடைதலும் பிறரிடம் தம் பெருமையைக் கூறி பெருமிதம் கொள்ளலும், தம்மிடம் அமையப்பெறார். ஏனெனில் இவை அனைத்துமே இறைவனாம் சிவபிரானிடத்து இயற்கையாக பொருந்தாத குணமாகலின் என்க.

**400. விடிவ தறியார் வெளிகாண மாட்டார்**
**வெடியில் வெளியில் விழிக்கவு மாட்டார்**
**கடியதோர் உள்ளிமை கட்டுமின் காண்மின்**
**விடியாமை காக்கும் விளக்கது வாமே. (1687)**

அஞ்ஞான இருள் விலகி விடியும் காலமாம், சித்தத்தைச் சிவன் பாலே வைத்து விடியும் காலத்தினை அறியார்கள். அறிவின் வெளியாம் விடியலிலே, அகண்டமான ஞானத்தினைக் காண மாட்டார். அச்சமில்லாப் பரமா காசத்திலே விழித்துத் தன் பார்வையைச் செலுத்தவும் மாட்டார். கடியத் தக்க உள்ளத்தினை ஓர் இமைப் பொழுதேனும் கட்டுமின்கள். அப்படி உள்ளத்தினைக் கட்டுப்படுத்தி மேற் சொன்னவற்றைக் காணுங்கள். விடியாமையாம் அஞ்ஞான இருளினின்று காக்கின்ற விளக்கு இதுவே ஆகும். (வெடி = அச்சம்)

**401. வைத்த பசுபாசம் மாற்றும் நெறிவைகி**
**பெத்த மறமுத்தனாகி பிறழ்வுற்றுத்**
**தத்துவ, முன்னித் தலைப் படாது அவ்வாறு**
**பித்தன் சிடனுக் கீயப் பெறாதானே. (1688)**

அனாதி காலம் தொட்டு ஆணவமலம் மிக்க ஆன்மாவையும் பாசத்தையும் இணைத்து வைத்த, பசுஞானத் தன்மையினை மாற்றும் நெறியாம், சிவஞான நெறியிலே நின்று, பந்தம் நீங்க முயன்று முத்தனாகி, தம் இயல்பான வாழ்க்கையிலே இருந்து மாறுதலுற்றுத் தத்துவத்தைச்

சிந்தித்து ஒழுகாமல், இவைகட்கு மாறான நிலையிலே ஒழுகுகின்ற பித்தானவனுக்குச் சிவஞானம் உபதேசிக்கப் பெறாதாகும்.

**402. மன்னும் மலம் ஐந்தும் மாற்றும் வகை ஓரான்**
**துன்னிய காமாதி தோயும் தொழில் நீங்கான்**
**பின்னிய பொய்யன் பிறப்பிறப்பு அஞ்சாதான்**
**அன்னியன் ஆவன் அசற் சீடனாமே. (1689)**

அனாதியே ஆன்மாவின் கண் நிலைபெற்றுள்ள ஆணவம், கன்மம் மாயை, மாயேயம், திரோதாயி, எனும் மலம் ஐந்தையும் தன்னிடமிருந்து மாற்றி ஒழிக்கும் வழிவகைகளைச் சிந்திக்க மாட்டான். தன்னிடம் பொருந்தியுள்ள, காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் எனும் ஆறுவகைக் குற்றங்களில் இருந்து விடுபட மாட்டான். பற்பல பொய்களால் பின்னப்பட்டு, அதிலேயே, பொய் வாழ்க்கை வாழ்வான். இறந்து பிறந்து, பின் இறந்து பிறக்கும் பிறவிப் பெருங்கடற்கு அஞ்சாதவனான இவன் மக்களிடத்தே அன்னியன். இவனே அசற் சீடன்.

## பக்குவன்

**403. தொழில் அறிவாளர் சுருதி கண்ணாகப்**
**பழுதறி யாத பரம குருவை**
**வழியறி வார்நல் வழியறி வாளர்**
**அழிவறி வார்மற்றை யல்லாதவரே. (1690)**

செய்யவேண்டிய சிவத் தொண்டாம் தொழில், சரியை கிரியை யோகம், ஞானம் என்பதை நன்குணர்ந்தவர்கள் வேதாகமங்களையே கண்ணாகக் கொண்டு குற்றம் என்பதே ஒரு சிறிதும் அற்ற மேலான குருவைக் கண்டு வழிபாடு செய்யும் தன்மையை நன்கறிந்தவர்களாவர். இவரே பக்குவர். இந்த வழியினை நன்குணராதவர் தம் ஆன்மாவுக்கு அழிவினைச் செய்யும் துன்மார்க்கத்தினர். அவர்கள் அபக்குவர். அருள் ஞான நெறியினை அறியாதவர்.

**404. பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை**
**விதைக்கின்ற வித்தினை மேல் நின்று நோக்கிச்**
**சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி**
**இசைக்கின்ற அன்பருக்கு ஈயலு மாமே. (1692)**

*பிறவித் துன்பங்களை நினைத்து, உள்ளம் பதைக்கின்ற அக்காலத்திலேயே பரம் - சிவபரம்பொருள் எனும் விதையை உள்ளத்திலே விதைத்து வைத்து, அவ் வித்தினைப் புருவ மத்தியிலே மேல் நோக்கித் தியானத்தில் நிலைத்து நின்று, உள்ளத்தைச் சினந்து, வெளி விவகாரங்களிலே ஓடும் மனத்தைச் செவ்வையாகச் சிவபரம் பொருள் மேல் நிறுத்தி, இறைவன் திருவடிமேல் சிந்தையைப் பொருந்தி வைக்கின்ற அன்பருக்கு உபதேசம் ஈயப்படும்.*

**405. கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக**
**உள்ள பொருளுடன் ஆவியுடன் ஈக**
**எள்ளத் தனையும் இடைவிடாதே நின்று**
**தெள்ளி அறியச் சிவபதம் தானே. (1693)**

*ஆன்ம உறுதிக்கென சிவ ஞானம் அடைய வேண்டில் நல்ல சிவகுருவினை ஆராய்ந்து தேர்ந்து சென்றடைக. உங்கட்கு உரிமையான பொருளையும் உங்கள் ஆன்மாவையும் அவரிடம் சமர்ப்பித்து விடுக. எள் துணையேனும் அவரை இடைவிடாமல் அவர் நிழல்போல் அவருடனே நீங்காது நின்று அவருடைய உபதேச மொழிகளை நன்கு சிந்தித்து ஆய்ந்துணர்க. அதன் பயனாய்ச் சிவனடியே சேர்தல் திண்ணம்.*

**406. சத்தும் அசத்தும் எவ்வாறெனத் தானுன்னி**
**சித்தை உருக்கிச் சிவனருள் கைக்காட்டப்**
**பத்தியின் ஞானம் பெறப்பணித் தானத்தச்**
**சத்தியில் இச்சைத் தருவோன் சற்சீடனே. (1697)**

*சத்துப் பொருளாகும் சிவமும், அசத்துப் பொருளாகிய காரிய கன்ம மாயைகளும், எவ்வாறென்றும், தான் யாரென்றும் ஆராய்ந்து நோக்கி, பாசத்தோடு கலந்த சித்துருவான ஆன்மாவை, வேறு பிரித்துச் சிவபெருமானின் திருவருள் சுட்டிக் காட்டுதலால், பக்தியோடு கூடிய சிவ ஞானம் கைவரப் பெறும். அப்படிப் பெறவே அதனால் சிவனைப் பணிந்து*

ஆனந்த சத்தியாம் திருவருள் பேரின்பத்திலே இச்சை பிறந்து சிந்தை அதிலே லயிக்கும். அத்தகையவனே நல்ல சீடனாவான்.

**407. சீராறு ஞானத்தில் இச்சை செலச் செல்ல**
**வாராத காதல் குருபரன் பாலாக**
**சாராத சாதகம் நான்கும் தன் பாலுற்றோன்**
**ஆராயும் ஞானத்த னாம்அடி வைக்கவே. (1699)**

பெருமைமிக்க சிவஞானத்தின் மீது ஆராத காதல் கொண்டவனாய் அதன் மீதே தன் உள்ளம் சென்று சென்று பற்ற, அபக்குவர்களுக்குத் தம் உள்ளத்து எழாத குருபக்தி இவன் பாலெழுந்து குருபரனிடத்துச் சென்றுப் பொருந்திட, இதுவரை எய்தப் பெறாத சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் சாதகம் நான்கும் தன்னிடம் வந்தடையப் பெற்றோன் எவனோ அவன்தான், குருவடியைத்தன் முடிமீது வைத்துத் தீட்சை பெறத்தக்க ஆராயும் ஞானத்தனாகும்.

**408. இறையடித் தாழ்ந்து ஐவணக்கமும் எய்தி**
**குறையது கூறிக் குணங்கொண்டு போற்றவும்**
**சிறையுடன் நீயறக் காட்டிச் சிவத்தொடு**
**அறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கியாமே. (1701)**

இறைவனாம் சிவபிரானின் குருஅடிகளைத் தாழ்ந்து, ஏகாங்கம், திரியாங்கம், பஞ்சாங்கம், சாஷ்டாங்கம், அஷ்டாங்கம் எனப்படும் ஐந்து வகைப்பட்ட வணக்கங்களும் செய்யவும், குறைகளைக் கூறி விண்ணப்பிக்கவும், அவன் எண் குணங்களையும் புகழ்ந்து ஏத்தவும், செய்து மாணவன் நிற்க, அவனுக்கு ஆன்மா சிறைப்பட்டுள்ள உடலைப்பற்றியும், ஆன்மாவைப் பற்றியும், தான் யென்பதற்றுப் போகக் காட்டியருளிச் சிவத்தின் தன்மைகளை எல்லாம் மாணவன் அறிவுக்குப் பொருந்த அறிவிப்போனே சன்மார்க்கக் குருவாவர்.

**409. வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்**
**வாழ்க்கைப் புலன்வழி மாற்றிச் சித்தாந்தத்து**
**வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே**
**தாழ்க்கும் தலைவினோன் சற்சீட னாமே. (1702)**

(4-12

உலக வாழ்க்கையிலே ஏற்படுகின்ற அனைத்து ஆசைகளையும், அனைத்துப் பற்றுகளையும் விட்டு விடுபட்ட நிலையே வேதாந்த மாகும். ஆதலால், புலன் வழியே மனம் செல்லாமல் அப்புன்னெறி வாழ்க்கையாம் உலகப்பற்றுடைய வாழ்க்கையை மாற்றி, அவ்வாழ்க்கையை நல்வழியிலே செலுத்துகின்ற சித்தாந்தத்திலே வேட்கை மிக்கவராய், சுத்த அத்துவித சித்தாந்தத்திலே பற்று கொண்ட வேதாந்தியாம் சற்குருவின் பாதமே தாழ்ந்து வணங்கும் தலையினை உடையவனே சற்சீடனாவான்.

**410. சற்குணம், வாய்மை தயாவிலே கந்துண்மை**
**சற்குரு பாதமே சாயைபோல் நீங்காமை**
**சிற்பர ஞானம் தெளியத் தெளிவோர்தம்**
**அற்புதமே தோன்ற லாகும் சற்சீடனே. (1703)**

பண்பமைந்த நல்ல குணம், வாய்மை, தயையிலே நீங்காத பற்று உடைமை, சற்குருவின் பாதத்தையே நிழல் போலப் பின்பற்றி நீங்காதிருத்தல், உண்மையான மேலான ஞானம், தெளிவிக்க அந்தத்தெளிவைச் சிந்தித்துக் கடைப்பிடித்தல், அருள் நிகழ்ச்சி இவைகள் அனைத்தும் பெற்றவனே சற்சீடனாம். (கந்து = பற்றுக்கோடு)

## ஏழாந்தந்திரம்

## ஆறாதாரம்

**411. நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறும்**
**கோலி மேல்நின்ற குறிகள் பதினாறும்**
**மூலங் கண்டாங்கே முடிந்து முதலிரண்டும்**
**காலங் கண்டானடி காணலு மாமே. (1704)**

நான்கு இதழ்களை உடைய (ஆசனம்) மூலாதாரமும், ஆறு இதழ்களை உடைய சுவாதிட்டானமும் (கொப்பூழ்) பத்து இதழ்களை உடைய மணிபூரகமும் (மேல்வயிறு) பன்னிரண்டு இதழ்களை உடைய ஆனகதமும் (நெஞ்சம்) இவைகளின் மேல் கோலி நின்ற பதினாறு இதழ்களை உடைய விசுத்தியும் (மிடறு) என மூலாதாரத்திலிருந்து தொடங்கி முடிவிடத்தே உள்ள இரண்டிதழ்களை உடைய ஆஞ்ஞையும் (புருவ நடுவு) என ஆறு

ஆதாரங்களாம் இந்நிலைகளை ஆய்ந்து, யோக நிலை நின்று வழிபடுவோர்களே, காலத் தத்துவத்தையும் கண்டவனாம் இறைவனடியைக் காண்பார்கள்.

**412.** ***ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தில்***
***மேதாதி நாதாந்த மீதாம் பராசக்தி***
***போதாலயத்த விகாரம் தனில் போத***
***மேதாதி யாதார மீதான உண்மையே.*** *(1705)*

பன்னிரண்டு கலைகளோடு கூடிய நாத தத்துவமாம், சூரிய மண்டிலம், பதினாறு கலைகளோடு கூடிய சந்திர மண்டிலம், (பிரிதிவி) நிலம் முதலாக நாதம் ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங்கள், இவற்றின் மேலாகிய பராசத்தி, இதற்குமேல் ஞான லயத்திலேயே அருவமாகி உள்ள சிவன் (வீற்றிருக்க) காணப்படுவான். மற்றும் நிலம் முதலிய யாவற்றுக்கும் ஆதாரமாக உள்ளவனும், நிராதாரத்துக்கு (மீதானம்) மேம்பட்ட இடமாகிய உண்மைப் பொருளும் சிவனே ஆவன்.

**413.** ***மேதாதி யாலே விடாது ஓம்எனத் தூண்டி***
***ஆதார சோதனை அத்துவா சோதனை***
***தாது ஆரமாகவே தான்எழச் சாதித்தால்***
***ஆதாரம் செய்போக மாவது காயமே.*** *(1708)*

நில முதலியவற்றாலே அதாவது பதினாறு கலைப் பிரசாதத்தாலே ஓம் ஓம் என விடாது தூண்டி மேற் கொள்ள ஆறு ஆதார சோதனைகளையும், மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை, எனும் ஆறு அத்துவாக்களின் சோதனைகளையும், முடித்து, மூலாதாரம் முதலாகக் கொண்ட குண்டலி சக்தி மேலெழப் பயிற்சி சாதித்தால், இக்காயத்திற்கு ஆதாரம் செய்கின்ற போகமாக விளைவது ஆன்ம லாபமாம் சிவநுகர்வே ஆகும். (பிரசாதம் - மந்திரங்கள்)

**414.** ***ஆறுஅந்தம் கூடி ஆகும் உடம்பினில்***
***கூறிய ஆதாரம் மற்றும் குறிக்கொண்மின்***
***ஆறிய அக்கரம் ஐம்பதின் மேலாக***
***ஊறிய ஆதாரத் தோரெழுத் தாகுமே.*** *(1709)*

ஆறு அந்தம் எனப்படும் (சொல்லும் பொருளமாய) ஆறு அத்துவாக்களும், ஒருங்கு சேர்ந்து இயங்கும் உடம்பிலே, மேலே கூறப்பட்ட ஆறு ஆதாரங்களையும் (மூலாதாரம் முதலியன) குறியாகக் கொண்டு போற்றுமின். இவைகளில் அமைந்துள்ள அக்கரம் (அட்சரம்) ஐம்பதிற்கும் மேலானதாய அமுதம் ஊறுதற்குரிய அட்சரம் ஒன்றுண்டு. அதுவே மூலாதாரத் தெழுத்தாம் 'ஓம்' என்பதாம்.

**415. ஆகும் உடம்பும் அழிகின்ற அவ்வுடல்**
**போகும் உடம்பும் பொருந்திய வாறுதான்**
**ஆகிய அக்கரம் ஐம்பது தத்துவம்**
**ஆகும் உடம்புக்கும் ஆறந்த மாமே.** *(1710)*

தோற்றத்துக் காணப்படும் பரு உடம்பும், இந்த உடல் அழிகின்ற காலத்திலே போகும் உடலாகிய சூக்கும உடம்பும், பொருந்தி இருப்பது ஐம்பது அக்கரங்களாலும், தத்துவங்களாலுமே ஆகும். இவ்வுடலுக்குப் பொருந்தியது ஆறு அத்துவாக்களே ஆகும்.

## அண்டலிங்கம்

**416. போகமும் முத்தியும் புத்தியும் சித்தியும்**
**ஆகமும் ஆறாறு தத்துவத் தப்பாலும்**
**ஏகமும் நல்கி இருக்கும் சதாசிவம்**
**ஆகம அத்துவா ஆறும் சிவமே.** *(1714)*

இல்லற வாழ்வாகிய போகமும், துறவறத்தின் பயனாகிய வீடு பேறும், அறிவு ஞானமும், பலவகைப்பட்ட சித்திகளும், இந்த உடம்பும், பிரிதிவி முதல் நாதம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களும், இவைகளுக்கெல்லாம் அப்பாலாகத் திகழ்வது ஏகவஸ்துவான அருட்கடவுளாம் சதாசிவனும், சிவாகம நூல்களிலே சொல்லப்படுகின்ற அத்துவாக்கள் ஆறும், அச்சிவபிரானே. அவனுடைய சங்கற்ப மாத்திரையால் நிகழ்வனவே இவை யாவும் என்க.

417. தாபரத் துண்ணின்று அருளவல் லான்சிவன்
மாபரத் துண்மை வழிபடுவா ரில்லை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்கும்
பூவகத் துன்நின்ற பொற்கொடி ஆகுமே. (1717)

அசரப் பொருள்களாகிய மலை, மரம் இவற்றுள் நின்றும் தன் அடியவர்க்கு அருளிச் செய்ய வல்லவன் சிவபிரானாகும். இப்படிப்பட்ட மாபரம் பொருளினது உண்மை நிலையை உணர்ந்து வழிபடும் அடியவர்கள் சிலர். ஆனால் இந்த மாபரமாகிய பரசிவத்தை நன்குணர்ந்து யோக ஞான தவத்தால் வழிபாடு செய்பவர்களுக்குக் குண்டலிமுதல் ஆறு ஆதாரங்களிலும் முடிவிலே பொருந்தியுள்ள சக்கர மலரின் முதல்வியாம் பொற்கொடி போன்ற சிவசக்தியின் அருள் உண்டாகும்.

418. அது உணர்ந்தோன் ஒரு தன்மையை நாடி
எது உணரா வகை நின்றனன் ஈசன்
புது உணர்வான புவனங்கள் எட்டும்
இது உணர்ந்தென்னுடல் கோயில் கொண்டானே. (1722)

அதுவாம் பரசிவத்தின் தன்மையினை மெய்யுணர்வினால் உணரப் பெற்றவன், சீவனும் சிவனும் ஒன்றாகும் கேவல அத்து விதத் தன்மையை கருத்துள் நாடி, எங்கெங்கு உள்ளான் இறைவன் என்று, எவ்வகையினாலும் உணராத படி நின்றவன் ஈசனாவான். புதியதாக எய்துகின்ற உணர்வாம் பரஞானத்திலே பஞ்ச பூதங்களும் கோயிலாகக் கொண்டவன் சிவனே. இத்தன்மையை உடைய அவன் என் உடலையும் கோயிலாகக் கொண்டான்.

419. அகலிட மாய் அறியாமல் அடங்கும்
உகலிட மாய் நின்ற வூனத னுள்ளே
பகலிட மாமுனம் பாவ வினாசன்
புகலிட மாய்நின்ற புண்ணியன் றானே. (1723)

எங்கும் நிறைந்து நிற்கும் பரம் பொருளாம் சிவபிரானே அகண்ட உலகமாகி, எந்த உயிரும் தம் மலப்பிணிப்பால் அறிய முடியாதாகி நிலவி நின்று, ஊழிக்காலத்து அனைத்தும்

ஒடுக்கும் ஒடுங்கியுமாகி நின்றவன். அழிதற்குக் காரணமாகியுள்ள இந்த உடம்பினுள்ளே பாவங்களை நாசம் செய்ய வல்ல சிவபிரான் தன் புகலிடமாக்கிக் கோயில் கொண்டருளிய புண்ணியவனாவான். அவனே பாவ நாசனாம் புண்ணியவான் என்பதாம்.

**420. போது புனைகழல் பூமிய தாவது**
**மாது புனைமுடி வானக மாவது**
**நீதியுள் ஈசன் உடல்விசும் பாய்நிற்கும்**
**ஆதியுற நின்றது அப்பரி சாமே. (1724)**

அடியவர்களால் சூட்டப்பெற்ற மலர் மாலை, தோத்திர மாலைகளால் அழகுற அமைந்த பாதங்களே இந்த பூமியாகும். கங்கையாம் மாதினை அழகுற அணியப்பெற்ற அவன் முடியோ வானகம் ஆகும். முறைமையோடு எங்கும் நிறைந்துள்ள ஈசன், உடலோ அண்ட வெளியாகி விளங்கும். அந்த நாதனாம் சிவபிரான் நின்ற திருக்கோலம் இவ்வண்ணமானதே யாம்.

**421. தரையுற்ற சக்தி தனிலிங்கம் விண்ணாம்**
**திரைபெரு நீரது மஞ்சன சாலை**
**வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை**
**கரையற்ற நந்தி கலையுந்திக் காமே. (1725)**

நிலமாக விளங்குகின்ற, சக்தி பீடத்தின் மேல் விளங்கும் இலிங்கமும் ஆகாயமாகும். திரைபொருந்திய கடல் அச்சிவன் நீராடுதற்குரிய இடமாகும். மலையிலே விளங்கும் மேகங்கள் ஆகாய கங்கையாகும். விண்ணிலே திகழும் விண்மீன்கள் அவன் அணிந்துள்ள முத்துமாலைகளாகி விளங்கும். தத்துவம் கடந்த, கரை என்பது காண இயலாத நந்தி எம்பெருமானாம், ஈஸ்வரனுக்கு ஆடை என்பது எண் திக்குகளே ஆகும்.

## பிண்டலிங்கம்

**422. மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்**
**மானுடர் ஆக்கை வடிவு சிதம்பரம்**
**மானுடர் ஆக்கை வடிவு சதாசிவம்**
**மானுடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே. (1726)**

மக்கள் உடலின் வடிவமே சிவலிங்க மாகும். அவ்வடிவமே சிதம்பரம்; திருச்சிற்றம்பலமாகும். அவ்வியாக்கையின் வடிவே சதாசிவத்தின் உருவத் திருமேனியாகும். அந்த உடலின் அசைவுகளனைத்துமே அந்தக் கூத்தப் பிரானின் திருநடமாகும்.

**423. கோயில் கொண்ட அன்றே குடிகொண்ட ஐவரும்**
**வாயில் கொண்டாங்கே வழிநின் றருளுவர்**
**தாயில் கொண் டாற்போல் தலைவனென் னுட்புக**
**வாயில் கொண்டீசனும் ஆளவந் தானே. (1728)**

இறைவன் நம் உடம்பினைத் திருக்கோயிலாகக் கொண்ட அன்றே அயன் அரி, ருத்திரன், சதாசிவன் மகேசுவரன் எனப் படும் ஐந்தொழிலாளர்களும் குடி கொள்ளுகின்றனர். அவர்கள் இந்தச் சரீரத்தை வாயிலாகக் கொண்டே அதன் வழிநின்று அருள் செய்வார்கள். தன் கன்றுக்குப் பாலூட்டத் தாய்ப்பசு, கொட்டிலுக்குச் சென்றடைவதைப் போல் என் உள்ளத்துள்ளே இறைவன் சிவபிரான் புகுந்து அன்பினையே வழியாகக் கொண்டு என்னை ஆள வந்தான்.

**424. கோயில் கொண்டானடி கொல்லைப் பெருமறை**
**வாயில் கொண்டானடி நாடிகள் பத்துள**
**பூசை கொண்டான் பலனைத்தும் பிறகிட்டு**
**வாயில் கொண்டானெங்கள் மாநந்தி தானே. (1729)**

இறைவன் சிவபிரான் நம் உடலைக் கோயிலாக் கொண்டவன். பின்புறமாக உள்ள அடிமூலாதாரத்தின், நான்கு மறைபோன்ற நான்கு இதழ்களைக் கொண்ட சக்கரத்தினை வாயிலாகக் கொண்டான். அடிநாடிகளாம் திருவடி சேர்தற்குரிய நாடிகள் இடைகலை, பிங்கலை, சுழிமுனை, காந்தாரி, அத்திரி, அலம்புரி, சிங்குவை, பூடை, சங்கினி, குரு எனும் பத்து உள. அவைகளைத் தூயதாக்கிட நம் புலன் ஐந்தையும், நம் பின்வரும் படிச் செய்து, நாம் செய்யும் பூசைகளையும் எங்கள் பெருமை மிக்க நந்தி எம்பெருமான் உடம்பையே வாயிலாகக் கொண்டு ஏற்றுக் கொள்வான்.

## சதாசிவலிங்கம்

**425. கூடிய பாதம் இரண்டும் படிமிசை**
**பாடிய கைஇரண் டெட்டும் பரந்தெழுந்து**
**தேடுமுகம் ஐந்து செங்கணின் மூவைந்து**
**நாடுசதா சிவ நல்லொளி முத்தே. *(1730)***

திருவருளோடு கூடிய இரண்டு பாதங்களும் பூமியின் மேல் நிற்க, புகழ்ந்து பாடப்பெறும் பத்து கைகளும் திசை எங்கும் பரந்து எழ (எட்டுத்திசையும் மேல் கீழும்) பார்க்கின்ற முகங்கள் ஐந்தும் (சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம்) முகத்திற்கு மூன்று கண்கள் வீதம் சிவந்து விளங்கும் கண்கள் பதினைந்தும் விளங்கிட இந்தத் திருவுருவோடு, நாம் தியானித்து நாடுகின்ற சதாசிவமாம் நல்லோளி முத்து விளங்கும்.

**426. ஆகின்ற சத்தியின் உள்ளே கலைநிலை**
**ஆகின்ற சத்தியின் உள்ளே கதிரெழ**
**ஆகின்ற சத்தியின் உள்ளே அமர்ந்தபின்**
**ஆகின்ற சத்தியுள் அத்திசை பத்தே. *(1732)***

சதாசிவமாகி நின்ற சத்தியின் உள்ளேதான் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை எனும் ஐந்துகலைகளும் உண்டாகும். அதினின்றே சிவஞாயிறு உதிக்கும். அச்சத்தியினுள் சிவசூரியன் அமர்ந்த பின், அந்த ஞாயிற்றொளி எட்டுத்திசையும் மேலும் கீழும் பரந்து ஒளி மயமாகிவிடும்.

**427. அத்திசைக் குள்ளே அமர்ந்தன ஆறங்கம்**
**அத்திசைக் குள்ளே அமர்ந்தன நால் வேதம்**
**அத்திசைக் குள்ளே அமர்ந்த சரியை யொடு**
**அத்திசைக் குள்ளே அமர்ந்த சமயமே. *(1733)***

மேற்சொல்லப்பட்ட பத்து திசைகளுக்குள்ளேயே ஆறு சமயங்களும் நான்கு வேதங்களும் நிலைத்து நிற்கின்றன. சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நன்னெறிகளும் அங்கே அமைந்துள்ளன. அந்த பரந்துபட்ட பத்து

திசைகளுக்குள்ளே தான் சைவ சமய அறிவும் பரந்து கிடக்கும். (ஆறங்கம் - சிட்சை, கற்பம், வியாகரணம், சந்தோபிசிதம், நிருத்தம், ஜோதிடம்)

நான்குமறை:- இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம்.

**428.** ***அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்ணுள***
***அஞ்சி னோடஞ்சு கரதலம் தானுள***
***அஞ்சுடன் அஞ்சா யுதமுள நம்பிஎன்***
***நெஞ்சு புகுந்து நிறைந்து நின்றானே.*** *(1736)*

இறைவன் சதாசிவனுக்கு ஐந்து முகங்கள் உண்டு. பதினைந்து கண்கள் உண்டு, பத்து கரங்கள் உண்டு; பத்து வகைப்பட்ட ஆயுதங்கள் தன்கையிலே ஏந்தியுள்ளவன் நம்பியாம் சதாசிவன். அவன் என் நெஞ்சிலே புகுந்து வியாபித்து நிற்கின்றான்.

**429.** ***சத்தி தராதலம் அண்டம் சதாசிவம்***
***சத்தி சிவமிக்க தாபர சங்கமம்***
***சத்தி உருவம் அருவம் சதாசிவம்***
***சத்தி சிவதத் துவம் முப்பத்தி யாறே.*** *(1737)*

பரம்பொருளான சிவபிரான், இந்த நில மண்டிலமே சத்திவடிவாயும், அண்டம் அனைத்தும் சதாசிவ வடிவாயும் அமைந்துளன். சத்தியும் சிவமும் மிகுந்து காணப்படும் நிலைத்திணையாயும் இயங்கு திணையாகவும் உலகின்கண் அமையும். சத்திதான் உருவமாகும். சதாசிவமோ அருவமாகும். இவ்வகையிலே சத்தியோடு கூடிய சிவம் பொருந்திய தத்துவங்கள் முப்பத்தியாறு என்பதாம். ஆன்மத் தத்துவம் 24. வித்தியாதத்துவம் 7, சிவ தத்துவம் 4, ஆக 36.

**430.** ***தத்துவ மாவது அருவம் சராசரம்***
***தத்துவ மாவது உருவம் சுகோதயம்***
***தத்துவம் எல்லாம் சகலமுமாய் நிற்கும்***
***தத்துவ மாகும் சதாசிவன் தானே.*** *(1738)*

தத்துவம் எனக் கூறப்படுவது அருவநிலை. அது சதாசிவம். அதுவே சராசரம் என்னும் அண்ட கோடிகளாகக் காணப்படும் போது அது சதாசிவத்தின் உருவநிலையாகும். சுகோதயம் எனப்படும் இனிய ஊற்றுவின் தத்தவம் யாவுமே சிவசத்தியின் இயக்கமே. இத்தத்துவங்கள் அனைத்திலும் சகலமுமாய் நிற்பது சதாசிவன் ஒருவனே.

**431. இருளார்ந்த கண்டமும் ஏந்து மழுவும்**
**கருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையும்**
**அருளார்ந்த சிந்தையெம் ஆதிப்பிரானை**
**தெருளார்ந்த தென் உள்ளே தெளிந்திருந் தேனே. (1740)**

இருள் பொருந்திய (நீண்டமணிமிடற்றன்) கழுத்தையும் வலக்கையில் அவன் ஏந்தியிருக்கும் மழுப்படையினையும், சுருள் சுருளான சிவந்த சடையும், அதிலே ஒளிவீசும் மூன்றாம் பிறையும், அருள் பொழிகின்ற சிந்தனையும் உடைய எம்முடைய ஆதிப்பிரானான சிவத்தைத், தெளிந்துள்ள என் உள்ளத்திலே உண்மைப் பொருளென உணர்ந்து கொண்டேன்.

**432. ஒன்றியவாறும் உடலின் உடன் கிடந்து**
**என்று மெம்ஈசன் நடக்கும் இயல்பது**
**தென்றலைக் கேறத் திருந்து சிவனடி**
**நின்று தொழுதே னென் னெஞ்சத்தி னுள்ளே. (1747)**

சிவன், உலகத்திலே உயிர்களோடு பொருந்தி இருக்கும் முறைமையும், உடலினுடனேயும் உயிருடன் பொருந்தி அவ்வுடல்களையும் அவ்வுயிர்களையும் இயக்குகின்ற தன்மையினையும் கொண்டது சிவபிரான் இயல்பாகும். அவனுடைய திருந்திய அடியினை என் தலைமேல் வைத்து அதைப் பெருமை மிக்கத் தலையாக்கி தீட்சையருளியபின் அவனை என் நெஞ்சினுள்ளே வைத்து இடையறாது தொழுதேன்.

**433. உணர்ந்தேன் உலகின் ஒண்பொரு ளானை**
**கொணர்ந்தேன் குவலயம் கோயிலென் நெஞ்சம்**
**புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே**
**பணிந்தேன் பகலவன் பாட்டும் ஒலியே. (1748)**

உலகம் அனைத்துக்கும் ஒளிமயமாய் விளங்கும் சிவபிரானை நான் உள்ளார்ந்தறிந்தேன். அவன் ஆன்மாக்களை உய்விக்கும் பொருட்டு இப்பூமிக்குக் கொணர்ந்தேன். அதன் பின்னர் அப்பெருமானை என் நெஞ்சத்தினுள்ளே கலந்திணைந்தேன். அப்புனிதனாம் பரமசிவமும் பொய்ப் பொருளல்ல உண்மைப் பொருளே. எனவே அந்தச் சிவ சூரியனைப் பாட்டினால் தொழுதேத்தினேன். அவன் நாதரூபமாக என்னுடன் ஒன்றி இருந்தான்.

**434. தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடும்**
**தன்மேனி தானும் சதாசிவமாய் நிற்கும்**
**தன்மேனி தற்சிவன் தற்சிவானந்த மாம்**
**தன்மேனி தானாகும் தற்பரந் தானே. *(1750)***

மேற்கூறியவாறு தன்னுள்ளே தலைவனைப் புணர்ந்து நிற்கும் சிவ ஞானியின் உடம்பே சிவலிங்கமாகி விளங்கும். அவ்வுடம்பே சதாசிவரூபமாகியும் அமையும். அந்தத் திருமேனியே சத்தியும் சிவனும் ஒருங்கிணைந்து அருள் செய்யும், சிவானந்த நிலையாம். அத்திருமேனியே தானே தான் ஆகும் தற்பரமாம். அதாவது சிவனே சிவனாம் என்பதாம்.

**435. ஆரும் அறியார் அகரம் அவனென்று**
**பாரும் உகாரம் பரந்திட்ட நாயகி**
**தாரம் இரண்டும் தரணி முழுதுமாய்**
**மாறி எழுந்திடும் ஓசைய தாமே. *(1751)***

சிவபிரானே எழுத்துக்களுள் அகரத்தைப்போல ஒன்றாய் வேறாய், உடனாய் இயைந்திருப்பதை அறிந்திலர். பாராகிய உலக முழுதும் எல்லாப் பொருள்களிடத்தும் பரந்துள்ள சத்தி உகர வடிவமானவள். இவ்விரு பிரணவ எழுத்துக்களாம், அகரம் உகரம் இரண்டும் உலக முழுதுமாகி, நாதமாக மாறி 'ஓம்' எனும் ஒலியாக எழும். (அகரம் உகரமும் விரி, மகரம் ஒடுக்கம். அகர உகர மகரம் ஓம் என்பதாம்)

## ஆத்மலிங்கம்

436\. அகாரமுதலாய் அனைத்துமாய் நிற்கும்
உகார முதலாய் உயிர்ப்பெய்து நிற்கும்
அகார உகாரம் இரண்டும் அறியில்
அகார உகாரம் இலிங்கம தாமே. (1753)

மேற்சொல்லிய அகாரமாகி விளங்கும் சிவனே உலகம் உயிர்கள் அனைத்துமாகி உள்ளவன். அடுத்துச் சத்தி வடிவான உகரம்தான் எல்லா உயிர்களும் சத்தியுடன் உயிர்ப்பெய்தி நிற்கும். இந்த வகையில் அகரத்தையும் உகரத்தையும் பற்றிய மெய்யுணர்வெய்தினால் இந்த அகரமும் உகரமுமே இலிங்க வடிவாகியுள்ளது என்பதைக் காணலாம்.

437\. சத்தி சிவமாம் இலிங்கமே தாவரம்
சத்தி சிவமாம் இலிங்கமே சங்கமம்
சத்தி சிவமாம் இலிங்கம் சதாசிவம்
சத்தி சிவமாகும் தாபரம் தானே. (1755)

சத்தி சிவம் என்னும் இரண்டும் சேர்க்கையால் இலிங்கமே. (அசர உலகமான மலை, மரம், செடி, கொடி முதலியனவாம்) இனி இயங்கு திணைப் பொருள்களான சங்கமம், சத்தி சிவக் கூட்டால் உண்டாகிய இலிங்கமே ஆகும். அருள் செய்யும் சத்தி வடிவாம் சதாசிவ ரூபமும், சத்தி சிவமாம் இலிங்கமே. இனித் தாபரமாகி உருவத்தோடு கோயில்களில் விளங்கும் இலிங்கமும் சத்தி சிவ வடிவமே ஆகும்.

தாபரம் - ஆதாரம்

438\. சத்தி நற்பீடம் தகும் நல்ல ஆன்மா
சத்தி நற்கண்டம் தகுவித்தை தானாகும்
சத்தி நல் இலிங்கம் தகும் சிவ தத்துவம்
சத்தி நல்ஆன்மா சதாசிவம் தானே. (1758)

தத்துவங்கள் முப்பத்தாறனுள், ஆன்மதத்துவமே சத்தியின் நற்பீடமாகி விளங்கும். வித்தியா தத்துவமே சத்தியின் நல்ல கண்டமாகிப் பொலியும். மற்ற சிவ தத்துவமே சத்தியின்

லிங்கவடிவாகி அமையும். சத்தியின் நல்ல ஆன்மாவாக விளங்குவது சதாசிவமே ஆகும்.

**439. பராபரன் எந்தை பனிமதி சூடி**
**தராபரன் தன்னடியார் மனக் கோயில்**
**சிராபரன் தேவர்கள் சென்னியில் மன்னும்**
**மராமரன் மன்னி மனத்துறைந் தானே. (1760)**

எந்தையாகிய, பரன்களுக் கெல்லாம் மேலான பரனான சிவன், குளிர்ந்த வெண்மதியைத் தலையில் அணிந்து இவ்வுலகனைத்தும் தாங்கி நிற்பவனாவான். தன்னுடைய அடியார்களின் மனக் கோயிலிலே குடி கொண்டுள்ள மேலான தெய்வமாவான். விண்ணகத் தேவர்கள் சென்னியிலே நிலை பெற்றுள்ள (மராமரன் ஆம்) அரன், மலர் மணம் போல் சத்தியாய்ச் சிவனாய் இணைந்துள்ள சிவபிரான், என் உள்ளத்திலே நிலைத்து நின்றருளினான்.

**440. அன்று நின்றான் கிடந்தான் அவன் என்று**
**சென்று நின்று எண்டிசை ஏத்துவர் தேவர்கள்**
**என்று நின்று ஏத்துவன் எம்பெருமான் தன்னை**
**ஒன்றி என் னுள்ளத்தில் உள்ளிருந் தானே. (1762)**

சிவபிரான் அக்காலத்திலே அங்கு, நின்ற திருக் கோலத்திலே காணப்பட்டான். இங்கே, கிடந்த கோலத்திலே அவனைக் கண்டேன் என்று எண்டிசைகளிலும் தேவர்கள் சென்று சென்று நின்று ஏத்தித் தொழுவார்கள். அப்பரம் பொருளாம் சிவன் என் உள்ளத்தின் உள்ளே, உயிரை ஒப்ப ஒன்றி நின்றிருக்கும் காரணத்தினால், என் ஆத்மாவையே லிங்கம் என்று நினைத்து, நிலைபெற்று நின்று, என்பெருமானை ஏத்துவன்.

## ஞானலிங்கம்

**441. உருவும் அருவும் உருவோ டருவும்**
**மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்கும்**
**குருவும் எனநிற்கும் கொள்கைய னாகும்**
**தருவென நல்கும் சதாசிவன் தானே. (1763)**

பரசிவன் உருவமாகியும் அருவமாகியும் அருவுருவாகியும் பொருந்தியுள்ளான். நிலைபெற்றுள்ள பல்வகைப்பட்ட உயிர் இனங்களுக்கும் அவன் குருவாகவும் எழுந்தருளி வந்து அருள் செய்யும் கொள்கை உடையவனாகியும் அமைந்துள்ளான். அந்தப் பரசிவமே சதாசிவ மூர்த்தியாகி அருள் சுரந்து கற்பகத் தருவைப் போல் வேண்டியவர்க்கு வேண்டியபடியே நல்குபவனாகும்.

**442. வேண்டி நின்றேன் தொழுதேன் வினைபோய் அற**
**ஆண்டு ஒரு திங்களும் நாளும் அளக்கின்ற**
**காண்ட கை யானொடும் கன்னி உணரினும்**
**மூண்டகை மாறினும் ஒன்றது வாமே. (1766)**

என்னுடைய இருள் சேர் இருவினைகளும் என்னை விட்டு நீங்கிப் போய் அறும்படி, அந்தச் சிவபிரானை வேண்டி நின்றேன். ஆண்டெனவும் திங்கள் எனவும், நாள் எனவும் அளக்கின்ற, காண்கின்ற தகைமை வாய்ந்த சதாசிவனுடன் கன்னியாம் சத்தியை உணர்ந்து வழிபட்டாலும், பொருந்திய அவ்வொழுக்கம் (கை) மாறி ஒருவராக (அர்த்த நாரியாக) வழிபட்டாலும், பயன் ஒன்றேதான். (ஞானலிங்கமாக வழிபடினும் ஒன்றே) சதாசிவன் கண்கள் சூரியனும் சந்திரனுமாம். எனவே ஆண்டு திங்கள், நாள் வகுப்பவன் என்றாராயிற்று. அவனே காலதத்துவன்.

**443. ஆதிபரந் தெய்வம் அண்டத்து நற்றெய்வம்**
**சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வம்**
**நீதியுள் மாதெய்வம் நின்மலன் எம்மிறை**
**பாதியுள் மன்னும் பராசக்தி யாமே. (1767)**

முன்னைப் பழம் பொருள்களுக்கும் முன்னதாகிய மேலான தெய்வம், இப் பேரண்டப் பரப்பினுக்கு ஆதாரமாகிய நல்ல தெய்வம் அவன். அடியவர்கள் அவனை அருட் ஜோதி வடிவமாகத் தொடர்ந்து வழிபடும் பெரிய பெருந்தெய்வம். நீதியுள்ளே நிலை பெற்று நின்ற மாபெருந் தெய்வம். அவனே சிவபெருமான். எம் இறைவன். இயல்பாகவே மலமற்றவன். அவனே தன் உடலில் பாதியிலே பராசக்தியை வைத்திருக்கும் பரசிவமாகும்.

444. சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே
சுத்த சிவபாதம் தோயாத தூவொளி
அத்தன் திருவடிக் கப்பாலைக் கப்பாலாம்
ஒத்தவும் ஆமீசன் தானான உண்மையே. (1769)

சத்திக்கும் மேனிலையான பராசத்தி நிலையாம் பேராற்றலுள் நிலைத்திருப்பது சுத்த நின்மல சிவபாதமாகும். அதுயாதினும் தாக்கற்று உள்ள தூய வெளியாகும். அந்த அத்தன் சிவபெருமானின் திருவடிக்கு அப்பாலாம் அப்பாலாயும், ஒத்தும், அந்நிலை கடந்து கூடியும், கூடாமலும், உள்ள நிலை ஈசனது உண்மையான நிலையாம்.

445. சத்தி சிவன்தன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமுமாம் சிவம் சத்தியுமாகும்
சத்தி சிவனன்றி தாபரம் வேறில்லை
சத்தி தான் என்றும் சமைந்துரு வாகுமே. (1771)

சத்தி சிவன் விளையாட்டிடமே இந்தத் தாரணியாம் உலகமாகும். அருள் உருவமுடைய சத்தி ஞான வடிவாம் சிவமாகும். அதைப் போலவே ஞானவடிவான சிவம் அருளுருவான சத்தியாம். சத்தியும் சிவனுமின்றி இவ்வுலகில் ஆதாரம் ஏதும் இல்லை. இச்சத்திதான் எக்காலத்தும் சிவனோடு சேர்ந்து உருவ உலகமாகும்.

## சிவலிங்கம்

446. குரைக்கின்ற வாரிக் குவலயம் நீரும்
பரக்கின்ற காற்று பயில்கின்ற தீயும்
நிரைக்கின்ற வாறுஇவை நீண்ட கன்றானை
வரைத்து வலஞ்செயும் ஆறு அறியேனே. (1773)

ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்டுள்ள நிலமும் நீரும், பரந்து வீசி இயங்குகின்ற காற்றும், அதனின்று தோன்றும் தீயும், இவை தத்தம் முறை நிலை மாறாது நிலைத்துள்ள வானுமாக, நீட்சியும் அகற்சியும் கொண்டு விளங்கும் பரம்பொருளாம் சிவபிரானை, ஒரு எல்லைக்குட்படுத்தி வலஞ்செய்து வணங்கும் வழியை நான் அறியவில்லையே!

(பஞ்ச பூதமாய் பரந்து விரிந்துள்ள இறையை எல்லைக் குட்படுத்த அறிகிலேன்)

**447. வரைத்து வலம் செய்யுமாறிங் கொன்றுண்டு
நிரைத்து வரு கங்கை நீர்மல ரேந்தி
உரைத்தவன் நாமம் உணர வல்லார்க்குப்
புரைத்தெங்கும் போகான் புரிசடை யோனே. (1774)**

உலகெங்கும் பரந்தும் விரிந்துள்ள பரம் பொருளாம் சிவபெருமானை, எல்லைக்குட்படுத்தி ஒரு குறியிலே வைத்து வழிபடும் நெறி ஒன்றுளதாம். அதாவது சிவ பெருமானின் அருவுருவுமாம் சிவலிங்கத்திற்குத் திருமஞ்சன நீராட்டி மலர் ஏந்தி அருச்சனை செய்து, அவன் திருநாம மந்திரமாம் திருவைந்தெழுத்தை ஓதி வழிபட்டு, அவனை உள்ளவாறு உணர வல்லவர்களுக்கு, அந்தப் புரிசடையுடைய சிவபிரான் நம் உள்ளத்தைப் பொத்தலிட்டுக் கொண்டு வெளிப்பட்டுப் போய்விட மாட்டான்.

**448. ஒன்றெனக் கண்டே, எம்ஈசன் ஒருவனை
நன்றென் றடியிணை நான் அவனைத் தொழ
வென்றைம் புலனும் மிகக்கிடந் தின்புற
அன்றே அருள் செய்யும் ஆதிப் பிரானே. (1775)**

ஈசனாம் சிவபரம் பொருளே ஒப்பற்ற ஒருபொருள் எனக் கண்டேன். அவன் திருவடிகளை நன்றான மார்க்கம் இதுவே என அடைந்து அவனைத் திரு எழுத்தைந்தோதி வணங்கி நிற்க, புலனைந்தும் என்னால் வெல்லப்பட்டு அதனால் என் அறிவு சிவஞானம் பெற்றுச் சிவன் திருவடியினை அடைந்து இன்பமடைய, அன்றே அந்த ஆதிப்பிரான் அருட்சத்தியின் பாதங்களை என்மீது பதித்து எனக்கு அருள் செய்வான். (சத்திநி பாதம் தருவான்)

**449. மேவி எழுகின்ற செஞ்சுடர் ஊடுசென்று
ஆவி எழுமனவன்றே உடலுற
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே. (1777)**

மூலாதாரத்திலிருந்து மேலே மேவி எழுந்து வீணாத் தண்டாம் நடுநாடி வழிச் செல்லும் சிவந்த சுடர் வடிவமான ஜோதி, உயிர் உச்சித் துளை வழியாக வெளியேறும்காறும், உடலோடு உயிர் உறையும் காலமெல்லாம், பொருந்திச் செய்யப்படுவனவும் விட்டு விட்டு நிகழ்த்துவதுமான செயல்கள் யாவும், உணர்ந்து, சிவலிங்க சொரூபத்தைப் பாவித்து, உயிர்ப்பினை அடக்கி ஒழுகின், சிவப்பேறாம் பரகதி உண்டாகும்.

## சம்பிரதாயம்

**450. உடல் பொருள் ஆவி உதகத்தாற் கொண்டு**
**படர்வினை பற்றறப் பார்த்து கைவைத்து**
**நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்**
**கடியப் பிறப்பற காட்டினன் நந்தியே. (1778)**

குருவடிவாகி அடியவனை ஆட்கொள்ள குவலயம் வந்த சிவபிரான், சீடனின் உடலையும் பொருளையும் கொண்டு, அவனைப் படர்ந்துள்ள வினைகள் யாவும் பற்றறக் கழியும்படி அவனைப் பார்த்து (திருக்கண்நோக்கம் செய்து), அவன் முடிமீது தம் கையை வைத்தும், தம் திருவடிகளை வைத்தும், தீக்கை செய்து, அவனுடைய பசு ஞானத்தைப் போக்கி, நுண்ணுணர்வான பதிஞானம் உண்டாக்கி, விரைவிலே பிறப்பினை அறுக்கின்ற தன்மையை உணர்த்தினான் நந்தி எம்பெருமான்.

*(அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ - திருவாசகம்)*

**451. உயிரும் சரீரமும் ஒண்பொரு ளான**
**வியவார் பரமும் பின்மேவும் பிராணன்**
**செயலார் சிவமும் சிற்சத்தி யாதிக்கே**
**உயலார் குருபரன் உய்யக் கொண்டானே. (1779)**

உயிரும், உடம்பும், ஒளித்தன்மை வாய்ந்த வியப்புக்குரிய பரமாம், சிவமும் பின்பொருந்தியுள்ள பிராணனாம். உயிர்ப்பு நிலையும், இவைகளை இயக்கும் சிவமும், சிவசத்தியும் என்று

கொள்ளும். இந்த உடலிலே தங்கியுள்ள ஆன்மா உய்யும் படியாக இறைவனாகிய சிவன், குருபரன் வடிவந் தாங்கி வந்து தீக்கை செய்து ஆட்கொண்டருளினான்.

**452. பெட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனை**
**யொட்டடித் துள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின்**
**தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்**
**வட்டம தொத்து வாணிபம் வாய்த்ததே. (1781)**

பெரும் வாயாடியாக எவ்விடத்தும் பிதற்றித் திரிந்த என்னை, மாயையை நீக்கி, உள்ளத்துள்ளே கன்ம மலமாம் மாசு அனைத்தும் போக்கி, அதன்பின், அவனாகிய சிவகுருநாதன் என்னையும், தன்னைப்போல, துலாத் தட்டு நேரொத்தலைப் போல, சமன் செய்தான். இப்படி அவன் செய்த வாணிபத்தால் அவன் தன்னைத் தந்து என்னைக் கொண்டதால் எனக்கு நல்ல லாபம் கிடைத்தது. (தந்ததுன் றன்னை கொண்ட தென் றன்னை சங்கரா யார் கொலோ சதுரர்)

**453. தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாம் தலைவன்**
**இருக்கின்ற தன்மையை ஏதும் உணரார்**
**பிரிக்கின்ற விந்து பிணக்கறுத் தெல்லாம்**
**கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே. (1782)**

உயிர்தரித்து உலகிலே வாழ்கின்ற பலகோடி உயரினங்களுக்கு நாயகனான சிவன், ஒன்றாய், வேறாய், உடனாய், இருக்கின்ற தன்மையை உலகோர் சிறிதும் உணரார். விந்துவாம் சுத்த மாயை, சிவனையும் சீவனையும் இடை நின்று பிரித்தலைச் செய்ய அங்ஙனம் பிரித்தலைச் செய்யும் மாறு பாட்டினை என்னிடமிருந்து போக்கி அருளியவனை, அண்டங்கள் அனைத்தையும் கருக்கொண்ட ஈசனை, நான் கண்டு கொண்டேன்.

**454. உணர் வுடையார்கட்கு உலகமும் தோன்றும்**
**உணர் வுடையார்கட்கு உறுதுயர் இல்லை**
**உணர் வுடையார்கள் உணர்ந்தவக் காலம்**
**உணர் வுடையார்கள் உணர்ந்து கொண்டாரே. (1786)**

பதி பசு பாச உணர்ச்சியினை நன்குணர்ந்தவர்கட்குத் தூல சூக்கும உலகனைத்தும் விளங்கி நிற்கும். அந்த உணர்வினை உடையவர்களைச் சென்றடையும் துயரம் ஏதுமில்லை. அந்த உணர்வினை உடையவர்கள் பதியை அறிந்த அக்காலத்திலே, அவர்கள் தம்மையும் தன் தலைவனாம் பதியையும் உள்ளத் துணர்ந்தவர்கள் ஆவார்கள்.

**455. நானென நீயென வேறில்லை நண்ணுதல்**
**ஊனென ஊனுயிர் என்ன வுடனின்று**
**வானென வானவர் நின்று மனிதர்கள்**
**தேனென இன்பம் திளைக்கின்ற வாறே. (1788)**

நான் என்றோ, நீயென்றோ, இரண்டும் ஒன்று சேர்தல் என்றோ, பிரித்து உணர்தல் ஏதும் இல்லை. ஊன் ஆம் உடம்பும் உடலிலே உள்ள உயிரும் என, நாம் இருவரும் உடனாகிப் பொருந்தி இருக்க, வானகத்திலே (விண்ணிலே) இறைவன் இருப்பதாகக் கருதினால், வானோர்கள் திருவருளின்பம் துய்க்க அறியாது விலகி நிற்க, சிவஞானம் அடைந்த மனிதர்கள் (தேவர்களுக்கில்லாத) தனு, கரண, புவன போகங்களால், இருவினை ஒப்பு மலபரிபாகம் எய்தி சிவானந்த இன்பத்திலே மூழ்கித் திளைத்திருக்கின்றனர்.

**456. அவனும் அவனும் அவனை அறியார்**
**அவனை அறியில் அறிவானும் இல்லை**
**அவனும் அவனும் அவனை அறியில்**
**அவனும் அவனும் அவனிவ னாமே. (1789)**

வேதம் ஓதும் சாங்கிய மார்க்கத்திலே ஒழுகும் அவனும் (சரியை யாளனும்) இறைவனை வேறாக எண்ணி பக்தி செய்யும் கிரியை யாளனும் ஆகிய இருவரும் அவனாம் சிவனை அறிகின்றிலர். அப்படிச் சிவனை அறியும் காலத்திலே அறியப்படும் பொருள் மட்டுமே நிற்க அறிபவன் அங்கு இலனாகின்றான். எனவே முன் சொன்ன அவனும் அவனும் அவனாகிய சிவனை அறிந்துவிட்டால் அவ்விருவருமே சீவத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை எய்துவர்.

## திருவருள் வைப்பு

457. இருபதமாவது இரவும் பகலும்
உருவது வாவது உயிரும் உடம்பும்
அருளது வாவது அறமும் தவமும்
பொருளது உள்நின்ற போகம தாமே. (1792)

இருமை எனப்படும் இருபதம் இரவு பகலாம் அஞ்ஞானமும் ஞானமுமே ஆகும். உருவமாக விளங்குவது மாயா காரியமாகிய உடலும் திருவருள் சார்கின்ற உயிரும் என்ப. அருள் தன்மை எனப்படுவது அறநெறியும் தவநெறியுமே. மெய்ப் பொருள் என்று உணர வேண்டியது நமது உள்ளத்துள்ளே சிவஞானத்தால் அடைகின்ற சிவ போகத்தையே ஆகும்.

458. காண்டாற்கு அரியன் கருத்திலன் நந்தியும்
தீண்டற்கும் சார்தற்கும் சேயனாய்த் தோன்றிடும்
வேண்டிக் கிடந்து விளக்கொளியா னெஞ்சம்
ஈண்டிக் கிடந்தங்கு இருளறு மாமே. (1793)

நந்தி எம்பெருமானாகிய சிவபெருமான் காண்பதற்கு அரியவனாவான். கருத்தினால் சிந்திப்பதற்கும் அரியன் ஆவான். அவ்விறைவனைச் சென்றடைந்து அவன் மேனியைத் தீண்டவும் அவனைச் சாரவும் இயலாது. ஏனெனில் அவன் மிக மிகச் சேயனாகத் தோன்றிடுவான். அவன் ஒருவனையே நாம் வேண்டும் பொருளாகக் கொண்டு ஒருமுகப் பட்டு வேண்டி தியானிக்கில் நம் உள்ளத்திலே அவன் விளக்கொளிபோல் விளங்குவான். நம் உள்ளத்தினால் அவனைவே செறிவோடு நினைத்தால், நம் உள்ளத்தின் அஞ்ஞான இருள் அகன்று விடும்.

459. தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞகன் எம்மிறை
ஆர்ந்தறி வாரறிவே துணையாமெனச்
சார்ந்தறி வான் பெருந்தன்மை வல்லானே. (1795)

சிவனது ஞான சொரூபத்தினைத் தேர்ந்து அறியும் மெய்யுணர் வில்லாமையால், வீணே பல காலங்கள் கழிந்தன. எங்களது பிரானாம் தலைவன் தன் மூர்த்த நிலையினின்றும் பெயர்ந்து என்முன் குருவாக வந்து ஞானோபதேசத்தைச் செய்வான். எனவே மெய்யறிவே துணையாம் என்று ஆய்ந்து அறிந்து அவனைச் சார்ந்து அறிகின்ற மெய்ஞ்ஞான முடையவர்களே பேறு பெற்றவர்கள் ஆவார்கள்.

**460. அருள் எங்குமான அளவை அறியார்**
**அருளை நுகரமு தானதுந் தேரார்**
**அருளைங் கருமத் ததி சூக்கமுன்னார்**
**அருளெங்குங் கண்ணான தாரறி வாரே.** *(1798)*

திருவருட் சத்தி சிவனோடு அபின்னமாய் எங்கும் நிறைந்திருக்கின்ற தன்மையை பலர் அறிகின்றிலர். அருள் சத்தியே சிவனடி இன்பம் ஊட்டுகின்ற தன்மையால் அதை நுகர்ந்து அது அமுதமாகி விளங்குவதையும் தேர்ந்துணரார். இந்த அருள் சத்திதான் படைத்தல், காத்தல், அழித்தல், அருளல் ஆகிய ஐங்கருமங்களுக்கும் அதிகாரி என்னும், அதி சூட்சமத்தையும் நினைத்துப் பாரார். இங்ஙன மிருக்கும் தன்மையால், அவர்கள், அந்த அருட் சத்தியே, எங்கும் கண்ணாகி யாவற்றையும் இயக்கும் தன்மையை, எங்ஙனம் அறிய வல்லார்?

**461. அருளில் பிறந்திட்டு அருளில் வளர்ந்திட்டு**
**அருளில் அழிந்து இளைப்பாறி மறைந்திட்டு**
**அருளான ஆனந்தத் தாரமு தூட்டி**
**அருளால் என் நந்தி அகம் புகுந்தானே.** *(1800)*

ஆன்மாக்கள் (நாம்) மல நீக்கத்துக்காக தம் கன்மங்களுக் கீடாய், அருட் சத்தியாலே பிறவி எய்துகிறோம். பின் தத்தம் வினைப் பயனைத் துய்க்கும் படித் திரு அருள் சத்தியாலேயே நாம் வளர்வோம். தத்தம் வினைமுடிந்த பின் அவ்வருட் சத்தியாலேயே அழிந்து இளைப்பாறி மறைந்துப் பின், அடுத்த பிறவி எய்துவோம். அக்கால் எம் நந்தி எம்பெருமான் திருவருள் சத்தியால் ஆனந்த மயமான ஆரமுதம் ஊட்டி குருவடிவாய் வந்து என் அகம் புகுந்தான்.

**462. பாசத்தில் இட்டதருள் அந்தப் பாசத்தின்**
**நேசத்தை விட்ட தருளந்த நேசத்திற்**
**கூசற்ற முத்தி யருளந்தக் கூட்டத்தின்,**
**நேசத்துத் தோன்றா நிலையரு ளாமே. (1802)**

இருவினை ஒப்பு மலபரிபாகம் அடைதல் பொருட்டு இந்த ஆன்மாவைப் பிறவிகள் தோறும் பாசத்திலே இட்டு வைத்ததும் அவ்வருட் சக்தியே. பின்பக்குவ காலம் வந்தபின், அந்தப் பாசத்தின்பால் உள்ள பிணிப்பினை விடுவித்ததும் அவ்வருட் சத்தியே. அந்த நேசத்தை (பற்றை) இறைவன் பால் வைக்க வைத்து அச்சம் அகற்றும் முத்தியான திருவடி இன்பம் திளைக்கச் செய்வதும், அந்த அருள் சத்தியே அப்படி ஆன்மாவும், சிவனும் ஒருங்கிணைந்த சேர்க்கையிலே தன்னைதான் உணரா நிலையாம் அருள்நிலையை உண்டாக்கியதும் அருள் சக்தியே ஆகும்.

**463. பிறவா நெறி தந்த பேரரு ளாளன்**
**மறவா அருள்தந்த மாதவன் நந்தி**
**அறவாழி அந்தணன் ஆதிப் பராபரன்**
**உறவாகி வந்தென் உளம் புகுந்தானே. (1803)**

இனிப்பிறவி எய்தாத அருள் நெறியை எனக்குப் போதித்தருளிய அளத்தற்கரிய அருள் உருவானவன். தன் திருவடி இன்பத்தினை எனக்குத் தன் சத்திநிபாதத்தால் அறிந்து அதை மறவாத வண்ணம் அருள் புரிந்தவன். பெருந்தவத்தின் தலைவனான நந்தி எம்பெருமான். அவன் அறவாழி அந்தணன். அனைத்துக்கும் காரணமான ஆதிபராபரன், அவன்தன் அருள் தன்மையால், சிவன் சீவனோடு உறவாகி வந்து என் உள்ளத்திலே குடி கொண்டான்.

**464. அருளே சகலமு மாய பவுதிகம்**
**அருளே சராசர மாய அகிலமே**
**இருளே வெளியே யெனு மெங்கவீசன்**
**அருளே சகளத்தின் அன்றி யின்றாமே. (1806)**

பஞ்ச பூத காரியங்களாகிய பௌதிகம் யாவுமே திருஅருட் சத்தியாலே நடைபெறுவதாகும். இவ்வருட் சத்தியே இயங்கு திணை நிலைத்திணையின் வடிவமான உலகில் வாழும்

உயிர்களின் இயக்கமாகும். இருளும் ஒளியுமாகிய அஞ்ஞான ஞானங்கள் எனும் இரண்டும் தொழிற்பட நிற்பதும் ஈசன் அருளே ஆகும். அவன் சகளத்தனாய் (மாயையால் திருமேனி கொண்டவனாகி) விளங்குவதும் அருட் சத்தியாலேயே ஆகும்.

**465. அருள் கண்ணிலாதார்க்கு அரும் பொருள் தோன்றா**
**அருள் கண்ணு ளோர்க்கு எதிர்தோன்றும் அரனே**
**இருள் கண்ணினோர்க்கு இரவியும் தோன்றா**
**தெருட் கண்ணினோர்க்கு எங்கும் சீரொளியாமே!**
**(1808)**

திருவருளால் வாய்க்கப் பெற்ற ஞானக்கண்கள் இல்லாதவர்களுக்கு நல்ல பொருள்கள் கூட கண்ணுக்குப் புலப்படமாட்டா. அந்தத் திருவருள் கண்களை வாய்க்கப் பெற்றவர்களோ தம் கண் எதிரே அரனைக் காணப்பெற்ற பாக்கியத்தைப் பெற்றவர்களாவார். இது, எதுபோன்ற தெனில் படலம் மறைத்த, இருள் மூடிய கண் வாய்ந்த குருடர்களுக்கு மிகப் பிரகாசம் பொருந்திய சூரியனும் தோன்றாது. காண முடியாது. படலம் நீங்கிய தெருளாம் தெளிந்த கண்ணோர்க்கு எல்லாப் பொருளும் செவ்வையாகத் தோன்றும் வகையினைப் போன்றதாம்.

**466. தானே படைத்திடும் தானே அளித்திடும்**
**தானே துடைத்திடும் தானே மறைத்திடும்**
**தானே இவை செய்து தான்முத்தி தந்திடும்**
**தானே வியாபித் தலைவனு மாமே. (1809)**

சிவனது ஆற்றலாகிய பராசத்திதான் படைத்தல் தொழிலையும் அளித்துக் காக்கும் தொழிலையும், அழிக்கும் தொழிலையும், மறைக்கும் தொழிலையும் செய்திடும். இவைகளை எல்லாம் தானே செய்யும் அந்த அருட் சத்தியே முத்தியைத் தந்தருளும். இப்படிப்பட்ட அருட் சத்தியோடு பொருந்தியுள்ள, எங்கும் வியாபித்துள்ள, பரசிவமே இவ்வண்டங்கள் அனைத்துக்கும் தலைவனாம்.

467. அருளில் தலைநின்று அறிந்து அழுந்தாதார்
அருளில் தலைநில்லார் ஐம்பாசம் நீங்கார்
அருளில் பெருமை அறியார் செறியார்
அருளில் பிறந்திட்டு அறிந்தறி வாரே. (1814)

திருவருளிலே கலந்து நின்று அழுந்தாமல் இறை ஞானத்தினை அறிய மாட்டாத அனுபவ மற்றோர், அருளே பொருந்தி அமையார். ஐந்து வகைப்பட்ட ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி எனும் பாசங்களினின்றும் அகல மாட்டார். அருட் சத்தியின் பெருமையை அறியாதவர்கள், அதனுள் (வியாபகத்துள்) அடங்கி நில்லார். திருவருட் சத்தியால் பிறந்த ஆன்மா, அருளே கண்ணாகக் கண்டறிதல் வேண்டும். அப்படிப்பட்டவரே அறியும் தன்மை வாய்ந்தவர்.

468. ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும்
தேடியும் கண்டேன் சிவன் பெருந் தன்மையை
கூடியவாறே குறியாக் குறி தந்தென்
ஊடு நின்றான் அவன் தன் அருள் உற்றே (1816)

இறைவன் திருவருளை அடையப் பெற்ற ஆனந்தத்தால் ஆடியும், பாடியும், அழுதும், கண்ணீர் மல்கியும் அலறியும் தேடியும் சிவபெருமானின் பேரருள் திறத்தினைக் கண்டு கொண்டேன். அவனை நான் கூடியவாறே அருளால் உணரும் திருவடியை எனக்குத் தந்தருளினான். அவன் தன் அருளாலேயே என் ஆன்மாவூடு நின்றான் (பொருந்தி விளங்கினான்)

469. விளக்கினை ஏற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர்தாமே. (1818)

சிவஞான விளக்கினை ஏற்றி அகண்டாகாரமாகி விளங்கும் சிவபிரானை அறியுங்கள். அந்தப் பதிஞானம் எய்திய அதனால், பிறவித் துன்பங்கள் அனைத்தும் நீங்கும். சிவமாகிய பேரொளிப் பிழம்பை வெளிப்படுத்த வல்ல சிவ ஞானிகள் தம் ஆன்மாவில் ஒளிர்பவர்கள். அவர்களே அருட் பெருஞ்சோதி ஆண்டவனாம் விளக்கிலே விளங்குகின்ற (சிவத்திலே ஒடுங்கிய) விளக்காவார்கள்.

**470. அருளது என்ற அகலிடம் ஒன்றும்**
**பொருளது என்ற புகலிடம் ஒன்றும்**
**மருளது நீங்க மனம் புகுந்தானை**
**தெருளுறும் பின்னைச் சிவகதி தானே. (1821)**

திருவருட் சத்தி எனப்படும் பரவெளி ஒன்றும், சென்றடைய வேண்டியதான பொருள், பரம்பொருள் எனப்படும் சிவமாம் புகலிடம் ஒன்றும், மருளானது நீங்க சத்தி வேறு சிவம் வேறுள எனப்படும் மயக்கமானது நீங்கும்படி, உள்ளத்திலே வந்து புகுந்த அப்பேரொளியினைச் சிவமாகவே தெளியுங்கள். அப்படித் தெளிந்த பின்னர் சிவகதியே சித்திக்கும்.

## சிவபூசை

**471. உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்**
**வள்ளற் பிரானார்க்கு வாய்க்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே. (1823)**

ஆன்மாக்களின் நெஞ்சமே இறைவன் உறையும் மூலஸ்தானமாகும். ஊனாலான இவ்வுடம்போ அக்கருவறை உள்ள ஆலயமாகும். தன், தன்அருளால் வேண்டியன அருள் செய்யும் வள்ளற் பிரானாம் சிவனுக்கு அவனைத் தோத்தரித்து பஞ்சாட்சர மந்திரத்தை உச்சரிக்கும் வாய்தான் கோபுர வாசலாகும். இறைவன் குண நலங்களைத் - தன்மைகளைத் திருவருளால் தெளிந்தவர்களுக்கு ஆன்மாவே சிவலிங்க மாகும். கள்ளத்தனம் மிக்கப் பொருள் இன்பங்களின் மேல் பற்றி ஓடும் ஐம்புலன்களும் அழகிய மாணிக்க மணிகளாம் விளக்குகளேயாகும்.

**472. நினைவதும் வாய்மை மொழிவது மல்லால்**
**கனைகழல் ஈசனைக் காண அரிதால்**
**கனைகழல் ஈசனைக் காண்குற வல்லார்**
**புனைமலர் நீர்கொண்டு போற்ற வல்லாரே. (1826)**

சிவபிரானை நீடு நினைத்து தோத்தரிப்பதும் அவனைப் பற்றிய பேருண்மைத் தத்துவங்களை எடுத்துரைப்பதும் அல்லாமல், ஒலிக்கும் கழலணிந்த ஈசனைக் காண்பது அரிதேயாம். கனை கழல் ஈசனைத் தம் திருவருள் வலத்தால் காணவல்லவர்களே அழகிய மலர்களையும் நீரையும் கொண்டு, பூசித்துப் போற்ற வல்லவராம்.

**473. புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு**
**அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்**
**எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை**
**நண்ணறி யாமல் நழுவு கின்றாரே. (1828)**

சிவ புண்ணியமாம் சிவபூசையை நெறிப்படி செய்வோர்க்கு அருச்சனை செய்யப் பூவும், மஞ்சனம் ஆட்ட நீரும் உண்டு. அங்ஙனம் வழிபாடு செய்யும் தன்மையைச் சிவன்கண்டு தன் அருள் புரிதலைச் செய்யும். எண்ணுக் கடங்காப் பாவிகள் எம் இறைவனாம் ஈசனைச் சென்றடையும் நெறி தெரியாமல் அந்தோ விலகிச் சென்று விடுகிறார்கள்.

**474. ஆவிக் கமலத்தின் அப்புறத்து இன்புற**
**மேவித் திரியும் விரிசடை நந்தியை**
**கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடை**
**தாவிக்கு மந்திரம் தாமறி யாரே. (1842)**

ஆன்மாவின் தாமரையாகிய ஆயிரம் இதழ் தாமரை (சகஸ்ரதளம்) மேல் நிலவி இன்பமடையப் பரவெளியிலே நிலைத்து விளங்கும் விரிந்த சடைமுடியை உடைய நந்தி எம் பெருமானை வாயினால் பெயரைக் கூவிச் சிவ சிவ என்றழைத்து மனத்தினால் சிவயசிவ என்று கருதி - இடையறாது நினைத்து - நெஞ்சினைச் சிவத்திடையே கொண்டு சென்று தாவிக்கும் - தாபிக்கும் - அதாவது நிலை நிறுத்தும் பிரணவ மந்திரத்தினைப் பலர் அறிகின்றிலர்.

**475. சாணாகத் துள்ளே அழுந்திய மாணிக்கம்**
**காணும் அளவும் கருத்தறி வாரில்லை**
**பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு**
**மாணிக்க மாலை மனம்புகுந் தானே. (1843)**

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞா எனப்படும் ஆறு ஆதாரங்களுக்கிடையே உள்ள தூரம் ஒரு சாண் ஆகும். அப்பர வெளியிலே அழுந்திக் கிடக்கும் மாணிக்க மணியைக் காணும் கால அளவினை அறிகின்ற கருத்தினை அறிய வல்லவரில்லை. அவன் திருவடி உணர்வினைப் போற்றி வளர்த்துத் தியானம் செய்ய வல்லவர்க்கு மாணிக்க மலையன்ன சிவபிரான் அவர்கள் உள்ளத்தில் புகுந்திடுவான். (மாணிக்கமலை - மாணிக்கமாலை என்பது விகாரம்.)

## குருபூசை

**476. மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்**
**ஆவயின் ஞானநெறி நிற்றல் அர்ச்சனை**
**ஓவற உட்பூசனை செய்யில் உத்தமம்**
**சேவடி சேறல் செயலறல் தானே.** *(1849)*

திருவடி ஞானமாகிய சிவஞானத்தினையே மேவி, அதில்மேல் ஓங்கிச் சிறந்திருந்தால் மெய்ப்பொருள் காணலாம். அந்த அருள் ஞான வழியிலே நிலைநிற்றலே, அர்ச்சனை ஆகும். ஒழிவில்லாமல் மானச பூசையாம் அகவழிபாடு செய்தலே மேலான வழிபாடாகும். அவன் திருவடியைச் சென்றடைதல், தன் செயலற்று எதையும் சிவன் செயலாகவே காண்டலாகும்.

**477. இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை**
**வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்**
**இந்துவும் பானுவும் இலங்காத் தலத்திடை**
**வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே.** *(1852)*

இந்துவாம் சந்திர கலையிலும் பானுவாம் சூரிய கலையிலும், பிராண வாயு இயங்கும் காலத்திலே இறைவனை நோக்கிச் செய்கின்ற வழிபாடு தியானம் யாவும் அசுரர்களுக்கு உவப்பானதாகும். அவ்வாறின்றி வடகலை, பிங்கலை இரண்டுமற்றச் சுழிமுனையில் பிராண வாயு இடம்பெறும்போது சிவ வழிபாடு தியானம் செய்தால் அவ்வழிபாடு, தியானம் யாவும் சிவ பிரானாகிய நந்தி பெருமானையே சென்று அடையும்.

478. இராப்பகல் அற்ற இடத்தே இருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகி
இராப்பகல் அற்ற இறையடி இன்பத்து
இராப்பகல் மாயை இரண்டிடத் தேனே. (1856)

இரவும் பகலும் அற்ற ஜாக்கிரம், சொப்பனம், துரியம், கடந்த துரியாதித நிலையிலே நின்று நினைவலைகள் யாவற்றையும் ஒடுக்கிச் சிவானந்தத் தேனைப் பருகி, இரவு பகலற்ற சிவனடியின் வைகும் இன்பத்திலேயே திளைத்து இரவாகிய அசுத்த மாயையும் பகலாகிய சுத்த மாயையும் நான் கடந்து நின்றேன்.

## மகேஸ்வர பூசை

479. படமாடக் கோயில் பகவற் கொன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற் கங்காமே. (1857)

சித்திரங்கள் நிறைந்த மாடங்களை உடைய கோயிலிலே ஸ்தாபித்துள்ள இறைவனுக்கு என படைத்தளிக்கும் நைவேத்தியங்கள், ஆறு ஆதாரங்களைத் தன்னிடத்தே அமைந்த நடமாடும் உடலை, இறைவன் உள்ளத் துறையும் கோயிலாக் கொண்ட சிவத் தொண்டர்களுக்குச் சென்று பயனாக மாட்டா. ஆனால் நடமாடக் கோயிலாம் சிவத் தொண்டர்களுக்கு அளிக்கும் எந்த ஒரு பசியாற்றல் முதலிய உதவிகள் படம் நிறைந்த மாடக் கோயில்களில் உறையும் இறைவனைச் சென்றடையும் என்பதாம்.

480. அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென்
பகரும் ஞானி பகலுண் பலத்துக்கு
நிகரில்லை என்பது நிச்சயம் தானே. (1860)

ஆயிரம் கிராமங்களைப் பார்ப்பனர்களுக்குத் தானமாகக் கொடுத்தாலும் என்ன பயன்? சிகரங்களை உடைய ஆயிரம் கோயில்களைக் கட்டி முடித்தாலும் என்ன பயன்? உலகத்

தோரால் சிறப்பித்துப் புகழப்படும் சிவஞானிக்கு அளிக்கும் ஒரு பகல் உணவுக்கு மேற்கூறியவை நிகரில்லை என்பதே நிச்சயம்.

**481. அழிதகக வில்ல அரன் அடியாரைத்**
**தொழுதகை ஞானத்துத் தூங்கிருள் நீங்கும்**
**பழுபடா வண்ணம் பண்பனை நாடித்**
**தொழுதெழ வையத் தோரின்ப மாமே. *(1864)***

ஒருசிறிதும் அழியும் தன்மையே இல்லாத சிவனடியார் களாகிய சிவஞானிகளைப் பயபக்தியோடு வணங்கி நிற்கும் கைகள் அவர்களிடம் உள்ள மும்மல இருளை நீக்கி விடும். அந்நிலையிலே அப்பண்பு சிறிதும் கெடுதி படாவண்ணம் சிவபெருமானை நாடி அவன் அடிகளைத் தொழுது எழ இவ்வுலகத்திலேயே சிவப்பேரின்பம் சித்திக்கும்.

## அடியார் பெருமை

**482. அவ்வுலகத்தே பிறந்தவ் வுடலொடும்**
**அவ்வுலகத்தே அருந்தவம் நாடுவர்**
**அவ்வுல கத்தே அரனடி கூடுவர்**
**அவ்வுல கத்தே அருள் பெறுவாரே. *(1869)***

மெய்யடியார்களே சிவஞானிகள் வாழ்கின்ற அந்த அருளுலகத்திலே பிறப்பார்கள். அந்த அருள் உலகத்துக்கு ஏற்ற தூய உடலோடும் விளங்குவார்கள். அந்த உலகத்திடை இருந்தபடி சிவனடி அருள் எய்த அருமையான தவங்களைச் செய்வார்கள். அப்படி அருள் தவம் புரிந்து சிவலோகத்திலே அரனடியைச் சேர்ந்து அவன் அருளைப் பூரணமாக அடைவார்கள். (முதலடியிலே உள்ள அவ்வுலகம் மண்ணிலே அமைந்த விண்ணுலகம்)

**483. அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியும்**
**கொண்ட சராசர முற்றும் குணங்களும்**
**பண்டை மறையும் படைப்பளிப் பாதியும்**
**கண்ட சிவனும் என் கண்ணன்றி இல்லையே. *(1871)***

ஏழுவகைப்பட்ட அண்டங்களும் பரந்து விரிந்துள்ள விண்ணும், இவைகளை இடமாகக் கொண்ட ஆன்மாக்களும் இயங்குதிணை நிலைத்திணையானவும், அவ்வவற்றின் குணப் பண்புகளும், படைத்தல், காத்தல் முதலிய ஐந்தொழில்களும் இவைகளைத் திருவருட் பேராற்றலால், கண்ட சிவனும் என்னிடத்தன்றி - என் உள்ளத்துள்ளேயல்லாமல், வேறெங்கும் இல்லை.

**484. பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடத்துள்**
**உண்ணின்ற சோதி ஒருவர்க் கறியொண்ணாக்**
**கண்ணின்றி காணும் செவியின்றிக் கேட்டிடும்**
**அண்ணல் பெருமையை ஆய்ந்தது மூப்பே. (1872)**

இறைவன் பெண் வடிவனுமல்லன். ஆண் வடிவனுமல்லன். பேடுமல்லன். அவன், மூடிக்கிடக்கும் மனத்தகத்துள்ளே விளங்குகின்ற பேரொளிப் பிழம்பாவான். அவன் ஒருவராலும் அறிய வொண்ணாதவன். கண் காது முதலிய பொறிகளின்றியே அச்சிவம் காணும் கேட்கும் தன்மை வாய்ந்தது. அந்த அண்ணலின் பெருமையைச், சிவ ஞானத்தைக் கொண்டு ஆய்ந்தறிவதே மூத்த அறிவுடைமையாகும்.

**485. இயங்கும் உலகினில் ஈசன் அடியார்**
**மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்**
**புயங்களு மெண்டிசை போது பாதாளம்**
**மயங்காப் பகிரண்ட மாமுடி யோனே. (1873)**

சிவசத்தியாம் ஆற்றல் இயக்கம் ஓயாது இயங்குகின்ற இந்த உலகத்திலே உள்ள ஈசனின் மெய்யடியார்கள், தம்பொறி புலன்கள் மயங்காத மெய் நெறியிலே செல்வார்கள். அவ்வடியார்கள் வானுலகத்தையும் ஆள்பவராவார்கள். அவ்வீசனின் எண் தோள்களும் எட்டு திசையிலும் அடியவர்களைப் பரவி ஆடும். அவன் திருவடி மலர்களோ பாதாளத்திலும் கீழதாம். அவன் திருமுடிகளோ மயங்கும் தன்மையற்ற அண்டவெளியே ஆகும்.

**486. அகம்படி கின்றநம் ஐயனை ஒரும்
அகம்படி கண்டவர் அல்லலிற் சேரார்
அகம்படி உட்புக்கு அறிகின்ற நெஞ்சம்
அகம்படி கண்டாம் அழிக்கலும் எட்டே. (1874)**

நம் நெஞ்சகத்துள்ளே படிந்து விளங்குகின்ற ஐயனாகிய சிவனைச் சிந்தித்து வழிபடும் மெய்யன்பர்கள், ஆங்காரம் அடங்கினவர்கள். அதனால் பிறவித் துன்பத்துள் சேரார். எனவே அகங்காரம் அடங்கப்பெற்று, நெஞ்சத்தினுள்ளே புகுந்து இறைவனது தன்மையை அறிகின்ற உள்ளந்தான், தன் முனைப்பாம் அகம் அழிக்கப் பெற்று, புரியட்டகமாம் எண்ணுறுப்பால், ஆய நுண்ணுடலை அழித்தலுமாவர்.

**487. அவன்பால் அணுகியே அன்புசெய் வார்கள்
சிவன்பால் அணுகுதல் செய்யவும் வல்லன்
அவன்பால் அணுகியே நாடு மடியவர்
இவன்பால் பெருமை இலயம தாமே. (1880)**

மேற்கூறிய நிலை கைவரப்பெற்ற சிவனடியார்களைச் சென்று அணுகி அன்பு கூர்ந்து அவ்வடியவர்க்கு அடியவர் ஆனவரைச் சிவபிரான் அணுகி ஆட்கொள்ளுதலைச் செய்யவும் வல்லவனாம். அப்படி அடியவர்களை நாடித் தொண்டு செய்யும் அடியார்க்கு அடியாரிடத்தில் அச்சிவனது அளவிடற்கரிய பெருமைகள் வந்தடைந்து இலயிக்கம்.

**488. சிவயோகி ஞானி செறிந்த அத்தேசம்
அவயோக மின்றி அறிவோருண்டாகும்
நவயோகம் கைகூடும் நல்லியல் காணும்
பவயோகம் இன்றிப் பரலோக மாமே. (1882)**

சிவயோக நெறியினைச் சார்ந்த ஞானிகள் வாழ்கின்ற அந்தப் புண்ணிய பிரதேசம் (நாடு, நகரம்) அவமான யோக நெறிகளும், கெட்ட, கீழான, நெறிமுறைகளும் இல்லாமல் அறிவோர் கூட்டமே வாழ்கின்ற பிரதேசமாகி விளங்கும். புதுமை வாய்ந்த சிவயோகப் பயன்கள் கைகூடும். நல்லியல்புகள் பல விளையும். பாவத்தின் வித்தாகிய மலச் சேர்க்கை நீங்கிப் பரலோகம் சித்திக்கும்.

## முத்திரை பேதம்

489. நாலுஏழு மாறவே நண்ணிய முத்திரை
பாலான மோன மொழியிற் பதிவித்து
மேலான நந்தி திருவடி மீதுய்யக்
கோலா கலங்கெட்டு கூடுதல் முத்தியே. (1892)

நாலும் ஏழும் ஆன பதினொன்று கருவிகள் தத்தம் சிவபோத வழியிலிருந்து விலகிடாமல் சிவபோத வழியிற் செல்லப் பொருந்திய முத்திரைகள் இரண்டு. (சாம்பவி, கேசரி என்பன) அமிர்தத்தை ஒப்பான மௌன மொழியாகிய ஓம் என்னும் பிரணவத்தில் உள்ளத்தைப் பதிய வைத்து, எவற்றுக்கும் மேலானதாய நந்தி எம்பெருமான் திருவடி மீது உய்தலைச் செய்ய வேண்டி, மனம் ஒன்றுதலைச் செய்தல், வீண் ஆரவாரங்கள் ஒழிந்து முத்தி கைகூடும். நான்கு ஏழு, மாற முத்திரை என்பன கருவி காரணங்களின் இயல்பான போக்கை மாற்றி முத்திநெறிக்கு உரிய உபாயத்தைக் கூறுவதாம்.

490. துரியங்கள் மூன்றும் சொருகிடனாகி
அரிய உரைத்தாரம் அங்கே அடக்கி
மருவிய சாம்பவி கேசரி உண்மை
பெருகிய ஞானம் பிறழ் முத்திரையே. (1893)

மூன்று துரியங்களும் தாம் அடங்கும் இடமாகி நிற்க, அரிய பொருள்களைப் பேசும் நாக்கும் (தாரம்) அடங்கி மௌனமாகி விட, இவை பொருந்திய சாம்பவி கேசரி, எனும் இருமுத்திரைகளும் மெய் உணர்வினைத் தந்து ஞானம் விளங்கும் முத்திரைகளாம்.

துரியம் - ஜீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என மூன்றாம். உயிர் உடலுடன் கூடித் தன்னை மறந்த நிலையே துரியம் என்ப.

491. சாம்பவி நந்தி, தன்னருட் பார்வையாம்
ஆம்பவ மில்லா அருட்பாணி முத்திரை
ஓம்பயில் ஓங்கிய உண்மைய கேசரி
நாம்பயில் நாதன் மெய்ஞ்ஞான முத்திரையே. (1894)

சாம்பவி முத்திரையாவது நந்தி எம் பெருமானின் அருட் பார்வையை விளைவிப்பதாகும். பாவப் பிணியாம் பிறப்பிறப்பினை நீக்கி விடும் முத்திரையே அருட் தத்துவத்தை உணர்த்தும் பாணி முத்திரையாம். அதாவது சின்முத்திரை யாகும். (பாணி - கை) ஓம் என்னும் பிரணவத்தைப் பயின்று மேலூர்ந்தோங்கும் முத்திரை கேசரி முத்திரையாகும். இவைகளே நாம் பயின்றொழுக வேண்டிய உண்மையான ஞான முத்திரைகளாகும்.

**492. வாக்கும் மனமும் இரண்டும் மவுனமாம்**
**வாக்கு மவுனத்து வந்தாலும் மூங்கையாம்**
**வாக்கும் மனமும் மவுனமாம் சுத்தரே**
**ஆக்குமச் சுத்தத்தை யாரறி வார்களே. (1899)**

உரையும் மனமும் ஆகிய இரண்டும் செயலற்றுச் சும்மா இருப்பதே மௌன நிலையாகும். மாறாக வாய் மட்டும் பேசாநிலையில் பொருந்தி இருந்தால் அது மௌனமல்ல, ஊமை நிலையே ஆகும். எனவே வாக்கும் மனமும் ஆகிய இரண்டும் செயலற்று சும்மா இருக்கும் மவுனியர்களே தூய்மையானவர்கள். அங்ஙனம் தூய்மையாக இருத்தற்குரிய மவுனநிலையை அறிபவர்கள் யார்?

**493. மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை**
**ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை**
**தேனிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை**
**கானிக்கு முத்திரை கண்ட சமயமே. (1900)**

மோனமாகிய முத்திரை (அடையாளம்) முத்தர்களுக்குரிய முத்திரையாகும். ஞானத்துக்குரிய முத்திரையோ குருநாதர் களுக்குரிய முத்திரையாகும். இறைவனை (சிவத்தை) தியானிக்கும் முத்திரைதான் சித்தாந்த முத்திரையாகும். (கால் + நிற்கும்) கானிக்கும் முத்திரையாகிய காற்று அடங்கி நிற்குமாறு செய்யும் பயிற்சியாம் முத்திரைதான் சமயம் கண்ட முத்திரையாகும்.

## விந்துற்பனம்

494. அந்தமும் ஆதியுமாகிப் பராபரன்
வந்த வியாவி எனலாய அந்நெறி
கந்தம தாகிய காரண காரியம்
தந்து ஐங்கருமமும் தான்செய்யு மாறே. (1927)

இறைவனாகிய பரமசிவனே அனைத்து அந்தமுமாவான். அவனே ஆதியுமாவன். (அந்தம் ஆதி என்மனார் புலவர் என்கிறது போதம்)

அந்த ஆதி அந்தமானவனே இந்த அண்டங்கள் அனைத்தும் தன்னகத்தே கொண்டு வியாபித்துள்ளான் என்று சொல்லப்படும். அந்த நெறிதான் கந்தம் - கிழங்கும் முளையும் போன்றதாய காரண காரியமாகும். அந்த முதற் காரணம் ஆகிய மாயையாம் கிழங்கிலிருந்து பிரபஞ்சமாய காரியத்தைத் தந்து ஐங்கருமமாகிய சிருட்டி, திதி, சங்கார, திரோபவம், அனுக்கிரகம் எனும் ஐந்து கருமங்களையும் தான் செய்கின்ற பீஜமாவான் (பீசம் - வீயம்)

495. வீயம தாகிய விந்துவின் சத்தியால்
ஆய அகண்டமும் அண்டமும் பாரிப்ப
காய ஐம்பூதமும் காரிய மாயையில்
ஆயிட விந்து அகம் புறம் ஆகுமே. (1928)

பீஜமாகிய விந்துவின் ஆற்றலால் உண்டாகிய அண்டமாகிய வெளியும், அண்டங்களும், விளக்கமுற வெளியுடன் கூடிய ஐம்பூதங்களும், காரிய மாயையாம் அசுத்த மாயையில் தோன்ற, விந்து அவற்றின் அகமும் புறமுமாகி நிற்கும். (அண்டோற்பத்திக்கும், பிண்டோற்பத்திக்கும், விந்துவே காரணம்)

496. வித்தினில் அன்றி முளையில்லை அம்முளை
வித்தினில் அன்றி வெளிப் படுமாறில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
அத்தன்மை யாகும் அரன்நெறி காணுமே. (1932)

விதையிடத்தில் அல்லாமல், வேறிடத்தில் அதன் முளை விடுதல் இல்லை. முளையும் விதையினிடத்திலிருந்தே வெளிப்படும். பிற இடங்களில் வெளிப்படாது. வித்தும் முளையும் இருபொருளல்ல. மலரும் மணமும் போல அபின்னமானது. ஒன்றுள் ஒன்று அடங்கித் தோன்றும் இரு பொருளாம். அந்த தன்மையை ஒத்ததே அரனது செந்நெறியாம் சித்தாந்த நெறியும் ஆகும். இதுவரை அண்டத்துக்குக் காரணமாம் விந்து கூறப்பட்டது.

இனி பிண்டத்துக்குக் காரணமாம் விந்து கூறப்படும்.

**497. அருந்திய அன்னம் அவைமூன்று கூறாம்**
**பொருந்து முடல் மனம் போம்மலம் என்னத்**
**திருந்தும் உடல் மனமாம் கூறு சேர்ந்திட்டு**
**இருந்தன முன்னாள் இரதம தாகுமே. (1933)**

நாம் உண்ட உணவுதான் மூன்று கூறுடையதாகும். அவை உடலில் பொருந்துவது, மனத்தோடு பொருந்தி அமைவது ஜீரணத்துக்குப் பின் சக்கையாக வெளியேறுவது என்பவையாம். இம்முக் கூற்றிலே சக்கையாகி வெளியேறும் மலம் நீங்க முன் கூறிய உடல் மனம் பொருந்தும் இரு கூறுகளும் முன் நாளிலே உண்ட உணவின் சாரத்தால் ஆனதாகும். எனவே உணவின் தன்மைக்கேற்பவே உடலும் மனமும் அமையும்.

**498. இரதம் முதலான ஏழ்தாது மூன்றின்**
**உரிய தினத்தில் ஒருபுற்பனி போல்**
**அரிய துளிவிந்து ஆகும்ஏழ் மூன்றில்**
**மருவிய விந்து வளரும் காயத்திலே. (1934)**

இரதம் முதலாகச் சொல்லப்படும் ஏழ்வகை தாதுக்களில் (ரசம், ரத்தம், மாமிசம், மேதசும், அத்தி, மச்சை, சுக்கிலம்) ரசம், ரத்தம், சுக்கிலம், பக்குவமான தினத்திலே, ரசம் ரத்தமாகி, ரத்தம் சுக்கிலமாகி, புல்நுனி பனித் துளிபோல் மாற்றமடையும். இந்த விந்துதான் ஏழ்மூன்று நாட்கள் அதாவது இருபத்தியோரு நாட்கள் உடலிலே வளரும்.

499. அழிகின்ற விந்து அளவை அறியார்
அழிகின்ற தனையுட் காக்கவும் தேரார்
கழிகின்ற காயத்து அழிந்தயர் வுற்றோர்
அழிகின்ற தன்மை அறிந்தொழி யாரே. (1936)

தம் உடலில் இருந்து வெளிப்போந்து அழிந்து போகும் விந்துவின் அளவினை, அதாவது பலப்பல துளி ரத்தமே விந்தாகின்றது என்று அதன் அருமையை, அறியமாட்டார்கள். அவ்விந்து நாசத்தால் தம் உடல்வளம் மனவளம் குன்றித் தேய்ந்து போகின்ற தம்மையும் தம் உள்ளத்தையும் காக்க வேண்டியதையும் உணரார். அழிந்து போகும் உடலிலே சிறிது சிறிதாக அழிந்து அழிந்து சோர்வடைந்தவர்கள், இவ்வாறு தாம் அழிகின்ற தன்மையினை அறிந்த போதிலும் அந்தச் செயலைத் தம்மிடமிருந்து ஒழித்து தம்மைக் காத்தலைச் செய்யார்.

## விந்துசயம் - போக சரவோட்டம்

500. பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்று போய்
ஓர்க்கின்ற உள்ளம் உருக அழல்மூட்டி
பார்க்கின்ற கண்ணாசை பாழ்படமூலத்தே
சேர்க்கின்ற யோகி சிவயோகி தானுமே. (1937)

நம்மைக் காதலோடு பார்க்கின்ற மாதரை, நாம் பார்த்தல் ஒரு சிறிதும் இன்றி விலகிப் போய்த், தனித்து சிவனை நினைத்தபடி, உள்ளம், உருகும்படியாகத் தன் மூலக் கனலின் தீமூட்டி, மூலாதாரத்திலிருந்து குண்டலியை மேலெழப் பண்ணி அதன் மூலமாகப் பார்க்கின்ற கண்ணினது ஆசைதான் அடியோடு அழியும்படி, மேற்சொன்ன குண்டலியை மூலாதாரத்தின் நடு நாடி வழியே விந்துவை செலுத்துகின்றவனே சிவயோகியாவான்.

501. தானே அருளால் சிவயோகந் தங்காது
தானே அக்காமாதி தங்குவோனும் உட்கும்
தானே அதிகாரம் தங்கில்சடம் கெடும்
ஊனே அவற்றுள் உயிரோம்பா மாயுமே. (1938)

ஒருவன் தான் திருவருளிலே நாட்டமற்றவனாய் சிவயோக நெறிக்கண் தங்கி நில்லாமல், மேற்சொன்ன காமாதிகளுள் தங்குகின்றவன், தன் உடல் வலி, மனவலி ஒழிந்து அஞ்சுவான். அவன்தான் புலன்களின் ஆட்சிக்குட்பட்டு அதில் தங்கி வாழ்வானாகில் அவன் உடம்பு நாசமாகும். இவ்வுடலும் மேற்கூறியவற்றோடு தன் ஆன்ம முன்னேற்றத்திற்கு உதவுதலின்றிப் பாழாகிப் போய் அழியும்.

**502. ஒழியாத விந்து உடல் நிற்க நிற்கும்**
**அழியாப் பிராணன் அதிபலம் சத்தி**
**ஒழியாத புத்தி தபம் செபம் மோனம்**
**அழியாத சித்தி உண்டாம் விந்து வற்றியே. (1948)**

விந்து தான் மூலக் கனலால் வற்றி வறண்டு போய்ப் பயனின்றி, வெளியே ஒழுகுதலற்று உடலிலேயே நிலைத்து நிற்பின், பிராணனுக்கு அழிவில்லை. இந்த ஆன்மாவுக்கும் உடலுக்கும் அதிக பலமும் சத்தியும் குறைவில்லாத புத்தியும், தவம், செபம், மோனமும் உண்டாகும். அதோடு பல்வகைச் சித்திகளும் வந்தடையும்.

**503. அறியாது அழிகின்ற ஆதலால் நாளும்**
**பொறியால் அழிந்து புலம்புகின் றார்கள்**
**அறிவாய் நனவில் அதீதம் புரியச்**
**செறிவாய் இருந்து சேரவே மாயுமே. (1952)**

முற்கூறிய உண்மைகளை நன்கு அறியாமையால் மக்கள் ஒவ்வொரு நாளும் தம் விந்தை விரயம் செய்து தினம் தினம் தத்தம் பொறிபுலன்களாலாம் வேட்கையால் அழிகின்றனர். அதனால் உடல் கேடுற்றுப் புலம்புகின்றார்கள். திருவருளிலே அறிவை செலுத்தியவராய், நனவின் கண்ணும் அதீதமாகிய நிலையை அடைந்தவர்க்குச் சிவத்தோடு செறிவாய் இருக்கும் நிலை வாய்க்கும். அக்கால், விந்து நடுநாடி வழியேகி ஒளியாகி நிற்கத் தூல விந்து கட்டுப்பட்டு நிற்கும்.

**504. மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக்**
**காதல தாகிய காமம் கழிந்திடும்**
**சாதலு மில்லை சதகோடி ஆண்டினும்**
**சோதியினுள்ளே துரிசறுங் காலமே. (1953)**

நாம் மாய்ந்து ஒழிய, நம் மேல் வருங்கூற்றுவனே என்று மாதரை நினைத்தால், காதல் மிகுதியால் விளைந்திடும் காமம் ஒழிந்து விடும். அப்படிப்பட்ட காமக் கழிவு ஏற்படாமையால், நம் சாதலும் நீங்கும். நூறுகோடி ஆண்டுக்காலம் சிவஜோதியில் கலந்து நிற்க, ஆன்மாவின் ஆணவக் குற்றம் நீங்கிப் போகும்.

**505. விந்துவும் நாதமும் மேவக் கனல்மூல**
**வந்த அனல் மயிர்க்கால் தொறும் மன்னிடச்**
**சிந்தனை மாறச் சிவம் அகமாகவே**
**விந்துவும் மாளும் மெய்க் காயத்தில் வித்திலே. (1963)**

விந்துவும் நாதமும், (ஒளியும் ஒலியும்) உடலிடத்து நடு நாடியிலே பொருந்தி மேலெழ, மூலாதாரத்திலே உள்ள மூலக் கனலினால் உண்டாகிய அனல் உடலின் மயிர்க்கால் தோறும் நிலைபெற்று மெய் புளகிப்பச் சிந்தனையானது உலகியலிலிருந்து மாறி சிவ சிவ என்று தியானித்து தன் உள்ளத்திலே சிவம் நிலை பெறும்படி நிற்க, விந்துவும் மெய்யாம் இக்காயத்திலே வற்றிவிடும்.

**506. வித்துக் குற்றுண்பான் விளைவறி யாதவன்**
**வித்துக் குற்றுண்ணாமல் வித்துச் சுட்டுண்பவன்**
**வித்தக்குற் றுன்பானில் வேறலன் ஈற்றவன்**
**வித்தக்குற் றுண்ணாமல் வித்துவித் தானன்றே. (1964)**

தான், விளைவுக்கென்று வைத்திருக்கும் விதையினைக் குற்றி அரிசியாக்கி உணவுக்கு உபயோகிப்பவன் விதையால் உண்டாகும் பயனை அறியாதவன். விதையை, குற்றி உண்ணாமல் விதையைச் சுட்டு (வறுத்து) உண்பவன், விதையைக் குற்றி உண்பவனிலும் வேறானவனல்லன். இவ்விரண்டு வகையிலும் சேராமல் ஈற்றில் உள்ளவன் விதையைக் குற்றி உண்ணாமல் விதையை விதைத்து அதன் பயனை அனுபவித்தவனாவான். விதையைக் குற்றி உண்பவன் இல்லறத்தில் மனைவியுடன் வாழ்ந்து விந்தை வீணாக்குகின்றான். விதையை வறுத்து உண்பவன் ஹடயோகி. முத்திரைகளால் பிறவற்றால் விந்தை காய வைப்பவன். மூன்றாமவன் விந்தின் பயனை அறிந்து அதை நடு நாடி வழியே செலுத்தி ஒளிமண்டலம் காண்பவன்.

507. விந்துவும் நாதமும் மேவியுடன் கூடிச்
சந்திரனோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம் வந்தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாமே. (1971)

விந்துவும் நாதமும் திருவருளால் பொருந்தி ஒன்றுடன் ஒன்று கூடி சந்திரகலையில் இணையும் காலத்திலே சிதாகாசப் பெருவெளியாம், சந்திர வானத்திலே ஊறுகின்ற அமுதம் பெருகும். அக்கால் அங்கு உதிக்கும் ஓம் என்னும் பிரணவ மந்திரம் ஆகுதியாகும்.

508. சத்தமும் சத்தமனமும் மனக் கருத்து
ஒத்தறி கின்ற இடமும் அறிகிலர்
மெய்த்தறி கின்ற விடமறி வானர்க்கு
அத்தன் இருப்பிடம் அவ்விடம் தானே. (1973)

நாத ஒலியும் அதை உணர்கின்ற மனமும், அந்த மனத்தின் கருத்தை ஒத்து அறிகின்ற சிவம் உள்ள இடத்தையும் மாந்தர் அறிகின்றிலர். மெய்யாக இவைகளை உள்ளவாறு உணர்வாராகில் அத்தனாம் சிவம் உறையும் இருப்பிடம் அதுவே என்பதை உணரப் பெறுவார்கள். அதாவது இவைகளை உள்ளவாறு உணர்பவர்களின் ஜீவன் நாதாந்த நிலை அடைந்து சிவமாகி விடும் என்ப.

## ஆதித்த நிலை - அண்டாதித்தன்
## (இவ்வண்டத்தில் நாம் காணும் சூரியன்)

509. பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவனாய் நின்ற புண்ணிய நாதன்
இகலற ஏழுலகம் உற வோங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே. (1976)

நமக்கு நாள்தோறும் ஒளிதரும் பகலவனே திருமாலாகவும், எல்லா உயிர்களுக்கும் புகலிடமாகி விளங்கும் புண்ணிய நாதனாம் சிவபிரானாகவும் விளங்குகின்றான். பேதா பேதம் இன்றி ஏழு உலகங்களும் தழைத்து ஓங்கச் செய்யும்

சூரியனே எல்லா ஆன்மாக்களுக்கும் பிராண சத்தியாம் முதற் பொருளுமாவான்.

**510. தானே உலகுக்குத் தத்துவமாய் நிற்கும்**
**தானே உலகுக்குத் தையலுமாய் நிற்கும்**
**தானே உலகுக்குச் சம்புவுமாய் நிற்கும்**
**தானே உலகுக்குத் தண்சுட ராகுமே. (1978)**

அனைத்து அண்டங்களுக்கும் புகலிடமாய் நின்ற புண்ணிய நாதனே, உலகனைத்துக்கும் தத்துவமாய், உண்மைப் பொருளாய் நிற்பவனாவான். அவனே உலகனைத்துக்கும் திருவருட் சத்தியாம் தையலாகவும் நிற்பவன். அவனே, உலகத்துக்கு ஆதாரமான சிவனாகவும் விளங்குபவன். அவன்தான் உலகனைத்தையும் விளக்கமுறச் செய்யும் தண்சுடர் ஒளியாகவும் சந்திரனாகவும் விளங்குபவன் ஆகும்.

**511. ஆதித்தனோடே அவனி இருண்டது**
**பேதித்த நாலும் பிதற்றிக் கழிந்தது**
**சோதிக்குள் நின்று துடியிடை செய்கின்ற**
**வேதப் பொருளை விளங்கு கிலீரே. (1981)**

சூரியன் ஒளிதராவிடில் உலகம் இருளால் மூடப் பெறும். பேதப் பட்ட நான்கு வகைச் சொற்களால் (எழுத்தோசை) சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியாம் இவை பிதற்றி ஒய்ந்திடும். சோதி வடிவான பரசிவத்துள்ளே நிலைத்து நின்று துடியிடையாம் சத்தி, ஆன்மாக்களுக்கு உணர்த்துகின்ற வேதத்தின் உட்பொருளை அறிய மாட்டீர்கள்.

## பிண்டாதித்தன்

**512. நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும்**
**கன்றனை நந்திக் கருத்துள் இருந்தனன்**
**கொன்று மலங்கள் குழல்வழி ஓடிட**
**வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. (1985)**

கன்றனைய, பிரணவ சொரூபமான, நந்தி எம்பெருமான் நின்றும், இருந்தும், படுத்துக் கிடந்தும், நடந்துமாம்

எந்தநிலைக் கண்ணும் ஆன்மாக்களின் கருத்தினுள்ளே எக்காலமும் இருந்தனன். நம்முடைய மும்மலங்களும் திருவருட் சத்தியால் அழிக்கப்பட்டு, விரிசுடராய் விளங்கும் பிண்டாதித்தன் வீணாத்தண்டு வழியே மேல் நோக்கிப்பாய, அந்த விரிசுடரைப் பரப்பும் பிண்டாதித்தன் (உடலிலே விளங்கும் சூரியன்) காணப்படுவான்.

**513. ஆதித்தன் ஓடி அடங்கும் இடங்கண்டு**
**சாதிக்க வல்லவர் தம்மை உணர்ந்தவர்**
**பேதித்து உலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்**
**ஆதித்த னோடே அடங்கு கின்றாரே. (1986)**

ஆதித்தனாம் சூரியகலை (பிங்கலை) வழியாக பிராணவாயு சென்று நடுநாடியில் புகும். அங்ஙனம் புகுங்கால் உண்டாம் ஒளியே பிண்டாதித்தனாம். அந்தப் பிண்டாதித்தன் இடத்தினைக்கண்டு. அதிலே நிலைக்க வல்லவர்களே தம்மை உணர்ந்தவராவர். இவ்வழி முயலாமல் உலகத்திலே பலவகையாக மாறுபட்டு பிதற்றி வாதாடித் திரிபவர்கள் அனைவரும் ஞாயிற்றின் (வான வழி ஏகும் ஞாயிறு) இயக்கத்தால் கணக்கிடப்பட்டு அடங்கி மாய்வர்.

## ஞானாதித்தன்

**514. பொய்யிலன் மெய்யன் புவனாதி எந்தை**
**மையிருள் நீக்கும் மதி யங்கி ஞாயிறு**
**செய்யிருள் நீக்கும் திருவுடை நந்திஎன்**
**கையிருள் நீக்கக் கலந்தெழுந் தானே. (1996)**

இறைவன் சிவபிரான் பொய் சிறிதுமற்ற உண்மை சொரூபி. இந்த அண்டகோளங்கள் அனைத்துக்கும் தந்தை. மையன்ன இருளைப் போக்கும் அருள் வடிவான நந்தி எம்பெருமான். அவன் என்னிடத்துள்ள கீழான ஆணவ மல இருள் நீக்கம் செய்ய என் ஆன்மாவிலே கலந்தெழுந்தான்.

**515. தனிச் சுடர் ஏற்றித் தயங்கிருள் நீங்க**
**அளித்திடும் மேலை அருங்கனி யூறல்**
**களிச் சுடராய் நின்ற கயிலையில் ஈசன்**
**தனிச் சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே. (1997)**

ஒப்பற்ற பேரொளிப் பிழம்பாக விளங்கும் சிவபிரான் செறிந்த இருள் நீங்கும்படியாகத் தன் கதிர்க் கிரணங்களைப் பலதிக்கும் வீசி அருள் கனியின் ஊறலைச் சுவைத்துத் தித்திக்கச் செய்வான். கனிந்த அருள் ஒளியாய் விளங்குகின்ற கயிலை நாதனாம் ஈசன், மேலான, பெருஞ்ஜோதியான். எல்லா ஜோதிகளுக்கும் மேலானதாய் விளங்குபவன் ஆவான்.

**516. நேரறி வாக நிரம்பிய பேரொளி**
**பேரறி யாது புவனங்கள் போய் வரும்**
**தேரறி யாத திசையொளி யாயிடும்**
**ஆரறி வாரிது நாயக மாமே.** *(1998)*

குறுகிய கோணல் அறிவாம் பசு ஞானமில்லாத பதிஞானத்தினாலே அறிந்து உணர்ந்து நிரம்பிய பேரொளியாம் சிவ ஜோதி எவ்விதத் தடையுமின்றி பொந்து சந்துகளில் எல்லாம் புகுந்து உலகனைத்துக்குள்ளும் வெளியும் போய்ப் பிரகாசிக்கும். மீண்டும் வரும். அந்த ஒளிதான் தேர் ஊர்ந்து வரும் சூரியனும் அறியாத, திக்கெட்டும் பரந்த பேரொளியாகும். இதை நன்கு உணரவல்லவர்கள் யார்? இது ஒன்றே யாவற்றுக்கும் தலைமையானதாகும்.

**517. மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்**
**கண்டிடத் துள்ளே கதிரோளி யாயிடுஞ்**
**சென்றிடத் தெட்டு திசையெங்கும் போய்வரும்**
**நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே.** *(1999)*

மண் தலமாகி நில உலகிலே விளங்கித் தோன்றும் சூரியனே கண்ட (கழுத்து) இடத்தின் கண்ணே விளங்கும் விசுத்தியிடத்தே கதிர்ஒளி வீசும் ஞான சூரியனாய்த் திகழும். தன், நின்ற நிலையிலே இருந்து நீங்காது மெய்யுணர்வாளர்களான ஞானிகள் அடைந்த இந்த ஞானாதித்தன் எட்டுத் திக்கும் சென்று உண்மை நிலையை உணர்த்தும் (இந்த யோக நிலையில் எய்திய ஞான சூரியனால் ஒருவன் தீர்க்கதரிசி ஆகவும் கூடும்)

## சிவாதித்தன்

518. அன்றிய பாச இருளும் அஞ்ஞானமும்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்றிடும் இருசுட ராம்அரு ணோதயம்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே. (2001)

பதிஞான ஒளிக்கு மாறுபட்ட பாச இருளும் அஞ்ஞானமும் சிவப்பிரகாசம் என்னும் பதிஞானத்தினால் நீங்கிடப், பசுவுடன் பதி சென்று ஒன்றிடும். பெரிய சுடராகிய சூரியன் உதயமாகும் போது துன்றிய புறவிருள் நீங்குவதை ஒப்ப ஆன்மாவின் அகவிருள் அகன்றுவிடும். (இரு - பெரிய)

519. தானே விரிசுடர் மூன்றுமொன்றாய் நிற்கும்
தானே அயன்மா லெனநின்று தாபிக்கும்
தானே உடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளிஒளி தானிருட் டாமே. (2003)

ஒப்பற்ற அப்பரசிவம் தானே சுடர்விரிந்து ஒளிவிடும் ஞாயிறு, திங்கள், தீ என்று மூன்றாகவும் திகழும். அவன் தானே அயன் என்றும், திருமாலென்றும், ஒரே மூர்த்தமாகி ஆக்கிக் காத்து, அழித்தலைச் செய்கிறான். அவன் தான் உடலுயிர்களுடன் வேறற விரவி நின்றிருப்பவன். சிவபிரானே அகண்ட வெளியாயும், அதிலே பரவியுள்ள இருளாயும், அவ்விருளை நீக்கும் ஒளியாயும் அமர்ந்துள்ளவன் ஆவான். (இருள், ஒளி, இரண்டும் வெளியில் வியாபகம்)

520. தெய்வச் சுடர் அங்கி ஞாயிறும் திங்களும்
வையம் புனல் மாருதம் வானகம்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க்கு இடமிடை ஆறங்க மாமே. (2004)

தெய்வ அருளால் ஒளிகாலும் தீயும் ஞாயிறும் திங்களும், நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி எனும் இவற்றோடு சைவப் பெரும் பதியாம் சிவன் அருளால் தாங்கிய பல்லுயிர்களும் சிவன் வெளிப்பட்டருளும் நிலைக்களன்களாகும். உயிர்களோ ஐம்புல நிகழ்ச்சிக்கு நிலைக்களனாகும் உடம்பிடைத்து. அது இடைமிடைந்துள்ளதோ ஆறாதாரமாகும் என்க.

## பசுவின் விளக்கம்

521. உன்னும் அளவில் உணரும் ஒருவனைப்
பன்னும் மறைகள் பயிலும் பரமனை
என்னுள் இருக்கும் இளையா விளக்கினை
அன்ன மயமென் றறிந்துகொண் டேனே. (2005)

ஆன்மாக்கள் தாம் நீள நினைந்த அளவில் உணர்ந்து கொள்ளும் ஒப்பற்றவனை, ஓயாது மறைகள் எல்லாம் ஓதுகின்ற பரம்பொருளை, என் உள்ளத்துள்ளே கோயில் கொண்டருளியுள்ள தூண்டா மணிவிளக்கை, அன்னமயமாகிய இவ்வுடலிடத்தவனே என்று நான் அறிந்து கொண்டேன்.

522. அன்னம் இரண்டுள ஆற்றங் கரையினில்
துன்னி இரண்டும் துணைபிரியாது அன்னம்
தன்னிலை அன்னம் தனியொன்ற தென்றக்கால்
பின்னை மட அன்னம் பேறணுகாதே. (2006)

ஆற்றங்கரையை ஒப்பான இவ்வுலக வாழ்க்கையிலே இரண்டு அன்னங்கள் உள. அவை சீவன் சிவன் என்பன. அவை இரண்டும் துணைபிரியாது வாழும். அவற்றுள்ளே தன்நிலையிலே நிற்கின்ற சிவமாகிய அன்னம் (விகாரமற்ற பரமான்மா) அவ்வன்னத்தை மற்றோர் அன்னம் தனித்தது. தனக்கு வேறாயது என்றக்கால், மற்ற இள - மட அன்னம் அறியாமை நிறைந்த ஜீவன், தான் வேறு சிவன் வேறு என்று நினைவுள்ளவரை முத்தி எய்தாது.

## புருடன்

523. வைகரி யாதியு மாயா மலதியும்
பொய்கரி யானை புருடாதி பேதமும்
மெய்கரி ஞானங் கிரியா விசேடத்துச்
செய்கரி யீசன் அனாதியே செய்ததே. (2007)

வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை எனும் நான்கு வாக்குகளும், ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி எனும் ஐந்து மலங்களும், பொய்யான போக

நுகர்வின் காரணமான புருடன், மருள், காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு ஆம் ஏழு வகை வித்தியா தத்துவங்களும், பிறப்பினை ஒழிக்கும் மெய் கரியாம் ஞானம் எனும் இவையனைத்தையும் சாட்சியாய் உள்ள சிவம், தொன்மையான அனாதி காலத்திலே ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுத் தோற்றுவித்து அருளினான்.

524. படர்கொண்ட ஆலத்தின் வித்தது போலச்
சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய
இடர்கொண்ட பாச இருளது ஓட்டி
நடர் கொண்ட நல்வழி நாடலு மாமே. (2009)

விழுதும் கிளைகளுமாகப் படர்ந்திருக்கும் ஆலமரத்தின் தன்மையைத் தன்னகங் கொண்ட ஆலம் விதையைப் போல, அணுவாம் ஆன்மாவை அருள் ஒளியைக் கொண்டு நல்ல நெறிக்கண் செலுத்தப் பாச இடரினைத் தன் அகத்தே கொண்ட பாச இருளை அற விலக்கிச் சிற்றம்பலத்திலே நடம் செய்யும் நடராஜனின் ஞான வழியை நாடவேண்டியது நம் கடமையாகும்.

525. அணுவுள் அவனும் அவனுள் அணுவும்
கணுவுற நின்ற கலப்பது உணரார்
இணையிலி ஈசன் அவனெங்கு மாகி
தணிவற நின்றான் சராசரந் தானே (2010)

அணுவாம் சீவனுள் அவனாம் சிவனும், அவனாம் சிவனுள் அணுவாம் சீவனும் வேறறக் கலந்து நிற்கும் தன்மையை உணரமாட்டார்கள். ஒப்பற்ற தன்மை வாய்ந்தவனான ஈசன் எங்குமாகி நீக்கமற நிறைந்து இந்தச் சராசரமாம் உலகிலே உள்ள எல்லாப் பொருள்களிலும் கலந்துள்ளான்.

## சீவன்

526. ஏனோர் பெருமையன் ஆயினும் எம்மிறை
ஊனே சிறுமையின் உட்கலந் தங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே அறியும் தவத்தின் அளவே. (2012)

பிறபிற தேவர்கள் மூவர்களினும் பெருமை மிக்கவனாயினும், எம்மிறைவனாம் சிவபிரான் மிகச் சிறுமையான ஊனின் உள்ளே உயிராகக் கலந்து விளங்குவான். அந்தத் தேவாதிதேவன் வானோர் அளவிட்டு அறியும் தன்மை உடையவனல்லன். ஆன்மாதான், தான் செய்யும் தவத்தின் அளவாகவே சிவபிரானை அறியும் தன்மைத்து.

**527. மாயா உபாதி வசத்தாகும் சேதனத்து**
**ஆய குருவரு ளாலே அதில் தூண்ட**
**ஓயும் உபாதியோடு ஒன்றின்ஒன் றாதுயிர்**
**ஆய துரியம் புகுந்தறி வாகவே. *(2014)***

மாயா உபாதியாம் இவ்வுடலின் வசமாகி நிற்கும் ஆன்மா சேதனமாம் ஞான வடிவோடு கூடிய குருவின் தீட்சையாலும் திருவருளாலும், அச்சேதனம் தூண்டப் பெற்று, மாயா உபாதிகளாம் தனு, கரண, புவன, போகங்களால் உண்டாகும் துன்பங்கள் ஒன்றினும் பொருந்தாது. ஆன்மா பயிற்சி, வயத்தால் துரிய நிலையில் புகுந்து ஞானவடிவாகி விளங்கும்.

### பசு

**528. கற்ற பசுக்கள் கதறித் திரியினும்**
**கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினும்**
**முற்ற பசுக்கள் ஒருகுடம் பால்போதும்**
**மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே. *(2015)***

பசு பாசத்தால் கட்டுப்பட்ட ஆன்மா இவ்வான்மத் திரள்களில் வேதாகமங்களைக் கற்றுத் தேர்ந்த வாய் வேதாந்த வரட்டுத் தத்துவப் பசுவாம் ஞானிகள் கதறித் திரிந்த போதிலும், அரசனைச் சேர்ந்து பெரும்பதவி வகிக்கும் ஆன்மாக்கள், விருது கட்டி உலாவினாலும், யோக ஞானங்களில் முற்றிய சிவஞானப் பசுக்களே உலகத்திற்குப் பயன்தரும். இந்த முற்றிய ஆன்மாக்கள் தவிர பிற எல்லாப் பசுக்களுமே வறட்டுப் பசுக்களே - பயனற்றவைகளே.

**529. கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதென்?**
**எல்லை கடப்பித்து இறைவன் அடி கூட்டி**
**வல்லை செய்து ஆற்ற மதித்தபின் அல்லது**
**கொல்லை செய் நெஞ்சம் குறிப் பறி யாதே. (2016)**

புன்செய் நிலமாகிய ஐம்புலக் கொல்லையிலே சென்று மேய்கின்ற ஐம்புலப் பசுக்களை (ஆன்மாக்கள்) எது செய்யக்கூடும்? அவைகளைப் புன்செய் நிலமாம் ஐம்புலக் கொல்லையின் எல்லையை விட்டு ஒட்டி வந்து சிவபிரான் திருவடிக் கண் சேர்ப்பித்து, அவைகளுக்கு ஞான ஆற்றலைத் தந்து, அவைகள் தம்மைத் தாம் உணரும்படிச் செய்த பின் அல்லாமல், அவைகள் அக்கொல்லையில் ஈடுபட்டுள்ள உள்ளத்தை மாற்ற முடியாது.

## போதன்

**530. சீவன் எனச் சிவ னென்ன வேறில்லை**
**சீவனார் சிவனாரை அறி கிலார்**
**சீவனார் சிவனாரை அறிந்த பின்**
**சீவனார் சிவனாயிட் டிருப் பரே. (2017)**

சீவன் எனவும் சிவனெனவும் சொல்லப்படும் பசுவும் பதியும் பிரிப்பின்றி கலப்பால் ஒன்றாய் நிற்பனவே. அவை இருபொருளாக இருக்கவில்லை. சீவனாம் ஆன்மா தன் சிவத் தன்மையை மறந்து உள்ள வரைக்கும் சிவத்தை அறிய மாட்டாது. திருவருள் துணையாலேயே சீவன் சிவத்தை அறியமுடியும். அப்படிச் சிவத்தை அறியும் பரஞானம் கைவரப் பெற்ற பிறகு, சீவன் சிவன் எனும் பெயரைப் பெற்றுச் சிவன் திருவடியிலே அடங்கிக் கிடக்கும்.

**531. அறிவாய் அறியாமை நீக்கி அவனே**
**பொறிவாய் ஒழிந்தெங்கும் தானான போதன்**
**அறிவாய் அவற்றின் உள்தானாய் அறிவன்**
**செறிவாகி நின்றஅச் சீவனு மாமே. (2019)**

அறிவு மயமான ஞான சொரூபியான சிவனையே விடயமாகக் கொண்டுத் தன் அறியாமையிலிருந்து

நீங்கியவனே பஞ்சேந்திரியங்களால் அலைக்கழிக்கப் படாமல் அவைகளினின்று ஒழிந்தவன் ஆவன். அவனே போதன். அதாவது, சற்குருவாம் அறிவாயும், ஆன்மாக்களுள்ளே அறிவாகி நின்றும், அறிவித்து அறியும் அச்சிவனே, நம் பரஞானத்திலே பொருந்தி நிற்கும் சிவனுமாவான்.

532. ஆறாறின் தன்மை அறியா திருந் தேனுக்கு
ஆறாறின் தன்மை அறிவித்தான் பேர் நந்தி
ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்
ஆறாறுக் கப்புறம் ஆகிநின் றானே. (2020)

தத்துவங்கள் முப்பத்தாறு. அவைகளின் தன்மையை நான் சரிவர உணர்ந்தேனில்லை. அப்படி உணராதிருந்த என்றனுக்கு என் தந்தை நந்தி எம்பெருமான் அத்தத்துவங்களின் விளக்கமான தன்மைகளை உணர்த்தி யருளினான். அந்தச் சிவபிரானின் அருள் விளக்கத்தினால், அம்முப்பத்தாறு தத்துவங்களின் விளக்கங்களை அறிந்த பின், அவைகள் அனைத்தையும் கடந்து நின்றவனாக, எம்பிரான் எனக்குப் புலப்பட்டான்.

533. சிவமாகிய அருள் நின்று அறிந்து ஓரார்
அவமாம் மலம் ஐந்தும் ஆவது அறியா
தவமான செய்து தலைப்பறி இன்றார்
நவமான தத்துவம் நாடகில் லாரே. (2021)

பரம் பொருளாகிய சிவபெருமானது அருள் திறத்தினை நின்றறிந்து தெளிய மாட்டார்கள். கேட்டினை விளைவிக்கும் ஐம்மலங்களாகிய ஆணவம், கன்மம், மாயை, மாயேயம் திரோதானம் என்பவைகளை வீணே செய்து மீண்டும் பிறவி எடுக்கின்றனர். இவர்கள் புதுமையான தத்துவ நெறியான சிவ ஞானத்தையும் ஆராய்கின்றார் இலர்.

534. நாடொறும் ஈசன் நடத்தும் தொழில் உன்னார்
நாடொறும் ஈசன் நயந்நூட்டல் நாடிடார்
நாடொறும் ஈசன் நல்லோர்க் கருள் நல்கலால்
நாடொறும் நாடார்கள் நான்வினை யாளரே. (2022)

பரமேஸ்வரனாகிய சிவபிரான் நாள்தோறும் இயற்றுகின்ற சிருட்டி, திதி, சங்காரமாம் முத்தொழில்களையோ அவன் அருட்செயல்களையோ, சிந்திக்கமாட்டார். ஒவ்வொரு நாளும் ஈசன் இவ்வுலக உயிர்களுக்கு இரங்கி அவர்களது வினைப்போகங்களைத் துய்ப்பிப்பதை நாடிக் காணமாட்டார். தன்னுடைய நல்ல அடியார்களுக்கே ஈசன் தன் நல்ல திருவருளை வழங்கும் காரணத்தினால், நாள் தோறும் தான் எனும் முனைப்போடு உலக பந்தத்தில் ஈடுபடும் நாள் வினையாளர்கள், அவன் அருளைச் சிறிதும் நாடார்கள்.

## ஐந்திந்திரம் அடக்கும் அருமை

**535. ஆகமதத் தன ஐந்து களிறுள**
***ஆகமதத் தறி யோடணை கின்றில***
***பாகனும் எய்த்து அவைதாமும் இளைத்தபின்***
***யோகு திருந்துதல் ஒன்றறி யோமே.*** ***(2923)***

மதத்தினைத் தம்மிடம் உடையவான ஐந்து களிறுகள் (யானை) இந்த உடம்பகத்துள. அவை மெய், வாய், கண், மூக்கு செவியென ஐந்தாம். அவைகளோ உன்மத்தமாகி தம் கட்டுத்தறியிலே அணைகின்றில. புலன்வழியே ஓடிஓடி ஆன்மாவாம் பாகனும் இளைத்து விட்டான். மதம் பிடித்த யானைகளும் இளைத்து விட்டன. இந்நிலையில் கூட, யோக நெறியால் திருந்தி சிவஞான முத்தி அடையும் நெறி ஒன்றையும் நாம் அறிவதில்லை.

**536. புலமைந்து புள்ஐந்து புட்சென்று மேயும்**
**நிலமைந்து நீர்ஐந்து நீர்மையும் ஐந்து**
**குலம் ஒன்று கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவன்**
**உலம்வந்து போம்வழி ஒன்பது தானே.** ***(2025)***

இவ்வுடல் பஞ்ச பூதங்களால் ஆயது. (பூதங்கள், புலம் - இடம் எனப்பட்டது) எனவே நம் உடல் பஞ்சபூதங்களின் நிலைக்களன் ஆகும். இதனுள் இயங்குகின்ற ஐந்து பறவைகள் (ஐந்து பொறிகள்) பலப்பல நிலமாம் இடங்களுக்குச் சென்று மேயும். அவை சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் எனப்படும் ஐந்தாம் (புலன்கள்).

நீர் எனப்பட்டு இயங்கும் தன்மை வாய்ந்த கை, கால், வாய், எருவாய், கருவாய் எனும் கரும இந்திரியங்கள் ஐந்து. அவைகளின் இயக்கமாம் வசனாதிகளாம் செயல்களும் ஐந்தாம். இவையாவும் வேறுபாடுகள் உடைய ஆயினும் குலத்தால் (மாயையால்) ஒன்றே. இவைளை மெய்ஞ்ஞானம் என்னும் கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவனே. அது ஆன்மா என்பது. அந்த ஆன்மா வருந்தி வெளியேறும் வழி ஒன்பதேயாம். இவை நவத் துவாரம் எனப்படும்.

**537.** **அஞ்சுள சிங்கம் அடவியில் வழ்வன**
**அஞ்சும் போய் மேய்ந்ததும் அஞ்சகமே புகும்**
**அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்**
**எஞ்சா திறைவனை எய்தலு மாமே. (2026)**

இந்த உடம்பாகிய காட்டிலே வாழ்கின்ற சிங்கங்கள் ஐந்து. அவை இந்திரியங்கள். அவை வெளியே போய் மேய்ந்து விட்டு தம்தம் ஐந்து அகங்களிலே வந்து தங்கும். இந்த ஐந்து சிங்கங்களின் நகங்களையும் பற்களையும் அறுத்தெறிந்து விட்டால் - செயலற்றதாக்கி - விஷயம் மேற்செல்லும் - மனதையும், விஷயங்களில் ஈடுபடும் கருவிகளையும் செயலற்ற தாக்கி விட்டால் - இந்த ஆன்மா தவறாமல் சென்று இறைவனை அடையும்.

**538.** **ஐவர் அமைச்சர் உள்தொண்ணுற்று அறுவர்கள்**
**ஐவரும் மைந்தரும் ஆளக் கருதுவர்**
**ஐவரும் ஐந்து சினத்தொடே நின்றிடில்**
**ஐவர்க்கு இறைஇறுத்து ஆற்றகில்லோமே. (2027)**

நமக்குப் பஞ்சேந்திரியங்களாம் அமைச்சர்கள் ஐவர் உளர். அவர்களின் தொண்டர்கள் தொண்ணூற்று ஆறு பேர் (தத்துவ தாத்துவிகங்கள்) அந்த ஐம்பொறிகளும் 96 தத்துவ - தாத்துவிகங்களும் தம்மை ஆளக் கருதுகின்றன. இந்த ஐந்து அமைச்சர்களாம், ஐந்து புலன்களும் நம்மை நோக்கி கப்பம் கட்டும்படி முனைந்து செயல்பட்டால், நம்மால் அவைகளுக்கு லஞ்சமோ, கப்பமோ கொடுத்துக் கொடுத்து சமாளிக்க இயலாது.

539. சொல்லகில்லேன் சுடர்ச் சோதியை நாடொறும்
சொல்லகில் லேன் திரு மங்கையும் அங்குள
வெல்லகில்லேன் புலன் ஐந்துடன் தன்னையும்
கொல்ல நின்றோடும் குதிரை ஒத்தேனே. (2028)

பரஞ்சோதியாம் சிவபிரானை, நான் நாள்தோறும் துதித்துப் புகழ்பாடி வழிபடும் வல்லமை உடையேன் அல்லன். அவனிடத்தே பொருந்தியுள்ள திருவருட் சத்தியாம் திருமங்கையையும் நான் தோத்தரிக்க வல்லவன் அல்லன். ஐந்து புலன்களாம் அவைகளைப் பின்னின்று இயக்கும் மனதையும் வெல்லும் வலிமை உடையவனும் அல்லேன். என்னையும் நான் வெல்ல வல்லன் அல்லேன். பகை முகத்திலே பகைவரிடையே ஓடிச் சென்று மேலே நின்றியக்கும் ஆன்மாவைக் கீழே வீழ்த்திக் கொல்ல ஓடுகின்ற குதிரையையே நான் ஒத்துள்ளேன். (இந்திரியங்கள் நம் அழிவுக்கு நம்மை அழைத்துச் செல்கின்றன)

## ஐந்திந்திரியம் அடக்கும் முறைமை

540. கிடக்கும் உடலின் கிளர் இந்திரியம்
அடக்கல் உறுமவன்தானே அமரன்
விடக்கி ரண்டு இன்புற மேவுறு சிந்தை
நடக்கின் நடக்கும் நடக்கும் அளவே. (2032)

சடமாகிக் கிடக்கும் உடம்பிலிருந்து கிளர்ந்து மேலெழும் ஐந்து இந்திரியங்களும் மலச்சார்பினால் இயங்குகின்றன. அவைகளை அடக்கி, அவைபின் மனம் ஓடாமல், அவை நம் குற்றவேல் செய்யும்படிக் காணவல்லவனே மக்களுள் அமரனாவான். இந்த உடம்பு அருந்தல், பொருந்தல் (உண்ணல், பெண்ணின்பம் கொளல்) ஆம் இவ்விரண்டாலும் அடைகின்ற இன்பத்திற்கெனப் பொருந்தி நிற்கும். மனமோ தன் பிராணன் இயங்கும் அளவேதான் நடக்கும் அதற்குமேல் நடவாது.

541. அஞ்சும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை
அஞ்சும் அடக்கில் அசேதனமாம் என்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந்தேனே. (2033)

பொறிபுலன்களை அடக்கிச் செயலறச் செய்துவிட வேண்டும், எனவே அவைகளை அடக்கு அடக்கு என்று அறிவில்லாதவர்கள் சொல்வார்கள். இந்த ஐந்து புலன்களின் உணர்வுகளை அடக்கிவிட்ட அமரர்களும் இல்லை. அப்படித்தான் இந்தப் புலன் உணர்வாம் ஐந்தையும் அடக்கிச் செயலிழக்கச் செய்துவிட்டால், பின் அவன் அசேதனமான சடமாகவே மாறிவிடுவான். எனவே தான், நான் அந்த ஐம்புல உணர்வுகளை அடக்காமலேயே என்வசமாக்கி, இயக்கி, சிவன்பால் செலுத்துகின்ற அறிவை அடையப் பெற்றேன்.

**542. ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது**
**ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது**
**ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது**
**ஐந்தில் ஒடுங்கில் அருள்உடை யாரே. (2035)**

உள்ளமானது ஐம்புலன்களை வென்று ஐந்தாகிய பஞ்சாட்சரத்தை ஓதி, தன் உள்ளத்தை அதில் ஒடுக்கிக் கொண்டால், அந்த ஆன்மா சிதாகாசமாகிய அகலிடத்தைச் சென்றடையும். அப்படி ஒடுங்கி நிற்றலே சிறந்த தவமுமாகும். அதுதான் அரன் பதத்தை அடைவிக்கும். அப்படி ஐந்தில் ஒடுங்கி நிற்பவர்களே அருள் உடையவர்களாவார்கள்.

**543. பெருக்கப் பிதற்றிலென்? பேய்த்தேர் நினைந்தென்?**
**விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்**
**பெருக்கிற் பெருக்கும் சுருக்கிற் சுருக்கும்**
**அருத்தமும் அத்தனை ஆய்ந்து கொள்வார்க்கே. (2036)**

மிகுதியாக ஓயாமல் பேசிப் பிதற்றுவதால் ஆம் பயன் என்ன? பேய்த்தேர் கானல் நீர் இவ்வுலகம் என்று பிறர்க்கு உலக நிலையாமையும் உலகம் பொய் என்று உரைத்தும் என்ன பயன்? விரிந்தமைந்த உலகப் பொருள்கள் யாவற்றுக்கும் வித்தாக அமைந்திருப்பது நம் உள்ளமே ஆகும். நம் உள்ளத்தின் சிந்தனை செயல்களை எவ்வளவு விரிவடையச் செய்கின்றோமோ அவ்வளவு அதுவும் பெருகி விரியும். அதைச் சுருக்கி விட்டாலோ அவையும் சுருங்கி விடும். அத்தனாகிய சிவனை ஆராய்ந்து திருவருளால் உண்மைநிலை உணர்ந்தவர்க்கே இதன் பொருள் விளங்கும்.

**544.** **சென்றன நாழிகை நாள்கள் சிலபல**
**நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்தொத்து**
**வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்**
**குன்று விழ அதில் தாங்கலு மாமே.** **(2040)**

உலகிலே நாம் வாழுகின்ற ஆயுட் காலம் நாழிகை, நாள் எனும் உருவிலே சிலவும் பலவுமாகிக் கழிந்து போயின. இந்த உலகத்தில் நீண்டு நிலைத்து நிற்கும் பொருள்கள் யாவும் நீர்மேல் எழுத்தைப் போன்று மறையும் என்பதை அவை தோற்றி நின்றன. எனவே மாந்தர்களே ஐம்புல அவாக்களையும் விரைவிலே வென்று அவைகளைப் புறத்தே விட்டு விடுங்கள். குன்றொத்த பொறிபுலனின் அவாக்கள் நம்மை எதிர்நோக்கி நம்மீது விழ்ந்த போதிலும், நாம் அதைத் தாங்கித் தடுத்துக் கொள்ள முடியும்.

**545.** **கைவிடல் ஆவதொன்று இல்லை கருத்தினுள்**
**எய்தி யவனை இசையினால் ஏத்துமின்**
**ஐவரு டைய அவா வினில் தோன்றிய**
**பொய் வருடை ஐம் புலன்களு மைத்தே.** **(2043)**

சிவஞான நெறி நின்று மெய்யுணர்வு எய்தியவர்களுக்கு, ஐம்பொறிகளை அடக்கிவிட்டபின் கைவிட வேண்டியது பிற ஏதும் இல்லை. எனவே, நம் சித்தத்தில் உள்வந்து குடி கொண்டுள்ள சிவபிரானை உள்ளம் இசைந்து, பஞ்சாட்சரத் தியானத்தோடு வழிபடுங்கள். இல்லையானால் ஐந்து பொறிகளின் அவாவினால் விளைந்த பொய்யினைப் பொருந்திய ஐந்து புலன்களும், புறத்து நம்மைக் கவரச் சூழ்ந்து நிற்கும்.

## அசற்குருநெறி

**546.** **உணர்வொன் றிலாமூடன் உண்மை ஓராதான்**
**கணுவின்றி வேதாகம நெறி காணான்**
**பணிவொன் றிலாதோன் பரநிந்தை செய்வோன்**
**அணுவின் குணத்தோன் அசற்குரு வாமே.** **(2044)**

மெய்யுணர்வு தன்னிடம் பொருந்தி இல்லாத மூடன். உண்மைப் பொருளை ஆய்ந்துணராதவன். வேத ஆகமப் பொருள்களைச் சிக்கல் இல்லாமல் கண்டறியாதான். சான்றோரிடம் அடக்கமில்லாதவன். பிறரை நிந்தனைச் செய்பவன், ஆன்ம மலமாம் அகங்கார குணத்தை உடையவன் அசற்குருவெனத் தகுவான்.

**547. மந்திரம் தந்திரம் மாயோகம் ஞானமும்**
**பந்தமும் வீடும் தரிசித்துப் பார்ப்பவர்**
**சிந்தனை செய்யாத் தெளிவியாது ஊண்பொருட்டு**
**அந்தக ராவோர் அசற்குரு வாமே. (2045)**

மூல மந்திரமாம் ஓம் என்பதையும் ஐந்தெழுத்தாம் சிவயநம என்பதையும், சிவ ஞானம் சிவப் பேறு எய்தும் உபாயங்களையும், பெருமைமிக்க யோக மார்க்கத்தையும் சிவஞானத்தையும் பந்தம் வீடு எனும் இரண்டையும் கண்டு உணர்ந்திருப்பவரை (மெய்ஞ்ஞானிகளை) நினைத்துக் கூடப் பார்க்காமல் உள்ளத்தெளிவில்லாமல், தன் வாழ்க்கையைச் சுகமாக நடத்த உணவுடன் பிறவசதிகள் பொருட்டு, குருவேடம் பூண்ட குருடர்கள் அசற் குருவாவர்.

**548. ஆமாறு அறியாதோன் மூடன் அதிமூடன்**
**காமாதி நீங்காக் கலதி, கலதிகட்டு**
**ஆமாறு அசத்து அறிவிப்போன் அறிவிலோன்**
**கோமானலன் அசத்தாகும் குரவனே.**

பிறப்பிறப்பறவும், வீடு எய்தவும், தக்கதாம் வழி வகைகளை அறியாதவன், அறிவில்லாதவன், அறிவிலிகளிலே தலை சிறந்தவன். காமம்முதலிய குற்றம் நீங்காதபாவி, பிறபாவிகளுக்கு மெய்ப்பொருளை உணர்த்தாது பொய்யை உபதேசிக்கும் மெய்யுணர்வற்ற அறிவற்ற அஞ்ஞானி, குருவாகத் தகுதி அற்றவன். அவன் பொய்நெறி காட்டும் அசற் குருவாவன். (கோமான் = தலைவன்)

## சற்குரு நெறி

549. தான்தந் தனிக்கும் தலைவனே சற்குரு
தான்தந்து தன்னை யறியத்தர வல்லோன்
தான்தந்து தத்துவா தீதத்துச் சார்சிவன்
தான்தந்து பாசம் தணிக்குமவன் சத்தே. (2049)

பரம்பொருளாம் சிவபிரானின் திருவடித்தாமரையாகிய சிவ ஞானத்தைச், சீடனின் சிரசில் தன் பாதம் பதிய வைத்து, அருள் செய்ய வல்லவனே தலைவன். அவனே சற்குருவாவான். அச் சற்குருதான் தாளைத் தந்தருளித் தான் தன்னையறியும் தன்மையை - தான் முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்தவன் என்பதை உணர்த்த வல்லவனாவான் - சீவனிலே சிவன் திருவடி பதிவால் தத்துவங்கள் அனைத்தையும் கடந்து நிற்கும் ஆன்மாவினது பாசத்தொடர்பினைத் தன் தாள் தந்தருளியதால் தணிக்க வல்லவனாகிறான். அவனே சற்குருவாம்.

550. தவிர வைத்தான் வினைத்தன் னடியார்கோன்
தவிர வைத்தான் சிரத்தோடு தன்பாதம்
தவிர வைத்தான் நமன்றூதுவர் கூட்டம்
தவிர வைத்தான் பிறவித் துயர்தானே. (2050)

இங்ஙனம் தன்தாளைச் சீடன் தலைமேல் வைத்துத் தீட்சை செய்யத் தகுதி வாய்ந்த சற்குரு, சீடனின் வினைகள் அனைத்தையும் நீங்கும்படிச் செய்தான். சீடனின் சிரத்தோடு தன்பாதத்தை வைத்துத் தீமைகளைத் தவிர்த்தான். எமனின் தூதர் கூட்டத்தை ஒழித்தான். சீடனின் பிறவித் துயரையும் அடியோடு களைந்து நீக்கினான்.

551. சத்தும் அசத்தும் சதசத்தும் தான்காட்டி
சித்தும் அசித்தும் சிவபரத்தே சேர்த்துச்
சுத்தம் அசுத்தம் அறச் சுகமான சொல்
அத்தன் அருட் குருவாம் அவன் கூறியே. (2058)

சத்தாகிய அழியாத சிவத்தையும், அசத்தாகிய அழியும் மாயையும், சதசத்தாகிய சார்ந்ததன் வண்ணமாகிய

ஆன்மாவையும், குருவானவர்தான் முப்பொருள் உண்மைகளைச் சீடனுக்கு உணர்த்திச், சித்தாகிய ஆன்மாவையும் அசித்தாகிய தத்துவங்களையும் சிவ பிரானோடு சேர்த்து, சுத்த மாயை அசுத்த மாயை முற்றும் அற நீங்கிப் போகப் பேரானந்தத்தைத் தரும் பஞ்சாட்சர மந்திரத்தை (பிரணவ மந்திரம்) அருளிச் செய்பனே அருட் குருவாம். அத்தனே - சிவனே - அருட்குருவாகி வந்து பக்குவமான ஆன்மாக்களை உய்விக்க உபதேசிப்பான். (சொல்லுமிடத்து அவனே அருட் குருவாகும்)

**552. அத்தன் அருளின் விளையாட்டிடம் சடம்**
**சித்தொடு அசித்து அறத் தெளிவித்த சீவனை**
**சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினை**
**சத்துடன் ஐங்கருமத் திடும் தன்மையே. (2062)**

அத்தனாகி ஈசனின் அருள் விளையாடலாம் ஐந்தொழில்கள் புரியும் இடம் ஆருயிர்களின் உடலே ஆகும். சித்துப் பொருள்கள் இவை, அசித்துப் பொருள் இவை என ஆருயிர்களுக்கு விளக்கமாகத் தெளிவித்து ஆன்மாக்களின் மலநீக்கம் செய்து சுத்தனாக்கி, சத்தாகிய சிவத்தோடு சதசத்தாகிய ஆன்மாவை இணைத்துத், தன் வண்ணமாக்கும் தன்மையே, இறைவன் ஐந்தொழிலின் பயனாகும்.

**553. ஏறுநெறியே மலத்தை எரித்தலால்**
**ஈறில் உரையால் இருளை அறுத்தலால்**
**மாறில் பசுபாசம் வாட்டலால் வீடுக**
**கூறு பரனே குருவாம் இயம்பிலே. (2066)**

சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப் படிப்படியாக ஏறுகின்ற சோபான முறைதான் ஆன்மாவின் மும்மலங்களை எரித்தலாலும், முடிவென்பதே இல்லாத உரையாகிய பஞ்சாட்சர மந்திரத்தின் வலிமையால், வவ்விய இருளாம் ஆணவத்தை அறுத்தலாலும், பசுக்களின் மாறுபாடற்ற இயல்பான பாசத்தன்மை கெடும்படி வாட்டலாலும் (வீடு = உக) வீடு சென்றடையும்படி வழிகாட்டி உபதேசிக்கும் ஈசனே சற்குருவாகும்.

## கூடா ஒழுக்கம்

**554. கண்காணி இல்லென்று கள்ளம் பல செய்வார்
கண்காணி இல்லா இடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக் கலந்தெங்கும் நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந் தாரே. (2067)**

எவ்வெச் செயலையும் மேற்பார்வையிடுவோன் கண்காணிப்பவன்; அவனே கண்காணி; எவற்றையும் கண்காணிக்கும் கடவுள். தன்னைக் கண்காணிக்க இங்கு இப்போது இல்லை என்று கள்ளத்தனமான செயல்கள் பல செய்பவர்கள் பலர். ஆராயுமிடத்து யாவற்றையும் கண்காணிக்கும் எங்கும் நிறைந்து எக்காலத்திலும் உள பரமான்மாவாம் சிவபிரான் இல்லாத இடமே இல்லை. மேற்பார்வையாளனாக மட்டுமின்றி கண்ணோடு கலந்து ஒன்றாய் உடனாய் நிறைந்துள்ள இறைவனைத் தம் கண்களைப் புருவ நடுவிலே நிலைபெற நிறுத்தித் தம் பார்வையை உள்முகமாக்கித் தம் கண்களைக் கொண்டு திருவருட் ஜோதியைக் காண்பவர்கள், கள்ளத்தனமாய கீழ்மைகள் முற்றும் ஒழித்தவராவர்.

**555. கன்னி ஒருசிறை கற்றோர் ஒருசிறை
மன்னிய மாதவம் செய்வோர் ஒருசிறை
தன்னியல் புன்னி உணர்ந்தோர் ஒருசிறை
என்னிது ஈசன் இயல்பறி யாரே. (2073)**

கன்னியாகிய சத்தியின் பதிவு, சத்திநி பாதம் அடைந்தோர் ஒருபுறம், பொருந்திய பெருமைமிக்க தவங்களைச் செய்வோர் மற்றோர் புறம், தன் ஆன்ம தரிசனத்தால் தன்னை உணர்ந்தோர் ஒருபுறம். ஈசன் இயல்பினை நன்கு உணராதவர் இவை கண்டு என்ன இது வியப்பு என்று ஐயுறுவர்.

**556. காணாத கண்ணிற் படலமே கண்ணொளி
காணாதவர் கட்குங் காணாதது அவ்வொளி
காணாதவர் கட்கும் கண்ணாம் பெருங்கண்ணைக்
காணாது கண்டார் களவொழிந் தாரே. (2074)**

காணாத கண்களுக்கு, அவைகளை மூடியுள்ள படலமே கண்ணாகி விட, இருளையே அக்கண்கள் காணும். மாறாக சிவப் பேரொளி கதிரொளி போல் எங்கும் வியாபித்திருந்த போதிலும், இப்படி ஆணவமான படலம் மூடப்பட்ட மனக்கண்ணை உடையவர்களுக்கு அவ்வொளி தென்படாது. புறக்கண்களுக்கெல்லாம் பெரிய பெருமை வாய்ந்த அந்த ஞானக் கண்தான் காணாத கண்களிலும் சிறந்தது. அக்கண்ணால் பரஞ்ஜோதியைக் கண்டவர், காணாது கண்டவராம். அவர்கள் கள்ளத் தனமாம் கீழ்மைகள் முற்றும் அற்றவராவர்.

**557. பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி**
**உய்த்தொன்று மாபோல் விழியுந்தன் கண்ணொளி**
**அத்தன்மை யாதல் போல் நந்தி அருள்தர**
**சித்தந் தெளிந்தேன் செயலொழிந் தேனே. (2075)**

பைத்தியம் பிடித்தவன் மருத்துவன் கொடுத்த மருந்தால் குணப்பட்டு பழைய இயல்பான நிலையை அடைந்தாற் போலவும், படலம் மூடியுள்ள விழியும் இறைவன் அருள் விசேடத்தால் முன்போன்ற ஒளிபடைத்த கண்ணாக மாறுவதைப் போலவும், நந்தி எம்பெருமானாம் சிவபிரான் திருவருள் சத்தியால், நான், என் சித்தம் தெளிவடைய, சிவஞானம் கைவரப் பெற்றேன். அதனால் சீவ சுபாவ செயல்கள் அறப்பெற்றுச் சிவமயமாகி நின்றேன்.

**558. இந்திரியம் அந்தக்கரணம் இவை உயிர்**
**வந்தன சூக்க உடலன்று; மானது**
**தந்திடும் ஐவிதத்தால் தற் புருடனும்**
**முந்து உளம் மன்னும் ஆறாறு முடிவிலே. (2083)**

இந்திரியங்களோ, அந்தக்கரணங்களோ, நமக்கு வந்து பொருந்திய சூக்கும உடலோ, உயிர் (ஆன்மா) அன்று. அவை பிரகிருதி மாயையின் உடமையாம். தற்புருடன் என்று சொல்லப்படும் புருட தத்துவமும், கலை, காலம், நியதி, வித்தை அராகம் முதலியன மிஸ்ர மாயையின் காரியமாகும். முந்தைய காலமுதல் அனாதியாய் உள்ள உளம் (ஆன்மா) ஆறாறு முப்பத்தாறு தத்துவங்களின் முடிவிலே நிலை பெற்றதாம். (மான் = பிரகிருதி மாயை)

## கேடு கண்டு இரங்கல்

559. வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவார்
அற்றதம் வாழ்நாள் அறிகிலர் பாவிகள்
உற்ற வினைத்துயர் ஒன்றும் அறிகிலார்
முற்றொரு தீயின் முனிகின்ற வாறே. (2084)

கன்மமாகிய விதை நெல்லை நன்றாகக் காயவைத்துச் சேமித்து வைப்பார்கள். அந்த விதையை விதைத்து நாற்றங்காலாக பயிர் செய்வார்கள். வினையாம் அந்த நாற்று இந்த உடம்பிலே வளர்ந்து வினைப்பயனை, வினைப்போகத்தைத் தருகிறது. இவர்கள் அற்றுப்போகும் தம் வாழ் நாளின் தன்மையை அறிகிலாத பாவிகள் ஆவார்கள். தமக்குப் பலஜென்மங்களாக வந்து பொருந்துகின்ற இருவினைப் பயனாம் துயர்களை ஒன்றும் இவர்கள் அறியமாட்டார்கள். முழுமையாகக் கொழுந்துவிட்டு எரிகின்ற பெருந்தீபத்திலே வந்து விழுந்து இறந்து படும் விட்டிலை ஒப்பார்கள். (விட்டிற் பூச்சி அவாய் நிலையான் வந்தது)

560. பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற் கரியதோர் பேறு இழந்தாரே. (2090)

பெறுதற் கரியதான இம்மானிடப் பிறவியை எய்திய பின்னும் பெறுதற்கு அருமையான எம்பிரான் அடியைச் சரியை, கிரியை, யோக ஞானங்களால் ஐந்தெழுத் தோதி பேண மாட்டார்கள். பெறுதற்கரிய மக்கள் குலத்திலே பிறந்தும் பிராணிகளைப் போல் வாழ்க்கை நடத்தும் இவர்கள் அனைவருமே தாம் பெறுதற்கரிய ஓர் ஒப்பற்ற சிவசாயுச்சியமாம் பேற்றினை இழந்தவர்களாவார்கள்.

561. கருத்தறி யாது கழிந்தன காலம்
அருத்தி யுள்ளான் அமராபதி நாதன்
ஒருத்த னுள்ளான் உலகத்து உயிர்க்கெல்லாம்
வருத்தி நில்லாது வழுக்கு கின்றாரே. (2098)

வாழ்வின் பயனாகிய இருவினை ஒப்பு மலபரிபாகம் எய்திச், சிவபிரானை அடையும் கருத்தென்ப தில்லாமல் வாழ்நாளில் பெரும் பகுதி கழிந்து விட்டது. அமராபதியின் தலைவனாய சிவ உலக முதல்வன், அன்பினுள்ளே குடி கொண்டுள்ளான். உலகில் உள்ள அனைத்துயிர்களின் உள்ளத்துள்ளேயும் அவன் ஒருத்தனே உள்ளான். அவனைச் சென்றடைய வேண்டிய முயற்சியில், யோக தவஞானங்களில், ஈடுபடாது வழுக்கி, நெறி தவறிப் போகின்றார்களே.

## இதோபதேசம்

**562. செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை**
**வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை**
**இல்லை எனினும் பெரிதுளன் எம்மிறை**
**நல்ல அரன்நெறி நாடுமின் நீரே. (2103)**

உங்கள் சிந்தனையைச் சிவன் பாலே ஓய்வின்றி - இடையறாது, செல்லும் அளவு முடிந்த அளவு செலுத்துங்கள். அழிவற்ற உண்மைப் பொருளை - அதாவது சீவனையும் சிவனையும் பற்றி உங்களால் இயன்ற அளவு பிறரிடம் எடுத்துச் சொல்லுங்கள். இறைவன் என்பதொன்றில்லை என்றோ. இந்த ஆத்மாவே பிரமம் என்றோ சொல்பவர்கள் சொன்னாலும், எம் இறைவனாம் அவன் உயிர்கள் தோறும், உலகமெலாம் நீக்கமற நிறைந்திருக்கிறான். நன்மை தருவதாகிய அரன் நெறியாம் சிவவழிபாட்டினை நீங்கள் நாடுவீர்களாக.

**563. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**
**நன்றே நினைமின்கள் நமனில்லை நாணாமே**
**சென்றே புகுங்கதி இல்லை நும்சித்தத்து**
**நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. (2104)**

மக்கட்குலம் என்பது ஒன்றே; சாதி மதம் முதலிய யாவும் கற்பனையே. அப்படியே இறைவன் ஒருவனே. ஒரு நாமம் ஓர் உருவம் இல்லா அவனைப் பல பெயர் இட்டு அழைக்கிறோம். நீங்கள் நினைப்பன யாவுமே நல்லனவாகவே இருக்கட்டும். நமக்கு நமன் பயம் என்பது இல்லை. நாம் தேடிச் சென்று அடையும் சிவகதி என்பது, வேறு வெளியிலே இல்லை. நம்

உள்ளத்திலேயே அது உள்ளது. அவனை இடையறாது தியானிப்பீர் ஆயின், அவன் உங்கள் உள்ளத்திலேயே, நின்று நிலைபெற்றிருக்க, உம் சித்தத்திலேயே சிவகதி வந்தெய்தும்.

564. பறக்கின்ற ஒன்று பயனுற வேண்டின்
இறக்கின்ற காலத்தும் ஈசனை உள்கும்
சிறப்பொடு சேரும் சிவகதி பின்னைப்
பிறப்பொன்று இலாமையும் பேருல காமே. (2103)

நம் உடலாம் கூட்டை விட்டுப் பறந்து போகின்ற ஒன்று ஆன்மா. அந்த ஆன்மா இந்தப் பிறப்பிலேயே பிறவிப்பயனாம் சிவகதி அடைய வேண்டில், இறக்கின்ற காலத்தும் (வாழ்நாள் முழுவதும் - இறக்கின்ற வரைக்கும்) ஈசனை நினைத்திடுக. அப்படி ஓயாது சிவநாமம் உச்சரித்து வந்தால் ஆன்மா சிறப்பொடு சிவகதியில் போய் அடையும். அதன்பின் பிறப்பென ஒன்றில்லை. பேருலகமாம் சிவசாயுச்சியத்தில் அவ்வான்மா சென்றடையும்.

565. இன்புறுவீர் அறிந்தே எம்இறை வனை
அன்புறுவீர் தவம்செய்யும் மெய்ஞ் ஞானத்துப்
பண்புறுவீர் பிறவித் தொழிலே நின்று
துன்புறு பாசத் துழைந் தொழிந் தீரே. (2112)

எம் இறைவனாகிய சிவபிரானை அவன் அருளால் அறிந்தே இன்பமடையுங்கள். அவனடிக் கண்ணே அன்புபூண்டுத் தவநெறியை மேற்கொண்டு தவம் செய்யுங்கள். மெய்ஞ் ஞானத்துப் பயின்றுப் பயின்று இறைமைப் பண்பினை அடையுங்கள். இதைவிடுத்து பிறந்து இறந்து பிறந்து இறக்கும் பிறவித் தொழிலிலே நீங்கள் நிலைத்து நின்றுத் துன்பம் தரும் பாசத்தில் ஏனோ உழன்று கிடப்பீர்களே! என்னே!

566. மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளும் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மேல்நெறி ஒன்றுண்டு
மேற்கொள்ள லாம்வண்ணம் வேண்டிநின் றோர்க்கே. (2113)

தாம் படிப்படியாக சோபான முறையில் சரியை, கிரியை, யோகம் பயின்று பிறவித்துயர் நீங்க சிவன்தாள் அடைய வேண்டும் என்பதை வேண்டி நின்றவர்க்குத், தாம் மேற்கொள்ள வேண்டிய உண்மையானத் தவநெறி ஒன்று உண்டு. அதுவே பஞ்சாட்சர நெறி. பசுஞானம் மாற்றிப் பதிஞானம் அடையப்பயிலும் நெறி. இவர்கள் மேற்கொள்ள வேண்டிய மெய்யான நெறியும் ஒன்றுண்டு. அதுவே இருவினை ஒப்பு மல பரிபாகத்தால், சத்திநி பாதம் அடைந்து சிவத்தை அடையும் நெறி.

**567. சார்ந்தவர்க் கின்பம் கொடுக்கும் தழல்வண்ணன்**
**பேர்ந்தவர்க் கின்னா பிறவி கொடுத்திடுஞ்**
**கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடுஞ்**
**சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரன்றே. (2114)**

திருவருட்சத்தியின் பதிவால் திருவடி இன்பத்தைச் சார்ந்தவருக்குச் சிவஞான இன்பம் தந்தருள்வான் தழல் நிறமுடைய சிவபிரான். உலக இச்சைகளிலும் போகங்களிலும் அவாவுடையவராய் சிவனை மறந்து, அவமே செய்து, அவனைவிட்டு விலகிப் போனவர்களுக்குப் பிறவித் துன்பமாகிய பெருந்துன்பத்தைத் தந்திடுவான். சிவஞானம் மிக்கோங்கிக் கூர்ந்தவர்களுக்கு, அவர்கள் மனம் எக்காலமும் சிவனடிக்கே ஈடுபட்டிருப்பதாகலின், சிவன் தன் திருவடிகளைக் காட்டிடும். அவனடி இவ்வண்ணம் சேர்ந்தவர்கள் தேவதேவனாம் சிவனைச் சென்றடைந்து மெய்யுணர்வடைவர்; சிவஞானம் பெறுவர்.

**568. முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை**
**எத்தனை காலமும் எய்துவர் ஈசனை**
**நெய்த்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்**
**அத்தகு சோதி யதுவிரும் பாரே. (2115)**

முத்தி நலம் கொடுப்பவனை, ஞானமயமானவனை, முத்தமிழ் மறைஒலிக் கருள் தருபவனை, சர்வேஸ்வரனாம் சிவபெருமானை, எத்தனை காலம் முறையறியாமல், ஆணவ மலமாம் சகச மலத்தோடு கூடி வழிபாடு செய்வார்கள். இறைவன், பாலின் கண்ணே, கண்ணுக்குத் தெரியாமல் நெய்

மறைந்திருப்பதைப் போல் நம் உள்ளத்தின் உள்ளே மறைய நின்றுளன். அவன் நிமலன். அப்படிப்பட்ட ஜீவ ஒளியிலே மறைந்துள சிவஜோதியை அகத்தினிடத்தே கண்டு வழிபடுதலை அறிகின்றிலரே!

**569. சிவனை வழிப்பட்டோர் எண்ணிலாத் தேவர்**
**அவனை வழிபட்டு அங்கு ஆமாறு ஒன்றில்லை**
**அவனை வழிபட்டு அங்கு ஆமாறு காட்டும்**
**குருவை வழிபடில் கூடலு மாமே. (2119)**

எண்ணிக்கைக்கு அடங்காத தேவர்கள் சிவனை வழிபட்ட வண்ணம் உள்ளனர். அவ்வாறு அவனை வழிபட்டு அதனால் அடையும் நிலைத்த உண்மைப் பயன் அவர்கட்கு ஒன்றும் இல்லை. அவர்கள் முத்தியடைதலிலார் (அவர்கள் தம் நல்வினைப்பயனாம்) சுவர்க்க இன்பம் துய்த்துப் பின் உலகிடையே பிறந்து, இருவினை மும்மலமற்று, சிவஞான மடைந்தே வீடு அடைய வேண்டும். (வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் - திருவாசகம்) இனி சிவனை வழிபட்டுத் திருவடிப் பேறு எய்துவதற்குரிய ஆகம நெறியாம் சரியை, கிரியை, யோக ஞானங்களைக் காட்டுபவனே குரு. அந்தக் குருவை வழிபடுதலே சீவனின் கடமை ஆகும். அந்த வகையில் குருவை வழிபட்டால் சிவனைச் சென்று கூடுதலைப் பெறலாம்.

**570. ஆட்கொண்டவர் தனிநாயகன் அன்புற**
**மேற்கொண்டவர் வினைபோயற நாடொறும்**
**நீர்க்கின்ற செஞ்சடை நீளன் உருவத்தின்**
**மேற்கொண்ட வாறு அலை வீவித்து உளானே. (2121)**

குருவடிவாகி குவலயத்தே வந்து ஆட்கொண்டவர் ஒப்பற்ற தனித் தலைமை முதல்வனாம் சிவனேயாம். குருவின் பால் அன்பு செலுத்துதல் மூலமாகச் சிவனிடம் பக்தி செய்யும் அடியவர்களின் இருவினைகளும் கெட, நாள்தோறும் கங்கை நீர்மேல், நெருப்பன்ன சிவந்த சடையுடன் விளங்கும் மேலான சிவபிரான், குருவடிவத்தை மேற்கொண்டு, வந்து ஆறலையாம் அலைச்சலைத் தரும் பிறப்பிறப்புத் துன்பத்தை அழித்து ஒழித்து விட்டான். (வீவித்தல் - ஒழித்தல்)

ஏழாம் தந்திரம் முற்றும்

# எட்டாம் தந்திரம்

## உடலிற் பஞ்ச பேதம்

**571.** *காயப்பை ஒன்று சரக்குப் பலஉள*
*மாயப்பை ஒன்றுண்டு மற்றுமோர் பையுண்டு*
*காயப் பைக்குள் நின்ற கள்வன் புறப்பட்டால்*
*மாயப்பை மண்ணா மயங்கிய வாறே.* **(2122)**

நம்முடைய காயமாகிய உடல் ஒரு பையாகும். (இது அன்னமய கோசம்) இதனுள்ளே பற்பல சரக்குகள் பொருந்திய மாயப் பையும் ஒன்று உண்டு. இது பிராணமய கோசம். இதனுள்ளே மற்றோர் பையும் உண்டு. இது மனோ மயகோசம். இந்த மூன்று கோசத்துள்ளே, காயப் பையாம் அன்னமய கோசத்து, உள்ளே பொருந்தியுள்ள கள்வனாம் அறிவு விளங்கும், மனோமய கோசம் உடலை விட்டு நீங்கி விட்டால் காயப் பையும் மாயப்பையும் மண்ணாகிவிடும். இவ்வகையில் அன்னமயம் பிராண மயங்கட்கு ஆதாரமானது மனோமய கோசமே ஆகும்.

**572.** *அத்தன் அமைத்த உடலிரு கூறினிற்*
*சுத்தம தாகிய சூக்குமம் சொல்லுங்கால்*
*சத்த பரிச உருவ ரச கந்தம்*
*புத்தி மான் ஆங்காரம் புரியட்ட காயமே.* **(2123)**

உயிர்கள் அனைத்துக்கும் தந்தையாகிய சிவபிரான் உண்டாக்கி விட்ட உடல்கள் இருவகைத்து. ஒன்று பருவுடல் (தூலம்) மற்றொன்று நுண்ணுடல் (சூக்குமம்) இவ்விரு வகைகளில் சூக்கும உடலைப்பற்றிச் சொலலப்புகின் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனும் பூதம் முதலாகிய தன்மாத்திரை ஐந்தும், புத்தி, மனம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் மூன்றும், ஆக எட்டும் கொண்டது சூக்கும உடலாகும். (புரியட்டகாயம்)

**573.** *எட்டினில் ஐந்தாகும் இந்திரி யங்களும்*
*கட்டிய மூன்று கரணமு மாயிடும்*
*ஒட்டிய பாசம் உணர்வது வாகவே*
*கட்டி அழித்திடும் கண்ணுதல் காணுமே.* **(2124)**

மேல் மந்திரத்தில் கூறப்பட்ட எட்டு புரியட்டகத்தில் இருந்து தோன்றுவன ஐந்து இந்திரியங்களாகும். அவற்றோடு பொருந்தி தொழில்படும் மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் அந்தக் கரணங்களாகும். (உட்கருவி) இந்த எட்டினோடு சேர்ந்துள்ள பாச உணர்வை அகலும்படி ஒட்ட, ஆன்மாவுக்கு இயற்கையாகவே அமைந்துள்ள உணர்வை எழுப்பவேண்டி இவ்வெட்டையும், கட்டி மலமாக்கி வைத்த அக்கண்ணுதற் கடவுளே, அதை அவிழ்த்து ஆன்மாக்களுக்கு அருள் செய்வான்.

**574.** ***இரதம் உதிரம் இறைச்சிதோல் மேதை***
***மருவிய அத்தி வழும்பொடு மச்சை***
***பரவிய சுக்கிலம் பாழாம் உபாதி***
***உருவம லால்உடல் ஒன்றென லாமே.*** ***(2125)***

முன்னர்க் குறிப்பிட்ட எட்டாதாய நுண்ணுடம்புடன் கூடிய பருவுடம்பு இங்குக் கூறப்படுகிறது. இப்பரு உடல் தான் அன்னரசம், இரத்தம், ஊன், தோல், நரம்பு, எலும்பு, கொழுப்பு, மூளை, பரவிய சுக்கிலம் எனும் ஏழுதாதுக்களால் ஆனது. பாழ் செய்யும் செயலாற்றலாம் உபாதியோடு இவை செயலாற்றுகின்றன. இப்படிப்பட்ட கூட்டுச் சேர்க்கையிலான இவ்வுடலை ஒரு பொருளென மதிக்கலாமா?

**575.** ***ஆரே அறிவார் அடியின் பெருமையை***
***யாரே அறிவார் அங்கவர் நின்றது***
***யாரே அறிவார் அறுபத்தெட்டு யாக்கையை***
***யாரே அறிவார் அடிக்காவ லானதே.*** ***(2126)***

இறைவனாம் சிவபெருமானின் திருவடிப் பெருமையை ஆர் அறிந்து உரைக்க வல்லவர்? அவர் உடம்பினுள்ளே கோயில் கொண்டு, நின்றுள்ள தன்மையை யார் அறிவார்? இந்த உடம்பாம் அறுபத்தெட்டுந் தத்துவங்களைக் கொண்ட கூட்டுச் சேர்க்கை நன்கு அறிந்தவர்கள் யார்? அந்தப் பரம்பொருளாம் சிவன் மூலாதாரத்திலே உறங்கிக் கிடக்கும் குண்டலி சத்தியாய் நின்று ஆன்மாவைக் காப்பாற்ற இருக்கின்ற தன்மையை அறியவல்லவர் யார்? (68 யாக்கை. பொதுத் தத்துவம் - 60, சிறப்புத் தத்துவம் - 8, ஐம்பூதங்களின் கூறுபாடு 25,

கன்மேந்திரியம் 5, வாயு 10, நாடி 10, வாக்கு 4, ஈஷனை 3, குணம் 3 இவை பொது 60. தன்மாத்திரை 5, அந்தக் கரணம் 3. ஆக 8 சிறப்பு தத்துவம்)

**576. எண்சாண் அளவால் எடுத்த உடம்புக்குள்**
**கண்கால் உடலிற் கரக்கின்ற கைகளில்**
**புன்கால் அறுபத்தெட்டு யாக்கை புணர்கின்ற**
**நண்பால் உடம்புதன் நாலுடம் பாமே. (2127)**

எண்சான் அளவே கொண்டு எடுத்த நம் உடலுக்குள்ளே கண்முதலிய பஞ்சேந்திரியமும், கால் முதலிய கர்மேந்திரியங் களும், அன்றி உடலிலே மறைந்து ஒழுங்கு முறைக்குட் பட்டுள்ள நிணவழியான, அறுபத்தெட்டு உருவானவற்றைக் கூட்டிச் சேர்க்கும் நரம்பினால் தூல உடம்பும் சூக்கும உடம்பும் ஆகும். அவைகள் தூலம் சூக்குமம், காரணம், மகாகாரணம் என்பனவாம். (புறப்புறக் கருவிகள் 60. அகப்புறக்கருவி 8)

**577. உடம்புக்கும் நாலுக்கும் உயிராய சீவன்**
**ஒடுங்கும் பரனோடு ஒழியாப் பிரமம்**
**கடந்தொறு நின்ற கணக்கது காட்டி**
**அடங்கியே அற்றது யார் அறிவாரே. (2128)**

தூல உடலுக்கும் அதனைச் சார்ந்துள்ள தூலமற்ற நாலு உடம்புக்கும் (பிராணமய, மனோமய, ஆனந்தமய, விஞ்ஞான மயகோசங்களுக்கும்) உயிராக உள்ளது ஆன்மாவே. அந்த ஆன்மாதான் பரனோடு ஒடுங்கும். ஆன்மாவை விட்டகலாத பிரமமோ, உடல் உயிரில் கலந்துள்ளதைப் போலவே, ஆன்மா ஐந்து கோசங்களில் அடங்கி நின்று தொழிற்படுவதையும் அவற்றை விட்டு நீங்கும் தன்மையையும் யாரறிவர்.

**578. ஆறந்த மாகி நடுவுடன் கூடினால்**
**தேறிய மூவாறும் சிக்கென் றிருந்திடும்**
**கூறும் கலைகள் பதினெட்டும் கூடியே**
**ஊறும் உடம்பை உயிருடம் பெண்ணுமே. (2129)**

மூலாதாரம் தொடங்கி ஆறு அந்தங்களையும் நடுநாடி வழியாகக் கடந்து சென்று சகஸ்ரதளத்தில் குண்டலியைப்

பதிய வைத்தால், தசவாயுக்களும், புரியட்டகமாம் எட்டும் ஆகிய பதினெட்டும் சிக்கென அடங்கிக் கிடக்கும். இங்குக் கூறிய பதினெட்டு கலைகளும் (உறுப்புக்களும்) ஒன்று சேர்ந்தே, தூல உடலாகிய ஊறும் உடம்பை, உயிருடம்பாம் பிராணமாய கோசம் எண்ணி இயங்கும்.

**579. நாகம் உடல்உரி போலும் நல் அண்டசம்**
**ஆக நனவிற் கனா மறந்தல்லது**
**போகலு மாகும் அரன்அருளால் சென்று**
**ஏகுமிடஞ் சென்று இருபயன் உண்ணுமே. (2132)**

பாம்பு தன் சட்டையை உரித்துப் போட்டு விட்டுப் போவது போலவும், நல்ல முட்டையிலிருந்து குஞ்சு வெளிப்பட்டு முட்டையை விட்டு விலகி விடுதல் போலவும், நனவிலே கனவில் கண்டவற்றை மறந்து விடுதல் போலவும் உயிர் உடலைவிட்டு நீங்கிப் போதலாகும். அங்ஙனம் வெளியே உடலைவிட்டுப் போன உயிர், சிவபிரான் அருள் சத்தி வழியே ஏகுமிடஞ்சென்று, நல்வினைத் தீவினைப் பயன்களை அனுபவிக்கும்.

**580. ஞானிக்கும் காயம் சிவமாகும் நாட்டிடில்**
**ஞானிக்கும் காயம் உடம்பே அதுவாகும்**
**மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும்**
**மோனிக்குக் காயம்முப் பாழ்கெட்ட முத்தியே.(2135)**

எக்காலத்தும் சிவனைப்பற்றியே சிந்தை செய்து கொண்டிருப்பதால் சிவஞானிக்கு உடம்பு சிவமே ஆகும். அந்த ஞானிதான் தன் உடலை முற்றும் மறந்து தேக தர்மங்களைத் துறந்து விட்டிருப்பதால், ஞானியின் உடம்பே சிவனுடையதாகும். ஆறாதாரத்தின் மேனிலையாகிய சகஸ்ரதளத்திலே நிற்கும் யோகிக்கு விந்துவும், நாதமும் உடல். மௌன சாம்ராச்சியத்திலே மனம், வாக்கு, காயம் அடங்கி நின்றவர்களுக்குப் முப்பாழுக்கு அப்பாற்பட்ட முத்திய முத்தியே உடலாகும்.

581. விஞ்ஞானத் தோர்க்கு ஆணவமே மிகுதனு
எஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோர்க்குக் கன்மத் தனுவாகும்
மெஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே. (2136)

இருமலம் அற்று ஒருமலம் உள்ள விஞ்ஞான கலருக்கு அவர்களின் ஆணவ மலமே அவர்களின் உடலாகும். எஞ்ஞானமும் பொருந்தும் தன்மை வாய்ந்த இரு மலம் வாய்ந்த பிரளயா கலருக்கு மாயையே அவர்கள் உடம்பாகும். மும்மலம் பெற்றுள்ள அஞ்ஞானிகளாம் சகலருக்கு அவர்களது கன்மமே உடம்பாகும். மெய்ஞ்ஞானம் மேவிய சிவஞானிகளுக்குச் சிவமே உடலாகும்.

582. மலமென்று டம்பை மதியாத ஊமர்
தலமென்று வேறு தரித்தமை கண்டீர்
நலமென்று இதனையே நாடி இருக்கில்
பலமுள்ள காயத்தில் பற்றுமிவ் வண்டமே. (2137)

மாயா காரியமாகிய இவ்வுடம்பை மலப் பிணிப்புள்ள தென்று மதியாமல், இவ்வுடம்பையே சகலமும் என மதிக்கும் ஊமையர்கள் இக் காயமே புண்ணியத்தலம் என வேறு எண்ணி வாழ்வதைக் கண்டுள்ளீர்கள். இக்காயத்தை நன்மை பயப்பதாம் என்று எண்ணிக் கொண்டிருப்பீர்களானால் கன்ம வலிமை மிக்க இந்த உடல் இந்த அண்டத்திடத்தே வந்து பல பிறவி எடுக்கும்.

## அவத்தை பேதம் (கீழாலவத்தை)

(கீழ் நோக்கிச் செல்வது; சாக்கிரத்திலிருந்து துரியாதீதம் வரை)

583. ஐயைந்து மத்திமை ஆனது சாக்கிரம்
கைகண்ட பன்னான் இற் கண்டம் கனா வென்பார்
பொய்கண் டிலாத புருடன் இதயம் சுழுனை
மெய்கண்ட வனுந்தி ஆகும் துரியமே. (2142)

(அவத்தை என்பது உடல் அடையும் நிலைவேறுபாடு. அஃது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என

ஐந்து நிலையினவாம்.) மத்திமை எனும் புரவ நடுவிலே தொழிற் படும் கருவிகள் இருபத்தியைந்து. அவை ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, வாயு 10, அந்தக்கரணம் 4, புருடன் 1, இவை தொழிற்படும் நிலை ஜாக்கிரம் எனப்படும். கண்டத்தில் பழகிய பதினான்கு கருவிகள் தொழிற்படும். அவை தச வாயுக்களும் அந்தக் கரணங்கள் நான்கும் ஆகும். இது கனாநிலை. அழிவில்லாத புருடன் இதயத்தைப் பற்றியுள்ள நிலை உறக்க நிலையாகும். இங்குச் சித்தமும் புருடனும் ஆய இரு கருவிகளே இயங்கும். அழிவற்ற ஆன்மா உந்தியைப் பொருந்தியுள்ள போது உண்டாம் நிலை துரியம் ஆகும். இங்குப் புருடனுக்கு உரிய கருவி பிராணன் ஒன்றேயாகும்.

**584.** ***முப்பதோ டாறின் முதல் நனா ஐந்தாகச்***
***செப்பதி நான்காய்த் திகழ்ந்திரண்டு ஒன்றாகி***
***அப்பதி யாகும் நியதி முதலாகச்***
***செப்பும் சிவம் ஈறாய் தேர்ந்து கொள்வீரே. (2143)***

முன்சொன்ன தத்துவங்கள் இருபத்தியைந்தில் புருடன் ஒழிய இருபத்தி நான்கும் ஆன்ம தத்துவம். இதனோடு வித்யா தத்துவம் 7 சேர மொத்தம் 31 தத்துவங்கள். இதனோடு சிவ தத்துவம் 5 சேர மொத்தம் 36 தத்துவங்களாகும். மேற்கூறிய மந்திரத்தில் சொல்லப்பட்ட புருடன் வித்தியா தத்துவம் 7ல் அடக்கப்படும். ஆன்ம தத்துவம் 24 வித்தியா தத்துவம் 7, சிவதத்துவம் 5 ஆக இந்த 36 தத்துவங்களும் நனவு நிலையில் தொழிற்படும். அதாவது சிவ தத்துவமாம் சுத்த வித்தை, மகேஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆகிய இவ்வைந்தும் நனவில் தொழிற்படும். அடுத்து சுழுத்தியிலே சாதாக்கியம் சத்தி சிவம் மூன்றும் தொழிற்படும். துரியத்தில் சத்தி சிவமும்; துரியாதீதத்தில் சிவம் மட்டும் தொழிற்படும்; இவ் வண்ணமாகச் சாக்கிரம் முதலிய ஐந்து நிலைகளிலும் சிவதத்துவம் தொழிற்படும் என்க.

**585.** ***இந்திரியம் ஈரைந்து ஈரைந்து மாத்திரை***
***மந்திரமாய் நின்ற மாருதம் ஈரைந்தும்***
***அந்தக் கரணம் ஒருநான்கும் ஆன்மாவும்***
***பந்தவச் சக்கரப் பாலது வாகுமே. (2144)***

ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள் (5 + 5) பத்தும் அதனோடு சத்தாதி ஐந்தும் வசனாதி ஐந்தும் ஆக பத்தும் மறைபொருளாக நின்றுள்ள வாயுக்கள் பத்தும், அந்தக் கரணம் நான்கும், இவைகளோடு ஆன்மாவும் ஆக 35 தத்துவங்களுடன் ஜாக்கிரத்தில், பிறப்பிறப்பாம் சகடத்துள் பட்டுள்ள ஆன்மா தொழிற்படும். (முன் மந்திரத்தில் ஆன்ம தத்துவம் 24, வித்திய தத்துவம் 7, சிவதத்துவம் 5அ ஆக முப்பத்தாறு என்பதில் நின்று இது வேறுபட்டுள்ளமை அறிக)

**586. உடம்பும் உடம்பும் உயிரைத் தழுவி**
**உடம்பிடை நின்ற உயிரை அறியார்**
**உடம்பொடு உயிரிடை நட்பறி யாதவர்**
**மடம்புகு நாய்போல் மயங்கு கின்றாரே. (2148)**

கண்ணுக்குத் தெரிகின்ற, இந்த உடம்பினை, ஒட்டி கண்ணுக்குத் தெரியாத பிராணமய கோசமும் மனோமய கோசமும் உள்ளன. இந்த உடம்புள்ளே குடிகொண்டுள்ள ஆன்மாவின் இயல்பினை இவை அறிய மாட்டா. இவ்வகையில் உடம்புக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பினை அறியமாட்டாதவர், மடத்தில் புகுந்த நாய் அலைவது போல் அலைகின்றார்கள்.

**587. முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர்**
**வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்**
**கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர் முன்னாளில்லை**
**கன்னியைக் கன்னியே காதலித் தானே. (2152)**

பூதங்களுள் முன்னதான ஆகாயத்திற்கு ஓசை எனும் ஒரு மகன்தான் உண்டு. அதனின்று தோன்றிய காற்றுக்கு ஓசையும் ஊறுமான இரு மகன்கள், காற்றினின்று வந்த வன்னியாம் தீக்கு மூவர். அவைகள் ஓசை, ஊறு, உருவம் என்பன. வதுவையாம் நீருக்கு நால்வர். ஓசை, ஊறு, உருவம், சுவை என்பன. பூமியாம் கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர். அவை ஓசை, ஊறு, உருவம், சுவை, நாற்றம் என்பவைகளே. இவை முன்னாளிலே (படைப்புக் காலமுன்) இல்லை. கன்னியாம் மாயையை இறைவன் திருவருள் (சத்தி) சார்பாய் நின்று சங்கற்பித்த போது மாயையினின்று இவ்வுலகு உண்டானது. கன்னி - மாயை; திருவருட் சத்தி.

**588. ஊமை எழுத்தோடு பேசும் எழுத் துறில்**
**ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும்**
**ஓமய முற்றது உள்ளொளி பெற்றது**
**நாமய மற்றது நாமறி யோமே. (2158)**

ஊமை எழுத்தெனப்படும் 'ம்' என்னும் மெய்யெழுத்தோடு பேசும் எழுத்துக்களான அகரமும் உகரமும் ஒன்றிணைந்தால் ஓம் என்னும் பிரணவம் உண்டாகும். இந்தப் பிரணவம் நெஞ்சிலே பொருந்தி நிலை பெற்றால் ஆமை தன் ஐந்துறுப்புக்களையும் தன் ஓட்டுக்குள் இழுத்துக் கொள்வதைப் போல் நமது பஞ்சேந்திரியங்களும் செயலற்றுப் போய் விடும். அக்கால் ஆன்மா ஓம் எனும் பிரணவ மயமாகவே மாறி உள்ளொளி பெற்று விளங்கும். அதனால் நான் என்பதற்றுத் தற்போதம் கெட்டு விடும். அதை நாம் உணரவும் மாட்டோம்.

**589. ஆசான் முன்னே துயில் மாணவகரைத்**
**தேசாய தண்டால் எழுப்பும் செயல் போல்**
**தேசாய ஈசனும் நீடு ஆணை வத்தரை**
**ஏசாத மாயான் தன்னாலே எழுப்புமே. (2163)**

ஆசிரியர் தாம் பாடம் கற்பிக்கும்போது தம்முன்னே உறங்கி விழும் மாணவனை ஒளிமிக்க பிரம்பினால் தட்டி எழுப்பும் செயலைப் போல அருள் வடிவமான ஈசனும் பிறவிகள் தோறும் தொடர்ந்து வரும் ஆணவ மலத்தினரை சுத்தமாயையினால் தட்டித் தன், பேரருளால் எழுப்பி ஆட்கொள்வான்.

## மத்திய சாக்கிராவத்தை

**590. சாக்கிர சாக்கிரந்தன்னில் திரோதாயி**
**சாக்கிர சொப்பனம் தன்னிடை மாமாயை**
**சாக்கிரந் தன்னில் சுழுத்திதற் காமியம்**
**சாக்கிரந் தன்னில் துரியத்து மாயையே. (2167)**

சாக்கிரத்திலே (ஜாக்கிரதை நிலையிலே) ஆன்ம விளக்கம் அறியாதபடி மறைத்து நிற்பது திரோதான சத்தியாம்.

சாக்கிரத்தினில் கனவு நிலையிலே அங்ஙனம் மறைந்திருப்பது மாயேயம் ஆகும். சாக்கிரத்திலே ஏற்படும் சுழுத்தி நிலையிலே, கருவிகள் ஓய்வெடுக்கத் தன்னுடைய கன்மத்திலே தொடர்புற்று அதனால் மறைக்கப்பட்டிருக்கும். சாக்கிரத்தின் துரிய நிலையிலே, தூவாமாயை தொடர்புண்டு கிடக்கும்.

***591.*** ***வைச்சன வச்ச வகையிரு பத்தைந்தும்***
***உச்சம் உடன்அணை வான்ஒரு வனுளன்***
***பிச்சன் பெரியன் பிறப்பிலி என்றென்று***
***நச்சி அவனருள் நானுய்ந்த வாறே.*** ***(2171)***

வைக்க வேண்டியதான இருபத்தியைந்து தத்துவங்களையும் சாக்கிர நிலையிலே வைத்து, மும்மலங்களையும் வெற்றி கொள்ளும் பொருட்டு நம் ஆன்மாவை அணைந்து நிற்கும் ஒருவன் உளன். அவனைப் பிச்சன் எனவும், சில பத்தர்கள் அழைப்பர். அவன் பிறப்பிறப்பற்றவன் எனப் பலப்பலவாகப் போற்றி அவன் அருளை விரும்பி நான் உய்தி அடைந்தேன்.

***592.*** ***நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்***
***ஓடிய காலில் ஒடுங்கி இருந்திடும்***
***கூடிய காமம் குளிக்கும் இரதமும்***
***நாடிய நல்ல மனமும் உடலிலே.*** ***(2174)***

பத்து நாடிகளும், நலம் தருகின்ற பிராணன் முதலாகிய பத்து வாயுக்களும், பயிற்சி முறையால் நடு நாடி வழியாக மேல் நோக்கி மூலாதாரம் முதலாகச் சென்றுச் சுழி முனையில் ஒடுங்கி இருந்திடும். அந்த நேரத்திலே சிற்றின்பத்தினால் அடையும் காமத்தில் குளித்தலால் ஏற்படும் ஆனந்த ரசம் அனுபவித்தல் கூடும் நன்மையை நாடிய மனமும் இவ்வுடலின் கண்ணே பொருந்தி இருக்கும்.

***593.*** ***தத்துவ மானது தன்வழி நின்றிடில்***
***வித்தக னாகி விளங்கி இருக்கலாம்***
***பொய்த் தவமாம் அவை போயிடும் அவ்வழி***
***தத்துவ மாவது அகார எழுத்தே.*** ***(2180)***

தத்துவங்கள் அனைத்தையும் தன் வழியே ஒழுகும்படிச் செய்யின் அப்படிப்பட்டவன் சிறந்த சிவஞானியாகி விளக்க முற்றிருக்கலாம். மெய்யறிவு உணர்வற்ற பொய்யான தவநெறிகள் அனைத்தும் அப்படிப்பட்டவனைவிட்டு நீங்கிப் போய்விடும். அதை உணர்த்தும் தத்துவமானது அகார எழுத்தே ஆகும். (ஓம் என்னும் பிரணவ எழுத்தின் முதலெழுத்து அகரம். இந்த அகரத்தின் தன்மையை உணர்ந்தவன் பிரணவத்தையும் ஐந்தெழுத்தையும் உணருவான் என்க)

***594. அறிவொன் றிலாதன ஐயேழும் ஒன்றும்***
***அறிகின்ற என்னை அறியா திருந்தேன்***
***அறிகின்றாய் நீஎன் றருள் செய்தார் நந்தி***
***அறிகின்ற நாஎன் றறிந்து கொண்டேனே. (2181)***

ஐயேழும் ஒன்றும் ஆய முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மா பொருந்தி செயற்படாத காலத்திலே, அறிவற்றவைகளே. அங்ஙனமிருந்தும் அவைகளை அறிகின்ற நான் என்னையே அறியாமல் கிடந்தேன். அப்படிப்பட்ட நிலையில் நீ சடமல்ல சித்துதான், அறிவிக்க அறியும் தன்மை வாய்ந்தவன் நீ; அறிகின்றவனே நீ; என்று எனக்கு அறிவைக் கொளுத்தினார் நந்தி எம்பெருமான். அதன்பின்னே நான், என்றும் ஆன்மா அறிவுள்ளது. தத்துவங்கள் அறிவற்றவை என அறிந்து கொண்டேன்.

## ஆறு அத்துவாக்கள் = (வழி)

**595. தத்துவங்கள் ஆறாறு தன்மனு ஏழ்கோடி**
**மெய்த்தகும் வன்னம் ஐம்பான் ஒன்று மேதினி**
**ஒத்திரு நூற்றிருபான் நான்கு, எண்பான் ஒன்று**
**வைத்த பதங்கலை ஓரைந்தும் வந்தவே. *(2184)***

தத்துவங்கள் எண்ணிக்கையோ முப்பத்தி ஆறு. மந்திரங்களின் முடிவுகள் ஏழுகோடி. வன்னம் என்று சொல்லப்படும் எழுத்துக்கள் ஐம்பத்தொன்று (வடமொழி எழுத்துக்கள் 51) புவனங்களோ இருநூற்று இருபத்து நான்கு. பதங்கள் எண்பத்தியொன்று கலைகளோ ஐந்து. இவை சிருட்டியில் வந்தவை.

அத்துவா என்பது வழியாகும். இஃது மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என ஆறாகும். மந்திரம் பதம், வன்னம் = சொற்பிரபஞ்சம்; புவனம், கலை, தத்துவம்= பொருட் பிரபஞ்சம்.

## சுத்த நனவாதி பருவம்

596. ஆதி பரஞ்சிவம் சத்தி சதாசிவம்
ஏதமில் ஈசன் நல் வித்தியா தத்துவம்
போதங் கலை காலம் நியதி மாமாயை
நீதி ஈறாக நிறுத்தினன் என்னே. (2190)

முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளான சிவபிரான் 1, சத்தி 2, சதாசிவம் 3, குற்றமற்ற மகேசன் 4, சுத்த வித்தையாம் 5 - இவை சிவதத்துவமாகும். வித்தை, கலை காலம், நியதி, மாயையாகிய தத்துவம் - 5 முறைமையும் முடிவுமாக இறைவன் ஆன்மாவின் பொருட்டு அமைந்துள்ளான்.

597. தேசுதிகழ் சிவம், சத்தி, சதாசிவம்,
ஈசன் நல்வித்தை இராகம், கலை, காலம்
மாசகல் வித்தை நியதி மகா மாயை
ஆசில் புருடாதி ஆன்மா ஈறாறே. (2191)

(முன்சொன்ன மந்திரத்தின் விரிவாகும் இது) பரஞ்சுடர் மயமான சிவம் சத்தி சதாசிவம், மகேசன், சுத்தவித்தை ஆன ஐந்தும் சிவ தத்துவம். இராகம், கலை, காலம், வித்தை, நியதி, மாயை, புருடன் எனும் ஏழும் வித்தியா தத்துவம். ஆன்மதத்துவம் முன்னர்க் கூறப்பட்ட 24. ஆக மொத்தம் ஆறாறு முப்பத்தி ஆறு ஆகும்.

598. ஆணவம் மாயையும் கன்மமுமாம் மலம்
காணும் முளைக்கும் தவிடு உமி ஆன்மாவும்
தாணுவை ஒவ்வாமற்று தண்டுலமாய் நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே. (2192)

ஆணவம், மாயை, கன்மம் இவைகளே மலமாம். இவைகளில் ஆணவம் உமியை ஒக்கும். மாயை தவிட்டை ஒக்கும். கன்மம் முளையை ஒக்கும். மற்று ஆன்மாவோ பரமான்மாவான சிவத்தை ஒவ்வாது. ஏனெனில் அதற்கு வியாபகம் இல்லை. உமி தவிட்டால் மூடப்பட்ட அரிசியை ஒத்திருக்கும். எனவே உன்னிடம் அமைந்துள்ள பாசத்தை அகற்றிச் சிவனடியைப்பற்றி அதிலே சிந்தை வைப்பாயாக. (ஆணவம் நீங்கும் வரை மாயையும் கன்மமும் ஆன்மாவைச் சூழ்ந்தே இருக்கும்)

**599. பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்**
**பசுக்களை மேய்க்கின்ற ஆயன் ஒரு வண்ணம்**
**பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடில்**
**பசுக்கள் தலைவனைப் பற்றி விடவே. (2193)**

பசுக்களாம் ஆன்மாக்கள் பல்வேறு வகையின. ஆயினும் ஆன்மாக்கள் அனைத்தும் சிற்றறிவினவே. அதுவும் அவன் அறிவிக்க அறியும் தன்மைய. இப்பசுக்களின் பால் ஒரே வண்ணம். அதாவது தூய வெண்ணிறம். (அதாவது ஆன்மாவின் தன்மை ஒரே வகையதே) பசுக்களை மேய்க்கின்ற ஆயன் தன் மேய்த்தல் தொழிலைச் செய்யும் கோலைக் கீழே போட்டுவிட்டால் இப்பசுக்களாம் ஆன்மாக்கள் ஆயனைச் (சிவனை) சூழ்ந்து பற்றிக்கொள்ளும். விட்டு விடா.

**600. புரியட்டகமே பொருந்தல் நனவு**
**புரியட்டகந் தன்னில் மூன்று கனவு**
**புரியட்டகத்தில் இரண்டு சுழுத்தி**
**புரியட்டகத் தொன்று புக்கல் துரியமே. (2201)**

சாக்கிர நிலையிலே புருடனுடன் பொருந்தி உள்ளவை புரியட்டகமாகும். அதாவது பஞ்ச தன் மாத்திரைகளும், மனம், புத்தி, அகங்காரம் எனும் எட்டுமாகும். கனவு நிலையிலே பொருந்தி உள்ளவை புரியட்டகத்திலே இறுதியில் சொல்லப் பட்ட மனம், புத்தி, அகங்காரம், மூன்றுமே. சுழுத்தி நிலையிலே பொருந்துகின்றவை புத்தியும் அகங்காரமுமாம். துரியத்திலே புருடனுடன் அகங்காரம் மட்டும் தொழிற்படும்.

**601. ஈதென்று அறிந்திலன் இத்தனை காலமும்**
**ஈதென்று அறிந்தபின் ஏதும் அறிந்திலன்**
**ஈதென்று அறியும் அறிவை அறிந்தபின்**
**ஈதென்று அறியும் இயல்புடை யேனே. (2209)**

சிவபரம் பொருள் இத்தன்மைத்து என்று இத்தனை காலமும் பலப்பல பிறவிகளாக அறிந்திலேன். அந்தப் பரமான்ம சொரூபத்தை ஈது என்று உள்ளபடியே உணர்ந்த பின், வேறு அறியத்தக்க பொருள் யாதொன்றுமில்லை என்பதறிந்தேன். சிவபரம் பொருள் இத்தன்மைத்து எனப்பதி ஞானத்தால் அறிந்து உணர்ந்த பின்னர், இஃது ஒன்றே நாம் அடைய வேண்டிய வீடுபேறு என்றறிந்த தன்மையன் ஆயினேன்.

**602. மலக் கலப்பாலே மறைந்தது சத்தி**
**மலக் கலப்பாலே மறைந்தது ஞானம்**
**மலக் கலப்பாலே மறைந்தது தாணு**
**மலக் கலப்பற்றால் மதியொளி யாமே. (2213)**

நம் ஆன்மாவின் ஆற்றல் மலக் கலப்பினாலேயே மறைந்துள்ளது. நாம் அடைய வேண்டிய முத்திக்கு வழியாம் சிவ ஞானமும் மலக்கலப்பாலேயே மறைந்துள்ளது. ஆற்றல் மிக்க ஞானத்தை ஒப்பவே, சத்தி ஞான வடிவான தாணுவாம் சிவபிரானும் ஆன்மாவின் மலக்கலப்பினாலேயே ஆன்மா அறிய வொட்டாமல் தன்னை மறைத்துக் கொண்டுள்ளான். அந்த மலக் கலப்பு திருவருளால் ஆன்மாவிடமிருந்து அற்று ஒழிந்தால் நிறைமதி போன்று ஆன்ம அறிவு சிறந்து விளங்கும்.

**603. திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று**
**நகைக்கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு**
**வகைக்கின்ற நெஞ்சினுள் ஆனைக் கன்றைந்து**
**பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாவிரண் டாமே. (2214)**

திகைத்து மயங்கும் உள்ளத்தினுள்ளே காமம், வெகுளி, மயக்கம் எனும் சிங்கங்கள் மூன்று உள்ளன. அந்த நெஞ்சினுள்ளேயே நரிக்குட்டிகளாம் அந்தக் கரணங்கள் நான்கு உள்ளன. அந்த நெஞ்சினை அலைக்கழிக்கும்

ஐம்பொறிகளாம் ஆனைக் கன்றுகள் ஐந்துள்ளன. இந்த மூன்று, நான்கு, ஐந்தாம், சிங்கக் கட்டிகள், நரிக்குட்டிகள், ஆனைக் கன்றுகள் பன்னிரெண்டும் நெஞ்சுக்குப் பகைப் பொருள், அவை இருபகுதியனவாம். அதாவது அவை, ஆடுதலும், அடங்குதலும், ஓடுதலும் ஒடுங்குதலும் தன்மை வாய்ந்தவாம்.

**604.** *அறியாத வற்றை அறிவான் அறிவான்*
*அறிவான் அறியாதான் தான் அறிவுஆகான்*
*அறியாத வத்தை அறிவானைக் கூட்டி*
*அறியாது அறிவானை யார்அறி வாரே.* *(2224)*

(அறியாது + அவத்தை அறிவானை) கருவி கரணங்களால் அறிய முடியாதவற்றை திருவருட்சத்தியின் துணையால் அருட் கண்ணால் காண்பவனே அறிபவன். அவனே அறிவாளன். மற்று தன் ஊனக் கண்ணால் அறிய முற்படுபவனோ அறியாதவன் ஆவான். ஏனெனில் அவன் சத்தன்று (ஆன்மா சதசத்து) அறிவு விளக்கமுறாத ஆன்மாவை - ஐந்தவத்தைப் படும் ஆன்மாவை - தன்னோடு கூட்டி மறைந்து நின்றருளி அறிவித்தருளும் சிவபிரானை யார் அறிவார்?

## கேவல சகல சுத்தம்

**605.** *தானே தனக்குப் பகைவனும் நட்டாலும்*
*தானே தனக்கு மறுமையும் இம்மையும்*
*தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானும்*
*தானே தனக்குத் தலைவனு மாமே.* *(2228)*

தானே தான், தனக்குப் பகைவனாகின்றான். தானேதான் தனக்கு நண்பனுமாகின்றான். தீதும் நன்றும் பிறர்தர வாரா. எனவே தனக்கு நண்பனாகி நன்மை செய்வதும், பகைவனாகித் துன்பம் செய்வதும் தன் உள்ளமே. தன் இருவினைப் பயனே. அங்ஙனமே, மறுமைப் பயனையும் இம்மைப் பயனையும் தருவது தானேதான். இவ்வகையில் முன் செய்த நல்வினை தீவினைப் பயன்களைத் துய்ப்பவன் தான் மட்டுமே. இவ்வகையில் இவை அனைத்துக்கும் காரணமான தானே தனக்குத் தலைவனாகின்றான்.

**606. ஆம் உயிர் கேவல மாமாயையின் நடந்து**
**தாம் உயிர் மாயை எறிப்ப அறிவுற்றுக்**
**காமிய மாமேயமும் கலவா நிற்பத்**
**தாமுறு பாசம் சகலத்த தாமே. (2229)**

கேவலமாம் புலம்பு நிலையில் கிடக்கின்ற உயிர், மாமாயை என்று சொல்லப்படும் சுத்த மாயையில் பொருந்தி, அதன்பின் பக்குவப்பட்டு மாமாயையின் தொடர்பால் விளக்க முற்று, அறிவுற்று, அதனால் காமியமாகிய வினைகளும், மாயேயமாகிய கருவிகளும் (தனுகரணங்களும்) தாம் அடைந்து தாம் உறும் பாசத்தால் சகல நிலையினை அடையும். இவர்களே சகலர் ஆவார்கள்.

**607. அனாதி பசுவியாத்தி யாகு மிவனை**
**அனாதியில் வந்த மலம் ஐந்தால் ஆட்டி**
**அனாதியிற் கேவல மச்சக லத்திட்டு**
**அனாதி பிறப்பறச் சுத்தத்து ளாகுமே. (2236)**

சொல்லற்கரிய முற்காலந்தொட்டே பசுத்துவத்தினால் கட்டுப்பட்டுள்ள ஆன்மாவை, அக்கால முதலே பற்றி வந்த ஐந்து மலங்களால் உழலச் செய்து, கேவல நிலையில், பண்டு தொட்டிருந்த அந்நிலையின் நீக்கி, சகல நிலையில் பொருத்தி, அனாதியாகப் பற்றிவரும் பிறப்பு நீக்கம் செய்யத் திருவருளால் ஆன்மா சுத்தாவத்தையைப் பொருந்தும். (ஐம்மலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம்)

**608. ஐயைந்து ஒடுங்கும் ஆன்மாவில், ஆன்மாவும்**
**மெய் கண்டு சுத்த அவத்தையில் வீடாகும்**
**துய்ய அவ்வித்தை முதன்மூன்றும் தொல்சத்தி**
**ஐயன் சிவன் சத்தியாம் தோற்றம் அவ்வாறே. (2238)**

இருபத்தைந்து தத்துவங்களும் ஆன்மாவில் ஒடுங்கும் (ஆன்மா தத்துவம் 24 +1 புருடன்) ஆன்மாவும் உண்மை நிலை உணர்ந்து, சுத்தாவத்தையிலே வீடடையும். தூய சிவதத்துவம் சார்ந்த சுத்தவித்தை மகேஸ்வரம், சாதாக்கியம் ஆகிய இம்மூன்றும் அனாதியான சத்தியினும் சிவத்தினும் ஒடுங்கும். அவ்வாறே சிருட்டி காலத்தினும் சிவனிடமிருந்து ஒடுங்கி முறையே திரும்பவும் தோற்றும்.

**609. ஆணவத்தார் ஒன்று அறியாத கேவலர்
பேணிய மாயைப் பிரளயா கலராகும்
காணும் உருவினர் காணாமை காண்பவே
பூணும் சகலர்முப் பாசமும் புக்காரே.**

ஆவணமலம் ஒன்று மட்டுமே உடையவர் மாயை கன்மங்களை அறியாதவர்கள். அவர்களே விஞ்ஞான கலர் ஆவார்கள். அந்த ஆணவமலத்தோடு மாயையை பொருந்தியுள்ளவர்கள் பிரளயாகலர் ஆவார்கள் (இவர்கள் இருவரும் காணா உருவினர்.) உலகினர் காணக்கூடிய உருவமுடையவர்களாய தம்முடைய அஞ்ஞானத்தினைத்தாம் அறியாதவர்களாய் மும்மலங்களையும் பொருந்தியவர்கள் சகலர் ஆவார். (கேவலர் = மேலோர் - விஞ்ஞானகலர்)

**610. சுத்த அவத்தையில் தோய்ந்தவர் மும்மலச்
சத்து அசத்தோடத் தனித்தனி பாசமும்
மத்த இருள் சிவனான கதிராலே
தொத்தற விட்டிடச் சுத்த ராவார்களே.**

சுத்த அவத்தை எனும் தூய நிலையிலே பொருந்தியவர்களது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களின் காரண காரியத் தொடர்புகளையும் மும்மலங்களால் தனித்தனியே ஏற்படும் பாசங்களையும் உண்டாக்கும், மயக்கத்தைச் செய்யும், அஞ்ஞான இருளைச் சிவபிரான் எனும் பேரொளிப் பிழம்பாம் கதிரவன் தொடர்பு கெடும்படி நீக்குவதனால் அவர்கள் தூயவர்கள் ஆவார்கள்.

**611. தன்னை அறியாது உடலைமுன் தானென்றான்
தன்னைமுன் கண்டான் துரியந்தனைக் கண்டான்
உன்னும் துரியமும் ஈசனோடு ஒன்றாக்கால்
பின்னையும் தான்வந்து பிறந்திடும் தானன்றே (2264)**

ஆன்மாவாகிய தன்னைத்தான் அறியாமல் இவ்வுடலையே தான்என்று மயங்கி இருந்த ஒருவன், சிவஞான முதிர்ச்சியால் தன்னைத்தான் உணர்ந்து கண்டான். தன்னைத்தான் கண்டலாகிய ஆன்ம நிச்சயத்தின் பயனால் இருவினை ஒப்பு மலபரிபாகம் அடைந்து அப்பால் நிலையாகிய துரியத்தைக் கண்டான். இந்த துரியத்தினைக் கண்ட அச்சாதகனும்

ஈசனோடு பொருந்தும் நிலையினைச் சென்றடையாவிடில் மறுபடியும் வந்து பூமியில் பிறந்து பிறவித் துன்பம் அடைவான்.

612. மாயை கைத் தாயாக மாமாயை ஈன்றிட
வாய பரசிவன் தந்தையாய் நிற்கவே
ஏயும் உயிர்க்கே வல சகலத் தெய்தி
ஆய்தரு சுத்தமும் தான்வந் தடையுமே. (2268)

அசுத்த மாயை செவிலித் தாயாகவும் சுத்த மாயை ஈன்ற தாயாகவும் ஈன்ற மகவுதான் ஆன்மா. தந்தையோ சிவபிரானாம். அப்படி நிற்கவும் இங்கு வந்து அடைந்த உயிர் உடம்பினைப் பெற்று, கேவல நிலை அடைந்துப் பின் திருவருள் வலத்தால் சுத்தமாயையைப் பொருந்தி சுத்த ஆன்மாவாகும்.

613. தன்னை அறி சுத்தன் தற்கேவலன் தானும்
பின்னமுற நின்ற பேத சகலனும்
மன்னிய சத்து அசத்துச் சதசத்துடன்
துன்னுவர் தந்தம் தொழிற்கு அளவாகவே.

தன்னை ஆன்மா என்றுணர்ந்தவன் சுத்தனாவான். தான் ஒன்றையும் அறியாது கிடக்கும் கேவலனும் இவ்விருவருக்கும் வேறுபட்ட பரிபாகமுள்ள சகலனும் முறையே சத்தையும் அசத்தையும் தம்தம் மெய்யுணர்வுக்கு ஏற்றபடி பொருந்தி நிற்பார். அறிவற்ற நிலை - கேவலம் - கருவிகரணங்களுடன் கூடாத அறிவற்ற நிலை. 1. உலகறி நிலை - சகலம் - கருவி கரணங்களோடு கூடிய நிலை. 2. தன்னையறிந்த நிலை - சுத்தம்; 3. கருவி கரணங்களை விட்டு தூயவனாம் நிலை.

## பராவத்தை

614. அஞ்சும் கடந்த அனாதி பரந்தெய்வம்
நெஞ்சம தாய நிமலன் பிறப்பிலி
விஞ்சும் உடலுயிர் வேறு படுத்திட
வஞ்சத் திருந்த வகையறிந் தேனே. (2269)

சிவ தத்துவமாம் நாதம், விந்து, சாதாக்கியம், ஈஸ்வரம், சுத்தவித்தை ஆம் ஐவகையைக் கடந்து நின்றவன் அனாதி

நித்தனாவான். மேலான பரம்பொருள். அன்பர் நெஞ்சத் தாமரையைத் தன் இருப்பிடமாகக் கொண்டவன். இயல்பாகவே மலமற்றவன், பிறப்பற்றவன். ஒன்றை ஒன்று விஞ்சி நிற்கும் உடல் உயிர் இவைகளை வேறுபடுத்தி உடல் வாஞ்சையை ஒழித்திட, அவன் மாயையுடன் கலந்து நிற்கும் திறத்தினை அறிந்து கொண்டேன்.

**615. சத்தி பராபரம் சாந்தி தனிலான**
**சத்தி பரானந்தம் தன்னிற் சுடர்விந்து**
**சத்தியம் மாயை தனுச்சத்தி ஐந்துடன்**
**சத்தி பெறு முயிர் தான் அங்கத்து ஆறுமே. (2270)**

வேண்டுதல் வேண்டாமையானாம் சாந்தி நிலையிலான சத்தியே, பரா சத்தியாகும். மேலான ஆனந்த நிலையிலே சுடர்கின்ற விந்துவே சத்தியாகும். சத்தியாம் அந்த அசுத்த மாயையிலே பொருந்தி ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் இயக்கமாம் தனுச்சக்திகளுடன் சத்தியைத் தன்னிடத்தே அடைகின்ற உயிர்தான் (அங்கத்து) உடலாய் அடையும் பயனூட்டு வழியாகும்.

**616. ஆறாறுக் கப்பால் அறிவார் அறிபவர்**
**ஆறாறுக் கப்பால் அருளார் பெறுபவர்**
**ஆறாறுக் கப்பால் அறிவார் அவர்கட்கே**
**ஆறாறுக் கப்பால் அரனி னிதாமே. (2271)**

ஆறாறு தத்துவங்களைக் கடந்த பொருள் யாதெனத் தெளிந்தறிபவரே மெய்ப் பொருள் உணர்ந்தவராவார். அவரே தத்துவங்களைக் கடந்துள்ள திருவருளையும் பெறக்கூடியவர். இப்படி முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்து நின்ற பொருளை மெய்யுணர்வால் உணரும் அவர்களுக்கே அரன் பழமும் சுவையும் என இனித்திடுவான். அது 'பழச்சுவையென அமுதென' - திருவாசகம்.

**617. பரமாம் அதீதமே பற்றறப் பற்ற**
**பரமாம் அதீதமே பயிலப் பயிலப்**
**பரமாம் அதீதம் பயிலாத் தபோதனர்**
**பரமாகார் பாசமும் பற்றொன்று அறாதே. (2274**

தி-17

பண்டைய மும்மலங்களின் பற்றறப் பரமன் தாள் பற்ற, சீவன் சிவமாகி மேல் நிலை எய்துகின்றது. பற்றறப் பற்றுவதோடு சிவஞான சிவயோகத்திலே இடையறாது பயிலப் பயில, சீவள் சிவனாகி மேனிலையடையும். இங்ஙனம் பரமாம் மேல்நிலை எய்தப் பயிலாத, இம்மை மறுமைப் பயன் கருதி தவம் செய்யும் தபோதனர்கள், பரமாக மாட்டார்கள். அவர்களுக்குப் பாசம் பற்று ஒன்றும் அறாதே.

618. ஆயும் பொய்ம் மாயை அகம் புறமாய் நிற்கும்
வாயும் மனமும் கடந்த மயக்கறின்
தூய அறிவு சிவானந்த மாகிப் போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானே. (2275)

ஆராய்ச்சி செய்யவல்ல பொய் மாயையாம் உலக மாயை அகம் என்றும் புறம் என்றும் இரண்டு வகையாய் நின்று வருத்தும். அஃது சொல்லுக்கும் உலகத்துக்கும் எட்டாதது. அதனுடைய மயக்கத்திலிருந்து நாம் விடுபட்டு நின்றால், மயக்க அறிவு நீங்கிவிடும். நம் அறிவு தூய அறிவாகி நிற்கும். அதனால் ஆன்மா சிவானந்தமாகி மேனிலை எய்தும். இவ்வகையில் ஆன்மா படிப்படியாக மேலேறி பரந்த நிலையுடன் நின்று சிவானந்தப் பேரின்பம் எய்தும் - வேயும்- எங்கும் பரந்து.

619. உன்னை யறியாது உடலைமுன் நான் என்றாய்
உன்னை யறிந்து துரியத்துற நின்றாய்
தன்னை அறிந்தும் பிறவி தணவாதால்
அன்ன வியாத்தன் அமலனென் றறிதியே. (2279)

முன்னாளில் நீ உன்னை உணராத காலத்திலே உன் உடலையே நீ, நான் நான் என்ற சொன்னாய். பின் தெளிவு அடைந்தாய். நீ தன்னையறிந்து ஆன்ம தரிசனம் அடைந்தாய். அதனால் நீ துரிய நிலை அடையும் பேறு கிடைத்தது. நீ தன்னை அறிந்ததாலேயே உன்பிறவிப் பிணி உன்னை விட்டு நீங்கிப் போகாது. உன்னைத் தன் திருவருளால் ஆட்கொள்ளத் தக்கவன், உலகனைத்தும் நீக்கமற நிறைந்துள்ள அத்தன்மையவன். இயல்பாகவே மலம் நீக்கம் பெற்ற அமலன் என்றறிந்து அவனை அடைய முயலல் வேண்டும்.

**620. கருவரம் பாகிய காயம் துரியம்**
**இருவரும் கண்ணர் பிறப்பிறப் புற்றார்**
**குருவரம் பெற்றவர் கூடிய பின்னை**
**இருவரு மின்றியொன் றாகிநின் றாரே. (2280)**

கருவினைத் தன்வரம்பாகக் கொண்டு வளர்ந்த பிறந்து இக்காயமாகிய பருவுடலும், துரியத்திலே உள்ள நுண்ணுடல் ஆம் இருவராம் இவ்வுடல்களும் பிறவிப் பிணி நீக்கம் அடையும்வரை பிறந்து இறந்து பிறவிக் கடலிலே உழல்வர். திருவருட் சத்தியின் பலத்தால் குருவடிவாகி சிவபிரானே எழுந்தருளிவந்து உபதேசித்த பின்னர் அக்குரு வரத்தினால் சிவத்தோடு கூடும் நிலை எய்தும். அதன் பின்னர் தூல சூக்கும மாம் இருவரல்லாமல் சிவனோடும் ஒன்றி நின்று முத்தி யடைவர்.

**621. பின்னை அறியும் பெருந்தவத்து உண்மைசெய்**
**தன்னை யறியில் தயாபரன் எம்மிறை**
**முன்னை யறிவு முடிகின்ற காலமும்**
**என்னை யறியலுற்று இன்புற்ற வாறே. (2288)**

பின் வருவதனைச் சிந்தித்து முன் அறியும் பெரிய தவத்தின் பயனாய் மெய்யுணர் வெய்திப் பின், தன்னை அறிதலாம் ஆன்ம தரிசனம் பெற்றால், அருட் பெருஞ் ஜோதி ஆண்டவன் அருளால் பழைமையான சுட்டறிவு நம்மை விட்டு நீங்கி விலகும் காலத்திலே, என்னை நான் அறிதலாம் தன்மையடைந்து, அவன் திருவருட் பெருங் கருணையின் பயனாய்ப் பேரின்ப பெருவாழ்வு அடைவேன்.

**622. பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்**
**பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்**
**தன்னை மறைத்தது தன்கரணங்க ளாம்**
**தன்னின் மறைந்தது தன்கர ணங்களே. (2289)**

பொன்னால் செய்யப்பட்ட நகைகளை - நகை, வளை, ஆரம், தோடு என்னும் கண்கொண்டு பார்க்கும்போது, அங்கே பொன்னைப் பற்றிய நோக்கில்லை. மாறாகப் பொன்னின்

மாற்று எடை குறை நிறையைப் பற்றிக் காணுங் கால் அங்கே நகையினைப் பற்றிய பார்வை இல்லை. அதைப் போலவே நம் உயிரும், தன்னைக் கருவி கரணங்களாக எண்ணும் போது அங்கே ஆன்மா காணப்படுவதில்லை. மாறாக ஆன்மா என்பதே, தன் உடல் முதலிய கருவிகரணங்கள் அல்ல என ஆழ்ந்து நோக்கும் போது அங்கே ஆன்ம தரிசனம் உண்டு. அதனால் மெய்யுணர்வுண்டு.

**623. மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தில் மறைந்தது மாமத யானை**
**பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்**
**பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே. (2290)**

மேற்கூறியவாறே மரத்தால் செய்யப்பட்ட யானை உருவைப் பார்க்கும்போது அந்த யானை பொம்மை எம்மரத்தால் ஆனது தேக்காலா? அல்லது கோங்கா, வேங்கை மரத்தாலா? என்பதைப் பற்றிய காட்சி அங்கு ஏற்படுவதில்லை. ஆனால் அவ்வுரு செய்யப்பட்ட மரத்தினைப் பற்றி ஒரு தச்சன் பேசும்போது நாம் மரத்தையே காண்கிறோம். அங்கு நம் எண்ணத்திலிருந்து யானை மறைந்து விடுகிறது. அதைப் போலவே நம் காட்சிக்குப் புலப்படும் உலகமும் ஐம்பூதங்களும் நம் கண்களுக்குப் புலனாய் அக்காட்சியே உண்மை என நாம் காணும்போது இவைகளின் காரணனான பரம் நமக்கு விளக்கமுறுவதில்லை. மாறாக பிரபஞ்சத்தின் ஊடே - பிரகிருதியிலே சுத்த சைதன்யமாம் பரத்தை காணும் காட்சி குருவருளால் வாய்த்து விட்டால், ஆங்கு நம் காட்சியிலே ஐம்பூதங்களும் மறைந்து யாவற்றிலும் பரமே தோன்றும்.

**624. நின்றான் அருளும் பரமும் முன் நேயமும்**
**ஒன்றாய் மருவும் உருவும் உபாதியும்**
**சென்றான் எனைவிடுத்து ஆங்கிற் செல்லாமையும்**
**நன்றான ஞானத்தின் நாதப் பிரானே. (2295)**

மிகமிக நல்ல பதி ஞானத்திற்கு உரிய நாதாந்தத்தின் தலைவனாம் சிவபிரான் அருள் வடிவனாக, யாவற்றுக்கும் மேலான பரமாக உயிர்கள் மாட்டு அருள் சுரக்கும் நேயனாகி நின்றான். ஆன்மாக்களோடு ஒன்றிக் கலந்து உருவமாம்

உடலில் பொருந்தி இருந்து அவைகளின் உபாதியாம் ஜாக்கிரம் முதலியவைகளிலிருந்து விலகிச் சென்றான். எனைத் தூல சூக்கும உடல்களிலிருந்து விடுவித்துப் பின் நான் அங்கு மீளச் சென்றடையா வண்ணமாகி விளங்கி என் உள்ளத்திலே நின்றான்.

## முக்குண நிர்க்குணம்

**625. சாத்திகம் எய்தும் நனவெனச் சாற்றுங்கால்**
**வாய்த்த இராசதம் மன்னும் கனவென்ப**
**ஏய்த்திடும் தாமதம் உற்ற சுழுத்தியாம்**
**மாய்த்திடும் நிர்க்குணம் மாசில் துரியமே. (2296)**

மூலப்பகுதியின் வெளிப்பாடாம் முக்குணங்களில் அமைதிக் குணம் (சத்துவம்) நனவாகும். ஆட்சிக் குணமாம் ராஜசம் கனவு நிலையாகும். ஓய்வு கொண்டு சுழுத்தியில் உறங்கும் நிலை தாமத நிலையாகும். இம் முக்குணங்களையும் மாய்த்தொழித்து, முக்குணங்களையும் தாண்டி நிற்கும் துரிய நிலையே நிர்க்குணநிலை ஆகும். இந் நிலைதான் உடல், உலகம், மறந்து நிற்கும் நிலை.

## கலவு - செலவு

**626. வெல்லும் அளவு விடுமின் வெகுளியை**
**செல்லும் அளவு செலுத்துமின் சிந்தையை**
**அல்லும் பகலும் அருளுடன் தூங்கினால்**
**கல்லும் பிளந்து கடுவெளி யாகுமே. (2303)**

தான், தன் மன ஓட்டத்தைத் தடுத்து வெல்லும் அளவுக்கு நீங்கள் உங்கள் கோபத்தை விரட்டி அடியுங்கள். உங்கள் உள்ளத்தினைத் தியானத்தினால் இரவும் பகலும் திருவருளுடனே தங்கி, பொருந்தித் தூங்காமல் தூங்குதலாகிய சிதாகாசத்தில் சிந்தையை நிறுத்த வல்லீர்கள் ஆயின் உம்முடைய அகங்காரமான கல்லானது பிளந்து போகப் பரமாகாய மண்டல ஒளியில் தங்கியிருப்பீர்கள்.

## நின்மலாவத்தை

627. காய்ந்த இருப்பு கனலை அகன்றாலும்
வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போல்
ஏய்ந்த கரணம் இறந்த துரியத்துத்
தோய்ந்த கருமத் துரிசு அகலாதே. (2309)

கொல்லன் உலைக்களத்துப் பழுக்கக் காய்ச்சிச் செக்கச் சிவந்த இரும்பினை அக்கனலை விட்டெடுத்து புறத்தே வைத்த பின்னும், அவ்விரும்பின் தீவண்ணச் சிவந்த நிறம்மாறி பழைய இரும்பின் நிறம் வந்தெய்திய பின்னும், அதனிடம் பொருந்தியுள்ள சூடு, எப்படிப் பல நாழி கடந்தும் நீங்காமல் நின்றிருப்பதைப் போலவே, ஆன்மாவுக்கு பொருந்திய கரணங்கள் அனைத்தும், அற்று நீங்கி நிற்கும், நின்மல துரியத்திலேயும் கூட, முன் சென்ம வாசனையாம் துரிசுவிட்டு நீங்காது.

628. தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமும் அப்பாச பேதமும்
ஆன குணமும் பரான்மா உபாதியும்
பானுவின் முன்மதி போற்பட ராவே. (2314)

ஆன்மா சிவமயமாகும் தன்மையைத் தலைப்பட்டு எய்தி நிற்கத், தொன்மையான மலமும் அம்மலத்தினை ஒழிக்கத் திருவருளால் சேர்க்கப்பட்ட அந்த ஐம்புலன்களின் - பாசங்களின் பேதங்களும் - நீங்கிவிடும். இவைகளால் ஆன முக்குணங்களும், மேலான ஆன்மா தன் உண்மையைத், தான் அறியாதே அடையும் துன்பங்களும், பகலில் சூரியன் முன்னே விண்ணில் காய்ந்து தன் ஒளி மங்கிப் பிரகாசியாது நிற்கும் தேய் பிறைச் சந்திரனைப் போலப் பிரகாசியாது நீங்கிப் போகும்.

629. நெருப்புண்டு நீருண்டு வாயுவும் உண்டங்கு
அருக்கனும் சோமனும் அங்கே அமரும்
இருந்தக்க மாலும் திசைமுகன் தானும்
உருத்திர சோதியும் உள்ளத்துள்ளாரே. (2315)

அண்டத்தை ஒப்பவே இப்பிண்டமாகிய உடலிலும் நெருப்பு உண்டு. நீர் உண்டு, வாயுவும் உண்டு. இவ்வுடம்பிலேயே சூரியனும் சந்திரனும் சூரியகலை சந்திர கலையாக நிலவி நிற்கும். அழகிய திருமால் பிரமன் உருத்திரன் ஆய மும்மூர்த்திகளும் உள்ளத்துள்ளே வீற்றிருப்பர்.

630. ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி அதனுட்புக்கு
ஊனை இருளற நோக்கும் ஒருவற்கு
வானக மேற வழிஎளி தாமே. (2316)

ஐம்பொறிகளாகிய யானைகள் ஐந்தையும் அடக்கி மெய்யுணர்வு என்னும் ஞானத் திரியைத் திருவருளால் கொளுத்தி அதனால் காணப்படும் சிவ துரியத்துள்ளே புகுந்து இந்த ஊனாலாம் உடலைச் சிவ ஜோதியாகக் காண்பவர்க்குச் சிவ சாயுச்சியம் புகும் வழி எளிதாகும்.

631. முன்னை அறிவினில் செய்த முதுதவம்
பின்னை அறிவினைப் பெற்றால் அறியலாம்
தன்னை அறிவது அறிவாம் அஃதன்றிப்
பின்னை அறிவது பேய்அறி வாமே. (2318)

முற்பிறப்பிலே அடைந்த ஞானத்தினால் தான் செய்த நல்லதவத்தின் பயனை, இப்பிறப்பிலே அடைந்த, திருவருளால் எய்திய, சிவஞானப் பேற்றால் நாம் அறியக்கூடும். இவ்வண்ணமாகத் தன்னை தான் அறிவதே (தன்னைப் பசுவென்றும் இறைவனைப் பதி என்றும் சார்பால் சாரப்படும் பொருளை அறிவதே) அறிவாம். அதல்லாமல் பிற அறிவுகளாம் பசு ஞான, பாச ஞானங்களைப் பயின்று அதில் தேர்ச்சியடைதல், பேய், அறிவினை அடைந்து விட்டதை ஒக்கும்.

632. செயலற் றிருக்க சிவானந்த மாகும்
செயலற்றிருப்பார் சிவயோகம் தேடார்
செயலற்றிருப்பார் செகத்தோடும் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தி உண்டாமே. (2319)

மனோ வாக்கு காயமாம் முக்கரணங்களும் துரிய நிலையில் - ஆன்மா, ஐம்புலன் அந்தக் கரணங்கள் முதலியவற்றின் இயக்கமின்றிச் செயலற்றிருக்கும் நிலையில், விளைவது, சிவானந்தமாகும். அங்ஙனம் செயலற்றிருப் பவர்கள் சிவயோக நிலையைத் தேடார்கள். அவர்கள் உலகியலை அணுகார்கள். அப்படிப்பட்டவர்களுக்குத் தான் சிவபெருமானின் திருவருட் பேறாம் அருள் செய்தி உண்டாகும். சத்திநி பாதத்தால் திருவருட்பேறு கிட்டும்.

**633. தான் அவனாகும் சமாதிகை கூடினால்**
**ஆன மலமறும் அப்பசுத்தன்மை போம்**
**ஈனமில் காயம் இருக்கும் இரு நிலத்து**
**ஊனங்கள் எட்டும் ஒழித்தொன்று வோர்கட்கே.(2320)**

ஆன்மாவாகிய தான் (பசு) அவனாகிய பதியோடு பொருந்துகின்ற சமாதி நிலை ஒருவனுக்கு உண்டாகப் பெற்றால், ஆன்மாவைப் பிணித்துள்ள மும்மலங்களும் அற்றுப் போகும். தான் பசுவாம் தன்மை (கட்டுப்பட்டுள்ள தன்மை) நீங்கும். ஆன்மாவுக்கு ஊனம் செய்யும் காமம், குரோதம், லோபம், மதம், மார்ச்சர்யம், தன்னுணர்வின் மெய்யுணர்வின்மையாம் எட்டுக் குணங்களும் ஒழியும் இப்படிப் பதியுடன் ஒன்றி நிற்பவர்கள், குற்றமற்ற திவ்விய தேகம் பெற்று மேனிலமாம் சிவசாயுச்சியத்தில் பொருந்தி இருப்பார்கள்.

**634. தான் அவனாகிய ஞானத் தலைவனை**
**வானவா ராதியை மாமணிச் சோதியை**
**ஈனமில் ஞானத் தின்னருட் சத்தியை**
**ஊனமில் லான்தன்னை ஊனிடைக் கண்டதே. (2324)**

ஆன்மாவாய தன்னை அவனாக்கிக் கொண்ட மெய் ஞானத்தின் தலைவனை, தேவ தேவனை, மாணிக்கத்தின் வண்ணமாகி ஒளிர்பவனை, குற்றமற்ற சிவஞானத்தினை நல்கும் அருட்சத்தி வடிவானவனை, ஊனமற்ற ஒப்பற்ற சிவபிரானை இந்த உடலிடையே நான் கண்டு கொண்டேன்.

**635. ஒளியும் இருளும் பரையும் பரையுள்**
**அளிய தெனலாகும் ஆன்மாவை யன்றி**
**அளியும் அருளும் தெருளும் கடந்து**
**தெளிய அருளே சிவானந்த மாமே. (2325)**

ஞானமாகிய ஒளியும், ஆணவமாகிய இருளும், இவற்றை விளக்கும் சத்தியும், அச்சத்தியின் அருளே எனப்படும் ஆன்மாவின் ஆன்ம போதமும், கழன்றுப் போய், அருளிசெய்யும் அருட் சத்தியையும், தெளிந்த அறிவாம் ஞானத்தையும், கடந்து, தெளிந்து நிற்கும் அருள் ஒளியே சிவானந்தமாகும்.

**636. அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்**
**அறிவிக்க வேண்டாம் அறிவிற் செறிவோர்க்கும்**
**அறிவுற்று அறியாமை எய்திநிற் போர்க்கே**
**அறிவிக்கத் தாம்அறி வார்அறி வோரே. (2327)**

அறிவு ஒரு சிறிதும் இன்றி உலகமே இன்பம் என்று மயங்கிக் கிடக்கும் மாந்தர்களுக்குச் சிவதத்துவ ஞானங்களைப் போதிக்க வேண்டுவதில்லை. இதைப் போலவே ஜென்மாந்திர வாசனையால் ஞானம் செறிந்தவர்க்கும் உபதேசம் செய்ய வேண்டுவதில்லை. ஆனால் உலகியல் அறிவும், ஆன்ம அறிவும் கைவரப் பெற்றும், அனுபூதி ஞானம் அடையாதவர் களுக்கே ஞானோபதேசம் செய்க. அப்படிச் செய்தால் அவர்கள் தாம் சிவஞானமுற்று சிவப்பேறு அடைவர்.

**637. சத்தும் அசத்தும் சதசத்தும் தான்கூடிச்**
**சித்தும் அசித்தும் சிவசித்தாய் நிற்கும்**
**சுத்தம் அசுத்தம் தொடங்காத் துரியத்துச்**
**சுத்தராம் மூன்றுடன் சொல்லற் றவர்களே. (2328)**

சத்துடன் கூடி சத்தாகியும் அசத்துடன் கூடி அசத்தாகியும் மாறும் தன்மை வாய்ந்த ஆன்மாதான், அறிவுடன் கூடி அறிவாயும், அறியாமையுடன் கூடி அசித்தாகவும் மாறும். சிவனுடன் கூடிய காலத்து சிவ சித்தாய் நிற்கும். சுத்த மாயையும் அசுத்த மாயையும் தொடராத துரிய நிலையிலே சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்று நிலைகளையும் கடந்துச்,

சொல்லாம் பிரணவத்தையும் கடந்து, நீங்கியவர்களே சுத்தராம்.

**638. தானே அறியான் அறிவிலான் தானல்லன்**
**தானே அறிவான் அறிவுசத சத்தென்று**
**ஆனால் இரண்டும் அரன்அருளாய் நிற்கத்**
**தானே அறிந்து சிவத்துடன் தங்குமே. (2329)**

இந்த ஆன்மா தானாகவே அறிய மாட்டாது (அசத்து). அதே நேரத்தில் அறிவில்லாததும் அன்று. (அறிவிக்க அறியும் நன்மை உடையது) தானே அறிபவன் என்பவனும், தன் அறிவு, அறிவோடு அறியாமை உடையது (சதசத்து) என்பதைத் திருவருளால் அறிவான். அதனால் இவ்விரண்டு தன்மைகளும் சிவ பிரானின் அருள் சத்தி பதிதலால் உண்டாக, இவ்வான்மா தன்னையும் அறிந்து சிவத்துடன் ஒன்றிக் கலக்கும்.

**639. தத்துவ ஞானம் தலைப்பட்ட வர்கட்கே**
**தத்துவ ஞானம் தலைப்பட லாய்நிற்கும்**
**தத்துவ ஞானத்துத் தானவ னாகவே**
**தத்துவ ஞானந் தந்தான் தொடங்குமே. (2330)**

முப்பத்தாறு தத்துவங்களின் உண்மையை உணரும் உணர்வு அறிந்து வாழ்பவர்களுக்கே, திருவடி உணர்வாம் அழியாத தத்துவ ஞானம் கைகூடும். அந்தத் தத்துவ ஞானம் கை வந்தால் சிவனருளால் ஆன்மா சிவமாகும். அவ்வண்ணமாக தத்துவ ஞானத்தால் அவ்வான்மா சிவானந்தத்தில் திளைத்தலைத் தொடங்கும்.

**640. தன்னை அறிந்து சிவனுடன் தானாக**
**மன்னு மலங்குணம் மாளும் பிறப்பறும்**
**பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி**
**நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. (2331)**

ஆன்மா திருவருளால் தன்னை உணர்ந்து சிவபிரானுடன் ஒன்றி நிற்க, ஆன்மாவிடம் பதிந்துள்ள மும்மலங்களும், முக்குணங்களும் நீங்கும். அதனால் பிறவி நீங்கும். பின்னர் அது நல்ல முத்தியும் சன்மார்க்கமாம் பேரொளியையும்

அடையும். நலம் தரும் ஞானமுத்திரையாம் சின்முத்திரையைக் காட்டும். சிவன் சிவனோடு அடையும் சித்தியையும் அடைவிக்கும்.

641. இல்லதும் உள்ளத்து யாவையும் தானாகி
இல்லதும் உள்ளதுமாய் அன்றாம்; அன்னலை
சொல்லது சொல்லிடில் தூராதி தூரம் என்று
ஒல்லை உணர்ந்தால் உயிர்க்குயி ராமே. (2335)

அசத்துப் பொருளாகியும், சத்துப் பொருளாகியும், கலப்பால் சிவன் தானே யாகி நின்றருள்கின்றான். பொருள் தன்மையால் இல்லதும் உள்ளதுமாய், அப்பொருள்களில் வேறாகியும் உள்ளான். இவ்வண்ணமாய் உள்ள சிவபிரானை வாக்குக்கு அப்பாலுக்கு அப்பாலாய் உள்ளவன் என விரைவில் உணர்ந்தவர்க்கு அவன் உயிருக்கு உயிராய், உடனாக நின்று விளங்குவன்.

642. உயிரிச்சை ஊட்டி உழிதரும் சத்தி
உயிரிச்சை வாட்டி யொழித்திடும் ஞானம்
உயிரிச்சை ஊட்டி உடன்உற வாலே
உயிரிச்சை வாட்டி உயர்பதம் சேருமே. (2336)

ஆன்மாக்களுக்கு உலக இச்சையினை ஊட்டி அலைத்தலைச் செய்யும் ஆதி சத்தியே, ஆன்மாக்கள் பக்குவ காலம் அடையும் செவ்வி நோக்கி, உயிரின் இச்சைகளை சிவ ஞானத்தினால் வாட்டி ஒழித்தலைச் செய்யும். ஆன்மாக்களுக்கு இறைவன்பால் இச்சையாம் பக்தியை ஊட்டி ஆன்மாக்களோடு உடனாய் இருத்தலால், அந்த ஆன்மாவும் தன்பால் பொருந்தியுள்ள இச்சைகளை ஒழித்து, உயர்பதமாம் சிவசாயுச்சியம் சென்றடையும்.

43. திருந்தனர் விட்டார் திருவில் நரகம்
திருந்தனர் விட்டார் திருவார் சுவர்க்கம்
திருந்தனர் விட்டார் செறிமலக் கூட்டம்
திருந்தனர் விட்டார் சிவமா வவமே. (2339)

திருவருட் சத்தி பதிவால் திருத்த முற்றவர்கள், திருவில்லாத துன்ப நரகமாம் இன்னா உலகத்தினை விட்டு, நீங்கியவராவார். அவர்கள் இன்ப மயமான சுவர்க்காதி போகங்களைத் துய்க்கும் சுவர்க்க உலகங்களையும் விட்டு நீங்கியவ ராவார்கள். அவர்கள் தம்மோடு (ஆன்மாவோடு) பொருந்தியுள்ள மலக் கூட்டத்தையும் ஒழித்தவர்கள். அவர்கள் சிவமயமாகி அவமாய பிறப்பிறப்பையும் ஒழித்தவர்கள் ஆவார்கள்.

**644. அவமும் சிவமும் அறியார் அறியார்**
**அவமும் சிவமும் அறிவார் அறிவார்**
**அவமும் சிவமும் அறிவால் அறிந்தால்**
**அவமும் சிவமும் அவனருள் ஆமே. (2340)**

பிறப்பிறப்புக்களுக்கு ஏதுவாம் அவமும் (யான் எனது எனும் செருக்கும்), பிறப்பிறப்பினை நீக்கும் சிவத்தொண்டாம் சிவமும், மெய்யுணர் வற்றவர்கள் அறியமாட்டார்கள். ஆனால் சிவஞான முற்றவர்கள் மேற்கூறிய அவம் சிவம் எனும் இரு கூறுபாட்டின் தன்மைகளை, நன்கறிவார்கள். இவ்விதமாக அவம் சிவம் எனும் இருகூறுபாட்டு இயல்பினைத் திருவருளால் அறிந்த பிறகு உண்டாகும் தெளிவினால், அடியார்க்கு உண்டாகும் அவமும் சிவமும், அதாவது கேடும் நன்மையும் அவன் அருளால் ஆவது என்பதை உணர்வார்கள்.

**645. ஆதித்தன் தோன்ற வரும் பதுமாதிகள்**
**பேதித்த தவ்வினையாற் செயல் சேதிப்ப**
**ஆதித்தன் தன்கதிரால் அவை சேட்டிப்ப**
**பேதித்துப் பேதியாவாறு அருட் பேதமே. (2342)**

கதிரவன் உதித்தலால் கயத்து வளர்ந்து வரும் தாமரை முதலிய மலர்கள் தாம் தாம் மலர்கின்ற பக்குவ வேறுபாட்டுக்கு ஏற்ப, மலர்கின்ற செயல்கள் மாறுபட்டு விளங்கும். ஆதித்தனுடைய கதிர்களினால் அம்மலர்கள் சில மலர்ந்தும் சில பாதி மலர்ந்தும் சில அரும்பா மொட்டாகவும் இருக்கும். இச்செயற்பாட்டுத் தன்மையை ஒத்து, அருட் சத்தியினால் ஆன்ம ஒளி மலருமாயினும், ஆன்மாவின் பக்குவ நிலைக்கேற்பவே அது நிகழும் என்பதாம்.

646. தன்னினில் தன்னை அறியும் தலைமகன்
தன்னினில் தன்னை அறியத் தலைப்படும்
தன்னினில் தன்னைச் சார்கில னாகில்
தன்னினில் தன்னையும் சார்தற் கரியவே. (2349)

தன்னிடத்தே தன் உண்மையாம் மெய்யுணர்வினை அறியக் கூடிய தத்துவ சுத்தி பெற்ற சிறந்த ஆன்மா, தன்னிலேயே தன்னுடைய தலைவனாம் சிவபிரானை (தன் + ஐ) மெய்யுணர்வால் உணரத் தலைப்படும். அப்படியின்றி தன்னிலே தன்னுடைய மெய்யுணர்வினை அறிந்து சார்தல் இலன் ஆயின், தன்னிலே தன் ஐயனாம் தலைவனைச் சென்று சார்தற்கு இயலாதவனாகி விடுவான்.

647. மண் ஒன்று தான்பல மட்கலனாகிடும்
உண்நின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ஒன்று தான்பல காணும் தனைக் காணா
அண்ணலும் அவ்வணம் ஆகிநின் றானே. (2351)

களிமண் எனும் ஒன்றால், பலப்பல நல்ல பாண்டங்கள் செய்யப் படுகின்றன. அதைப்போலவே இறைவன் ஒருவனே சகல சர அசர இயங்குதிணை நிலைத்திணை உலகைப் படைத்து யாவற்றூடும் வியாபித்துள்ளான். நமது கண் தான், ஒரு பார்க்கும் கருவியாய் அமைந்து உலகிடை உள்ள பொருள்கள் அனைத்தையும் கண்டாலும், தன்னைத்தான் காணாது, இதை ஒப்பவே அண்ணலாம் சிவபிரானும் தான் யாவற்றையும் அறிந்தும் அவைகளால் அறியப்படாமல் விளங்குகிறான்.

## அறிவுதயம்

648. தன்னையறியத் தனக்கொரு கேடில்லை
தன்னையறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சித்து தான்இருந் தானே. (2355)

பசுவாகிய தான் பாசமாகிய கட்டில் இருந்து நீங்கி, பதியைச் சென்றடையத் தக்கவன், என்பதை ஒருவன்

நன்குணர்வானாகில் அவனுக்கு ஒரு கேடும் இல்லை. இங்ஙனமாக ஒருவன் தன்னைத்தான் அறியும் ஆன்மவிளக்கம் பெறாமல், தான் என்னும் ஆணவத்தால் அவிச்சையோடும் கருவிகரணங்களோடும் பொருந்தி வினையாற்றிப் பிறவித் துன்பமடைகின்றான். எந்த ஒருவன், தான், உடல், கருவி, கரணமல்ல என்றும், பசுவாம் தான், பதியை அடைய வேண்டியவன் என்றும், உண்மை அறிவை அடைந்துள்ளானோ அவன் சிவமயமாகி விடுவதால், உலகிலுள்ளோர் அவனை சிவமாக அர்ச்சனை செய்ய அங்கு வீற்றிருப்பான்.

**649. அறிவு வடிவென்று அறியாத என்னை**
**அறிவு வடிவென்று அருள் செய்தான் நந்தி**
**அறிவு வடிவென்று அருளால் அறிந்தே**
**அறிவு வடிவென்று அறிந்திருந் தேனே. (2357)**

பழமலத்தால் கட்டுண்டு இருந்த நான், என்னை அறிவு வடிவானவன் என அறியாது இருந்தேன். நந்தி எம்பிரான் அருளால் நான் அறிவு வடிவானவன் என்பதை உணர்ந்து கொண்டேன். அங்ஙனமாக உணர்த்தி அருளிய அவன் திருவடி உணர்வினால் நான் கருவி கரணங்களின் தொடர்பற்று அறிவு வடிவாகவே விளங்கினேன்.

**650. அறிவு அறிவாக அறிந்தன்பு செய்மின்**
**அறிவு அறிவாக அறியுமிவ் வண்ணம்**
**அறிவு அறிவாக அணிமாதி சித்தி**
**அறிவு அறிவாக அறிந்தனன் நந்தியே. (2359)**

ஆன்ம அறிவாம் சிற்றறிவு, சிவஞானமாம் பேரறிவாம் நிலை அடையும் என்பதறிந்து சிவபிரான் மாட்டு அன்பு செலுத்துங்கள். அப்போது பேரறிவாம் சிவபிரான் உங்கள் அறிவில் வந்து கலந்து உங்களை ஆட்கொண்டருள்வான். இந்நிலையில் அணிமாதி சித்திகள் தாமே, உங்களை வந்து அடையும். அக்காலையே சிவபிரான் உங்கள் அறிவைத் தன் அறிவாக் கொண்டான் என்பது விளங்கும்.

651. அறிவறி வென்று அங்கு அரற்றும் உலகம்
அறிவறி யாமை யாரும் அறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை அழகிய வாறே. (2362)

உலக மக்கள் யாவரும் அறிவு அறிவு என்று அதன் இன்றியமையாமை பற்றி ஓயாது கதறுகின்றனர். ஆனால் அவர்கள் சுட்டுகின்ற அந்த அறிவுதான் அறியாமை வயத்ததாம். அது பாச அறிவே, என்பதை அவர்களில் யாரும் அறியவில்லை. அந்தப்பாச அறிவைக் கடந்து சிவஞான அறிவினை ஒருவன் அறிவானானால் பாச அறிவாம் அறியாமை வயப்பட்ட அறிவு எத்தன்மைத்து என்பதை அறிந்து கொள்ளுவான்.

652. அறிவுடை யார்நெஞ்சு அகலிட மாவது
அறிவுடை யார்நெஞ்சு அருந்தவ மாவது
அறிவுடை யார்நெஞ்சோடு ஆதிப்பிரானும்
அறிவுடை யார்நெஞ்சத் தங்கு நின்றானே. (2364)

சிவஞானமாம் அறிவு நிரம்பப் பெற்றவர்களுடைய நெஞ்சம்தான் பரந்த இவ்வுலகமாகும். அச்சிவஞானிகளது நெஞ்சமே அருந்தவம் நிறைந்த நெஞ்சமாகும். அத்தகு சிவஞானிகளின் அருந்தவம் நிறைந்த நெஞ்சத்தேதான் ஆதிப் பிரானாம் சிவனும் நிலைத்து நின்று அவர்கள் நெஞ்சினையே ஆலயமாகக் கொண்டுள்ளான்.

653. என்னை அறிந்திலேன் இத்தனை காலமும்
என்னை அறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை அறிந்திட் டிருத்தலும் கைவிடாது
என்னையிட் டென்னை உசாவு நின்றானே. (2366)

விளக்கில்லா இருள் நிறைந்த வீட்டிலே உள்ள ஒருவன் தன்னையே தான் காண மாட்டாதபடி இத்தனை காலமும் என்னை நான் யாரென அறியாமல் இருந்தேன். சிவ பெருமானின் திருவருளால் நான் அறிவு வடிவினனென - என்னை யாரென உணர்ந்தேன். அப்படி நான் அறிவு வடிவினன் என்பதை உணர்ந்த பின், உலகிலே நான் வாழ்ந்து

கொண்டிருப்பினும், உலகியல் பொருள், தன்மைகள் எதையும் நான் அறிந்திலேன். (சார்ந்த தொன்றில் தான் அழுந்த வேற்றறியாத்தன்மையாகும்) அங்ஙனமாக, என்னை நான் உணர்ந்திருத்தலும் என்னை என் நாதனாம் சிவபிரான் கைவிடாது திருவருளிலே இட்டு என் உடனிருந்து என் நன்மை தீமைகளை அறிகின்றனன்.

**654.** ***மாயவிளக்கது நின்று மறைந்திடும்***
***தூய விளக்கது நின்று சுடர்விடும்***
***காய விளக்கது நின்று கனன்றிடும்***
***சேய விளக்கினைத் தேடுகின் றேனே. (2367)***

மாயா தனுவிளக்காம் உடல், உலகிலே சில காலம் வாழ்ந்து மறைந்து போகும். தூய விளக்காகிய சிவஞான விளக்கு ஆன்ம சொரூபம் விளக்கிச் சுடர்விடும். காயத்துள்ளே உள்ள விளக்கு உள்ளே நிலை பெற்று வருத்தும். எனவே செம்மையான அருட்ஜோதி விளக்கினை நான் தேடுகின்றேன்.

## ஆறந்தம்

**655.** ***வேதத்தின் அந்தமும் மிக்க சித்தாந்தமும்***
***நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்***
***ஓதத் தகு எட்டு யோகாந்த அந்தமும்***
***ஆதிக் கலாந்தமும் ஆறந்த மாமே. (2370)***

வேதத்தின் அந்தமாகிய உபநிடதங்களும், அதாவது ஏகான்ம வாதமும், தருக்க அளவை, முடிவுமிக்க, சித்தாந்தமாகிய சைவ ஆகமங்களின் முடிவும், நாத தத்துவத்தின் முடிவாகிய நாதாந்தமும், நான் யார் என்று விசாரணை செய்து, அதனால் அடைந்த போதாந்தமும், சொல்லத்தகும் அட்டாங்க யோகத்தின் அந்தமும், முதலாவதான பஞ்ச கலைகளின் முடிவும் ஆகிய இவையே ஆறந்தமாகும்.

**656.** ***ஆறங்கமும் சென்று அடங்கும் அந்நேயத்தே***
***ஆறங்கம் நேயம் அடங்கிடும் ஞாதுரு***
***கூறிய ஞானக் குறியுடன் வீடவே***
***தேறிய மோனம் சிவானந்த உண்மையே. (2382)***

மேலே கூறிய ஆறுவகை அந்தங்களும், ஆறுகள் கடலில் சென்று அடங்குவதைப் போல அன்புவடிவான சிவபிரானிடத்து ஒடுங்கும். இவ்வண்ணம் ஆறந்தங்களும் அடங்கிவிடும் நேயப் பொருளிலே, ஞாதுரு என்னும் காண்போன் (சிவஞானி) அடங்குவான். குருவால் அருளப் பட்ட சிவஞானம், குணங்குறிகள் அனைத்தையும் விட்டு விலகித் தான் மட்டுமே நிற்க, அதனால் உண்டாகிய மோன நிலை ஆன்மாவுக்குச் சிவானந்தத்தை உண்டாக்கும்.

**657. வேதாந்தம் தொம்பதம் மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டைக்கியம்
சாதாரணம் சிவ சாயுச்சிய மாமே. (2392)**

வேதாந்தத்தின் வாயிலாக, முப்பொருள் உண்மை இம்மந்திரத்தால் விளக்கப்படுகிறது. வேதாந்தத்தில் தத்துவம் அசி என்னும் மகா வாக்கியம் உள்ளது. அது தத்+துவம்+அசி எனப் பகுக்கப்படும். துவம் அதாவது தொம்பதம் பசுவாம் ஆன்மாவைக் குறிக்கும். நாதாந்தத்தில் பசுத்தன்மை இயல்பாகி நீங்கி நிற்பது பதி. இதுவே தத் என்று குறிக்கப்படுகிறது. மேற்கூறிய பசுவும் பதியும் இரண்டறக் கலத்தலே அசிபதம் ஆகும். அதுவே சிவசாயுச்சியம்.

**658. சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகும் அவ்வவ் விரண்டும்
சிவமாம் சதாசிவன் செய்து ஒன்றா னால்
நவமான வேதாந்த ஞான சித்தாந்தமே. (2393)**

சீவன் சிவமாதலைக் கூறுதலே வேதாந்தம், சித்தாந்தம் எனும் இரண்டின் தன்மை ஆகும். அவ்வவ் இரண்டாய பிற நான்கும் (நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம்) அவம், அவமே, ஆகும். சிவத் தன்மை வாய்ந்த சதாசிவன் அருளால், சிவன் ஆன்மாவைச் சென்றடைந்து ஒன்றானால் வியக்கத்தக்க வேதாந்தம் ஞான சித்தாந்தம் ஆகும்.

**659. தத்துவமாகும் சகள அகளங்கள்**
**தத்துவ மாம் விந்துநாதம் சதாசிவம்**
**தத்துவமாகும் சிவன் தன் தற்பரம்**
**தத்துவ மாம்சிவ சாயுச்சி யமே. (2396)**

உடலின்கண், ஆன்மாவை வியாபித்துள்ள முப்பத்தாறு தத்துவங்களும் உருவமும் அருவமும் ஆகும். விந்து நாதம் இவைகளின் தத்துவமே சதாசிவம் ஆகும். ஆன்மாவும் அது அடையவேண்டிய தற்பரமாம் சிவமும் தத்துவமே ஆகும். ஆன்மா சிவத்தைச் சென்றடையும் சிவசாயுச்சியமும் தத்துவமே ஆகும்.

## பதி பசு பாசம் வேறன்மை

**660. அறிவறி வென்ற அறிவும் அனாதி**
**அறிவுக் கறிவாம் பதியும் அனாதி**
**அறிவினைக் கட்டிய பாசம் அனாதி**
**அறிவு பதியில் பிறப்பறுந் தானே. (2405)**

அறிவு அறிவு என்று சொல்லப்படும் சிற்றறிவுடைய ஆன்மா அனாதியானது. இந்தச் சிற்றறிவுடைய ஆன்மாவுக்கு அறிவிக்கும் அறிவாகி விளங்கும் பதியும் அனாதியானது. அறிவாம் ஆன்மாவைப் பிணித்துள்ள பாசமும் அனாதியானதே. இந்த ஆன்மாவிலே பேரறிவாம் பரசிவ அருள் பதிந்தால் பிறப்பு இறப்பு தொடர்பு அற்றுப் போகும்.

**661. பசுபல கோடி பிரமன் முதலாய்ப்**
**பசுக்களைக் கட்டிய பாச மூன்றுண்டு**
**பசுத்தன்மை நீங்கி யப்பாசம் அறுத்தால்**
**பசுக்கள் தலைவனைப் பற்றி விடவே. (2406)**

ஆன்மத் திரளாம் பசுக்கள், பிரமன் முதல் மக்கள் ஈறாக பலகோடி உளர். இந்தப் பசுக்களைப் பிணித்துள்ள பாசங்கள் மூன்றாம். அவை ஆணவம், கன்மம், மாயை என்பன. பசுத்தன்மையாம் ஆன்ம போதம் தன்னிடமிருந்து நீங்கி விடத், தம்மைப் பிணித்துள்ள பாசத்தையும் அறுத்தெறிந்து விட்டால்,

பசுவாகிய ஆன்மா பதியாகிய தலைவனைப் பற்றிக் கொண்டு விடும். பின்னர் அது விட்டு விலகாது.

662. நாடும்பதியுடன் நற்பசு பாசமும்
நீடுமாம் நித்தன் நிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமும்
நாடிய சைவர்க்கு நந்தி அளித்ததே. (2410)

ஆன்மா சென்றடைய நாடுகின்ற பதியாம் இறைவனும் நல்ல ஆன்மாவும் (பசுவும்) பாசமும் எக்காலத்தும் அனாதி நித்தனாய் உள்ளனவாம். நித்தனாகிய சிவபிரான் எக்காலமும் உள்ளவன். அவன் தன்மையை உள்ளவாறு அறிவார் ஒருவருமிலர். விரிந்தகன்ற நித்தியத் தன்மை வாய்ந்த பசுபாசங்களின் நீக்கமும், அருளால் ஆராயத் தொடங்கிய சைவ நற்சிலர்களுக்கு விளங்குமாறு நந்தியெம் பெருமான் அருள் செய்தான்.

663. ஆயபதி தான் அருட்சிவ லிங்கமாம்
ஆயபசுவும் அடலேறு என நிற்கும்
ஆய பலிபீடம் ஆகுநற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே. (2411)

கலப்பினால் யாவையுமாய்ப், பொருள் தன்மையால் அல்லதுமாய், விளங்குகின்ற பதியாம் சிவபிரானின் அருவுருவமே சிவலிங்க வடிவமாகும். சார்ந்ததின் வண்ணமாகத் திகழும் பசுவாம் ஆன்மாவும் ரிஷப வடிவாய் விளங்கும். இவற்றின் இடையே அமைக்கப்பட்டுள்ள பலிபீடம் பதியைச் சென்றடையும் பசுவுக்குத் தடையாகி நிற்கும் பாசமாகும். பசுவினிடம் பொருந்தியுள்ள பாசத்தை பலிகொடுத்த பின்னரே பதியைப் பசு சென்றடையும். கோயிலின் அமைப்பே சித்தாந்த உண்மையை விளக்குவதாம்.

664. மேவும் பரசிவம் மேற்சத்தி நாதமும்
மேவும் பரவிந்து ஐம்முகன் வேறீசன்
மேவும் உருத்திரன் மால் வேதா, மேதினி
ஆகும்படிப் படைப்போன் அரனாமே. (2417)

உலகனைத்தும் வியாபித்து உள்ளும் புறமும் கலந்து, பொருள் தன்மையால் வேறாகி நின்ற, அரனின் அருவம் நான்கு; அருவுருவம் ஒன்று; உருவம் நான்கு. ஆய ஒன்பான் நிலைகளாம். அவை பரசிவம், சத்தி, நாதம், விந்து எனவும் சதாசிவன் எனவும், ஈசன், உருத்திரன், மால், அயன் எனவும் கூறப்படும். இந்நிலைகளின் நின்றே மாயா காரியமாகிய உலகினைப் படைத்துக் காத்து, அழித்து மறைத்தருள்கின்றான் அரன்.

**665. படைப்பும் அளிப்பும் பயிலிளைப் பாற்றும்**
**துடைப்பும் மறைப்பும் முன்தோன்ற அருளும்**
**சடத்தை விடுத்த அருளும் சகலத்**
**தடைத்த அனாதியை ஐந்தென லாமே. (2418)**

படைத்தல், காத்தல், இளைப்பாற்றும் பொருட்டுத் துடைத்தல், மறைத்தல், உலக வாழ்விலே நின்று அருளலும், உடற்பற்றை ஒழித்தபின் அருளும் அருள் என்னும் அருளால் ஆம் ஐந்தொழிலும், சகலராம் ஆன்மாக்களுக்குப் (அவை உய்விக்கும் பொருட்டு மலநீக்கம் செய்து ஆட்கொள்ள) புணர்த்திய தொன்மையான சிவபிரானின் திருவருட் செயல்கள் ஆகும்.

**666. நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்**
**பண்ணிய மாயையில் ஊட்டற் பரிந்தனன்**
**கண்ணிய சேதனன் கண்வந்த பேரருள்**
**அண்ணல் அடிசேர் உபாயம தாகுமே. (2421)**

ஆன்மாக்களிடம் அனாதியே பொருந்தியுள்ள பாசத்தின் வலிமையால், உடல், கரணங்களோடு கூடி, அவைகளையே நான் என மயங்கி கருதுதல் ஆணவ மலத்தின் தன்மையாகும். அந்த ஆணவமலம் அகலவே இறைவன் ஆன்மாவை மாயையோடு பொருந்த வைத்து இருவினைப் பயன்களையும் சத்தியால் ஊட்டுவிக்கிறான். இதன் பயனாய் ஆணவமலம் அகலும். இங்ஙனம் ஆணவ வலிகுன்றிய சிற்றறிவுடைய ஆன்மாவிடத்துக் குருவடிவாக வந்து பேரருள் ஒளி பிரகாசிக்கும் அண்ணலின் திருவடிகளைச் சேர்கின்ற உபாயத்தைச் சிவன் அருளிச் செய்கின்றான். குருமூலம் சிவஞான அறிவு பெற்றுய்தலே அடிசேர் உபாயம்.

## அடிதலை அறியும் திறம் கூறல்

667. தலைஅடி ஆவ தறியார் காயத்தில்
தலைஅடி உச்சியில் உள்ளது மூலம்
தலைஅடி யான அறிவை அறிந்தோர்
தலைஅடி யாகவே தானிருந் தாரே. (2426)

இவ்வுடலினிடத்திலே அடியாவது தலையிலே வந்து பொருந்துவதை யாரும் அறிகின்றாரில்லை. தலை உச்சியிலும் அடி மூலாதாரத்திலும் அமைந்துள்ளது. மூலாதாரத்தில் உள்ள குண்டலி சத்தி, தலை உச்சியிலே பொருந்தியுள்ள சகஸ்ராரத்திலே சேர்ந்து பொருந்துகின்ற அறிவை அறிந்தவர்களே யோகியர். இந்த யோகியர்களே மூலாதாரத்தின் குண்டலி, சகஸ்ராரத்தில் பொருந்தியதால் தலையிலே அடி சேர்ந்த ஞானப் பிழம்பாய் விளங்குவார்கள்.

668. தரித்து நின்றான் அடி தன்னிட நெஞ்சில்
தரித்து நின்றான் அமராபதி நாதன்
தரித்து நின்றான் கருதாதவர் சித்தை
பரித்து நின்றான் அப்பரிபாகத் தானே. (2431)

அன்பர்களின் நெஞ்சத் தாமரையிலே தங்கி நிற்கும் தன்மை வாய்ந்த சிவபிரானின் திருவடிகளைத் தன்னுடைய நெஞ்சிலே - நீக்கமற நினைப்பவர் நெஞ்சிலே - அவன் நிலைத்து நின்றருள்வான். அவனைக் கருதாமல் உலக இன்பத்திலே மூழ்கிக் கிடப்பவர்கள் சிந்தையில் ஈசனாம், அமராவதி நாதனாம், தலைவன் தங்காமல் வெறுத்து விலகி நிற்பான். ஆன்மாக்களுக்கு மல பரிபாகம் செய்து ஆட்கொள்ளும் அவன், சர அசர உலகம் அனைத்தையும் தாங்கிநிற்பவன் ஆவான்.

669. ஒன்றுண்டு தாமரை ஒண்மலர் மூன்றுள
தன்தாதை தாளும் இரண்டுள காயத்துள்
நன்றாகக் காய்ச்சி பதம்செய்ய வல்லார்கட்கு
இன்றே சென் றீசனை எய்தலு மாமே. (2432)

ஆயிரம் இதழ் தாமரை அதிலே தான் இறைவன் விளங்குவது. அந்த ஒன்று, ஒவ்வோர் உடலிலும் தலை உச்சியில் உள்ளது. இந்த சகஸ்ரதளத்தினைச் சென்றடையும் வழி மூலாதாரத்தில் உள்ள குண்டலியை மேலெழச் செய்து அச் சக்தியை ஆயிரம் இதழ் தாமரையை அடையச் செய்தலே. அதற்கு மூன்று ஒளிபொருந்திய மலர்கள் துணை செய்யும். அவை இடகலை பிங்கலை சுழிமுனை என்பவாம். நாம் உய்தி அடைய நமது தாதையாம் சிவபிரான் தாளும் இரண்டுள. பால் பாகு முதலியவைகளை நன்றாகக் காய்ச்சிப் பதம் செய்தலைப் போல இக்காயத்தையும் யோக, பிராணாயம, தியானப் பயிற்சியால் பதம் செய்பவர்கள், ஈசனைச் சென்று இன்றே எளிதில் அடையலாம்.

**670. கால் கொண்டென் சென்னியில், கட்டறக்கட்டற,**
**மால்கொண்ட என்னை மயக்கின் துயக்கற,**
**பால்கொண்ட என்னைப் பரன்கொள்ள நாடினான்,**
**மேல் கொண்டென் செம்மை விளம்பலுமாமே.(2433)**

இறைவனாம் சிவபிரான் தன் திருவடிகளை என்தலை மேல் வைத்துத் திருவடிதீக்கை அருளினான். அங்ஙனம் அருளலும் என்நெஞ்சத்துள்ளே மண்டிக்கிடந்த ஆணவம் முதலிய மும்மலங்களின் மயக்கத்தின் குழப்பம் அனைத்தும் நீங்கிப் போயின. அவன் பால் நான் கொண்ட பக்தியின் பயனாய், என்னை, அப்பரன் அடிமையாக்கிக் கொள்ள, குருவடிவாகி நாடிவந்தான். அதன்மேல் விளைந்த செம்மைமிக்க ஆரா இன்ப மேனிலையினை, நான் விளம்ப முடியாது. விளம்பும் சத்தி இலன்.

**671. பெற்ற புதல்வர் போல் பேணிய நாற்றமும்**
**குற்றமும் கண்டு குணம் குறை செய்வோர்**
**பற்றைய ஈசன் உயிரது பான்மைக்குச்**
**செற்றமிலாச் செய்கைக்கு எய்தின செய்யுமே. (2434)**

ஆன்மாக்கள் அனைத்தையும், இறைவன் தான் பெற்ற மக்களைப் போலவே பேணிக் காக்கும் பொருட்டு, அவர்களது ஜன்மாந்திர வாசனையாம் நாற்றத்திற் கேற்ப, மக்கள் முக்குண வசத்தால் செய்யும் குற்றங்களைக் கண்டு அக்குற்றங்களையும் குணமாகக் கொள்ளுகிறான். உயிர்களது பற்றாம், தன்மைக்கு

ஏற்றவாறு அருளிச் செயலாகச் செற்றமிலாது செய்யும் செய்கைகளாம், கன்ம பலன்களுக்கு ஏற்ற, இன்ப துன்பங்களை ஊட்டுவான் சிவன்.

## முக்குற்றம்

672. மூன்றுள குற்றம் முழுதும் நலிவன
மான்றிருள் தூங்கி மயங்கிக் கிடந்தன
மூன்றினை நீக்கினர் நீங்கினர், நீங்காதார்
மூன்றினுட்பட்டு முடிகின்ற வாறன்றே. (2435)

ஆன்மாக்களுக்குப் பிறப்பினை, இறப்பினைத் தரக்கூடிய குற்றம் மூன்று உள. அவை காமம், வெகுளி, மயக்கமாம். இக்குற்றங்களோ ஆன்மாக்களை வந்தடையும் நல்லன யாவற்றையும் கெடுப்பன. இம்மூன்றின் வயப்பட்ட உயிர்கள் மயக்கமுடையவாய் இருளா யிருந்து மாயா காரியத்துள் மயங்கிக் கிடந்தன. இம்முக்குற்றங்களையும் தம்மிடமிருந்து விலக்கி ஒழித்தவர்களே பிறப்பு இறப்புக்களிலிருந்து நீங்கினவர்கள். அங்ஙனம் அக்குற்றங்களிலிருந்து நீங்காதவர்கள் அம்மூன்றால் எய்தும் பிறப்பிறப்பாம் வலையுட்பட்டு முக்குணங்களின் காரியமாய், மாயையால் அழிவெய்துவர்.

673. காமம் வெகுளி மயக்கம் இவை கடிந்து
ஏமம் பிடித்து இருந்தேனுக்கு எறிமணி
ஓமெனும் ஓசையினுள்ளே உறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறன்றே. (2436)

காமம், வெகுளி, மயக்கம் என்று சொல்லப்படும் இம்முக் குற்றங்களையும் அறவே நீக்கிப் பாதுகாவலாகிய திருவடிகளைப் பற்றிக் கொண்டிருந்த எனக்கு, மணி ஓசையை ஒத்த ஓம் என்னும் பிரணவ நாதத்தின் உள்ளே ஒளிர்கின்ற சிவஞான ஒளியைச் சென்றடையக் கூடிய நிலை வாய்த்தது.

## முப்பதம்

தத்துவமசி, மகாவாக்கியம், தத்+துவம்+அசி = (தத் = அது; துவம் = நீ; அசி = ஆதல்)

**674. தோன்றிய தொம்பதம் தத்பதம் சூழ்தர
ஏன்ற அசிபதம் இம்மூன்றோடு எய்தினோன்
ஆன்ற பராபரம் ஆகும் பிறப்பற
ஏன்றனன் மாளாச் சிவமாய் இருக்குமே. (2437)**

அனாதி காலம் தொட்டு உள்ளதாகிய ஆன்மாவாம் (துவம்) தொம்பதம் (நீ என்னும் பொருளையுடையது) தத்பதம் என்னும் சிவனை (அதுவை)ச் சூழ்ந்திருக்க, ஏற்றுக் கொள்ளும், அசிபதம் (ஆதல்) என்பதனோடு சேர்த்து, இம்முப்பத உண்மையினை உணர்ந்து, கடைப்பிடித்த ஆன்மா பூரணமான பராபரம் ஆம். (அவனாகும்) அதனால் பிறப்பறும். சீவனது பாசம் ஒழிய என்றும் நிலைத்துள்ள நித்திய தத்துவம் வாய்ந்த சிவனாகும்.

**675. தற்பதம் என்றும் துவம்பதம் தானென்றும்
நிற்பது அசியத்துள் நேரிழையாள் பதம்
சொற்பதத் தாலும் தொடர வொணாச் சிவன்
கற்பனை யின்றிக் கலந்து நின்றானே. (2439)**

தத்பதம் (அது) என்றும், துவம்பதம் (நீ) என்றும் தனித்தனியே நிற்பது சீவன் சிவனாக மாறாத இடத்திலே தான். அசிபதம் எனும் ஆதலாம் நிலையிலே - அதாவது சீவன் சிவனாக ஆதலிலே - அந்நிலையிலே உதவுவது நேரிழையாம் பரையின் பாதமே ஆகும். சொல்லாலும் பொருளாலும் தொடரவொண்ணாத பரம்பொருளாம் சிவபெருமான் பரையின் விளக்கமாம் அசிபத காலத்தில், கற்பனை இல்லாமல் உண்மையாகவே உயிரோடு கலந்து நிற்கிறான்.

**676. அணுவும் பரமும் அசிபதத்து ஏய்ந்து
கணு ஒன்றில்லாத சிவமும் கலந்தால்
இணையறு பால் தேன் அமுதென இன்பத்
துணையது வாய் உரை யாற்றிடத் தோன்றுமே. (2440)**

அணுவாகிய ஆன்மாவும், அதைச் சிவத்துடன் கூட்டுவிக்கும் பரையாகிய சத்தியும், அசிபதமாம் ஆதலிலே கூடியவிடத்து, அங்குத் தடை ஏதும் அற்ற சிவமும், ஒன்று கலந்து விட்டால், இணை ஏதும் இல்லாத பாலும் தேனும்

அமுதமும் கலந்து பருகும் இன்பநிலைவாய்க்கும் அதைச் சொல்ல இயலாது. அதுதான் உரை கடந்த ஒப்பற்ற பேரின்ப நிலையாகும்.

677. தொம்பதம் தற்பதம் தோன்றும் அசிபதம்
நம்பிய சீவன் பரன்சிவனாய் நிற்கும்
அம்பதம் மேலைச் சொரூபமா வாக்கியஞ்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. (2441)

துவம் என்னும் தொம்பதமாம், சீவன் தத்பதமாம் சிவமாக மாற்றம் எய்துதல் 'அசிபதமாம்' ஆதலிலே, தான் நிகழும். தாம் சிவமாதலை நம்புகின்ற ஆன்மா, பரையின் அருளால் பரம் சிவமாகும். அழகிய பதமாகித் தொன்மை வாய்ந்த அம்மகா வாக்கியமாம் அசிபதத்தின் செம்பொருளை உணர்த்தி அழகிய நந்திபிரான் எங்களை ஆண்டுகொண்டான்.

678. நந்தி அறிவும் நழுவில் அதீதமாம்
இந்தியம் சத்தாதி விடவியனாகும்
நந்திய மூன்றிரண்டு ஒன்று நலமைந்து
நந்தி நனவாதி மூட்டும் அனாதியே. (2443)

நந்தி (பொருந்திய) ஆன்மாவின் சிற்றறிவு உலக பாசமாம் முக்குற்றங்களிலிருந்து நழுவிக் கெட்டால், அவ்வான்மாவின்நிலை அதீத நிலையாகும். இந்திரியங்கள் சத்தாதி விஷயங்களின் மேல் செல்லாமல் நிற்கும். அதனால் அந்த ஆன்மா இவைகளை விட்டவன் ஆகிறான். இந்த அதீத நிலையிலும் உறக்கம் கனவு, நனவு என மூன்றுண்டு. அதில் சத்தாதி ஐந்தும் உள்ள நாதத்தில் பதிவுற்ற காலை, இரசம், கந்தம் புலப்படாமல் சப்தம், ஸ்பரிசம், ரூபம் எனும் மூன்றுமே விளங்கும். அடுத்து ஒளியைப் பற்றிய அறிவும், அதாவது ரூபம் அதன்பின் உணர்வைப் பற்றிய பரிசமும் நீங்கி இறுதியில் தனித்துள்ள நாதமும் சத்தமும் நீங்கும். இப்படி நீங்கிய காலத்து சிவன் நனவாதிகள், நின்மலசாக்கிரம், முதலியவைகளைக் கூட்டி ஆன்மாக்களைப் பக்குவப் படுத்துகிறான்.

## முப்பரம்

***679. தோன்றி என்னுள்ளே சுழன்றெழுகின்ற தோர்***
***மூன்று படி மண்டலத்து முதல்வனை***
***ஏன்றெய்தி யின்புற்றிருந்தே இளங்கொடி***
***நான்று நலம்செய் நலம்தரு மாறே. (2445)***

என் உடம்புள்ளே தோன்றி இயல்பாகவே சுழன்று மேலெழுகின்ற அக்னி, சூரிய, சந்திர மண்டிலங்களாம் மூன்றிலே விளங்குகின்ற தலைவனைக் கலந்து எய்தி இன்புற்றிருக்கச் செய்யும். குண்டலி சத்தி, அக்னி மண்டிலத்திலிருந்து எழும்பி சூரியமண்டிலம் கடந்து சந்திர மண்டிலம் சென்றடையும்போது ஊர்த்துவமாக கீழ்முகங் கொண்டு ஆன்மா கடைத்தேற நலம் செய்வாள். (உடலில் மூலாதாரம் முதல் நாபிவரை அக்கினி; நாபி முதல் கண்டம் வரை சூரியன்; கண்டம் முதல் உச்சி வரை சந்திர மண்டலம்.)

***680. மன்று நிறைந்தது மாபர மாயது***
***நின்று நிறைந்தது நேர்தரு நந்தியும்***
***கன்று நினந்தெழு தாயென வந்தபின்***
***குன்று நிறைந்த குண விளக்காமே. (2446)***

மேற்கூறியவாறு குண்டலி சத்தி, அக்கினி மண்டிலம் சூரிய மண்டிலம் கடந்து, சந்திர மண்டில சகஸ்ராரத்திலே சென்றடைந்து ஒன்றிய பின், சிதாகாசம் நிறைந்திருந்து, மிக மேலான பொருளாகியது. நேரே வந்து அருள் செய்யும் நந்தி எம்பிரானும் அவ்விடத்திலே நிலைபெற்று நின்று நிறைந்தனன். கன்று தன் தாயை நினைத்து எழுந்து 'அம்மா' எனக் கதறுங்கால் ஓடிவந்து பால் சுரக்கும் பசுவென்னச் சிவனும் அடியவர்கள் நினைத்த உடனே ஓடிவந்து அருள் சுரப்பான். குன்றிலிட்டக் குல விளக்கைப் போல நிறைவான ஒளி வீசி ஆன்மா பிரகாசிக்கும்.

***681. ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரம்***
***கூறா உபதேசம் கூறில் சிவபரம்***
***வேறாய் வெளிப்பட்ட வேத பகவனார்***
***பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. (2447)***

முன்னர் சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து அப்பால் விளங்குவது முழு முதல் சிவனாம், அப்பரம் பொருளே. அந்தச் சிவபரம் - சொல்லாமல் சொன்ன இம்முத்திரை உபதேசத்தை சொல்லப் புகின், சிவ பரத்திலிருந்து வேறாகி, குருவடிவந்தாங்கி வந்து அருள் செய்யும் வேதப் பகவானாம் சதாசிவ மூர்த்தியின் அருட்பேறே அது ஆகும். அந்த உபதேச ஆனந்தத்தைப் போற்றிப் பாதுகாத்துக் கொள்க.

682. பற்றறப் பற்றிற் பரம்பதி ஆவது
பற்றறப் பற்றின் பரனறிவே பரம்
பற்றறப் பற்றினில் பற்றவல் லார்கட்கே
பற்றறப் பற்றில் பரம்பர மாமே. (2448)

முக்குண வசத்தால், இரு வினைக்கிடாக ஏற்படும் உலகப் பற்றுகள் ஒரு சிறிதும் இன்றி அற வேண்டுமெனில், இறைவன் தாளினையே பற்றியிடல் வேண்டும். அப்படிச் சிக்கெனப், பற்றறப் பற்றியவர்களின் ஆன்ம அறிவாம் சிற்றறிவு, சிவஞானமாக மாற்றமடையும். ஆன்ம போதம் அழிந்தொழிய சிவஞானம் மிகும்படி சிவப்பற்று உடையவர்களாய்ச் சிவன் தாளைச் சிக்கெனப் பற்ற வல்லவர்களுக்கே, பழைய தத்துவங்களில் பற்று நீங்கப்பெற்றுப், பற்றியுள்ள சிவஞானம் மிக, அவ்வான்மா பரம் பரமாகும்.

683. நனவிற் கலாதியாம் நாலொன் றகன்று
தனியுற்ற கேவலம் தன்னில் தானாகி
நினைவற் றகன்ற அதீதத்துள் நேயம்
தனையுற் றிடத்தானே தற்பர மாமே. (2450)

நின்மல ஜாக்கிரத்திலே கலை முதலாகிய ஐந்து தத்துவங்களும் (கலை, வித்தை, அராகம், புருடன், மாயை) நீங்கி, இந்த ஆன்மா, தனி நிலையாகிய கேவல நிலையில் (அதாவது கருவி அறிவை விட்டு) தனித்து நின்றபோது, நினைவையும் விட்டு நீங்கித் துரியாதீத நிலையிலே, அன்பு வடிவான சிவனை, ஆன்மா உற்றுப் பொருந்துகின்ற இடந்தானே தற்பரநிலையாகும்.

684. தற்கண்ட தூயமும் தன்னில் விலாசமும்
பிற்காணும் தூடணம் தானும் பிறழ்வுற்று
தற்பரன் கால பரமும் கலந் தற்ற
நற்பரா தீதமும் நாடக ராதியே. (2451)

தன்னைத்தான் சோதித்தறிதலால் ஆன்ம விளக்கமுற்ற உயிர், தன்னைத்தான் மும்மல மற்ற - இருவினையற்ற - தூயதாகக் கண்டாலும், தான் அகண்டமாக வியாபித்துள்ள தன்மை கருதலும், பின்னர்க் கருவிகரணங்களைக் கொண்ட சிறுமையினின்று நீங்கி, அதனால் ஆன்மா தானும், தன் நிலைமாறித் தற்பரனாம் சிவனும், காலபரமாம் ஆன்மாவும் கலந்துத் தத்துவங்களை விட்ட நல்ல பராதீதநிலையில், அகரத்தை முதலாகக் கொண்ட ஓம் எனும் பிரணவ சொரூபமாம் சிவனை நாடும்.

## பரலட்சணம்

685. அதீதத் துள்ளாகி அகன்றவன் நந்தி
அதீதத் துள்ளாகி அறிவிலோன் ஆன்மா
மதிபெற் றிருள் விட்ட மன்னுயிர் ஒன்றாம்
பதியிற் பதியும் பர உயிர் தானே. (2452)

நின்மன துரியாதீத நிலையிலே நந்தி என்னும் சிவபிரான் (அகற்சியும்) வியாபகமும் அறிவும் உடையவன். துரியாதீத நிலையிலே ஆன்மா தன் அறிவை இழந்து நிற்கும். உண்மை உணர்வு அகன்றதால் ஆணவ மயக்க இருள் அகன்ற ஆன்மாதான், தன்னை விட்டு நீங்காமல் கலப்பில் ஒன்றாகிய சிவத்தோடு பொருந்தும். இம்முறையில் சிவமானது ஆன்மாவில் பதிந்து தனது வியாபகத்தையும் அறிவையும் பதித்திடும்.

686. ஆதியும் அந்தமும் இல்லா அரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத் தோன்றாமையின்
நீடியதாய் நிற்கும் நீடிய அப்பர
போதம் உணர்ந்தவர் புண்ணியத் தோரே. (2453)

சிவபிரான் ஆதியும் அந்தமும் இல்லாத ஒப்பற்ற அருமையான பதியாகும். அவர் சோதி வடிவானவர். எங்கும் நிறைந்த பரஞ்சுடர். அவர்தம் அடியார்க்குத் தோன்றுவார். அல்லார்க்குத் தோன்றுவதில்லை. ஆயினும் அவர் செம்மை நலம் வாய்ந்தவர். உலகனைத்தும் வியாபித்துப் பரந்துள்ள அப்பரம் பொருளின் போதமாம் சிவஞானத்தை உணர்ந்து தெளிந்தவர்களே புண்ணியவான்களாவார்.

**687. துரியம் கடந்த துரியாதீ தத்தே**
**அரிய வியோகம் கொண்டம் பலத்தாடும்**
**பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே**
**துரிய வல்லார்க்குத் துரிசில்லை தானே. (2454)**

துரியத்தைக் கடந்து, துரியாதீத நிலையிலே, ஆன்மத் திரளுக்கு அரியதான கட்டற்ற வீடு பேற்றினை நல்க அம்பலத்தாடுகின்றான் இறைவன். அந்தப் பெரியபிரானைப் பிரணவம் என்னும் ஓங்கார வட்டத்துள் துருவித்துருவி மெய்யுணர வல்லவர்களுக்கு யாதொரு குற்றமும் இல்லை. (ஓங்கார கூபத்துள் துருவி அறிதலாவது) அகர உகர மகரங்களின் தன்மைகள் மற்றும் பிரணவ ரூபமான ஐந்தெழுத்தின் (தன்மை) பொருளையும் ஆராய்ந்து உண்மை உணர்தல்.

**688. என்னை அறிய இசைவித்த என்நந்தி**
**என்னை அறிந்தறியாத விடத் துய்த்துப்**
**பின்னை வெளியிற் சொரூபம் புறப்பட்டுத்**
**தன்னை யளித்தான் தற்பர மாகவே. (2457)**

ஆணவம், கன்மம், மாயை, மலங்களால் கட்டுண்டு கிடந்த ஆன்மாவாம் எனக்கு, என் உண்மைத் தன்மை யாதென்று அறிவித்தருளிய என் தலைவன் நந்தி எம்பெருமான்; என்னை நான் யாரென அறிவித்த பின்னர், அந்த ஞானத்தோடு என்னை நான் இதுவரை அறியாத பரவெளிக் கண்ணே செல்லும்படியாய்ச் செலுத்தினான். அதன் பின் வெளிப்படும் அருட்ஜோதி சொரூபத்திலே சத்சித்தானந்த வடிவம் தோன்றித், தன்னையே எனக்குத் தந்து விட்டான். நான் அதனால் சிவ சொரூபமாகவே ஆனேன்.

**689. சத்தின் நிலையினில் தானான சத்தியும்**
**தற்பரை யாய் நிற்கும் தானாம் பரற்குடல்**
**உய்த்தகு மிச்சையில் ஞானாதி பேதமாய்**
**நித்த நடத்து நடிக்குமா நேயத்தே. (2459)**

சத்தாம் சிவத்தினது நிலையிலே தானாகி விளங்கும் சத்தியும், பரனுக்குப் பரையாகி விளங்கும். மற்றும் அச் சக்தியே அப்பரனுக்கு உடலாகவும் அமைந்திடுவாள். இவ் வுலகனைத்தும் படைத்து உயிர்களை உய்த்து உடனாகி நிற்கும் முறையிலே தன் அருளாற்றலாம் இச்சையால் ஆதிசத்தி, இச்சா சத்தி, ஞான சத்தி எனும் பெயருடன் ஐந்தொழிலையும் தன் திருவிளையாட்டென நடத்துவள். அப்பரையே அன்புருவான சிவனுடன் நடனமுமாடுவாள்.

**690. மேருவினோடே விரிகதிர் மண்டலம்**
**ஆர நினையும் அருந்தவ யோகிக்குச்**
**சீரார் தவம் செய்யிற் சிவனருள் தானாகும்**
**பேரவும் வேண்டா பிறிதில்லை தானே. (2465)**

மகா மேருவையும், துவா சாந்தப் பெருவெளியில் ஒளிரும் விரிந்த கதிர்களையும் கொண்ட சிவ சூரியனைப் பொருந்தி முழுமையாக நினைத்துத் தியானிக்கும் அருந்தவ யோகியர்கள் சீர்மிக்கச் சிவத்தை நோக்கித் தவம் செய்தால் சிவனருள் தானாக வந்து எய்தும். அந்த நிலையில் இருந்து சற்றும் நீங்க வேண்டுவ தில்லை. மேற் கொண்டு செல்ல வேண்டியதுமில்லை.

## முத்துரியம்

**691. நனவாதி மூன்றினில் சீவ துரியம்**
**தனதாதி மூன்றினில் பர துரியம்தான்**
**நனவாதி மூன்றினில் சிவ துரியமாம்**
**இனதாகுந் தொந்தத் தசிபதத் தீடே. (2466)**

கேவலத்தில் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி இவைகளைக் கடந்து ஜீவன் துரியத்தை அடையும் (இது சீவ துரியம்) தன்னுடைய ஆதியாகிய பரமும் ஆன்மாவின் பொருட்டு

சாக்கிர சொப்பன சுழுத்தியினைக் கடந்து பரதுரியத்தை அடையும். (இது பரதுரியம்) சிவனும் பரையைப் போலவே தன்னைச் சார்ந்தவர் பொருட்டு நின்மல சாக்கிர, சொப்பன சுழுத்தியினைக் கடந்து சிவ துரியத்தை அடையும். சிவத்துடன் மேவும் இந்நிலை தொம்பதத்துடன் அசிபதம் கூடியதால் எய்தும். சீவன் பரமாய் சிவ துரியத்திலே பொருந்துதலே தத்துவமசியின் பொருள்.

692. தொட்டே இருமின் துரிய நிலத்தினை
எட்டா தெனின் நின்றெட்டும் இறைவனை
பட்டாங் கறிந்திடில் பல்நா உதடுகள்
தட்டாது ஒழிவது ஓர் தத்துவம் தானன்றே. (2470)

மேற்கூறிய சிவதுரிய நிலத்தினைவிட்டு விலகாமல் நெருங்கித் தொட்டபடியே பொருந்தி இருங்கள். பிறருக்கு எட்டாதாயினும் இங்ஙனம் துரிய நிலத்தினை தொட்டிருப் பவர்களுக்கு அவன் எட்டக் கூடியவனே. அவ்விறைவனைச் சுருதி, யுத்தி, அனுபவம் வாயிலாக உள்ளவாறு அறிந்திடில் பல், நா, உதடுகள் உதிர்க்கும் சொற்களுக்கு எட்டாமல் தனித்து நிற்பதாகிய ஒப்பற்ற மெய்ப்பொருளாவான் சிவன் என்பதை அறியலாம்.

693. தொம்பதம் தற்பதம் சொல்முத் துரியம்போல்
நம்பிய மூன்றாம் துரியத்து நற்றாமம்
அம்புவி உன்னா அதிருக்க மப்பாலைச்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. (2473)

சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என்று கூறப்படும் முத்துரியத்தில், தொம்பதம் என்றும் தத்பதம் என்றும் சொல்வதுபோல நம்பற்குரிய மூன்றாம் துரியமாகிய சிவதுரியத்திலே, நன்மை பயத்தகு மல பரிபாகம் ஆன்மா அடைதற்பொருட்டு, இறைவன் பயந்த நில உலகத்தையும், போகங்களையும் சிறிதும் நினைத்தலற்ற அதிருக்கும நிலையும் உள. அதற்கு அப்பாலாம் நிலையாம் செம்பொருளாம் சிவபிரான் நின்று ஆன்மாக்களை ஆண்டருள்வான் அதைச்செய்வது பெருமைமிகு நந்தி எம்பெருமான் ஆகும்.

## மும்முத்தி

694. சிவன் தன் முத்தி அதீதம் பரமுத்தி
ஓவுபசாந்தம் சிவமுத்தி ஆனந்தம்
மூவயின் முச் சொரூப முத்தி முப்பாலதாய்
ஓவுறு தாரத்தில் உள்ளு நாதாந்தமே. (2474)

சிவன் தன் முத்தி நிலையைத் துரியாதீதத்தில் அடையும். பரமுத்தி எனும், எய்துகின்ற உபசாந்த நிலை என்பது ஆன்மா தன் செயலிழந்து அருள் வழியாய் நிற்கும் நிலை. இதுவே முத்தியாம். சிவமுத்தி என்பது சிவானந்தமாகும். மேற்கூறியவாறு மூவிடங்களிலும் சிவமுத்தி பரமுத்தி சிவமுத்தி என மூவகைப்பட்டு விளங்குவதாய், ஓவுறு தாரம் ஆகிய பிரணவத்தினிடத்துள ஒலிமுடிவாம் நாதாந்தமாகும்.

695. ஆவதறியார் உயிர் பிறப்பாலுறும்
ஆவதறியும் உயிர் அருட்பால் உறும்
ஆவதொன்றில்லை அகம் புறத்தென் றகன்று
ஓவ சிவனுடன் ஒன்றுதல் முத்தியே. (2475)

ஆவது அறிவதாகிய ஆன்மாவின் பிறவிப் பிணிநீக்கத்தின் நெறியறியாதவர்களின் உயிர் மறுபிறப்பெய்தும். இந்தப் பிறவிப் பிணி நீக்கத்தின் வழிதுறை அறியும் உயிர், சிவபிரான் திருவருளைச் சேர்ந்து பயனடையும். அகத்தே உள்ள கருவி கரணங்களாலும் புறத்தே உள்ள உலக போகத்தாலும் ஆன்மாவுக்கு ஆவது ஏதுமில்லை, என்று அவைகளைத் துறந்து அண்டங்கள் அனைத்தையும் கடந்து நிற்கும் சிவத்தோடு ஆன்மா ஒன்றாதலே முத்தி நிலையாகும்.

696. சிவமாகி மும்மல முக்குணம் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத்து அவிக்கியத்
துவமாகிய நெறி சோகம் என்போர்க்குச்
சிவமாம் அமலன் சிறந்தனன் தானே. (2476)

ஆன்மா சிவத்தியானத்தால் சிவமேயாகி, ஆணவம், கன்மம், மாயையாகிய மும்மலத்தையும், சத்துவம் ரஜஸ், தாமதமாம் முக்குணங்களையும், அழித்துச் சிவத் தியானமாம்

தவத்தால் அடைகின்ற சிவமுத்தி, பரமுத்தி, சிவமுத்தி என்ற தத்துவத்து ஐக்கத்துமாகிய அதுநீ ஆகிறாய் என்னும் உபதேச நெறி நின்று சோகம் பாவனை செய்வார்க்கு இயல்பாகவே மலத்தினின்று நீங்கி நிற்கும் இறைவன், தானே வலிந்தாண்டு கொண்டு சிறக்கச் செய்வான். (வீடருள்வான்)

697. சித்தியும் முத்தியும் திண்சிவ மாகிய
சுத்தியும் முத்தீ தொலைக்கும் சுகானந்த
சத்தியும் மேலைச் சமாதியும் ஆயிடும்
பெத்தம் அறுத்த பெரும் பெருமானே. (2477)

மல கன்மங்களாகிய பந்தத்தை அறுத்து ஆட்கொள்ளும் பெருமைமிக்க சிவபிரான், அட்டமா சித்திகளையும், வீடு பேற்றையும், மேலான சிவமாகின்ற ஆன்ம சுத்தியும், தந்து முத்தியாம் காமம், வெகுளி, மயக்கம் என்பவைகளை நீக்கி விடும். பேரின்பப் பொருளும் மேலான சமாதி நிலையும் கை கூடும்.

## முச் சொரூபம்

698. ஏறியவாறே மலம் ஐந்திடை அடைத்து
ஆறிய ஞானம் சிவோகம் அடைந்திட்டு
வேறும் எனமுச் சொரூபத்து விடுற்றங்கு
ஈறதில் பண்டைப் பரனுண்மை செய்யுமே. (2478)

மூலமலமாம் ஆணவ மலத்தோடு, அம்மலம் நீக்கவேண்டி ஏற்றிய மலங்களாம் கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்னும் நான்கைக் கூட்டி, அந்த ஐந்தின் வலிமை கெட்டு ஒழிய வேண்டும். ஆன்மாவுக்கு ஆறுதலைத் தரும் சிவஞானம் மேலோங்கி நிற்கச் சிவோகம் பாவனை செய்திட வேண்டும். பந்த பாசங்களை அருட்சத்தியால் வென்றிட சிவ சொரூபம், பர சொரூபம், சிவ சொரூபங்களில் அடைத்து நீக்கிடப், பின் இறுதியிலே பழம் பொருளாம் சிவபிரான், உண்மையில் அவ்வுயிர்களை நிலைபெறச் செய்வான்.

699. மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்
மூன்றினில் முப்பத் தாறு முதிப்புள
மூன்றினுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்
காண்டலுங் காயக் கணக்கற்ற வாறே. (2479)

4-19

ஒருமல, இருமல, மும்மல ஆன்மாக்களாம் விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் ஆய மூவர், தூல, சூக்கும, காரணமாகிய மூன்று மாளிகையை இருப்பிடமாகக் கொண்டுள்ளனர். இம்மூன்று உடல்களிலும் முப்பத்தாறு தத்துவங்களும் தோன்றும். இம்மூன்றும் பேரொளிப் பிழம்பாய் முளைத்தெழும் ஜோதியை திருவருளால் கண்டபோதே இவ்வுடலின் கணக்கு முடிவெய்தும் (பிறப்பறும் என்க)

**700.** **பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்து**
**அருவாய் உருவாய் அருஉரு வாகிக்**
**குருவாய் வரும் சத்திக்கோன் உயிர்ப் பன்மை**
**உருவாய் உடனிருந்து ஒன்றாய் அன்றாமே.** **(2481)**

மாயாகாரியமாய் உடல்களைப், பெரியவான யானை முதல் சிறிய எறும்பு ஈறாக எண்ணப்படும் பேதங்களால் விகாரப்படுத்திப், பரசிவன் தான் அருவாகவும் உருவாகவும் அருவுருவாகவும் தோன்றியருளுவான். அவனே குருவடிவாகவும் வந்து தன் மெய்யடியவர்களை ஆட் கொள்வான். அவனே பராசத்தியின் தலைவன். அவன் உயிர்களினுடன் கலந்து அவ்வவ் உயிராயும் உருவாயும் உடனாயும் இருந்தருள்வான். அப்படி அவன் உயிர்களோடு ஒன்றி இருப்பினும் உயிர்களால் அறிய மாட்டாத - அன்றாயும் திகழ்பவன் ஆவன்.

**701.** **மணிஒளி சோபை இலக்கணம் வாய்த்து**
**மணியென லாய்நின்ற வாறது போல**
**தணிமுச் சொரூபாதி சத்தியாதி சாரப்**
**பணிவித்த பேர்நந்தி பாதம் பற்றாமே.** **(2482)**

மாணிக்கத்தினைச் சார்ந்த படிகம் (கண்ணாடி) மாணிக்கத்தின் வண்ணம், சோபை முதலிய தன்மைகளைப் பெற்று, மணியின் வண்ணமாகி நிற்றலைப் போல, ஆன்மாவும் சார்ந்ததன் வண்ணமாகி நிற்கும் (விச்சையைச் சார்ந்து விச்சையாய், அவிச்சையைச் சார்ந்து அவிச்சையாய் விளங்கும்). இத்தன்மை பொருந்தியுள்ள ஆன்மா முச்சொரூபமாய் சிவ சொரூபம் (மும்மலங்களோடு கூடி இருக்கும் நிலை) பரசொரூபம் (மல நீக்க முற்றுத்

தத்துவங்களைக் கடந்து வியாபித்துள்ள நிலை). சிவ சொரூபம் (சிவத்துடன் கூடிய சிவமயமாய நிலை) எனும் சத்திகளைச் சார்ந்த பொழுது, அவை அவையாய் ஆகுமாறு செய்த, பெருமை மிக்க நந்தி எம்பிரான் திருவடிகளைப் பற்றி வாழ்வாயாக.

702. **கல்லொளி மாநிறம் சோபை கதிர் தட்ட**
**நல்ல மணி ஒன்றில் நாடி ஒண் முப்பதாம்**
**சொல்லறு முப்பாழில் சொல்லறு பேர் உரைத்து**
**அல்லறு முத்திராந் தத்தனு பூதியே. (2483)**

சார்ந்ததின் வண்ணமாக உள்ள பளிங்கு (கண்ணாடி) மாணிக்கக் கல்லினது ஒளியைச் சார்ந்தக்கால், அவ்வொளி யாகத் தான் விளங்குவது போல, நல்லதாய கண்மணியினால் நாடி, புருவ நடுவில் பார்வையைப் பதித்துச், சிவத்தியானம் செய்து, ஒளிமிக்க முப்பதமாம் தத்துவம்அசி என்னும் மகாவாக்கியத்தினால், போதப் பாழ், சிவப் பாழ், சீவப் பாழ் எனும் முப்பாழில் நின்றுச் சொல்லால் சொல்ல முடியாத பிரணவத்தை மனத்தால் உச்சரித்து தம் இருள் தன்மை விலக ஞான முத்திரையின் முடிவில் அடைவதே அனுபூதி ஆகும்.

முப்பாழ்:

**போதப்பாழ்** - தனது சுட்டறிவு கெடல்

**சீவப்பாழ்** - தான் எனும் அகங்காரம் கெடல்

**சிவப்பாழ்** - சிவம், சீவன் என்னும் இரண்டற்ற நிலை

**முக்கரணம்** - மனம், வாக்கு, காயம்.

703. **இடனொரு மூன்றில் இயைந்த ஒருவன்**
**கடனுறும் அவ்வுறு வேறெனக் காணும்**
**திடமது போலச் சிவபர சீவர்**
**உடனுறை பேதமும் ஒன்றெனல் ஆமே. (2485)**

ஆன்மா தங்குவதற்கு இடனாயது தூல உடம்பு, சூக்கும உடம்பு, காரண உடம்பு என மூன்றாம். இப்படி மூவுடல்களில்

பொருந்திய ஆன்மா தான் தங்க உரியதான அம்மூன்று உரு தன்னில் வேறாயது என உணர்கின்றது. இத்தன்மையை ஒப்பச் சிவம், பரம், சீவன் எனக் கூறப்படும் வேறுபாட்டை ஒன்றெனச் சொல்லக் கூடுமோ? அன்று.

(ஆமே = ஆமோ என்னும் பொருளது)

704. ஒளியை ஒளிசெய்து ஓமென் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத்
தெளியத் தெளியுஞ் சிவபதம் தானே. (2486)

ஒளி படைத்த கண்களின் பார்வையை புருவ நடுவிலே நிலைபெற நிறுத்தி, அதனால் கண்ணொளி தீட்சண்யமடையச் செய்து, ஓம், ஓம் என்று பிரணவத்தை உச்சரித்துக் குண்டலியை மேலெழச் செய்து, மூச்சினை ரேசக, பூரக, கும்பகங்களால் பிராணாயாமப் பயிற்சி செய்து, மூச்சைச் சுழிமுனையில் சேர்த்து வாங்கி மேலெழும் குண்டலியை உச்சியில் உள்ள சகஸ்ரதள வெளியிலே பொருந்த வைத்து, நெஞ்சத் தெளிவுடன் சிவத்தியானம் பயிலச் சிவபதம் தானே அமையும்.

705. முக்கரணங்களின் மூர்ச்சை தீர்த்து ஆவதக்
கைக்காரண மென்னத் தந்தனன் காண் நந்தி
மிக்க மனோன்மணி வேறே தனித்தேக
ஒக்குமது உன்மணி யோதுள் சமாதியே. (2487)

மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களின் சோர்வு நீக்கி, ஆக வேண்டியதான திருவருட் செயலை உள்ளங்கை நெல்லிக்கனி எனத் தந்து விட்டவன் நந்தி எம்பிரான். புருவ நடுவிலே மிக்குள்ள மனோன்மணி அங்கிருந்து மேலோங்க, அதற்குமேலே சகஸ்ரதளத்திலே உன்மணியாம் திருவருள் துணையாகி நிற்கச் சமாதி நிலை கைகூடும். இதுவே நிர்விகற்ப சமாதியாம்.

உன்மனி = உயர்ந்தமணி.

*முச்சூன்யத் தொந்தத்தசி. (தத் + துவம் + அசி)*

**706. தற்பதந் தொம்பதந் தானாம் அசிபதந்
தொற்பதம் மூன்றும் துரியத்துத் தோற்றவே
நிற்பதுயிர் பரன் நிகழ்சிவன் மும்மூன்றின்
சொற்பத மாகும் தொந்தத் தசியே. (2488)**

அது என்னும் தற்பதமும், நீ என்னும் துவம் (தொம்) பதமும் தான் அது வாதல் எனும் அசி பதமும் தொன்மையான பதங்களே ஆகும். இம்மூன்றும் நின்மன துரியத்திடத்தே விளங்கும். இந்தத் தோற்றத்திடத்தே ஆன்மாவும் பரையும் நிகழ் சிவமும் நிலைபெறும். இவையே தொந்தத் தசி என்று சொல்லப்படும்.

*(அது நீ ஆகின்றாய் என்று மூன்றும் விளங்கும் நிலை இது)*

**707. தொந்தத் தசி மூன்றில் தொல் காமியாதி
தொந்தத் தசி மூன்றில் தொல் தாமத மாதி
வந்த மலம் குணம் மாளச் சிவந் தோன்றின்
இந்துவின் முன்இருள் ஏகுதல் ஒக்குமே. (2489)**

இங்குச் சொல்லப்படும் தொந்தத்தசி என்னும் மூன்றிலே அனாதியாகத் தொடர்ந்து வரும் ஆணவம், கன்மம், மாயையும் பழைமையான தாமதம், இராசதம், சாத்துவிகம் எனப்படும், மலமும், குணமும், கெட்டொழிய சிவன் தோன்றும். அப்படித் தோன்றுங்கால் பூரண நிலவின் முன் இருள் நீங்குவதை ஒப்ப மல இருள்கெட்டு, ஆன்மப் பிரகாசம் உண்டாகும். பிறைவளர்தலுக் கேற்ப இருள் கெடும். முழு நிலவில் இருள் பூரணமாகக் கெடும். சத்திநிபாதமும் இவ்வகைத்ததாம்.

**708. தொம்பதம் மாயையுள் தோன்றிடும், தற்பரம்
அம்பரை தன்னில் உதிக்கும்; அசிபதம்
நம்புறு சாந்தியில் நண்ணும் அவ்வாக்கியம்
உம்பர் உரைதொந்தத் தசிவாசி யாமே. (2492)**

ஆன்மாவாம் தொம்பதம் மாயையுள்ளே தோன்றும். மேலான பரையிடத்தே உதிக்கும் தற்பதம். (சிவன்) விரும்பப்படும் சாந்தியிலே பொருந்துவது 'ஆகிறாய்' என்னும் அசிபதம். அந்தத் தத்துவமசி என்னும் சொல் உம்பர் தம் உரையாகும். 'தொந்தத்தசி' எனும் அதுவே, வாசியாம்.

வாசி என்பது உயிர்ப்புக்கலை - பிராணயாமம்
ரேசகம் - தொம்பதம் - மூச்சைவிடல்
பூரகம் - தத்பதம் - மூச்சை உள்வாங்கல்
கும்பகம் - அசிபதம் - மூச்சை அடக்கல்

## முப்பாழ்

1. மாயைப் பாழ்

2. சிவப் பாழ்

3. வியோபப் பாழ் (உபசாந்தப் பாழ்)

709. காரியம் ஏழ்கண் டறுமாயப் பாழ்விடம்
காரணம் ஏழ்கண் டறும் போதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமும் பாழ்விடத் தீருமே. (2495)

மாயா காரணமாம் உடல், பொறி, கரணம் நான்கும், பிராண வாயுவாம் காரிய உபாதிகள் ஏழும், மெய்யுணர்வால் ஆன்ம சொரூபம் விளங்கும். அதனால் உடல் பிரக்ஞை உண்டாம். இதுவே மாயைப் பாழ். சர்வம் தானாதல் சர்வ காரணன் எனும் சிவ நிலைகள் ஏழினையும் கண்டு நீங்க ஆன்ம அறிவு உண்டாகும். இதுவே சிவப் பாழ் (போதப் பாழ்). காரிய காரண வாசனைகளை உணர்ந்த போது உபசாந்தமாம் ஒழிவிலொடுக்கமும் நீங்கும். இது உபசாந்தப் பாழ் (வியோமப் பாழ்) இம்முப்பாழும் நீங்கப் பிறவி அறும். (மாயப்பாழ் = தத்துவ சுத்தி, போதப் பாழ் - ஆத்ம சுத்தி, வியோமப் பாழ் = காரண காரிய வாதனை நீக்கம்)

710. மாயப் பாழ் சீவன் வியோமப் பாழ் மன்பரன்
சேயமுப் பாழ்எனச் சிவசத்தி யிற்சீவன்
ஆய வியாப்தம் எனும் முப்பாழாம் அந்தத்
தூய சொரூபத்தில் சொல்முடி வாகுமே. (2496)

மாயப் பாழ் மாயையின் தன்மை கண்டு கடத்தல். சிவப் பாழ் ஆன்மாவின் உண்மைத் தன்மை கண்டு கடத்தல். வியோமமாகிய பாழ் அருள் வெளிப்பாழ். இது அருள் வெளியைத் தாண்டி நிற்றல். இம்மூன்றும் நிலையுதலுள்ள சிவ பரன் அறிவுக்கு அப்பாற்பட்ட முப்பாழாம். சிவ சத்தியாகிய திருவருளில் சீவன் அடங்கிக் கிடப்பதே தத்துவமசி சொல்லின் முடிந்த முடிவாம் சித்தாந்தம்.

***711.*** ***துரியம் கடந்த சொல்லரும் பாழை***
***அரிய பரம்பரம் என்பர்கள் ஆதர்***
***அரிய பரம்பரம் என்றே துதிக்கும்***
***அருநிலம் என்பதை யாரறி வாரே. (2498)***

துரிய நிலை கடந்த துரியாதீத நிலையாம் சொல்லற் கரிய பாழ் நிலையையே அடைவதற்கு அரிய மேலான நிலை என மூடர் உரைப்பர். ஆனால் அரிய மேலான நிலை இன்னது என அறிந்த சிவஞான சித்தர்கள் வழிபடுகின்ற நிலை மேற் சொன்ன முப்பாழுங் கடந்த நிலை என்பதை அறிந்தவர்கள் யார்?

***712.*** ***உள்ளம் உருவென்றும் உருவம் உளமென்றும்***
***உள்ள பரிசறிந்து ஓரும் அவர்கட்குப்***
***பள்ளமு மில்லை திடரில்லைப் பாழில்லை***
***உள்ளமு மில்லை உருவில்லை தானே. (2500)***

உள்ளமாம் உயிரையே உருவாம் உடல் என்றும், உருவாம் உடலையே உள்ளமாம் உயிர் என்றும் தடுமாறி உணர்வார்கள் பலர். ஆனால் இவை இரண்டின் தன்மைகளை நன்குணர்ந்து தெளிய வல்லார்களுக்குக் கருக்குழியாம் பள்ளமும் இல்லை உயர்ந்த அவ்வுலகமும் இல்லை. மாயப்பாழ் சிவப்பாழ் உபசாந்தப் பாழாம் முப்பாழும் இல்லை. அவர்களுக்கு உடலும் உயிரும் இல்லை. அவையுங் கடந்த தத்துவமசி நிலையில் அவர்கள் தங்கி இருப்பர்.

## காரிய காரண உபாதி

1. காரிய உபாதி - சிவஉபாதி வித்யா தத்துவம் - 7
2. காரண உபாதி - பரஉபாதி சிவத்துவம் 5 +2 சத்தி

713. செற்றிடும் சிவ உபாதித் திறனேழும்
பற்றும் பரோபதி ஏழும் பகருரை
உற்றிடும் காரிய காரணத் தோடற
அற்றிட அச்சிவம் ஆகும் அணுவனே. (2501)

வருத்துகின்ற மாயா காரியமான வித்யாதத்துவம். காலம் நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை எனும் ஏழும்-பொருந்திய பரஉபாதியாம், சுத்த வித்தை, ஈசுவரன், சதாக்கியம், விந்து, நாதம், இரு சத்திகள் ஆகிய ஏழும், காரிய காரண நிலையிலிருந்து நீங்கப், பகர் உரையாம் பஞ்சாக்கரம் பொருந்தும். அவ்வாறு காரிய காரண உபாதி நீங்க அதாவது சிவ உபாதியும் பர உபாதியும் விலகி, பஞ்சாக்கரம் பொருந்தி நிற்க, அணுவானாம் ஆன்மா சிவமாகும் தன்மை எய்தி விடும்.

714. காரியம் ஏழில் கலக்கும் கடும்பசு
காரணம் ஏழில் கலக்கும் பரசிவன்
காரண காரியம் கற்பனை சொற்பதம்
பாரறும் பாழில் பராபரந் தானே. (2505)

ஆணவ மலக் குற்றத்தினால் வருந்தும் ஆன்மா, காரிய உபாதியாம் முன்சொன்ன வித்தியா தத்துவத்தால் மயங்கி நிற்கும். காரண உபாதியாகிய ஏழில் (முன்சொன்ன பரஉபாதி) ஆன்மா ஒளியை அறிவதில் மேலான சிவன் கலந்து நிற்கும். இக்கூறிய காரண உபாதியும் காரிய உபாதியும் கற்பனையேயாம். இக் கற்பனைகளைக் கடந்த நிலையிலே, சொல்லப்படும் பிரகிருதியாம் உலகம் அறும். இவை நீங்கிய பாழின் கண்ணே அதாவது முப்பாழுக்கப்பால் பராபரம் விளங்கும்.

## உபசாந்தம் - செயலற்ற நிலை

715. முத்திக்கு வித்து முதல்வன்தன் ஞானமே
பத்திக்கு வித்து பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்து சிவபரம் தானாதல்
சத்திக்கு வித்து தனதுப சாந்தமே. (2506)

முதல்வனது ஞானமாம் சிவஞானம் அடைதலே முத்திக்கு வித்தாகும். சிவனைப் பணிந்து. தானறப் பற்றி, வழிபடுதலே பக்திக்கு வித்தாகும். பரசிவத்தினைப் பொருந்தி தானே சிவமாம் தன்மை எய்தலே எண்சித்திக்கு வித்தாம். திருவருட் சத்தி தன் மீது பதிதலாம் சத்திநி பாதத்திற்கு வித்தாகி விளங்குவது தான் உபசாந்த மாகும். அது இருமையற்ற, பொறி புலன்களின் செயலற்ற, நிலையே ஆகும்.

716. காரியம் ஏழும் கரந்திடும் மாயையுள்
காரணம் ஏழும் கரக்கும் கடுவெளி
காரிய காரண வாதனைப் பற்றப்
பாரணவும் உபசாந்தப் பரிசிதே (2507)

காரிய உபாதிகள் ஏழும், அசுத்த மாயையிலே லயக்கிரமத்திலே ஒடுங்கும். காரண. உபாதிகள் ஏழும் பராகாயமான சிவத்துள் ஒடுங்கும். காரிய உபாதி, காரண உபாதிகளின் வாசனையைப் பற்றற நீக்கி விட்டால், பெருமைமிக்க உபசாந்தம் என்பதின் தன்மை வந்தெய்தும்.

## புறங்கூறாமை

717. என்னிலும் என்னுயிர் ஆய இறைவனைப்
பொன்னினும் மாமணி ஆய புனிதனை
மின்னிய வெவ்வுயி ராய விகிர்தனை
உன்னினும் உன்னும் உறு வகையாலே. (2516)

என்னைக் காட்டிலும் என் உயிருக்கு உயிராய் விளங்கும் இறைவனைப் பொன்னைக் காட்டிலும் ஒளிமிக்க மாமணியான தூயோனை, விளங்குகின்ற எல்லா உயிராயும் விளங்குகின்ற ஆற்றலுடையவனை, அவனைப் பொருந்துகின்ற நெறியிலே, நம் உள்ளத்தை ஒருமுகப் படுத்தி தியானித்து வழிபடுக.

*718. நின்றும் இருந்தும் கிடந்தும் நிமலனை*
*ஒன்றும் பொருள்கள் உரைப்பவ ராயினும்*
*வென்று ஐம்புலனும் விரைந்து பிணக்கறுத்து*
*ஒன்றாய் உணரும் ஒருவனு மாமே. (2517)*

நின்றபடியும், உட்கார்ந்தபடியும், படுத்தபடியும், ஆம் மூன்று நிலையில் இருந்தபடி மலமற்ற பரசிவத்தினைச் சென்றடையும் சிவதத்துவப் பொருள்களைப் போதிக்க வல்லவர்களே ஆயினும், ஐம்புலன்களையும் வென்று மாறுபாட்டுக் கொள்கை பிணக்கினை ஒழித்து 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என உணருங்கள். அவன் ஒருவனே உங்களுக்கு அருள் பாலிப்பான்.

*719. பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்டு*
*இதமுற்ற பாச இருளைத் துறந்து*
*மதமற்று எனதியான் மாற்றி விட்டாங்கே*
*திதமுற்றவர்கள் சிவசித்தர் தாமே! (2525)*

ஆன்மா முத்தியடைகின்ற பதமுத்திகளாம் மூன்றினையும் (சத்திய லோகம் வைகுந்தம், கைலாயம் எனும் மூன்றும் பிறவினையத் தருதலால்) குற்றமானவை என்று கைவிட்டகன்று, ஞான இன்பத்துக்கு இதமாகப் பொருந்திய பாச இருளை அடியோடு துறந்து, ஆணவத்தால் விளையும் நான், எனது, எனும் செருக்கற்று, இவையனைத்தையும் அருட்சத்திப் பதிவாய் மாற்றிவிட்டவர்களாய், அந்த அருள் நிலையில் நிலைத்திருப்பவர்களே சிவ சித்தர்களாவர்கள்.

720. சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தா சுத்தத்துடன் தோய்ந்தும் தோயாதவர்
முத்தர் அம்முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே. (2526)

முன் மந்திரத்திலே சொன்ன சிவ சித்தர்கள் சிவத்தைத் தரிசித்தவர்கள். சிவபிரான் திருவருள்வலத்தினால் சீருற்றவர்கள், சுத்த மாயை அசுத்த மாயைகளில் தாம் தோய்ந்திருப்பினும் தாமரை இலைமேல் உள்ள நீர் போல் பற்றின்றி இருப்பர். இவர்களே ஜீவன் முத்தர்கள். மற்றப் பிறரையும் முத்தி நிலையில் செலுத்தவல்ல தன்மையினை உடையவர்கள். இவர்கள் மூலாதார நிலையில் நிலைத்த குண்டலியை வசப்படுத்திய சுத்தர்கள். இவர்களே சதாசிவ தன்மை வாய்ந்தவர்கள்.

## அஷ்டதள கமல முக்குண அவத்தை

721. ஒருங்கிய பூவும்ஓர் எட்டிதழாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே (2528)

நம் உச்சியிலே அமைந்துள்ள சகஸ்ரதளமாகிய பூவும், ஒப்பற்ற எட்டு இதழ்களை உடையது. பெருமை மிக்க மாயாபுரியாம் இவ்வுடலினிடத்தே சுருங்கியதாய்ச் சிறியதாய் உள்ள வீணாத் தண்டின் நடுவில் உள்ள சுழிமுனை நாடியின் ஊடே, குண்டலியைச் செலுத்தி இந்த ஆன்மா உய்தி அடையும்படி பெருமைமிக்க ஜோதி வடிவானவனைச் சென்று ஒரு சேர தியானித்து மேல் எழுவீராக.

722. திசை எட்டும் தேர்எட்டும் தேவதை எட்டும்
வகை எட்டுமாய் நின்ற ஆதிப் பிரானை
வகை எட்டு நான்கு மற்றாங்கே நிறைந்து
முகை எட்டும் உள்நின்று உதிக்கின்ற வாறே (2531)

எட்டுத்திக்குகளும் ஆகி, அத்திக்குகளைக்காக்கும் எண்திசை காவலர்களுமாகி அவர்களின் எட்டு ஊர்திகளுமாகி அட்ட மூர்த்தமுமாகி (பஞ்ச பூதங்கள் சூரியன், சந்திரன்,

அக்கினி) நின்று விளங்கும் ஆதிப்பிரானான பரசிவனை ஞானேந்திரியங்கள். கன்மேந்திரியங்கள் மனம் புத்தியோடு கூடிய பன்னிரண்டும் பொருந்தி நிற்க, எட்டிதழ் தாமரை முகை (மொட்டு) உள்ளே நின்று மலர்ந்து உதித்தலைச் செய்யும் (மலர்ந்து விளங்கும்).

**723. பல்லூழி பண்பன் பகலோன் இறையவன்**
**நல்லூழி ஐந்தனுள் வேறின்ற ஊழிகள்**
**செல்லூழி பண்டத்துச் சென்றஅவ் வூழியுள்**
**அவ்வூழி உச்சியுள் ஒன்றிற் பகவனே (2533)**

ஆன்மாக்களின் மல நீக்கத்தின் பொருட்டு பலப்பல ஊழிகளைச் செய்யும் பண்பாளனாவான் பகலோன் என்னும் இறைவன் சிவன். ஐவகைப் படும் நல்லூழியாகும் நிவர்த்தாதி பஞ்சகலைகளில் புரியும் சங்காரம் ஆன்மாவினது அண்டத்துச் செல்லும் ஊழியாகும். அந்த ஊழியைக் கடந்து, நின்ற ஊழியிலும் ஒன்றி நிற்பவன் சிவபிரானே ஆகும். (ஐந்து கலைகள் - பிரதிட்டக்கலை, நிவர்த்திக்கலை, சாந்திகலை. சாந்தியாதீத கலை என்பனவாம்)

**724. ஊறும் அருவி உயர்வகை உச்சிமேல்**
**ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு**
**சேறின்றிப் பூத்த செழுங் கொடித் தாமரை**
**பூவின்றிச் சூடான் புரிசடை யோனே (2535)**

உயர்ந்த மலை எனப்படும் இவ்வுடலின் உச்சியாம் ஆக்ஞா சக்கரத்திடத்திலே வீணாத்தண்டின் வழிபாயும் அருவி ஒன்று உண்டு. அங்கே ஆறில்லாமல் நீர் பாய்ந்து நிரம்பும் அருங்குளமாம் பிரம்மரந்திரம் உளது. அதிலேசேற்றிலே முளைக்காத செழுங்கொடியில் பூத்த, தாமரை மலராம் சகஸ்ரதளம் பூத்து நிற்கும் இப்பூவையே அல்லாமல் பிறமலர்களைப் பின்னற் சடையுடைய சிவபிரான் சூடான்.

725. ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நின்றும் இருந்தும் நிலம்பல பேசினும்
வென்றும் இருந்தும் விகிர்தனை நாடுவர்
சென்றும் இருந்தும் திருவுடை யோரே (2536)

ஒன்றோடு இரண்டாகிச்செயல்படும் மனம், மொழி, மெய் எனும் மூன்றும், ஒடுங்கிச் செயலற்ற நிலையிலே உள்ளவர்கள் நின்றபடியேயும். அமர்ந்தபடியேயும், உலகியல் உரையாடல்கள் பல ஆற்றிய காலத்திலும். தன் ஐம்புலன்களை வென்றவர்களாய்ச் சகஸ்ரதளத்திலே தம் சிந்தையை இருத்திய வர்களாய். விகிர்தனாம் சிவ பிரானைக் கூடி நிற்பர். இவர்களே உலகிலே ஓடி ஆடிச் சென்றாலும் ஓரிடத்திலே அசைவற்றிருந்தாலும் சித்தம் அசையாத திருவருட் செல்வர்களாவார்கள்.

## நவாவத்தை நவாபிமானி

726. சிவமான சிந்தையில் சீவன் சிதைய
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான அந்தத்தில் நற்சிவ போதம்
தவமாம் அவையாகி தானல்ல வாகுமே. (2539)

ஆன்மா சிவத்தையே இடையறாது சிந்திப்பதால் ஆன்மாவின் தனித்தன்மை அழியப், பிறப்பின் காரணமாம் மும்மலங்களும் கெட்டொழிய, நவமான அந்தமாம் ஆன்மாவின் ஒன்பது அவத்தைகளுக்கும் முடிவில் நல்ல சிவஞானமானது தவத்தால் அடையும் பயனாகித் தான் என்பதுகெட்டு அவனாகும் (இதவே தத்துவமசி). அவத்தைகள் சீவன், பரம், சிவன் மூன்றுடன், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி கூட்டி உறழ சீவசாக்கிரம். சீவ சொப்பனம், சீவசுழுத்தி - பரம். சிவம் இரண்டும் இங்ஙனம் கூட்ட அவத்தைகள் ஒன்பதாகும்.

727. தேறாத சிந்தை தெளியத் தெளிவித்து,
பேறா நரக சுவர்க்கமும் மேதினி
ஆறாப் பிறப்பும் உயிர்க்கருளால் வைத்தான்
வேறாத் தெளியார் வினை உயிர் பெற்றதே (2544)

ஆன்மாக்கள் தம் மும்மலத்தால் தெளிவுறாத சிந்தையைத் தெளியும் பொருட்டு, இரு வேறு வகைப்பட்ட நரக சுவர்க்கங்களைப் படைத்து, அவரவர் வினைப்பயன் துய்த்து முடிந்த பின்னர், உலகிடையே பிறந்து இருவினைப் பயன்களைத் துய்த்து அதனால் பசுஞானம் பாச ஞானத் தெளிவு பெற்று இருவினை ஒப்பு மலபரிபாகம் அடையத், தன் அருளால் இவைகளைச் சமைத்து வைத்தான். இவைகளின் வேறு பாட்டை உணரமாட்டாதவர் வினை வயத்தராய் மீண்டும் மீண்டும் பிறப்பிறப்பு அடையும் தன்மையுடையவர்களே ஆவார்கள்.

728. ஒன்பான் அவத்தையுள் ஒன்பான் அபிமானி
நன்பாற் பயிலும் நவ தத்துவமாதி
ஒன்பானில் நிற்பதோர் முத்துரியத்துறச்
செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே (2545)

தான் அடைகின்ற பாடாகிய ஒன்பது அவத்தைகளிலே, இந்த ஆன்மா அபிமானித்து, நல்ல முறையிலே இவைகளைப் பயில மேற்கூறிய நவ அவத்தை ஆதிகளின் இறுதியில் நின்ற சிவ, பர, சீவ துரியங்களில் சென்று சிவத்தைப் பொருந்தி, தானே சிவமாதலே, சித்தாந்தம் செப்புகின்ற சித்தியாகும்.

## சுத்தா சுத்தம்

சுத்ம் + அசுத்தம்
உளம் தூய்மை + தூய்மை இன்மை

729. மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாறை மறைய வெளிப்படும் அப்பொருள்
மாயை மறைய மறைய வல்லார்கட்குக்
காயமும் இல்லை கருத்தில்லை தானே (2546)

மாயையாகிய படலம் மறைத்துள்ள அதனால் மறைந்துள்ளவன் சிவபிரான். அந்த மாயையாம் படலம் நீங்கிப் போக, அப்பரம் பொருள் கண்ணுக்குப் புலப்படும். மாயையின் மருள் தோன்றாமல், இறைவன் திருவடி நீழலிலே மறைந்து நிற்க, வல்லவராம் மறையவர்களுக்கு, இக்காயமாம் உடலின் காய நினைப்பும் இல்லை. அதை இயக்கும் உளக்கருத்தும் இல்லையாகிப் போய் விடும்.

**730. வழிபட்டு நின்று வணங்கு மவர்கட்குச்**
**சுழிபட்டு நின்றதோர் தூய்மை தொடங்கும்**
**குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள்**
**சுழிபட்ட வர்க்கன்றி காண வொண்ணாதே (2553)**

பரம் பொருளான சிவபிரானை வழிபாடு செய்து வணங்குமவர்க்கு உச்சிச் சுழியின் உள்ளே நின்ற ஒப்பற்ற சகஸ்ரதளத்தின் விளக்கத்தால் அகத்தூய்மை தொடங்கும். வினை வயத்தினால் கருக்குழியில் நின்று அடுத்தடுத்துப் பிறவி எய்துமவர்கள், மூலாதாரம் முதலாக அமைந்துள்ள ஆறுகுறிகளைக் கூட மாட்டார்கள். மூலாதாரம் முதல் சகஸ்ரதளம் வரை நீண்டுள்ள சுழியாம் வீணாத் தண்டினைப் பொருந்தி குண்டலியைச் சகஸ்ரதளத்திற்கு ஏற்ற வல்லவர்களுக் கல்லாமல், பிறருக்குச் செம்பொருள் சிவம் காணப்பட மாட்டாது.

**731. வினையாம் அசத்து விளைவ துணரார்**
**வினைஞானம் தன்னில் விடலும் தேரார்**
**வினைவிட வீடென்றும் வேதமும் ஓதார்**
**வினையாளர் மிக்க வினைவறி யாரே (2557)**

மும்மல மயக்கத்தில் அகப்பட்டு உழலும் உயிர்கள், வினையாம், அசத்தாம் மாயை வலுப்பெற்று அதன் பயனாக வினையும் பிறவித் துன்பத்தை அறியமாட்டார்கள். சிவஞானம்

தன்னை அடைந்தால், வினைகளினின்றுத் தாம் விடுபடுதலையும் தெளிய மாட்டார்கள். வினைகளில் இருந்து ஆன்மாக்கள் விடபடுவதே வீட்டின்பமாகும் என்னும் மறை மொழிகளையும் உணரமாட்டார்கள். தீவினையால் பிணிக்கப் பட்டுள்ள ஆன்மாக்கள் தீவினையின் காரணத்தையும் அதன் பயனை அறியும் சக்தியும் இவர்கள் அறிதல் இலர்.

## மோட்ச நிந்தை

732. பரகதி உண்டென இல்லை யென்போர்கள்
நரகதி செல்வது ஞாலம் அறியும்
இரகதி செய்திடுவார் கடை தோறும்
துரகதி யுண்ணத் தொடங்கிடு வாறே (2558)

பரகதியாகும் வீட்டின்பம் ஆன்மாக்களுக்கு உண்டென சிவஞானிகள் சொல்லியும். "இல்லை, அஃது இல்லை" என்று மறுப்பவர்கள் நரககதியாம் இருள் உலகைச் சார்வதை இவ்வுலகம் அறியும். இவர்கள் தாம், வாயிற்கடை தோறும் சென்று இறந்து உண்ணும் கதியினை அடைவதோடு தம் வயிறு வளர்க்க இங்கும் அங்குமாகக் குதிரை போல் ஓடிஆடி அலையத் தொடங்குவார்கள்.

நரகதி - நரககதி: இரகதி - இரக்கும் கதி: துரகதி - துரககதி (குதிரை ஓட்டம்)

733. மூடுதல் இன்றி முடியும் மனிதர்கள்
கூடுவர் நந்தி யவனைக் குறித்துடன்
காடும் மலையும் கழனிக டந்தொறும்
ஊடும் உருவினை உன்ன இல்லாரே (2563)

தம்மை, அறியாமையும், அவாவும், ஐம்புலச்சேட்டையும் கவிதல் இல்லாமல் தம்மை அறிந்து சிவஞான மடைந்து அவனை அடைய முயன்று முடியும், மனிதர்தன், நந்தியாம் சிவ

பிரானைக் குறித்துத் தியானித்து அவனைக் கூடுவர். மாறாக அவனை நீடு நினைத்துத் தியானிக்க மாட்டாதவர்கள் காடும், மலையும், கழனியும் பாலையும் (நெய்தலும்) ஆய உலகத்தையும் ஊடுருவி எங்கும் யாது மாகி நிற்பவனை நினைப்பதற்கும் உணர்வதற்கும் இயலாதவர்கள் ஆவார்கள்.

734. மயக்குற நோக்கிலும் மாதவம் செய்வார்
தமக்குறப் பேசின தாரணைக் கொள்ளார்
சினக்குறப் பேசின தீவினை யாளர்
தமக்குற வல்வினை தாங்கி நின்றாரே (2565)

சிவஞானியர், பிறர் தம்மை மயக்கும் படியான பார்வையால் நோக்கினாலும் தாம் தம் தவநெறியிலிருந்து விலகாமல், தம் தவத்தை மிகுதியாகச் செய்வர். தமக்கு ஏற்றவாறு பேசியவர்கள் தாரணையாம் போதனைகளைக் கொள்ளார். ஆனால் அச் சிவஞானிகளுக்குக் கோபம் உண்டாகும்படிப் பேசிய தீவினையாளர்கள் அதனால் உண்டான வல்வினை தம்மை வந்தடைய, அவைகளைத் தாங்கி அவ்வினைப் பயன்களை அனுபவிப்பர்.

## இலக்கணாத் திரயம்

ஒரு பொருளின் இலக்கணத்தை மற்றொரு பொருளுக்குத் தந்துரைப்பது.

735. விட்ட இலக்கணை தான் போம் வியோமத்துத்
தொட்டு விடாதது உபசாந்தத் தேதொரும்
விட்டு விடாதது மேவும் சத்தாதியில்
சுட்டும் இலக்கணா நீதம் சொரூபமே (2566)

வியோமமாம் பரவெளியிலே ஆன்மா செல்லும் என்பது விட்ட இலக்கணை ஆகும். உபசாந்த நிலையிலே ஆன்மா இனிய அனுபூதியில் ஒடுங்கும் என்பது விட்டும் விடாத இலக்கணை.

இலக்கணை மூன்று 1. விட்ட இலக்கணை 2. விடாத இலக்கணை 3. விட்டும் விடாத இலக்கணை.

கு-20

1. கங்கையில்தான் அவன் வீடு எனில் கங்கை அங்கு கரையைக் குறிக்கும். இது விட்ட இலக்கணை.

2. புளித்தின்றால் என்றால் புளிச்சுவையுடைய பழத்தைக் குறிப்பதால் விடாத இலக்கணை.

3. நேற்று சென்னைக் கடற்கரையில் கண்ட அவனே தான் இவன் என்பது விட்டும் விடாத இலக்கணை: காலத்தையும் இடத்தையும் விட்டு ஒருவனைக் குறிப்பது.

இவைமூன்றும் ஆன்மாவின் இலக்கணை ஆகும். ஆனால் ஆன்ம இலக்கணத்தின் முடிந்த முடிவு இம்மூன்று இலக்கணைகளுக்கும் அப்பாற்பட்ட ஆன்ம சொரூபமே ஆகும்.

ஆன்மாவுக்குப் போக்குவரவு இல்லை. ஆயினும் உயிர் விண்ணிலே ஏகிற்று எனும் போது, அது உயிரைக் குறிக்காமல் சூக்கும உடலைக்குறிப்பதால், இது விட்ட இலக்கணை.

ஆன்மா உபசாந்த நிலையிலே செயலற்று ஒடுங்குவதாய ஒழிவில் ஒடுக்கத்தில் (தொடும்) ஒடுங்கும்: என்பதால் உலகியல் செயலற்ற ஆன்மா, சிவன் செயலுற்று ஒடுங்குவதால், இது விடாத இலக்கணை.

ஆன்மா கேட்டல் முதலியவற்றில் பொருந்தியுள்ளது என்பதில், கேட்டல் முதலியவை ஐம்பொறிகளின் செயல்கள், ஆன்மாவுக்கு இல்லை, ஆயினும் ஆன்மா, செவி, முதலியவற்றைக் கேட்டலாதியாம் பிறவற்றில் செலுத்தி நிற்றலால் இது விட்டும் விடாத இலக்கணை ஆயிற்று.

இலக்கணை என்பதற்குக் காட்டிய இக்குறிப்பைக் கண்டு இதைப் பொருத்தி உணர்க.

**தத்துவமசி வாக்கியம்**

**736. சீவதுரியத்துச் தொம்பதம் சீவனார்**
**தாவு பரதுரியத் தினில் தற்பதம்**
**மேவு சிவ துரியத்து அசி மெய்ப்பதம்**
**ஓவி விடும் தத்துவமசி உண்மையே (2568)**

ஆன்மா சிவ துரியத்தில் பொருந்தி தத்துவங்களை விட்ட நிலை, நீ எனும் தொம்பதமாகும். அதன் மேலான பரதுரியத்தோடு அது பொருந்தியுள்ள நிலைதான் தத்பதமாகும். அதாவது 'அது' என்பதாகும் அந்த ஆன்மா சிவதுரியமாம் உண்மை நிலையில் பொருந்தி இருத்தலே 'அசி' என்றும் (ஆகிறாய்) உண்மைப் பதமாகும். இந்த வகையில் ஆன்மா எல்லா தத்துவங்களும் நீங்கி தத்துவமசியால் பெரும் பேறடையும்.

737. தொம்பதம் தத்பதம் சொல்லும் அசிபதம்
நம்பிய முத்துரியத்து மேல் நாடவே
உம்பதமும் பதமாகும் உயிர் பரன்
செம்பொரு ளான சிவமென லாமே (2573)

தொம்பதம் என்றும், தத்பதம் என்றும், சொல்லப்படும் அசி பதம் என்றும் கூறப்படும் மூன்றும், நம்பப்படும் முத்துரியமாம் சிவதுரியம், பரதுரியம், சிவதுரியம், எனும் முத்துரியத்துக்கு மேலே சிவன் சிவத்தினை நாடுவதில் உம்பதம் எனப்படும். சிவனைக் குறிக்கும் தொம்பதமும் பக்குவப்படும். அக்கால் உயிர் (ஆன்மா) பரனாகி விளங்கிச் செம்பொருளாம் சிவமாகிவிடும்.

738. அறிவறி யாமை இரண்டும் அகற்றிச்
செறிவறி வாய் எங்கும் நின்ற சிவனை
பிறிவறியாது பிரான் என்று பேணும்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே (2580)

சுட்டியறியும் அறிவையும், அறியாமையையும் அஞ்ஞானம் இரண்டையும் விலக்கிவிட்டு, முற்றும் அறிபவராய் எங்கும் பரந்துள்ள சிவனை விட்டு நீங்காமல், எம்பிரான் என்று கருத்துட் கொண்டு போற்றுதலைச் செய்து, பேணும் ஏகாக்கர சித்தத்தினை மேற்கொள்ளாதவர் சிவஞானத் தத்துவக் கொள்கையினை அறியாதவர் ஆவர் கொள் - கொள்கை.

**739. நின்மல மேனி நிமலன் பிறப்பிலி**
**என்னுளம் வந்து சிவன் என்னடி யானென்று**
**பொன்வளர் மேனி புகழ்கின்ற வானவன்**
**நின்மல மாகென்று நீக்கவல் லானே (2584)**

முழு முதல் சிவன், இயல்பாகவே தூயமேனியன். மலமற்றவன். பிறப்பிறப்பற்றவன். இத்தன்மை வாய்ந்த சிவன் என்னுளத்திடத்தே வந்தடைந்து இவன் என் அடியானென்று என்னை ஏற்றுக் கொண்டான். பொன்னவிர் மேனியை உடையவனும் வானோர்களால் புகழ்ந்தேத்தப்படும் பரம் பொருளானவனும் ஆன சிவ பிரான். என்னிடம் திருவருளைச் செலுத்தித் தீட்சை செய்து நின்மலமாகக் கடவாய் என்று என் மும்மலங்களையும் அடியோடு நீக்கி அருளினான்.

**740. மெய், வாய், கண், மூக்குச் செவி எனும் மெய்த் தோற்றத்து**
**அவ்வாய அந்தக் கரணம் அகிலமும்,**
**எவ்வாய் உயிரும் இறையாட்ட ஆடலால்**
**கைவாயிலா நிறை எங்குமெய் கண்டதே (2586)**

உடலிற் பொருந்திய மெய், வாய், கண், மூக்குச், செவி, எனப் பெயரிய ஐந்தும் உண்மையாக நாம் காணும் கருவிகளே. அவை இன்றி நாம் காண இயலாது. இந்திரியங்களின் வழிப்படும் அந்தக் கரணங்களும் அப்படிப்பட்டனவே. இவ்வுலகமும் எல்லா வகைப்பட்ட ஆன்ம பேதங்களும், பரம் பொருளாம் சிவபிரானது சங்கற்ப மாத்திரையாலேயே அவன் ஆட்ட ஆடுவனவே. கையும் வாயும் இல்லாத அதாவது செயலும் சொல்லும் அற்ற எங்கும் நிறைந்த பரிபூரண சிவ சொருபத்தை நாம் இதனால் உணர முடிகிறது.

## விசுவக் கிராசம்
## (உலகமே கவளமாதல்)

741. அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை ஒக்கப்
பொழிகின்ற இவ்வுடல் போமப் பரத்தே (2587)

விண்ணில் தோன்றும் நிழல் உருவம் விண்ணிலே மறைதல் போலவும் நீரிலே தோன்றும் நீர்க்குமிழி சிறிது நேரம் தோன்றிப்பின் மறைவதைப் போலவும் சுடர்விட்டெழுந்து எரியும் கர்ப்பூரம் முழுவதும் கரைந்து விடுவதைப் போலயும் தூலமாகத் காணப்படும் இவ்வுடல் காணப் பெறாததாய்ப் பரத்திலே ஒடுங்கும்.

742. செவிமெய் வாய் கண்மூக்கு சேர் இந்திரியம்
அவியின்றிய மனம் ஆதிகள் ஐந்தும்
குவி வொன்றிலாமல் விரிந்து குவிந்து
தவிர் வொன்றிலாத சராசரந் தானே. (2589)

செவி, மெய், வாய், கண், மூக்கு எனப்படும் இந்திரியங்களும். அவதலற்ற மனம் முதலான அந்தக் கரணமும், புருடனும், ஆய ஐந்தும் தாம் குவிதல் தன்மையோடு இறைதியானத்தில் அமைதல் இலாமல். உலக ஆசா பாசங்களில் வினைக் கீடாய் விரிந்தும் குவிந்தும் செயல்படு தலாலேதான் தவிர்க்க முடியாத இவ்வுலகம் தோற்றுவிக்கப்படுகிறது. ஆன்மாக்களின் மலநீக்கத்திற்காவே தனு கரண, புவனம் போகங்கள் தோற்றுவிக்கப்பட்டனவாம்.

743. இரும்பிடை நீரென என்னையுள் வாங்கிப்
பரம்பரமான பரமது விட்டே
உரம் பெற முப்பாழ் ஒளியை விழுங்கி
இருந்த என் நந்தி இதயத்து ளானே (2592)

கொல்லன் உலைக்களத்திடைச் செக்கச் சிவந்து காய்ந்த இரும்பு தன்மேல் கொட்டிய நீரைத் தன்னுள்ளே இழுத்துக் கொள்வதைப் போல என்னைத் தன்னுள்ளே வாங்கிக் கொண்ட மிக மேன்மையான பரசிவம், பரமாகிய மேல் நிலைப்

பாட்டைக் கடந்து, அதைவிட்டு (இந்த ஆன்மா உரம் பெறுதல் வேண்டி) பரத்தினுடைய சிவப் பாழ், பரம் பாழ். சிவப் பாழ் ஆகும் முப்பாழையும் விழுங்கி விளங்குவான். அவ்விளக்கமுறும் என்தலைவனாம் நந்தி எம்பிரான் என் இதயத்துள்ளான்.

**744. கரியுண் விளவின் கனிபோல் உயிரும்**
**உரிய பரமும் முன் ஓதும் சிவமும்**
**அரிய துரியமேல் அகிலமும் எல்லாம்**
**திரிய விழுங்கும் சிவபெரு மானே (2593)**

வேழநோயால் உள்ளீடு விழுங்கப்பட்ட விளாம்பழத்தினை ஒப்ப. ஆன்மாவும் அதன் மேல் நிலையாகிய பரமும், முன் ஓதும் சிவமும், அரிய துரிய நிலையை அவ்வான்மா அடையுமானால் (மேற்சொன்னவை) அனைத்தும் திரிய, பரம் பொருளாம் சிவ பிரான் விழுங்கித்தான் மட்டும் தன் இயல்பு கெடாமல் இருப்பான். (முன்னோதிய சிவன் தத்துவங்களைத் தொழிற்படுத்தும் சிவன், பின்னது தத்துவங்களைக் கடந்த தனிப்பெரும் பொருள்)

**745. அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்**
**தந்தம் பரம்பரன் தன்னிற் பரமுடன்**
**நந்தமையுண்டு மெய்ஞ்ஞான நேயாந் தத்தே**
**நந்தி இருந்தனன் நாமறி யோமே. (2594)**

யாவற்றுக்கும் அந்தமாகியும் ஆதியாகவும் உள்ள பராபரப்பொருள் சிவபிரான். தத்தமது மேலானபரம் எனும் நிலையில் உள்ளவன் அவன். அப்பரம் பொருள் தன்னிலிருந்து வெளிப்பட்ட சத்தி தன்னோடு, பெத்தர்களாய நாம் எனப்படும் இந்த ஆன்மாவையும் கவளமென விழுங்கி உண்டு நிற்பான். மெய்ஞ்ஞான நேயத்தின் அந்தமாம் முடிவிலே, அப்படி உண்டருளிய நந்தி எம்பெருமான் இருந்தனன். இத்தன்மை நாம் அறிய வொண்ணாதது ஆகும். (மெய்ஞ் ஞான நேயாந்தம்- சிவ துரிய அதீதம்)

## வாய்மை

746. எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபம் அங்கில்லை
எல்லாம் அறிந்த அறிவினை நான் என்னில்
எல்லாம் அறிந்த இறைஎன லாமே. ([illegible])

எல்லாவற்றையும் இயல்பாகவே முழுமையாக அறிந்துள்ள பேரறிவுப் பிழம்பான வாலறிவனை விட்டுவிட்டு, பிற உலகியல் அறிவுள்ள அனைத்தையும் அறிவதால் எவ்விதப் பயனும் இந்த ஆன்மாவுக்கு இல்லை. மேற்சொன்ன எல்லாம் அறிந்த அறிவாம் சிவமே, சிவனாம் ஆன்மா எனப் பாவனை செய்து நின்றால் (தத்துவமாகி) எல்லாம் அறிந்த இறை நிலையை இந்த அன்மா அடையும்.

747. தானே உலகில் தலைவன் எனத்தகும்
தானே உலகுக்கு ஓர் தத்துவமாய் நிற்கும்
வானே மழைபொழி மாமறை கூர்ந்திடும்
ஊனே உருகிய உள்ளம் ஒன்றாமே. ([illegible])

மேற்கூறியபடி சீவன் சிவமயமானவர், உலகில் தலைவன் தானே எனத்தகும் தகுதி பெற்றவர். அவரே உலகுக்குத் தத்துவங்களை (உண்மைப் பொருளை) உணர்த்தும் தத்துவப் பொருளாவார். அவராலேயே வான் (மழை) பொழிகிறது. மாமறைகள் அவரை மிகுத்துப் பேசும். அவர் உடல், ஊன், உருகி சிவனுடன் ஒன்றித்து விளங்கும்.

748. மெய் கலந்தாரொடு மெய்கலந்தான் தன்னைப்
பொய் கலந்தார்முன் புகுதா ஒருவனை
உய்கலந் தூழித் தலைவனுமாய் நிற்கும்
மெய்கலந்த இன்பம் விளைந்திடும் மெய்யர்க்கே. ([illegible])

நித்த வஸ்துவான சிவபிரானைக் கலந்திருப்பவர்களது ஊன் கலந்து உயிர் கலந்து நிற்கும். அவனைப் - பொய்யான உலக இன்பங்களைக் கலந்து நிற்பவர்களுக்கு முன்னே தோன்றுதலில்லா அவனை - உய்யும் வகையினை அறிந்து ஆன்மாக்களுக்குத் திருவருள் நோக்கம் செய்பவனை -

பேரூழிப் பெருமுதல்வனாய் நிற்கும் அவனைச் சிவஞானமாம் மெய்யுணர்வுடன் கலந்து நிற்குங்கால், அவன் தன் மெய்யன்பர்களாகிய சிவ ஞானிகளுக்கு உண்மையான - நீக்கமற்ற இன்பம் விளைந்திடுவான்.

**749. கை கலந்தானைக் கருத்தினுள் நந்தியை**
**மெய் கலந்தான் தன்னை வேதமுதல்வனைப்**
**பொய் கலந்தார்முன் புகுதாப் புனிதனைப்**
**பொய் ஒழிந்தார்க்கே புகலிட மாமே. (2604)**

மெய்யுணர்வு பெற்ற ஆன்மாக்களின் தவஞான ஒழுக்கங்களிலே கலந்து நிற்பவனும், சிந்திப்பவர்களின் உள்ளங்களிலே விற்றிருக்கும்படியானவனும் நந்தி எம்பெருமானாம் சிவபெருமானே. அவனே மெய்யன்பர் களின் மெய்யான யோக ஞான நெறிகளிலே கலந்துள்ளவன். வேதமுதல்வன். அவன் பொய்யான உலகியலின் பாற்பட்ட வஞ்ச ஒழுக்கமுடையார் முன் தோன்றாத் தன்மை வாய்ந்த புனிதன். அந்தப் பரம்பொருளாம் சிவன், தம்மிடமிருந்து பொய்மைப் பொருள் இன்பப் பற்றற்றார்க்கே புகலிடமாவான்.

**750. உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்**
**மெய்யன் அரன்நெறி மேலுண்டு திண்ணெனப்**
**பொய்யொன்று மின்றிப் புளம் பொலி வார்கட்குப்**
**ஐயனும் ஆங்கே அமர்ந்து நின்றானே. (2606)**

ஆன்மா உய்திபெற வேண்டிய வகையை அறிந்து அதனால் உங்கள் உள்ளம் உணர்வினில் சிவஞானம் ஓங்கி நிற்க, சிவபெருமானை ஏத்தித் தொழுமின்கள். அதன் மேலாக, மெய்ப்பொருளான அரனைச் சென்றடையும் திண்ணிய நெறி உண்டு. அது கண்களால் காணப்படும், பொய்ப் பொருள்களை இச்சிக்கும் இச்சை யாதுமின்றி அகப் பொலிவினோடு புறமும் சிவப்பொலிவாகத் திகழும். உம் இதய நடுவிலே ஐயனாம் சிவனும் அமர்ந்திருப்பான்.

751. வம்பு பழுத்த மலர்ப்பழம் ஒன்றுண்டு
தம்பாற் பறவை புகுந்துணத் தான் ஒட்டாது
அம்கொண் டெய்திட டகலத்துறத்திடில்
செம்பொற் சிவகதி சென்றெய்த லாமே. (2607)

மணம் வீசி பரப்புகின்ற, பழுத்த சிவப்பழம் ஒன்று சகஸ்ரதளம் என்னும் மலரிலே உண்டு. அச்சிவப் பழத்தினைச் சென்றடைந்து அதனுள் புகுந்து கொத்தித்தின்று உண்ண விஷயசுகமாகிய வாசனைகளாம் பறவைகளால் இயலா. இவைகளோ அச்சிவப்பழத்தினை ஆன்மா சென்று அனுபவிக்காதபடி ஊறு செய்வன. அப்பறவைகள் அகலும்படி திருவருட்சத்தியாம் அம்பால் துரத்திடில் சிவந்த பொன் போன்ற சிவனடியாம் சிவப்பேற்றினைச் சென்றடையலாம்.

752. மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்
துயக்கறுத் தானைத் தொடர்மின் தொடர்ந்தால்
இயக்கம் செய்யாதே சிவனெம் பெருமான்
உயப்போ எனமனம் ஒன்று வித்தானே. (2608)

உள்ளத்தை மயக்கம் செய்யும் ஐம்புலன்களால் ஏற்படும் அவாவையும் பற்றினையும் அறுத்து நெஞ்சக் கலக்கத்தை நீக்கும் சிவபெருமானைத் தியானத்தால் தொடருங்கள். அங்ஙனம் சிவன் எம்பெருமான் என ஐந்தெழுத்தால் ஓயாமல் தொடர்ந்து வழிபட்டதால், உய்ந்து போய் மேனிலை அடைக என்று, தன்னை என் மனதோடு ஒன்றாக இணைத்துக் கொண்டான் சிவன்.

## ஞானிசெயல்

753. முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணார் பேர்த்தறப் பார்ப்பார்கள்
தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
நன்மையில் ஐம்புலன் நாடலி னாலே. (2610)

தன் உண்மைநிலையை - தான் ஆன்மா என்பதை மயக்கமறத் தெளிந்த தத்துவ ஞானிகள், நன்மையைச் சிறிதும் தராத ஐம்புலன் சேட்டைகளை ஆராய்ந்து தம் வசம்

அவைகளை வைத்திருந்தால் தம் பழவினையாம் சஞ்சித வினைகள் தம்மை வந்தடையும் காலத்தில், அவைகளை அனுபவித்துக் கழிப்பார்கள். பின் இப்பிறப்பினால் செய்யும் அகாமிய வினைகளை வினைப்பயன் கருதி செய்யாமல் நீங்கி விலகப் பார்த்துக் கொள்வார்கள்.

**754. தன்னை அறியும் தத்தவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த சிவனரு ளாலே. (2611)**

மேற்கூறிய தன்னை உணர்ந்த தத்துவ ஞானிகள் தம் சென்னியில் சூடிய சிவன் அருளால், தம்முடைய பழைய வினையின் - சஞ்சித வினையின், முடிச்சை அவிழ்த்து விலக்கி விடுவார்கள். பின் மேல்வரும் வினையினது தோற்றமும் கெட அழித்து விடுவார்கள்.

**755. மனவாக்குக் காயத்தால் வல்வினைமூளும்**
**மனவாக்கு நேர் நிற்கில் வல்வினை மன்னா**
**மனவாக்கு கெட்டவர் வாதனை தன்னால்**
**தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. (2612)**

மனம் வாக்கு காயம் எனும் முக்கரணங்களும் சிவன் நினைவின்றி உலகியல் நினைவோடு உயிர் (ஆன்மா) நடந்து கொண்டால், வன்மை மிக்க வினைவந்து மூண்டுவிடும். மாறாக மனம் வாக்கு காயம், சிவஞானமுற்றுச் சிவநெறியில் நின்றால், வன்மையான வினைகள் வந்து பொருந்தா. மனம் வாக்கு காயத்தின் முனைப்பினை யோக தவ முயற்சிகளால் அழித்துவிட்டவர்கள் தற்போதத்தை அழித்து ஒழித்து விடுவார்கள். அவர்களே தகுதி வாய்ந்த சிவஞானிகள் ஆவர்.

## அவவாறுத்தல்

**756. மாடத்து ளானலன் மண்டபத்தான் அலன்**
**கூடத்து ளானலன் கோயிலுள்ளான் அலன்**
**வேடத்துளானலன் வேட்கை விட்டார் நெஞ்சில்**
**மூடத்துளே நின்று முத்திதந் தானே. (2614)**

மாடிகள் அமைந்த கட்டிடத்துள் இறைவன் இருப்பவனல்லன். மண்டபத்துள்ளும் அவன் அமர்ந்துள்ளனல்லன். கூடத்ினுள்ளேயும் கோயிலுள்ளேயும் அவன் குடி கொண்டிருப்பவன் அல்லன். வேடதாரிகளான போலித் துறவியரிடத்திலே உள்ளவனா எனில், அங்கும் இலன். ஆனால் உலக அவாக்களை அறவே நீக்கி விட்டவர்களின் மூடியுள்ள உள்ளத்துள்ளே எழுந்தருளி இருந்து, அவர்களை செந்நெறியுய்த்து முத்தி அருள்வான்.

**757. ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்**
**ஈசனோடாயினும் ஆசை யறுமின்கள்**
**ஆசைப்படப் பட ஆய்வரும் துன்பங்கள்**
**ஆசைவிட விட ஆனந்த மாமே. (2615)**

உலகிலே வாழ்கின்ற மக்களே! உள்ளத்துள்ள ஐம்பொறிகளாலும் அந்தக் கரணங்களாலும் அஞ்ஞானத்திலே எழுகின்ற ஆசை அனைத்தையும், அது எவ்வளவு சிறிதளவே ஆயினும் அறுத்து உங்களை அதிலிருந்து விலக்கிக் கொள்ளுங்கள். இறைவனிடம் கூட உங்கள் ஆசையை சமர்ப்பிக்காமல் விலக்கிக் கொள்ளுங்கள் (வேண்டத்தக்கது அறிவோன் அவன்) ஆசைப்படப்பட துன்பங்கள் மேலும் மேலும் பல்கும். ஆனால் ஆசைகளை விடவிட அவைகளால் (ஆசைகளால்) ஏற்படும் துன்பங்கள் அனைத்தும் விலகி ஆனந்தம் உண்டாகும்.

**758. தின்ற வினையும் பிணியும் நெடுஞ்செயல்**
**துன்தொழில் அற்றுச் சுத்தம தாகலும்**
**பின்றைங் கருமமும் பேர்த்தருள் நேர் பெற்றுத்**
**துன்ற அழுத்தலும் ஞானிகள் தூய்மையே. (2618)**

பற்பல பிறவிகள் தோறும் உயிரை விட்டு நீங்காது நிலைத்து நின்ற இருவினைகளும், மும்மலப் பாசப்பிணிப்பும், அவைகளால் அமைந்த நீண்ட கருமங்களும், உயிரோடு பொருந்திய இயக்கமற்று, இவ்வான்மா தூய்மை பெற்றுத் சுத்தமாதலும், பின்னும் ஐம்புல வியாபாரமாகும் புலன்களிலே வாழ்வதை விட்டு விலகி திருவருளை எதிர்கொண்டு அதன் மயமாகி அத்திருவருளிலே அழுந்த நிற்கச் செய்வதுமே, ஞானிகளின் தூய தன்மையாகும்.

759. உண்மை உணர்ந்துற ஒண்சக்தி முத்தியாம்
பெண்மயல் கெட்டறப் பேறட்ட சித்தியாம்
திண்மையில் ஞானி சிவகாயம் கைவிட்டால்
வண்மை அருள்தான் அடைந்தன்பில் ஆறுமே. (2619)

உண்மைப் பொருளாகிய சித்துப்பொருள் சிவனே என்பதையும், ஆன்மா, தன் உண்மை நிலை பதியைச் சென்றடைதலே என்னும் உண்மையையும் உணர்ந்து நிலைநிற்கில் ஒளிமிக்க சித்தியும் முத்தியும் உண்டாகும். பெண்பால் மையல் கொள்ளுதல் கெட்டற நின்றால், அட்டமா சித்திப் பேறுண்டாம். திண்மையான சிவஞானி தான் ஒடுங்கிய தன் சிவமயமான சிவதுரியத்தையும் நழுவ விட்டால் வளமைமிக்க திருவருள் கைகூடும். கைகூடிய பின் சிவத்தைச் சார்ந்து நிற்பன்.

## பத்தி உடைமை

760. முத்திசெய் வேள்வியுமாய் நிற்கும்
அத்தனை மாயா அமரர் பிரான் தன்னை
சுத்தனை தூய்நெறியாய் நின்ற சோதியை
பத்தர் பரசும் பசுபதி தானென்றே. (2623)

ஆன்மாக்களுக்கு முத்தியைத் தருகின்ற சிவஞானமாகவும் கேட்டுய்தி அடையும் உபதேச ரூபமாகவும், நிற்கும் தலைவனாம் சிவபிரானை, என்றும் அழியாத வானோர் தலைவனாம் பரம்பொருளை, வாலறிவனாம் சுத்தனை, தூய நெறியாகவே நின்று, பத்தர்கள் தன்னை வந்தடையக் காரணமான சோதி வடிவானவனைப், பத்தர்கள் போற்றித் தொழுகின்றனர். அவனே ஆன்மப் பசுக்களுக்குத் தலைவனாம் பதி; பசுபதியாம்.

761. அடியார் அடியார் அடியார்க் கடிமைக்(கு)
அடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியார் அருளால் அவனடி கூட
அடியான் இவனென் றடிமை கொண்டானே. (2624)

வாழையடி வாழை என அடியார்க்கு அடியார், அவ்வடியார்க்கு அடியார், அந்த அடியார்க்கு அடித்தொண்டு

பூண்ட அடியவனாய் அவரிடம் நான் அடியவனாய் நின்றேன். அந்த அடியவர் அருள் வல்லமையால் நான் சிவனடியைச் சென்றெய்திட "இவனும் என் அடியவனே" என்றுச் சிவன் அவன் தானும் தன் அடியாருள் என்னை ஒருவனாக ஏற்றுக் கொண்டான்.

762. ஒத்துல கேழும் அறியா ஒருவனென்று
அத்தன் இருந்திடம் ஆரறிவார் சொல்லப்
பத்தர்தம் பத்தியில் பாற்படின் அல்லது
முத்தனை யார் சொல்ல முந்துகின் றாரே. (2626)

உலகங்கள் ஏழும் ஒருங்கே திரண்டு ஆராய்ந்தாலும் அறிய முடியாத ஒப்பற்றவன் சிவபிரானனே என்பதையும் அந்தத் தலைவனின் இருப்பிடம் இதுதான் என்பதையும் பிறருக்கு அறிந்து சொல்ல வல்லார் யார்? சிவபக்தியிலே நிலைத்துள்ள பத்தி வலையிலே சென்று அகப்படுவதல்லாமல் பிற எவ்வகையிலேயும் கிடைத்தற்கரிய ஆணிமுத்தாம் சிவபிரானை, எளிதில் காணக்கூடும் என்றுரைப்பவர் ஒருவருமிலர்.

763. ஆன்கன்று தேடி அழைக்கும் அதுபோல
நான்கன்றாய் நாடி அழைத்தேன் என்நாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்றாய் நாடி வந்துள் புகுந்தானே. (2627)

பசுங்கன்று தன் தாயை அம்மா என்று அழைப்பதைப் போல அடியவனாகிய நானும் உளங்கனிந்து பத்தியுடன் கன்றை ஒப்ப, என் நாதனாம் பசுவினைக் கூவி அழைத்தேன். அச்சிவபிரானோ, வானுலகக்கன்றுகளுக்கும் எட்டாத மறைப் பொருளானவன். அப்படிப்பட்ட சிவபிரான் இவ்வூனிலே கட்டுப்பட்டுள்ள கன்றாகிய என்னை நாடி வந்து, என் உள்ளத்திலே குடி கொண்டான்.

764. பெத்தத்தில் தன்பணி இல்லை பிறத்தலால்
முத்தத்தும் தன்பணி இல்லை முறைமையால்
அத்தற்கு இரண்டும் அருளால் அளித்தலால்
பத்திபட் டோர்க்குப் பணிஒன்றும் இல்லையே. (2628)

பிறந்திருக்கும் மலபந்தக் கட்டுடன் உள்ள பெத்தர்கள் சிவபிரான் அடியார்களாய்ப் பத்திவலைப்பட்டிருப்பின் அவர்கள் தம் பணியாகவும் சிவன் செயலே என்று பணி செய்வதால் அவர் பணியாதொன்றுமில்லை. அந்த ஆன்மா முத்தியடைந்த நிலையிலே சீவ போதம் இழந்து சிவ போதமாய் நிற்றலால், அங்கு அதற்கு எப்பணியும் இல்லை. இவ்வகையில் அத்தனாகிய சிவனுக்கு மேற்கூறிய இரண்டும் அவன் திருவருட்சத்தியாலேயே நிறைவேற்றப்படுவதால், அவன் பால் பத்திபூண்டொழுகும் அடியவர்களுக்கு எப்பணியும் இன்றென்க. பத்தர்கள் ''உன்னடியே செய்தொழுகும் உன்தொண்டே'' என்று கிடப்பார்கள் ஆதலால் என்க.

**765. உறுதுணை நந்தியை உம்பர் பிரானை**
**பெறதுணை செய்து பிறப்பறுத் துய்மின்**
**செறுதுணை செய்து சிவனடி சிந்தித்து**
**உறுதுணை யாய்அங்கி யாகி நின்றானே. (2630)**

ஆன்மாக்களுக்கு உற்ற துணையாகி, எக்காலமும் விளங்கும் நந்திப்பிரானாம் சிவனை, தேவர்கள்தம் தேவனை, நாம் பெற்றுய்யத்தக்க துணை என்று ஏற்று, அவனையே துணையாகக் கொண்டு பத்தி செலுத்தி உய்தி அடையுங்கள். அவன் ஒருவனையே செறிவான துணை என ஏற்று அச்சிவனடியே சிந்தித்துப் பத்தி இடையறாது செலுத்தினால், அவனே ஆன்மாவுக்கு உற்ற துணையாய் நின்று ஜோதிவடிவாய் நின்றருள்வான்.

## முத்தி உடைமை

**766. முத்தியில் அத்தன் முழுத்த அருள் பெற்று**
**தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி**
**மெய்த்தவம் செய்கை வினைவிட்ட மெய்யுண்மை**
**பத்தியில் உற்றோர் பரானந்தபோதரே. (2633)**

ஆன்மாவானது தன்முத்தி லையிலே அத்தனாகிய சிவனின் முழு அருளையும் பெற்று அத்திருவருளால் முப்பத்தாறு தத்துவங்களையும் தனக்கு வேறானவை என்றும், அவை சிவனுடைமை என்றும் மீண்டும் அதன்பால் வேண்டத் தகாதென்றும் உணரும் தத்துவ சத்தி அறிந்து, தன் பணி

மெய்யான இறைபணியாம் தவம் செய்தல் என, இருவினைகளின் நீங்கிய, மெய்யான உண்மை பத்தியில் திளைத்தவர்களே சிவானந்தத்தைப் பெற்ற ஞானிகளாவர்.

## சோதனை

767. அறிவுடை யான்அரு மா மறையுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்குந் தேவன்
பொறிவுடை யான்புலன் ஐந்தும் கடந்த
குறிவுடையா னொடும் கூடுவன் நானே. (2636)

இயல்பாகவே பேரறிவுப் பிழம்பாக விளங்குபவன், பெருமை மிகுந்த மறைகளின் உள்ளே உட்கருவாய் விளங்கும், ஓம் எனும் பிரணவத்தின் செறிவாகி அமைந்தவன். தேவர்கள் அனைவருக்கும் தலைவன், வாலறிவன், பொலிவு மிக்கவன். ஐம் புலன்களையும் கடந்து நின்ற குறியினை உடையவன். இத்தன்மை பொருந்திய சிவபிரானொடும் நான் சென்று கூடுவன்.

768. காலினில் ஊறும் கரும்பினில் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்கும் கலந்து நின்றானே. (2639)

இயங்கி வரும் காற்றினில் பரிசமும் (உடலைத் தீண்டி வருடும் தன்மை) கரும்பினுள்ளே பொருந்தியுள்ள இனிப்பும் (வெல்லக் கட்டியும்) பாலிலே பரவியுள்ள நெய்யும், பழத்தினில் பொருந்தியுள்ள சுவையும், மலரிலே மணமும் என்ன, ஆன்மாக்களுக்குப் பிரிவற (உடனாய்) நின்றருள்கின்றனன் எம் இறைவனாகிய சிவபிரான். அனைத்து உலகங்களுக்கும் நீங்காக் காவலன் ஆகி நிற்பவனும் அவனே. அவன்தானே எங்கும் யாவற்றிலும் கலந்தும் விளங்குகின்றான்.

769. தன்மை வல்லோனைத் தவத்துள் நலத்தினை
நன்மை வல்லோனை நடுவுறை நந்தியை
புன்மை பொய்யாதே புனிதனை நாடுமின்
பன்மையிலே உம்மைப் பரிசு செய்வானே. (2642)

சத்து சித்து ஆனந்தமாம் தன்மையிலே மிக்கவனாய்ச் சச்சிதானந்த சொரூபமானவனைத் தவத்துள்ளே அதன் பயனாக விளங்கி நிற்பவனை, எல்லா உயிர்களுக்கும் நன்மையே செய்து அருள் பாலிக்கின்ற அருள் வடிவானவனை, நடு நிலையிலிருந்து நலம் புரிகின்ற நந்தி எம் பெருமானை, கீழ்மையும் பொய்ம்மையும் ஒரு சிறிதும் அற்ற புனிதப் பொருளாம் ஈசனை, நாடுமின்கள். அங்ஙனம் நாடி நிற்கும் உங்களைப் பலபல ஆன்மாக்களின் சிறந்த ஆன்மாவாக அவன் தேர்ந்தெடுத்து வீடாம் பரிசளிப்பான்.

**770.** ***தொடர்ந்து நின்றான் என்னைச் சோதிக்கும் போது***
***தொடர்ந்து நின்றான் நல்லநாதனும் அங்கே***
***தொடர்ந்து நின்று ஆதிப் பராபரன் எந்தை***
***கடந்து நின்று அவ்வழி காட்டுகின்றானே. (2643)***

என்னை ஆட்கொள்ள குருவடிவாகிக் குவலயந்தன்னில் எழுந்தருளி, என்முன் வந்து என்னை அத்துவா சோதனை செய்து அருளிய போது எம் இறைவனாகிய சிவனும் என்னைத் தொடர்ந்து (உடனாய்) நின்றான். இவ்வகையில் யாவற்றோடும் கலந்து நிற்பவனானான். அந்த ஆதிப்பராபரன், எந்தையாம் பரசிவன், யாவற்றையும் கடந்து நின்று அவ்வழியே (கலையாதி அத்துவாக்களைக் கடக்க) நெறி காட்டுகின்றான். (ஆறு அத்துவாக்கள்:- மந்திரம், சொல், எழுத்து, புவனம், தத்துவம், கலை என்பனவாம்)

**771.** ***அவ்வழி காட்டும் அமரர்க்கரும் பொருள்***
***இவ்வழி தந்தைதாய் கேளியான் ஒக்கும்***
***செவ்வழி சேர்சிவ லோகத் திருந்திடும்***
***இவ்வழி நந்தி இயல்பது தானே. (2644)***

ஆன்மாக்கள் உய்தி அடைய முத்தி நெறியினை குருவடிவாகி வந்து திருவடி தீக்கை செய்து அருளுகின்ற அவன், அமரர்கள் சென்று அடைய முடியாத அரும் பொருளாவான். இவ்வழியில் இவ்வுலக வாழ்க்கையிலே, அவன் தந்தை தாய் சுற்றத்தினை ஒக்கிறான். செம்மையாகிய சிவநெறிக்கண் சென்று, சேர்தற்குரிய சிவலோகத்திலே வீற்றிருக்கும் அரும் பொருளானவான். இச்சிறப்புகள் தாமே எம் இறைவனாம் திரு நந்தி எம்பெருமானின் நல்லியல்புகளாம்.

772. ஆதிப்பிரான் தந்தவாள் அங்கை கொண்டபின்
வேதித்து என்னை விலக்கவல் லாரில்லை
சோதிப்பன் அங்கே கவடுபடா வண்ணம்
ஆதிக்கண் தெய்வம் அவனிவ னாமே. (2646)

ஆதிப்பிரான் ஆய முழுமுதல் சிவன் குருவடிவாகி வந்து என்னை ஆட்கொண்டு எனக்கு உணர்த்திய ஞானச் சுடர்வாளை என் மனமாம் கையில் ஏந்திய உடனே, என்மனத்தை மாற்றி, அச்சிவ நெறியிலிருந்து என்னை விலக்க வல்லார் இவ்வுலகில் யாரும் இலர். சிவசிந்தைனையற்ற பிற, என் உள்ளத்துள் புகுந்து என் உள்ளத்தை மாசு படுத்தாதபடி நான் உன் உள்ளத்தைச் சோதனை செய்வேன். அக்கால் ஆதி மூர்த்தியாகிய சிவத்தைப் பொருந்தி என் சீவன் சிவனாகும். (இதுவே தத்துவமசி ஆகும்)

773. உரையற்ற தொன்றை உரைத்தான் எனக்குக்
கரையற் றெழுந்த கவலைவேட் டறுத்துத்
திரையொத்த என்னுடல் நீங்கா திருத்திப்
புரையற்ற என்னுட் புகும் தற்பரனே. (2648)

உரைக்க முடியாத பிரணவ உபதேசத்தை எனக்குத் தீக்கை செய்து உபதேசித்தான் அவன். அதோடு எல்லை கடந்து விளங்கும் கல்வியின்பால் உள்ள என் வேட்கையினையும் அறுத்து எனை ஆட்கொண்டான். கடல் திரை போன்று தோன்றி அழிகின்ற இந்த உடலையும் அழியாதிருக்கச் செய்து குற்றமற்ற என் உள்ளத்துள்ளே தற்பரமாம் சிவ பிரான் வந்து குடி கொள்வான்.

(எட்டாந் தந்திரம் முற்றும்)

6-21

## குருமடதரிசனம் - ஒளிவிளங்கும் இடம்

774. இவன் இல்லம் அல்லது அவனுக்கு அங்கில்லை
அவனுக்கு வேறில்லம் உண்டா அறியின்
அவனுக்கு இவனில்லம் என்றென்று அறிந்தும்
அவனைப் புறம்பென்று அரற்றுகின்றாரே. (2650)

உயிரினது உள்ளம் எனும் இல்லம் அல்லாமல் சிவபிரான் உறைதற்கு வேறிடம் கிடையாது. உள்ளதை உள்ளபடி அறிய முற்படின் அவனுக்கு (சிவனுக்கு) உறைவிடம் வேறு உளதோ? இல்லை. இவ்வண்ணமாக பரசிவனுக்கு இவன் (உயிரது) உள்ளமே இல்லமாக அமைந்துள்ளது என்பதை நன்கு உணர்ந்த பின்னும் அவன் நம்மினும் வேறாய் வெளியே கோயில் கொண்டுள்ளான் என்று வீணாகக் கூவுகின்றனர். இது அறியாமையே!

775. நாடும் பெருந்துறை நான் கண்டு கொண்டபின்
கூடும் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட அரியன் சிறப்பிலி எம்மிறை
ஓடும் உலகுயிர் ஆகிநின் றானே. (2651)

ஆன்மாதான் சென்றடைய நாடுகின்ற பெருந்துறையாய சகஸ்ரதளத்தினை நான் என் பயிற்சியால் கண்டு உணர்ந்த பிறகு, அப்பொழுது கொய்யப்பட்ட தாமரைமலர் போன்ற சிவனது சிவந்த பாதங்களைச் சேர்ந்து இன்புறும் பேறு கிடைத்தது. அவனோ தேடிக் கண்டு கொள்ள இயலாதவன். ஆனால் மிகவும் சிறப்புற்றோங்கிய (சிறப்பு + இல்லி) இல்லமாம் உள்ளத் தாமரையை இடமாகக் கொண்டவன். அந்த எம்பெருமான் இயங்கிக் கொண்டே இருக்கும் உலகமும் உயிரும் ஆகி (இயவுளாகி) நிலைத்து நிற்கிறான்.

776. மாயை இரண்டு மறைக்க மறைவுறும்
காயமோ ரைந்தும் கழியத் தானாகிய
தூய பரஞ்சுடர் தோன்றச் சொரூபத்துள்
ஆய்பவர் ஞானதி மோனத் தராமே. (2655)

இந்த மாயைகளாம் சுத்த மாயை அசுத்த மாயைகள் ஆன்மாவை மறைக்க அதன் அறிவு விளங்காது மறைவுறும். ஐந்து விதமான காயங்களாம் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமய கோசங்களின் உண்மை அறிந்து அவை கழிந்து அகன்று விட தான் யார் என்னும் உண்மை புலனாகித் தான் தானாகித் தன்னைத்தான் உணர, அக்கால் தூய்மையான மேலான ஜோதிவடிவான பரஞ்சுடர் தன் முன் நிற்கும்.

## ஞான குரு தரிசனம்

777. ஆறொடு முப்பதும் அங்கே அடங்கிடில்
கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்
வேறே சிவபதம் மேலாய் அளித்திடும்
பேறாக ஆனந்தம் பேறும் பெருகவே. (2656)

ஆன்மாவுக்குள்ளே முப்பத்தாறு தத்துவங்களும் அடங்கி விட்டால் சிவன் சீவனுக்கு முன் தோன்றித் தன்னுடன் ஐக்கியப் படுத்திக் கொள்வான். அதன்பின் மேலான சிவப் பேற்றினை அவனே அளித்திடுவான். இதன் பயனாக ஆன்மா சிவானந்தத்தில் திளைத்துச் சிவ போகத்தை அடையும்.

778. துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி
அரிய பரசிவம் யாவையும் ஆகி
விரிவு குவிவற விட்ட நிலத்தே
பெரிய குருபதம் பேச ஒண்ணாதே. (2657)

சிவதுரியம், பரதுரியம், சிவதுரியமாம், முத்துரியங்களையும் கடந்து ஒளிர்கின்ற சோதிப் பிழம்பான அரிய பரசிவம் உலகத்துள்ள எல்லாமாய், மலர்தலும் கூம்பலும் இல்லதாகி போக்குவரவற் றுள்ளதாகி விட்ட நிலத்திலே (போக்கும்வரவும் புணர்வுமிலாப் புண்ணியனிடத்திலே உள்ள) பெருமை மிக்கக் குருவடிவாகி வந்த சிவபிரானின் பாதங்களின் பெருமையைச் சொல்ல இயலாததாகும்.

779. ஆயன நந்தி அடிக்கென் தலைபெற்றேன்
வாயன நந்தியை வாழ்த்த என்வாய் பெற்றேன்
காயன நந்தியைக் காண என் கண்பெற்றேன்
சேயன நந்திக் கென்சிந்தை பெற்றேனே. (2658)

தாய்போன்ற நந்திப் பிரானது திருவடியைச் சூட்டிக் கொள்ள வென்றே நான் என் தலையைப் பெற்றுள்ளேன். எம்பெருமான் சிவனடியைச் சேர்தற்கு வாயிலாக விளங்கும் நந்தி எம்பெருமானை வாழ்த்த எனது வாயை நான் பெற்றுள்ளேன். இந்த அகில உலகத்தின் தோற்றத்திற்குக் காரணமான விதையை ஒத்த நந்திப் பிரானைக் காண என் கண்களைப் பெற்றுள்ளேன். மனவாக்குக்கெட்டாத சேய்மைக் கண்ணே விளங்கும் நந்திப் பிரானைச் சிந்தித்து வணங்க என் சிந்தையைப் பெற்றுள்ளேன்.

780. அண்ணல் இருப்பிடம் ஆரும் அறிகிலார்
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்து கொள்வார்கட்கு
அண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்
அண்ணலைக் காணில் அவன் இவனாமே. (2660)

அண்ணலாம் சிவபிரானின் இருப்பிடம் யாது என்று அறிந்து கொண்டவர்கள் உலகில் ஒருவருமிலர். அவனது இருப்பிடம் உயிர்களது உள்ளமே என்பதை உண்மையாக ஆய்ந்தறிந்து கொள்பவர்களுக்கு அவன் அச்சீவர்களின் உள்ளத்துள்ளே நிலைத்து அமர்ந்திருப்பான். அவ் வண்ணமாகத் தம் உள்ளத்துள்ளே சிவப் பேரொளியைக் காண்பவர்களே அவனே இவனாம் தன்மை வாய்ந்தவராவார். அதாவது சிவமயமாகி விடுவர்.

781. தோனற் அறிதலும் தோன்றல் தோன்றாமையும்
மான்ற அறிவு மறிநனவாதிகள்
மூன்றவை நீங்கும் துரியங்கள் மூன்றற
ஊன்றிய நந்தி உயர் மோனத் தோனே. (2661)

சிவனே குருவடிவாகி வந்து தீட்சை அருளியதால் திருவடி உணர்வு தோன்ற மயக்க அறிவு நீங்கி, உண்மை அறிவு உணரப் பெறுதல் நிகழும். அங்ஙனம் உண்மையறிவின் உதயத்தால் நினைப்பும் மறப்பும் அகலும். மயக்கமுள்ள அறிவுடன் மாறி

மாறிவரும். நனவு கனவு உறக்கம் முதலிய மூன்று நிலையும், சிவதுரியம் பரதுரியம் சிவதுரியம் எனும் மூன்றும் அறுதலால் நீங்கும். நிலை பெற்ற நந்தி எம்பெருமான் - உயர்ந்த மோன நிலையிலே உள்ளவன் அருளால், இவை நிகழும்.

782. மனம் புகுந்தான் உலகேழும் மகிழ
நிலம் புகுந்தான் நெடுவானிலம் தாங்கி
சினம் புகுந்தான் திசை எட்டும் நடுங்க
வனம் புகுந்தான் ஊர் வடக்கென்பதாமே. (2663)

மெய்யடிகயார்களின் மனத்திலே இறைவனாம் சிவபிரான் புகுந்து உலகேழும் மகிழும்படி அங்கேயே கோயில் கொண்டருளினான். முடிவுற்ற வானத்தையே தாங்கிய அவன், இம் மானிலத்திலே புகுந்தருளினான். திசை எட்டும் நடு நடுங்கச் சினம் பொங்க அவன் ஊழிக் கூத்தாடும் போது, அவன் ஆன்மாக்களுக்குத் திருவருள் செய்தான் ஊழிக்காலத்திய ஒடுக்கநிலையிலே பேரொடுக்கப்பெரு வனத்திடை புகுந்தாடினான். அவன் ஊர் வடக்கே உள்ள கயிலாய மாகும்.

783. மருவிப் பிரிவறியா எங்கள் மாநந்தி
உருவம் நினைக்க நின்றுள்ளே உருக்கும்
கருவிற் கரந்துள்ளம் காணவல்லார்க் கிங்கு
அருவினை கண்சோரும் அழிவார் அகத்தே. (2665)

ஆன்மாக்களின் பக்குவ நிலை அறிந்துக் கலந்த பின்னர் பிரிதலை அறியாதவன் எங்கள் பெருமை மிகு நந்தி எம்பிரான். அவன் அருளுருவையும் தன்மைகளையும் நீடு நினைத்து தியானித்தால் அவன் உள்ளே நின்று ஜீவ போதம் கெடுமாறு செய்வான். அவனது கருவாம் உள் சோதியில், ஒன்றறக் கலந்து உள்ளத்தின் உண்மைத் தன்மையை உணர வல்லவர்களுக்கு இவ்வுலகிலே அவர்களைச் சார்ந்துள்ள அழித்தற்கரிய இருவினைகளும் அழிந்து போகும். அவர்கள் தம் அகம் அழியப் பெறுவார்கள். (அகம் அழிதல் - தான் என்றும் அகந்தைக்குக் காரணமான மாயை அழிதல்)

784. நினைக்கின் நினைக்கும் நினைப்பவர் தம்மைச்
சினைக்குள் வினைமலர்ச் சோதியி னானைத்
தினைப் பிளந் தன்ன சிறுமைய ரேனும்
கனத்த மனத் தடைந்தால் உயர்ந்தாரே. (2667)

பரம் பொருளாய சிவத்தினை இடையறாது நினைத்துத் தியானிப்பவர் தம்மை, சிவபிரானும் அவர்பால் அருள்கரந்து நினைத்தருள்வான். அவ்வாறு பத்தர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு புருவ மத்தியிலே நீருற்றுப் போன்று ஒளிரும் சோதிப் பொருளைப், பிறப்பினாலும் பிறவற்றாலும் தினையரிசியின் நொய் போன்ற சிறுமையராயினும் இடைவிடாத பக்தி, யோக, ஞானப், பயிற்சியால் கனத்த மனத்தினை அடைந்தவர்களே வீடு பேறடையும் உணர்ந்த தன்மையினராவர். (கண் களிக்கப்புகை சிறிதும் காட்டாதே, புருவக்கலை நடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே)

785. தலைப்படும் காலத்துத் தத்துவன் தன்னை
விலக்குறின் மேலைவிதி யென்றுங் கொள்க
அனைத்துலகாய் நின்ற ஆதிப் பிரானை
நினைப்புறுவார் பத்தி தேடிக் கொள்வாரே. (2668)

தத்துவ சொரூபமான சிவபெருமானைச் சென்றடைய யோக, ஞான நெறிகளிலே இடையறாது பயிலும் காலத்தின் இடையிலே தடைகள் ஏற்படின் அதற்குக் காரணம் முன்வினைப்பயனே எனக் கொள்க. இவ்வண்டங்கள் அனைத்துமாய் விளங்குகின்ற ஆதிப் பிரானான சிவபிரானைத் தைல தாரையைப் போல நினைப்பவர்கள் பத்திவழியாம் அன்பு மார்க்கத்தினை அடைவார்கள். (நேடி - தேடி)

## பிரணவ சமாதி

786. உண்ணும் வாயும் உடலும் உயிருமாய்
கண்ணுமாய் யோகக் கடவுள் இருப்பது
மண்ணுநீர், அனல், காலொடு வானுமாய்
விண்ணு மின்றி வெளியானோர் மேனியே. (2671)

நாம் உண்ணும் உணவினை உட்கொளும் வாயாகி, உட்கொளும் உணவின் சுவையை அறிபவனும் அறிவிப்பனும் அவன். நம் உடலாகவும், உடலுள் உள்ள உயிராகவும் உள்ளவன். நம் கண்ணாக விளங்கிக் காண்கின்றவனும், நமக்குக்

காட்டுகின்றவனும் அவன். அவன் யோக மூர்த்தியாம் கடவுள். அவனே மண் நீர், தீ, காற்று ஆகாயமாகிய பஞ்சபூதமாய், அண்டத்துள் யூடுமின்றி ஞானப்பரவெளியிலே அகண்டமாகியும் பரந்துள்ளது.

**787. அம்பர நாதன் அகலிட நீள்பொழில்**
**தம்பர மல்லது நாம் அறியோம் என்பர்**
**உம்பருள் வானவர் தானவர் கண்டிலர்**
**எம்பெரு மானருள் பெற்றிருந் தாரே. (2673)**

அகன்ற பெரிய இடத்தை உடைய உலகம்தான் ஆகாயமுற்றும் அளாவியுள்ள சிவபெருமானின் தன்பரமாம் அருளால் நடைபெறுவதன்றி வேறு வகைத்து என்று அறிகின்றோமில்லை என்பர் ஞானிகள். இந்தப் பரந்து விளங்கும் பராபரப் பொருளை, உம்பர்களுள்ளே வானவர்களும், தானவர்களும் கண்டாரிலர். ஆனால் எம்பெருமான் அருள் பெற்றவர்களே அவனை உள்ளபடி உணர்ந்தவர்களாவர்.

## பிரணவ சமாதி
## (ஓங்காரத்தின் ஒடுக்கம்)

**788. தூலப் பிர சொருபானந்தப் பேருரை**
**பாவித்த சூக்கும மேலைச் சொரூபப் பெண்**
**ஆவித்த முத்தரை யாங்கதிற் காரணம்**
**மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே. (2675)**

தூலப் பிரணவம் அ, உ, ம எனும் எழுத்துக்களால் ஆனது. அஃது தூல உடம்புக்கு இன்பம் பயப்பது. மறைகளால் பாவித்தலைச் செய்யும் விந்து நாதமாகிய சூக்குமப் பிரணவம் மேலான பராசத்தியின் வடிவமாகும். இது சூக்கும தேகத்துக்கு இன்பம் தருவது. காரணப் பிரணவம் கைக்குறியாம் சின்முத்திரை வடிவாகி விளங்கும். இதுவே திருவருள் வீழ்ச்சிக்குக் காரணமாகும். (சத்திநிபாதம்) மேலைப் பிரணவமாம். மகா காரணப் பிரணவம் வேதாந்த வீதியில் சேர்தலைச் செய்யும்.

**789. ஓமெனும் ஓங்காரத்துள்ளே ஒரு மொழி
ஓமெனும் ஓங்காரத்துள்ளே உருவரு
ஓமெனும் ஓங்காரத்துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே. (2676)**

ஓமெனும் ஓங்காரத்துள்ளிருந்தே உபதேசத்திற்குரிய ஒப்பற்ற மொழி உதிக்கும் (மௌனாட்சரம்). உருவமும், அருவமும் அந்த ஓம் என்னும் மொழி தன்னுள்ளே கொண்டது. இந்த ஓம் என்னும் ஓங்காரத்துள்ளேயே தூலம், சூக்குமமாம் பலபேதங்களும் உள. இந்தப் பிரணவத்தை அறிவதால்தான் மேன்மையான முத்தியும் சித்தியும் வாய்த்திடும்.

**790. ஓங்காரத்துள்ளே உதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத்துள்ளே உதித்த சராசரம்
ஓங்காரம் ஆதீதத்து உயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவபர சிவ ரூபமே. (2677)**

மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களும் ஓங்காரப் பிரணவ ஒலியிலிருந்தே உதித்தன. இந்த அண்ட சர அசரங்கள் யாவும் பஞ்ச பூதவிகாரத்தால் அதே ஓங்காரத்திலிருந்தே தோன்றின. ஓங்காரத்தின் அதீதத்தில் உள்ள பிரணவம் கடந்த நிலையிலே சகலர், பிரளயாகலர், விஞ்ஞான கலராம் மூவகை உயிர்களும் உள்ளன. அதன் மேலாம் ஓங்காராதீதத்தில் ஜீவனாம் ஆன்மாவும் பரமாம் திருவருளும் சிவமாம் பரம்பொருளும் தோன்றும். அதாவது பிரணவமே இம்மூன்றுக்கும் வடிவமாம்.

**791. சோடச மார்க்கமும் சொல்லும் சன்மார்க்கிகள்
நாடிய ஈறாறின் அந்தமும் ஈரேழில்
கூடிய அந்தமும் கோதண்டமும் கடந்து
ஏறியே ஞான ஞேயாந்தத் திருக்கவே. (2680)**

சரியையில் சரியை, சரியையில் கிரியை எனச் சரியை கிரியை யோகம், ஞானம் என்பதை ஒன்றோடொன்று கூட்டி உறழ பதினாறாகும். இந்தப் பதினாறுவகை பிராசாத நெறிகூறும் சன்மார்க்கிகளுக்கு இந்தப் பதினாறிலே பனிரெண்டின் அந்தமாகிய யோகத்தில் ஞானமாகும். பதினான்கிலே கூடுவது ஞானத்தில் கிரியையாகும். அதைக்

கடந்து நிற்கும் நிலை ஞானத்தின் யோகமாகும். கோதண்ட மென்பது அதைக் கடந்து மேலேறினால் (அதாவது சோபான முறைப்படி) மேலே சென்றால் பதினாறாவதாகிய ஞானத்தின் ஞானத்தை எய்தலாம்.

## ஒளி
### சிவனும் சிவனும் ஒளியே

792. ஒளியை அறியில் உருவும் ஒளியும்
ஒளியும் உருவம் அறியில் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக உடன் இருந்தானே. (2681)

ஒளிமயமான ஆன்மாவை ஒருவன் பூரணமாக அறிந்தானானால் அவனுடைய உருவும் (உடலும்) ஒளியுள் ஒளிந்து மறையும். அப்படி ஒளியும் மறைந்து போகும் உடம்பின் (உருவத்தின்) நினைவிலேயே, அறிவு பொருந்தி இருந்தால், மீண்டும் பிறப்பு உண்டாகி உருவாகும். ஆனால் ஒளிமயமான ஆன்மாவின் உண்மை உருவினை உணர்ந்து ஆன்ம தரிசனம் செய்பவர்கள், ஒளியாம் சிவ தரிசனம் அடைவார்கள் (காண்பார்கள்). அதனோடு ஒளிமயமான ஆன்மாவின் பாசம் களைந்து அருள, அச்சிவனே உடன் இருந்து அருள்வான்.

793. புகலெளி தாகும் புவனங்கள் எட்டும்
அகலொளி தாயிருள் ஆசற வீசும்
பகலோளி செய்ததும் அத்தா மரையிலே
இகலொளி செய்தெம் பிரான் இருந்தானே. (2682)

மேற்கூறிய ஆன்ம சோதியின் உண்மை அறிந்தவர்க்கு எண்திசைப் புவனங்கள் எங்கும் சென்று வரும் ஆற்றல் கிட்டும். அகண்டமான ஒளியானது அவர்கள் உள்ளத்திலே பரவி, அக இருளை மாற்றிப் புறவிருளையும் மாற்றும். பகலைப் போன்று சூரிய ஒளியை ஒப்பான பிரகாசத்தைத் தாமரை இதழ் போன்று மலர்ந்துள்ள அவர்களின் சகஸ்ரதளத்திலே பாய்ச்சி மல இருளை நீக்கி ஒளியை நல்கும். எம்பிரான் அங்குப் பொருந்தி விளங்குவான்.

**794. விளங்கொளி அங்கி விரிகதிர் சோமன்**
**துளங்கொளிபெற்றன சோதி அருள,**
**வளங்கொளி பெற்றதே பேரொளி வேறு**
**களங்கொளி செய்து கலந்து நின்றானே. (2683)**

விளங்குகின்ற ஒளிகொளுவிடும் அக்னியும் (தீயும்) விரிந்த கதிர்களை உடைய ஞாயிறும், ஞாயிற்றினால் விளங்கும் சந்திரனும், சோதிவடிவாம் சிவன் அருள் பெற்றதால், உலகுக்கு ஒளிதரும் வல்லமை பெற்றன. இம்மூன்றும் அல்லாத வேறு ஒருபேரொளி உண்டு. அதுவே அருட்பெருங்சோதி ஆண்டவன் அருளொளி. அது வளங்கொழிக்கும் ஒளி. அவ்வொளி ஆன்மாவினை (களமாக) இடமாகக் கொண்டு ஆன்ம இருள் நீக்கிக் கலந்து நின்று விளங்குவதே ஆகும்.

**795. இளங்கொளி ஈசன் பிறப்பொன்று மில்லி**
**துளங்கொளி ஞாயிறும் திங்களும் கண்கள்**
**வளங்கொளி அங்கியும் மற்றைக்கண் நெற்றி**
**விளங்கொளி செய்கின்ற மெய்காய மாமே. (2684)**

விளங்குகின்ற ஜோதி வடிவினனாக இலகும் ஈசனாம் சிவபிரான் பிறப்பிறப் பற்றவன். உலகுக்கு ஒளி நல்கும் சூரியனும் சந்திரனும் இறைவனாம் சிவபெருமானுக்கு இரு கண்களாகி விளங்கும். வளமிக்க தீ (அக்னியும்) நெற்றிக் கண்ணாக விளங்கும். இம்முக் கண்களோடு ஞானப் பெருவெளியே (விளங்கொளியே) திருமேனியாகக் கொண்டு திகழ்பவனே எம்பெருமானாவான்.

**796. விளங்கொளி மின்னொளியாகக் கரந்து**
**துளங்கொளி ஈசனைச் சொல்லும் எப்போதும்**
**உளங்கொளி ஊனிடை நின்றுயிர்க் கின்ற**
**வளங்கொளி எங்கும் மருவி நின்றானே. (2687)**

ஜோதி வடிவமாக விளங்கும் வடிவினன், மின்னொளி போல் நம் ஆன்மாவிலே மறைந்து நின்று ஒளிரும் ஈசனை, எக்காலமும் புகழ்பாடிச் சொல்லி துதியுங்கள். அப்பொழுது உள்ளத்தினை தன் இருப்பிடமாகக் கொண்டவன், நம் உடம்பினிடையிலே விளங்கி நின்று, பிராண சத்தியாய்

உயிர்ப்புடன், ஆன்ம வளத்தினை நமக்கு நல்குபவனாய், எங்கும் பொருந்தி நின்று அருள் செய்வான்.

**797. இலங்கிய தெய்வொளி யவ்வொளி ஈசன்**
**துலங்கொளி போல்வது தூங்கருட் சக்தி**
**விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி**
**உளங்கொளி உள்ளே ஒருங்கு நின்றானே. (2689)**

இயற்கையாய், என்றும் பொன்றாததாய், விளங்கும் சச்திதானந்தப் பேரொளியே சிவனது உருவமாகும். அவ்வொளியின் அருட்கதிராய் விளங்குவது தான் அருட் சத்தியாகும். விளங்குகின்ற ஒளி மூன்றே தான். அவை சிவஒளி, சத்திஒளி, ஆன்மஒளி என்பவாம். இம்மூன்று ஒளியுமாக, விரிந்த சுடரை உடைய சிவபிரான் தோன்றி உளங்கொளும் ஒளியாக ஒருங்கு உடன் நின்றருள்கின்றனன்.

**798. விளங்கொளியாய் நின்ற விகிர்தன் இருந்த**
**துளங்கொளி பாசத்துள் தூங்கிருள் சேராக்**
**களங்கிருள் நட்டமே கண்ணுதலாட**
**விளங்கொளி உள்மனத் தொன்றி நின்றானே. (2691)**

உலகெங்கும் நீக்கமற நின்று விளங்கும் ஒளியான விகிர்தன் (வேறுபட்ட ஐந்து தொழில் செய்பவன் சிவபிரான். அவனுடைய பேரொளியானது தொன்று தொட்டே மலங்களால் மூடியுள்ள மாயா காரியப் பாசத்தினது இருளானது கெடும்படி, மையார்ந்த இருளிலே கண்ணுதலாகிட சிவன் ஆனந்த நடனம் செய்து (நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதன்) விளங்கும் ஒளி மயமானவனாவன் அவன் ஆன்மாக்களின் உள்மனமாம் மேனோக்கும் உள்ளத்திலே ஐக்கியமாகி நிற்பன்.

**799. உண்டில்லை என்னும் உலகத்தியல்வது**
**பண்டில்லை என்னும் பரங்கதி உண்டுகொல்**
**கண்டில்லை மானுடர் கண்ட கருத்துறில்**
**விண்டில்லை உள்ளே விளங்கொளி யாமே. (2693)**

இறைவன் உண்டு என்றும் இல்லை என்றும் கூறும் வினை உடையது இவ்வுலகம். உலகிலே உயிர்வாழும்

ஆன்மாக்களுக்கு மேலான பரமான்மா பண்டே இல்லை என்று நம்புவார் - கூறுவார்களுக்கு மேலான கதியான வீடு பேறு என்பது உண்டோ! நாம் யாரும் கண்டதில்லை என்று கருதும் மானிடர்கள், ஞானியர்களும் யோகியர்களும் கண்ட கருத்தினைத்தாம் அறிய வேண்டும் என முற்பட்டு முயன்றால் சிதாகாசமான பரவெளியிலே அவன் ஒளிமயமாகி விளங்குவதைக் காணலாம்.

**800. சுடருற ஓங்கிய ஒள்ளொளி ஆங்கே**
**படருறு காட்சிப் பகலவன் ஈசன்**
**அடருறு மாயையின் ஆரிருள் வீசில்**
**உடலுறு ஞானத் துறவிய னாமே. (2694)**

ஞான சூரியனான சிவபெருமான், சுடர்பொருந்தி ஓங்கி நிற்கும் ஒளி வடிவான ஒண்மையன். அவன் அடியவர்களின் அகநோக்கியே படர்ந்து விரிந்து காட்சி அளிக்கும் பகவலனும் ஆவான். அந்தப் படர் ஒளியினால், அடர்ந்துள்ள மாயையின் செறிந்த இருளை நீக்கிவிட்டால், உடலோடு கூடி இருந்தும் அந்த ஞான சாதகன் உள்ளத் துறவோனாக விளங்குவான்.

**801. தானே இருக்கும் அவற்றின் தலைவனும்**
**தானே இருக்கும் அவனென நண்ணிடும்**
**வானா இருக்கும் இம்மாயிரு ஞாலத்துப்**
**பான இருக்கும் பரவலு மாமே. (2697)**

வானுலகமும் அங்கிருக்கும் தேவர்களின் தலைவனுமான சிவபிரான், தானே தனித்து ஒப்புயர்வற்று விளங்கித் திகழ்வான். ஆன்மாக்களுக்கு முத்தியளிக்கும் நிலையிலே தன்னோடு ஐக்கியமாகச் செய்து நண்ணும் தனித்தன்மை வாய்ந்தவனாகவும் அவன் திகழ்வான். இந்தப் பெரிய உலகத்தில் அவன் எல்லையற்ற விண்ஒளியாகவும் திகழ்கின்றான். அத்தகையவன் நம்பரனாக உள்ளதால், நாம் பரவித் தொழுவோமாக. (பான் = பரன்)

## தூல பஞ்சாக்கரம்

802. ஒன்று கண்டேன் இவ்வுலகுக் கொருகனி
நன்று கண்டாய் அது நமசிவாயக் கனி
மென்று கண்டால் அது மெத்தின்றிருக்கும்
தின்று கண்டால் அது தித்திக்கும் தானன்றே. (2698)

இந்த உலகில் உள்ள ஆன்மாக்கள் உய்தியடையும்படியான ஒப்பற்ற கனி ஒன்றை நான் கண்டு கொண்டேன். அக்கனிதான் 'நமசிவாய' எனும் ஐந்தெழுத்துக் கனியாகும். அதுவே மிகவும் நலம் பயப்பது என்று அறிந்து கொள்க. மென்று காண்டலாம் யோகவழி செல்வார்க்கு அந்த ஐந்தெழுத்தும் மெத்தென மென்மைத்தன்மையாய் அமையும். தின்று காண்டலாம் சிவஞானியர்களுக்கு அது மிகவும் தித்தித்திருக்கும் தன்மையதாக அமைந்திருக்கும்.

803. கிரணங்கள் ஏழும் கிளர்ந்தெரி பொங்கி
கரணங்கள் விட்டுயிர் தானெழும் போது
மரணங்கை வைத்துஉயிர் மாற்றிடும் போதும்
அரணங்கை கூட்டுவது அஞ்செழுத் தாமே. (2702)

ஏழுவகை ஒளிக்கதிர்களால் ஆன வெண்ணிற எரி ஒளிபொங்கித், தலைஉச்சியின் மேல்ஒளிர் கருவிக் கூட்டங்களை விட்டு, உயிர் நீங்கிப் புறம் செல்ல எழும். அக்கால் மரணம் தன் கரத்தினால் தீண்டி நம் உயிரை உடலிலிருந்து மாற்றி அமைக்கச் செய்யும். அக்காலத்திலே. இந்த ஆன்மாவுக்கு அரணாகத் (பாது காவலாக) துணை நிற்பது ஐந்தெழுத்து மட்டுமே ஆகும்.

804. குருவழியாய குணங்களி னின்று
கருவழியாய கணக்கை யறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்கு
அருள்வழி காட்டுவது அஞ்செழுத் தாமே. (2705)

இறைவனே குருவடிவாக வந்து, உபதேசித்து தீட்சை அளித்து, ஆட்கொள்கிறான். அவன் காட்டிய அந்த ஒளி நெறியிலே நிலைத்து, கரவழி சென்றடைய ஏதுவான வினைகளை அறுத்து நீக்கி மீண்டும், இவ்வுலகிலே வரும்

வழியை மாறும்படிச் செய்து, அதைத் தடைச் செய்யும் திறன் உடையவர்களுக்கு அருள் நெறியைச் சுட்டிக் காட்டுவது ஐந்தெழுத்தாம் பஞ்சாட்சரமே.

**805. வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது**
**செறிக்கின்ற நந்தி திருஎழுத்து ஓதும்**
**குறிப்பது உன்னில் குரை கழல் கூட்டும்**
**குறிப்பறிவான் தவம்கோன் உருவாமே. (2706)**

உள்ளமானது தடுமாற்றம் அடைந்து போம்படி வினையால் மிக்க துயரம் உண்டான காலத்திலே நம் ஆன்மாவோடு செறிந்துள்ள சிவபிரானின் திருவைந் தெழுத்தையும் ஓதுக. அந்த ஓதுதலாம் தியானத்தை ஒரே குறிப்புடன் இடையறாது ஓதினால், சிவபிரான் தன் வீரக்கழல் ஒலிக்கும் திருவருட் சேவடியில் உம்மைக் கூட்டுவிப்பார். இவ்வண்ணமாக குறிப்பறிவான் செய்யும் தவமும் அவனைச் சிவரூபமாகச் செய்விக்கும்.

**806. நெஞ்சு நினைந்து தம் வாயாற் பிரானென்று**
**துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரணென்று**
**மஞ்சு தவழும் வடிவரை மீதுறை**
**அஞ்சில் இறைவன் அஞ்செழுத் தாமே. (2707)**

சிவபரம்பொருளை இடையறாமல் நெஞ்சிலே நினைத்தும் வாயால் எம்பிரானை அஞ்செழுத்தால் ஓதியும் வருபவர்களே தாம் உயிர் விடும் போது அச்சிவபிரானது இணையடிகளே துணை என்று மனதால் சிந்தித்து, வாயால் அவனே அடைக்கலம் என்று உச்சரித்தபடி மேகங்கள் தவழும், வடபால் விளங்கும், கயிலை நாதனைச் சேர்வர். இவ்வகையில் அஞ்செழுத்தினால் நினைத்தலும் உச்சரித்லும் இடையறாது செய்பவர்கள் இறைவன் அருளைப் பெறுவார்கள்.

## சூக்கும பஞ்சாக்கரம்

**807. எளியவாது செய்வார் எங்கள் ஈசனை,**
**ஒளியை உன்னி உருகு மனத் தராய்த்**
**தெளிய ஓதிச் சிவாய நம வென்னும்**
**குளிகையிட்டுப் பொன்னாக் குவன் கூட்டையே. (2709)**

பரம்பொருளாம் சிவபிரானை மிக எளியன் என்று கணித்து, அவன் சிறப்பியல்பினை அறியாதார் வாதம் செய்வார்கள். ஆனால் அவன் ஒளிமயமானவன், அருட்பெருஞ் ஜோதி ஆண்டவன், என்பதை நினைத்து நெஞ்சம் உருகிக் கசியும் மனத்தராய் உள்ளம் தெளிந்து 'சிவாய நம' என்று ஓதி ஓதி, தியானியுங்கள். அப்படித் தியானித்தால் ரசவாதக் குளிகையிட்டு - சத்திநிபாதம் செய்து - இந்த மும்மலக் கூட்டைப் பொன்னாக்கிச், சிவமயமாக்கி, ஆட்கொள்வான் சிவன்.

808. சிவன் சத்தி சீவன் செறுமல மாயை
அவம் சேர்ந்த பாசமல மைந் தகலச்
சிவன் சத்தி தன்னுடன் சீவனார் சேர
அவம் சேர்ந்த பாசம் அணுக இலாவே. (2710)

முன்சொன்னபடி 'சிவாயநம' எனும் பஞ்சாக்கர மந்திரம் ஓதுவதால் சிவனும் சத்தியும் ஜீவனும் வருத்துகின்ற மலமும், மாயையுமாம் ஐந்தையும் அவ்வைந்தெழுத்தும் உணரத்துவதால் (சி=சிவம்; வ = சத்தி, ய = ஜீவன்; (ஆன்மா) ந = மலம்; ம=மாயை) துன்பத்தைத்தரும் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம். திரோதாயி எனும் ஐம்மலங்களும் விலகும். பிறகு சிகர வகரத்தால் உணரத்தப்பெறும் சிவன் சத்தியுடன் ஆன்மா (யகரம் சேரத் துன்பத்தைத் தரும் பாசம் ஆன்மாவைப் பற்றாது விலகும்)

809. சிவனரு ளாய சிவன்திரு நாமம்
சிவன் அருள் ஆன்மா திரோத மலமாயை
சிவன் முதலாகச் சிறந்து திரோதம்
பவம தகன்று பரசிவனாமே. (2711)

சிவன் சத்தி வடிவாம் "சிவாயநம" என்னும் சிவனது திருநாமந்தான், சிவன், அருள், ஆன்மா, திரோதாயி, மல மாயை, ஆய இவ்வைந்தையும் தனித்தனியாகக் குறிக்கும். ஆன்மா சிகரத்தை முதலாக ஓதுகின்ற முறையினால், வினைகள் அனைத்தும் அது ஒழித்தலோடு பிறப்பு நீங்கி அந்த ஆன்மா பரசிவனாகும்.

## ஆதிசூக்கும பஞ்சாக்கரம்

810. அருள்தரும் ஆயமும் அத்தனும் தம்மில்
ஒருவனை ஈன்றவர் உன்னாதும் மாயை
திரிமல நீங்கிச் சிவாயவென் றோதும்
அருவினை தீர்ப்பதும் அவ்வெழுத் தாமே. (2714)

ஆன்மாக்களுக்கு அருளைப் பொழிந்து ஆட்கொள்ளவல்ல இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி, பராசத்தியுமாம் ஆயமும், பரசிவனும் கூடித் தம் கருணையினால் ஆன்மாக்கள் ஈடேற மனித இனத்தைத் தோற்றுவித்தனர். அவ்உடலோ மாயையில் பொருந்தி நிற்கும். ஆகையினாலே அவ்வான்மாவிலே அனாதியே கலந்துள்ள ஆணவம் கன்மம் மாயை எனும் மும்மலங்களும் விலகச், சிவாய என்று ஓதிய தியானம் செய்யுங்கள். விலக்கற்கரிய அருவினைகளாம் ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்துவம் இவைகளைத் தீர்ப்பதும் அவ்வெழுத்துக்களே ஆகும்.

811. சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவும் தேர்ந்துள் அடங்கும்
சிவசிவ வாய தெளிவின் னுள்ளார்க்குச்
சிவசிவ வாகும் திருவரு ளாமே. (2715)

தெளிவற்ற ஊமையர்கள் இந்தச் சிவசிவ என்னும் பஞ்சாக்கர மகாமந்திரத்தினை உச்சரித்து ஜெபிப்பதில் உள்ள நன்மையை அறிகிலர். சிவசிவ என்னும் மந்திர ஜெபத்தால் சுவாசமும் கட்டுப்பட்டு உள்ளடங்கி நிற்கும், இலயமடையும். இந்தச் சிவசிவ என்னும் ரேசக, பூரக, கும்பகத் தெளிவினை நன்கறிந்தவர்கள் திருவருள் வலத்தால் சிவன் சத்தியாகவே விளங்குவார்கள்.

812. சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே. (2716)

தீவினைப்பயன் காரணமாகவே பற்பலர் இந்தப் பிறவியில் 'சிவசிவ' என்னும் மகா மந்திர ஜெபம் செய்தல் இலர். அவர்கள் உண்மையை உணர்ந்து ஆன்ம ஞானம் கைவரப் பெற்று 'சிவசிவ' எனும் மந்திரத்தை உச்சரிக்கத் தொடங்கி விட்டால், அவர்கள் தீவினைகள் அனைத்தும் ஒழிந்துபோகும். பின் அவர்கள் தேவர்களது கதியையும் அடைதல் கூடும். அதற்கும் மேலாகப் பேரின்ப நிலையாம் சிவ சாயுச்சியமும் அடைவார்கள்.

**813. நமஎன்னும் நாமத்தை நாவில் ஒடுக்கி**
**சிவஎன்னும் நாமத்தைச் சிந்தையுள் ஏற்றப்**
**பவமது தீரும் பரிசும் அது அற்றால்**
**அவமதி தீரும் அறும் பிறப் பன்றோ. (2717)**

நம என்னும் இரண்டு எழுத்துக்களால், ஆன சொல்லை நாவின்கண் அடங்குமாறு ஒடுக்குதல் வேண்டும். சிவ எனும் சொல்லை சிந்தையுள் ஏற்றி அழுந்தப் பதித்தல் வேண்டும். (இடையில் உள்ள யகரத்தை மிடற்றிலே நிறுத்தல் வேண்டும்) இங்ஙனமாக ஐந்து எழுத்தினை ஓதி பயில்பவர்களுக்குப் பாவத்திலிருந்து விடுதலை கிடைக்கும். அப்பஞ்சாட்சர மந்திரத்தின் பரிசும் (பண்பும்) அதுவே. அவமதியாம் அஞ்ஞானம் நீங்கிவிடும். மாறி மாறிப் பிறந்திறந்து வரும் பிறவியும் நீங்கிப் போய்விடும்.

## அதிசூக்கும பஞ்சாட்சரம்

**314. சிவாய நம வெனச் சித்தம் ஒடுங்கி**
**அவாயம் அறவே அடிமைய தாக்கிச்**
**சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை**
**அவாயம் கெட நிற்க ஆனந்த மாமே. (2718)**

மேற்பாடலில் சொன்னபடி சிவாயநம என சித்தத்தை சிவன்பால் ஒடுக்கி, மும்மலங்களாலாம் துன்பங்களை, நீக்கி, தன்னைச் சிவத்திற்கு அடிமையாக்கி, சிவாய, சிவசிவ, என்றே பலமுறை திரும்பத் திரும்பச் சித்தத்திலே இடையறாது தியானித்து நிற்க, பேரபாயமாம் பிறவி நோய் நீங்கும். அதனால் பேரின்பப் பெருவாழ்வாம் வீட்டின்பமும் கிட்டும்.

ஆ-22.

815. அங்கமும் ஆகம வேதம தோதினும்
எங்கள் பிரான் எழுத்தொன்றில் இருப்பது
சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையும் சாதித்தால்
அங்கரை சேர்ந்த அருங்கல மாமே. (2720)

வேதங்களலாகும் ஆறுவகைப்பட்ட துறைகளையும் ஆகமங்களையும், வேதங்களையும், முறையாகக்கற்று ஓதினாலும், (இவையனைத்துமே பசு ஞான நூல்கள்) பயனில. இவையாவும் எங்கள் தலைவன் சிவபிரானின் முதல் எழுத்தாகிய அதிசூக்குமமாகிய 'சி' என்பதிலே அடங்கிக் கிடப்பனவாம். சந்தேகமற அந்த ஓரெழுத்தாகிய அதிசூக்கும பஞ்சாட்சரத்தைச் சாதனை செய்தால் பிறவிப் பெருங்கடலின் அக்கரை சேரும் அழகிய தோணியாக இவ்வுடல் திகழும்.

816. பழுத்தன ஐந்தும் பழமறையுள்ளே
விழித்தங்கு உறங்கும் வினையறிவார் இல்லை
எழுத்தறி வோம் என்றுரைப்பார்கள் ஏதர்
எழுத்தை யழுத்தும் எழுத்தறி யாரே. (2721)

மிக்கத் தொன்மையான வேதங்களின் உச்சியிலே பழுத்துள்ளது ஐந்தெழுத்தாம் பஞ்சாக்கரம். இந்தப் பஞ்சாக்கரக் கனியை நாமற்று நம் செயலற்று, எல்லாம் சிவன் செயலென்று நின்று, நாடுதலாம் விழித்துறங்கும் அறிதுயிலால் நாடல் வேண்டும். (விழித்தங்கு உறங்கும் நிலையையே தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுதல் என்று கூறுவர்) இப்படி அறிதுயிலால் நாடும் செயலை அறிவார் இல்லை. ஆனால் மூடர்களோ இந்த எழுத்துக்களை - ஐந்தெழுத்துக்களை - அம்மகா மந்திரத்தின் மகிமையை அறியாமல், நாம் நன்கு அறிவோம் என்று கூறுவார்கள். இந்தப் பஞ்சாக்கர மந்திரந்தான் நம் தலைஎழுத்தை யழுத்தி விடும் படைக்கலமாகும். இதனை அவர்கள் அறியார்கள்.

## திருக்கூத்துத் தரிசனம்

817. எங்கும் திருமேனி எங்கும் சிவசத்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருப்பதால் எங்கெங்கும்
தங்கும் சிவனருள் தன்விளை யாட்டதே. (2772)

பரம்பொருளாம் பரசிவன் திருமேனி அகண்டமாய் உலகனைத்தும் பரந்துள்ளது. அதைப்போலவே அவனது திருவருட் சத்தியும் எங்கணும் வியாபித்துள்ளது. அவனது திருக்கூத்து நடைபெறுவது சித் அம்பரத்திலே; அதாவது அறிவாகாத்திலே; அச்சிதம்பரத்திலே அவன் நடமிடுகின்றான். இம்முறையிலே அச்சிவபரம்பொருள் எல்லாவிடத்தும் நீக்கமற நிறைந்திருப்பதால், அச்சிவன் யாவற்றிலும் பொருந்தி சிவனருளாம் சத்தியால், தன் திருவிளையாடலாக ஐந்தொழிலையும் செய்கிறான்.

**818. சிற்பரஞ்சோதி சிவானந்தக் கூத்தனை**
**சொற்பதமாம் அந்தச் சுந்தரக் கூத்தனை**
**பொற்பதிக் கூத்தனை பொன்தில்லைக் கூத்தனை**
**அற்புதக் கூத்தனை யாரறி வாறே. (2723)**

சித் + பரஞ் + ஜோதி அதாவது அறிவு வடிவான ஜோதிப்பிழம்பான சிவபெருமான் ஆடுகின்றான். அவன் சிவானந்தக் கூத்தன். சொல்லும் பொருளுமாகி விளங்கும் பிரணவ சொரூபமான அவன் சுந்தரக் கூத்தன். அதோடு அவன் பொற்பதிக் கூத்தன் (ஆகாயத்திலே பொன்னொளியிலே விளங்கும் கூத்தன்) அழகிய தில்லையம்பலத்திலே ஆடும் கூத்தன். அவன் அற்புதக்கூத்தன் அவனை யாரால் அறிதற்கியலும்? இறைவன் நடனம் ஐவகைப்படும் என்று இம்மந்திரம் கூறுகிறது.

## 1. சிவானந்தக் கூத்து

**819. தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்**
**தேனுந்தும் ஆனந்த மாநடம் கண்டீர்**
**ஞானங்கடந்து நடம்செயும் நம்பிக் கங்கு**
**ஆனந்தக் கூத்தாட ஆடரங் கானதே. (2724)**

தனக்கு ஒரு முடிவே இல்டலாத ஒப்பிலா இன்ப வடிவான திருவருட் சத்தியை இடமாகக் கொண்டு, இன்பத் தேனை பிலிற்றும், ஆனந்தத்தினை நல்கும், மகத்தான நடனத்தைக் கண்டவர்களே! ஞானநிலை அனைத்தையும் கடந்து விளங்கும் நடனத்தைச் செய்கின்ற நம்பியாகிய சிவபிரானுக்கு அவ்விடமே ஆனந்தத் திருக்கூத்து ஆடுவதற்கு இடமானதே.

**820.** **ஆனந்தம் ஆடரங்கு ஆனந்தம் பாடல்கள்**
**ஆனந்தம் பல்லியம் ஆனந்த வாச்சியம்**
**ஆனந்தமாக அகில சரா சரம்**
**ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே. (2725)**

இறைவன் திருக்கூத்து ஆடுகிறான். அவன் ஆடும் அரங்கும் இன்ப நிலையாகும். அங்குப் பாடப்படும் பாடல்களும் பண்களும் ஆனந்தமளிக்கும் இசையாகும். அங்கு இசைக்கப்படும் பல்வகை இசைக்கருவிகளும் வாத்தியங்களும் ஆனந்தமய மானவைகளே. ஆனந்தமாம் அரங்கத்திலே நடிக்கும் சிவபிரானுக்கு அசைவனவும் அசையாதனவுமான அகில உலகமும், ஆனந்த மயமே ஆகும்.

**821.** **ஒளியாம் பரமும் உளதாம் பரமும்**
**அளியார் சிவகாமி யாடும் சமயக்**
**களியார் பரமும் கருதுறை யந்தத்**
**தெளிவாம் சிவானந்த நட்டத்தின் சித்தியே. (2726)**

பேரொளிப் பிழம்பு வடிவினனான பரமான்மாவும் என்றும் உளதாய சிற்றான்மாவும் (உயிரும்) உயிர்மாட்டு அருள்பாலிக்கும் சிவகாமி என்று போற்றப்படும் ஆனந்தமான பரமமும் ஆய இம்மூன்றும் பொருந்தி கருத்திலே உறைகின்ற ஆனந்தத் தெளிவின் எல்லையே சிவானந்த நடனத்தின் பயனாகும். (இம்மூன்றும் இணைந்து விளங்குவதே சிவானந்தக் கூத்தின் பயனாகும்)

**822.** **ஆன நடமைந்து அகள சகளத்தர்**
**ஆன நடமாடி ஐங்கரு மத்தாக**
**ஆன தொழில் அருளால் ஐந்தொழிற் செய்தே**
**தேன்மொழி பாகன் திருநட மாடுமே. (2727)**

அருவமாக - உருவமற்றுள்ள - எம்பெருமான் ஆன்மாக்களின் உய்திக்காக (உருவம்) அருளுருவம் கொண்டு ஆடுகின்ற நடனம் ஐவகைத்தாம். இவை படைப்பாதி ஐந்தொழில்களுக்காகவே தன் தொழில் அருளால் (அருட்சத்தியால்) ஐந்தொழிலையும் செய்து; தேன்போன்ற மொழியபயிலும் உமாதேவியின் பாகன் திருநடம் செய்கின்றான்.

823. வேதங்கள் ஆட மிக ஆகமம் ஆட
கீதங்கள் ஆடக்கிளர் அண்டம் ஏழாடப்
பூதங்கள் ஆட புவனம் முழுதாட
நாதங்கொண் டாடினான் ஞானானந்தக் கூத்தே.(2729)

நான்கு மறைகளும் இயங்குதலைச் செய்ய, (தொழிற்பட) உயர்ந்த சிவாகமங்களும் இயங்குதலைச் செய்ய, பண் முதலிய கீதங்களும் இசை எழுப்பி இயங்க, விளங்குகின்ற ஏழு இருநூற்று இருபத்து நான்கு உலகங்கள் முழுவதும் இயங்கிச் செயற்பட, முப்பத்தாறாம் மெய்யாகிய நாத தத்துவத்தை, இடனாகக் கொண்டு இறைவனாம் சிவபிரான் ஞானத்தின் எல்லையிலே நடனமாடினான்.

824. பூதங்கள் ஐந்தில் பொறியில் புலனைந்தில்
வேதங்கள் ஐந்தில் மிக ஆகமந் தன்னில்
ஓதும் கலைகாலம் ஊழியுடன் அண்டப்
போதங்கள் ஐந்தில் புதைந்தாடும் சித்தனே. (2730)

ஆன்மா நுகர்கின்ற புலன் நுகர்ச்சிக்குக் காரணமான ஐம்பூதங்களிலும், ஐம்பொறிகளிலும் ஐந்து புலன்களிலும் ஐந்து வேதங்களிலும், மிக்குயர்ந்த ஆகமங்களிலும், பேசப்படுகின்ற கலை, காலம், ஊழி, அண்டம், போதம் ஆகிய ஐந்திலும் பொருந்தி நின்று ஞானானந்தக் கூத்தாடுகின்றவன் சிவபிரானாகும். (வேதம் நான்கு; இங்கு பாரதத்தையும் சேர்த்து ஐந்தாக்கினார்)

825. தேவர், சுரர், நரர் சித்தர் வித்யாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயம் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே. (2731)

தேவர்கள், சுரர்கள், மக்கட் பிறபெய்தியவர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், மூவர்கள் (12 ஆதித்தர், 11 உருத்திரர், 8 வசுக்கள், 2 மருத்துவர்) ஆக முப்பத்து மூவர், முனிவர்கள் தவசிகள், சமயத்தைச் சார்ந்தவர்கள், சரமும் அசரமுமாம் இவ்வுலகம், இவை யாவும் எம் இறையாம்

சிவபிரான் திருக்கூத்தினாலேயே புடை பெயர்ந்து இயங்கி நடமாடும்.

*12. ஆதித்தர்:-* தாத்ரு, சக்கரன், அரியமன், மித்திரன் வருணன், அஞ்சுமான், இரண்யம், பகன், திவச் சுவான்.

*11 உருத்திரர்:-* மாதவன், சிதன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, செளமியன்.

*8 வசுக்கள் :-* அனலன், அணிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரதியூசன், பிரபாகரன்.

*2 மருத்துவர் :-* அசுவினித் தேவர்.

*7 முனிவர் :-* அத்திரிஅ அங்கீரசன், கௌதமன் சமத்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன்.

### சுந்தரக் கூத்து

**826. அண்டங்கள் ஏழினுக்கு அப்புறத்தப்பால்**
**உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேல்**
**கண்டங் கரியான் கருணைத் திருவுரு**
**கொண்டங்கு உமைகாண கூத்துகந் தானே. (2732)**

ஏழு அண்டங்களுக்கு அப்பாலுக்கு அப்பாலாய், உண்டு என்று ஓதப்படுகின்ற சத்தியாம் திருவருள் சதா சிவத்துவம், அல்லது சதாக்கியத் தத்துவத்தின், உச்சியின் மேல் விளங்கும் அச்சத்தியின் இடமாகக் கண்டங் கரியனாய், கருணையே திருவுருவாகக் கொண்டு அங்கு உமையம்மை கண்டு களிக்கத் தன் சுந்தரக் கூத்தை விரும்பி ஆடுகிறான் பராபரனாம் பரசிவன்.

**827. பரமாண் டத்தூடே பராசத்தி பாதம்**
**பரமாண்டத் தூடே படரொளி ஈசன்**
**பரமாண்டத் தூடே படர்தரு நாதம்**
**பரமாண்டத் தூடே பரன்நட மாடுமே. (2734)**

பரமாண்டம் என்று சொல்லப்படும் சகல அண்டங்களையும் கடந்து மேலான அண்ட கோசத்தின் உச்சியில் பராசத்தியின் பாதம் உள்ளது. அவ்வண்டத்தினூடே பேரொளிப் பிழம்பாம் சிவபிரான் விளங்குவான். அங்கேதான் படர்ந்துள்ள ஓசை மெய்யாம் நாதம் விளங்கும். அப்பரமாண்டத்தூடே தான் இறைவனாம் சிவபிரான் நடமாடுகின்றான்.

## பொற்பதிக் கூத்து

828. அடங்காத என்னை அடக்கி அடிவைத்து
இடங்காண் பரானந்தத் தேஎன்னை விட்டு
நடந்தான் செயும் நந்தி நன் ஞானக் கூத்தன்
படந்தான் செய்து உள்ளுள் படிந்திருந் தானே. (2741)

இந்திரிய வயமாக்கி உள்ளம் அடங்கப் பெறாதிருந்த என்னை அடங்கும் படியாகத் தன் திருவடியை என்தலைமேல் வைத்து, என் ஆன்ம சத்தியைப் பெருக்கும் ஒளியை நல்கி, செல்ல வேண்டிய இடத்தைக் காணும் பரமானந்தத்தே என்னை வைத்து, என் உணர்விலே, தன்னேரில்லாத் திருக்கூத்தை ஆடுகிறான் நந்திப் பிரான். அவனே ஞானக் கூத்தன். அவன் என்னைச் சித்திரப் பாவை போல அத்தகு நிட்டையில் அடக்கி, என் உணர்விலே படிந்திருந்தான்.

829. உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனை
செம்பொற் திருமன்றுள் சேவகக் கூத்தனை
சம்பந்தக் கூத்தனை தற்பரக் கூத்தனை
இன்புற நாடி என் அன்பில் வைத்தேனே. (2742)

அகன்ற பரவெளியிலே நடனம் செய்யும் கூத்தப்பிரானை, உத்தம குணம் வாய்ந்த சிவனடியார் உளத்தே கூத்தியற்றுபவனை, சிவந்த பொன்னம்பலமாம் திருமன்றத்திலே நடனம் செய்யும் அம்பலக் கூத்தனை, ஆன்மாக்களைத் தன்னோடு தொடர்பு கொள்ளும்படிச் செய்யும் கூத்தப் பிரானை, தற்பரம் எனும் மேலான பரம்பொருள் ஆடிடும் சிவதாண்டவக் கூத்தனை நான் இடையறா இன்பம் பெறவேண்டி, என் அன்பிலே வைத்தேன்.

830. விம்மும் வெருவும் விழும் எழும் மெய்சோரும்
தம்மையும் தாம் அறியார்கள் சதுர் கெடும்
செம்மை சிறந்த திருஅம்பலக் கூத்துள்
அம்மலர்ப் பொற்பாதத் தன்பு வைப்பார் கட்கே. (2744)

நன்மையில் ஓங்கிய திரு அம்பலத்திலே நடனம் செய்யும் சிவபிரானது அழகிய மலர் போன்ற பொற்பாதத் திடத்தே அன்பு வைத்து பத்தியில் மூழ்கிக் கிடப்பவர்கட்குப், பத்திப் பெருக்கால் விம்மிதம் உண்டாகும். பயத்தோடு கலந்த பத்திமேலிடும். தரையிலே விழ்ந்து வணங்கும். பின் எழும். உடல் சோர்வெய்தும். தம்மை மறந்து தாம் யார் எனும் நினைவு அற்றுப்போகும். அவர்கள் சதுரப்பாடும் (சாமார்த்தியம்) கெட்டொழியும்.

## பொற்றில்லைக் கூத்து

831. ஆதிபரனாட அங்கைக் கனலாட
ஓதும் சடையாட உன்மத்தம் உற்றாட
பாதி மதியாடப் பாராண்ட மீதாட
நாத மோடாடினான் நாதாந்த நட்டமே. (2751)

ஆதியாம் பராபரன் சிவன் தன் திரு நடனத்தை ஆட, தன் அழகிய கையிலே ஏந்திய கனலாட, பத்தர்களால் போற்றிப் புகழப்படும் அவன் செஞ்சடை ஆடிட, அச்சடையிலே சூடிய உன்மத்தம் (ஊமத்த) மலரும் ஆடிட, அவன் திருச்சடையிலே திகழும் பாதி மதியாம் பிறைச்சந்திரனும் ஆடிட, நில அண்ட கோளமேல் அவன் ஆடிட, நாதாந்தத்தின் கண்ணே நின்றாடினான் சிவபிரான். இது நாதாந்த நடனமாகும்.

832. நாதாந்தினில் ஆடி நாற்பதத்தே யாடி
வேதத்திலாடித் தழலந்தம் மீதாடி
போதத்திலாடி புவன முழுதாடும்
நீதற்ற தேவாதி தேவர் பிரானே. (2756)

நீதற்ற தேவாதி தேவப்பிரானாம் சிவபிரான், நாதத் தொனியிலே திருநடம் செய்து, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பதங்களிலேயும் ஆடி வேதங்களிலே திருநடம் செய்து, அக்கினிகலையின் உச்சியிலே நின்று ஆடி,

ஆன்மாக்களின், சிவஞானத்தின் கண்ணேயும் உலகெலாம் நின்றாடி அருள் செய்கின்றான். அச்சிவனே முழுமுதல் சிவபிரான் என்க.

833. அம்பலம் ஆடரங்காக அதன்மீதே
எம்பரன் ஆடும் இருதாளின் ஈரொளி
உம்பரமாம் ஐந்து நாதத்து ரேகையுள்
தம்பத மாய் நின்றுத் தான்வந் தருளுமே. (2759)

திருச்சிற்றம்பலமே, தான் நடமாடும் அரங்காகக் கொண்டு அதனிடத்தே எம்பெருமான் திருநடம்செய்கிறான். அவன் நடம் செய்யும் இருதாள்களிலிருந்து இரு ஒளிகள் ஒளிர்கின்றன. அவை அபரஞானமும் பரஞானமும் ஆம். மேலோங்கி ஒளிரும் ஐவகை நாதத்தின் ரேகையுள்ளே, பொருந்தி தம்பதமாகிய தன்நிலையிலே இருந்து, சிவபிரான் தான் வந்து ஆன்மாக்களுக்கு அருள் செய்வான்.

## அற்புதக் கூத்து

834. தீமுதல் ஐந்தும் திசைஎட்டும் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக் கப்புறம் ஆனந்தம்
மாயை மாமாயை கடந்து நின்றான் காண
நாயகன் நின்று நடம்செய்யு மாறன்றே. (2766)

தீமுதல் ஐந்து பூதங்களும் எட்டு திசையும், மேலும் கீழும் ஆய்கின்ற ஆன்மாக்களின் அறிவினுக்கு அப்புறமாக் காணப்படுவது திருவடிப் பேரின்பம். அசுத்த மாயை, சுத்த மாயை எனப்படும் மாயை மாமாயை கடந்து நின்றவர் மெய்யுணர்வினர், தமது ஞானக் கண்களால் காணுமாறு ஆருயிர்களின் தலைவன், நீக்கமற நின்று நடஞ் செய்கிறான்.

835. இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொண்டு நின்ற இப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலும் தாமாய் நின்றாடுகின் றாரே. (2768)

சிவபெருமானின் இடப் பாகத்தைக் கொண்ட சத்தியும் எந்தை பிரானாகிய சிவபெருமானும் இணைந்து திருநடம்

புரியும் சிரினை நானும் அறிந்தேன். ஆணவ மலத்தால் திரையிட்டு மறைத்தலைக் கொண்ட பற்பல ஆன்மாக்களுக் கெல்லாம் அம்மலமறைப்பு நீங்க அண்டங்கள் அனைத்துமே, தாமாக நின்றாடுகின்றார் எம்பெருமான் சிவபிரான்.

836. அம்பல மாவது அகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத் தீ மண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாமே. (2775)

உலகனைத்தும் காணப்படும் இயங்குதிணை நிலத்திணைப் பொருள்கள் யாவுமே சிவபிரான் திருக்கூத்தியற்றும் திருவம்பலமே ஆகும். ஆதியு மந்தமும் இல்லாது ஆதிப்பிரானாம் சிவபிரானது திருவடியே திருவம்பலமாகும். நீர், தீ, முதலிய மண்டலங்களும் இறைவன் நடமிடும் திருவம்பலமே. (இனம் பற்றி பிற மூன்று பூதங்களையும் கொள்க) மற்றும் மெய்ம்மை நிறை அம்பலமாக விளங்குவது இறைவன் தன் அஞ்செழுத்தாம் பஞ்சாட்சரமே ஆகும்.

837. புளிக் கண்டவர்க்குப் புனலூறு மாபோல்
களிக்கும் திருக்கூத்து கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்.
ஒளிக்கும் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே. (2778)

புளியைத் தம் கண்களால் கண்டவுடனே கண்டவர்கள் நாவிலே தண்ணீர் சுரப்பது இயல்பு. அதுபோல உளத்துக்கு ஆனந்தத்தைத் தரும் சிவபிரானின் திருக்கூத்தை கண்டவர்களுக்கு எல்லாம் இன்பக் கண்ணீர், முத்து முத்தாய் அரும்பும். நெஞ்சமானது தளர்வெய்தி உருகி நிற்கும். உள்ளத்திடத்தே உணர்கின்ற ஒளியிலே ஆனந்தத்தைப் பெருக்கி நிற்பான் சிவபரம்பொருள்.

838. தத்துவம் ஆடச் சதாசிவம் தானாடச்
சித்தமும் ஆடச்சிவ சித்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறை யாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே. (2789)

சிவானந்த நடனத்தால் தத்துவங்கள் அனைத்தும் ஆடின. விந்து ரூபமான பஞ்ச மூர்த்திகளுள் ஒருவராம் சதாசிவ மூர்த்தியும் ஆடினார். அனைத்துயிர்களின் சித்தமும் ஆடல் புரிந்தன. சிவசத்தியும் உடன் தானாட, மற்றும் உலகனைத்தும் நான்கு மறைகளும் ஆட, அத்தனாகிய சிவபிரானும் ஆனந்தக் கூத்தினை ஆடுகின்றனன்.

**839. நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்**
**வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவா னந்தமும்**
**தாதற்ற நல்ல சதாசிவ னந்தத்து**
**நாதப் பிரம்மம் சிவநட மாமே. (2792)**

நாதமாகிய ஒலியின் முடிவும் நாற்போதமாம் சரியை, கிரியை, யோகம் ஞானமாம் இவைகளின் முடிவும். வேதங்களின் முடிவாம் வேதாந்தமும், உண்மையான சிவானந்தத்தை அளிக்கும் சித்தாந்த முடிவும், குற்றமற்ற நல்ல சதாசிவானந்தத்து நாதப் பிரம்மமாகிய 'ஓம்' என்னும் ஒலியே சிவநடமாம்.

**840. சிவமாதி ஐவர் திண் டாட்டமும் தீரத்**
**தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்**
**தவமாம் பரனெங்கும் தானாக ஆடும்**
**தவமாம் சிவானந்தத் தோர் ஞானக் கூத்தே. (2793)**

சிவத்தினை முதலாகக் கொண்ட சிவம், சத்தி, சதாசிவம், ஈச்சுரம் , சுத்தவித்தை எனும் நிலைகளில் உள்ள ஐவர், ஆன்மாக்கள் உய்தி பெறச் செய்யும் உழைப்பாம் திண்டாட்டம் தீர்ந்து விடும்படி, தவம் மேற்கொண்டொழுகும் பசுக்களது பாசம் அவர்களைவிட்டு நீங்கித் தனித்தேகத், தவமே தனிவடிவாகக் கொண்டுள்ள பரம்பொருளாம் பரசிவன் தன் பேரருள் ஒரு தானாக ஆடி அருள்வான். இக்கூத்தே தவவடிவமானது. சிவானந்தத் தேன் பருகுவோர் நுகரும் திருவடி ஞானத் திருக் கூத்தாகும்.

**841. ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலார்**
**ஆனந்தம் மாநடம் ஆரும் அறிகிலார்**
**ஆனந்த மாநடம் ஆரும் அறிந்தபின்**
**தானந்தம் அற்றிடம் ஆனந்த மாமே. (2796)**

சிவானந்தப் பேறு அடையாத அறிவிலிகள் ஆனந்தம் ஆனந்தம் என்று வெறுமனே கூறுவார்கள். அவர்களுள் சிவபிரானின் ஆனந்த மயமான பெருமை மிக்க நடனத்தை ஒருவன் உண்மையாக அறிந்து கொண்டானானால் தான் என்னும் அகங்காரம் நீங்கும். நீங்கவே ஆன்மாவின் தத்துவக் கூட்டுறவு முடியும். அந்த இடமே திருவடிப் பேரின்ப மாகும்.

**842. அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்**
**அரன் அங்கி தன்னில் அறையில் சங்காரம்**
**அரன் உற் றணைப்பில் அமரும் திரோதாயி**
**அரனடி என்றும் அனுக்கிரகம் என்னே. (2799)**

யாவற்றையும் ஒடுக்கி அருளும் சிவபிரான் தன் உடுக்கையால் தோற்றத்தினையும் (படைப்பையும்) அபயகரத்தால் காத்தல் தொழிலையும், தன்னுடைய நெருப்பேந்திய திருக்கரத்தால் சங்காரத்தையும், தன் ஊன்றிய திருவடியால் திரோதாயியாம் மறைத்தலையும், தூக்கிய திருவடியால் அனுக்கிரகமும் செய்தருள்வான். அவன் திருநடனத்தின் தன்மை இது.

**843. நந்தியை எந்தையை ஞானத் தலைவனை**
**மந்திர மொன்றுள் மருவி அது கடந்து**
**அந்தர வானத்தின் அப்புறத் தப்பர**
**சுந்தரக் கூத்தனை என் சொல்லு மாறே. (2801)**

நந்தி எம்பெருமானாம் முழுமுதலை, எனது தந்தையை, ஞான சற்குருவை, ஒப்பில்லாத 'ஓம்' என்னும் பிரணவ மந்திரத்துள்ளே பொருந்தி, அதையும் கடந்து அந்தர வானமாம் துவாத சாந்தப் பெருவெளியில் நடமிடும் அந்தச் சுந்தரக் கூத்தனை, இத்தன்மையன் எனக் சொல்லும் தகைமை உண்டோ? இல்லை. ஏனெனில் அவன் மனவாக்குக் கெட்டாத தூரமாய் நிற்பவன்.

**844. தானான சத்தியும் தற்பரையுமாய் நிற்கும்**
**தானாம் பரற்கும் உயிர்க்கும் தகுமிச்சை**
**ஞானாதி பேதம் நடத்து நடித்தருள்**
**ஆனால் அரனடி வேத்த தாமே. (2803)**

சிவமே தானாகி, அபின்னமாய் நிற்கும். சத்தியே பராசத்தியாய் நிற்கும். அப்பராசத்தியே ஒப்பற்ற தனி முதலாய் விளங்கும். பரனுக்கும் ஆன்மாக்களுக்கும் தொடர்பினை உண்டாக்கி ஆன்மாக்களை உய்விக்கும். அதுவே ஆன்மாக்களிடத்து, இச்சை ஞானம் கிரியையாகப் பொருந்தி நின்று பக்குவப் படுத்தும். அச்சத்தியே திருவருட் கூத்தையும் திறம்பட நடிக்கும். இங்ஙனம் பரையால் ஆன்மா பக்குவப் படுத்தப்பட்டு சத்திநி பாதம் அடைந்தபின் அவ்வான்மா பரசிவனிடம் அன்பினால் ஒன்றி, வீடு பேறெய்தும்.

## ஆகாசப் பேறு

**845. உள்ளத்துள் ஓமென ஈசன் ஒருவனை**
**உள்ளத்துள்ளே யக்கி யாய ஒருவனை**
**உள்ளத்துளே நீதியாய ஒருவனை**
**உள்ளத்துள்ளே உடல் ஆகாய மாமே. (2804)**

ஆருயிர்களின் மன மண்டலத்திலே 'ஓம், ஓம்' என்று ஓயாது உச்சரிப்பவர்களின் உள்ளத்திலே நிற்கும் ஈசனை, அவர்களின் உள்ளத்துள்ளே பேரொளிப் பிழம்பாக பிரகாசிக்கும் ஒப்பற்றவனை, அவர்கள் உள்ளத்துலே நீதி மயமாய் நிற்கும் ஒருவனை, யார் உள்ளத்துள் அடைத்துள்ளனரோ அவர்கள் உடலே அவன் உள்ளத்துள் திகழ்கின்றமையால் அறிவு வெளியாக விளங்கும்.

**846. அறிவுக் கறிவாம் அகண்ட ஒளியும்**
**பிறியா வலத்தினில் பேரொளி மூன்றும்**
**அறியா நடக்கிடில் அந்தன் அடிக்குள்**
**பிறியா திருக்கின்ற பெருங்கால மாமே. (2808)**

அறிவுக்கு அறிவாகி அதாவது சரியை, கிரியை, யோகம் ஞானம் எனும் நான்கிலே - ஞானத்தில் ஞானமாகிய எல்லையற்ற பேரொளி உண்டு. அந்தச் சிவ ஒளியில், அதை விட்டு நீங்காத பேரொளிகள் மூன்றாம். அவை அண்ட ஒளி, அகண்ட ஒளி, பிண்ட ஒளி என்ப. இம்மூன்றையும் தோன்றாவாறு சிவனாம் அகண்ட ஒளியின் நினைவிலே சிந்தையைச் செலுத்தி அடங்கி நின்றால், அத்தனாம்

சிவபெருமான் திருவடிக்குள்ளே ஒன்றி, பெருங்காலமாம் கற்பகாலம் வரை பிரியாதிருக்கின்ற பேற்றினை எய்தலாம்.

**847. பரத்துளா காசம் புவனம் உலகம்
அகத்துளா காசம் எம்ஆதி அறிவு
சிவத்துளா காசம் செழுஞ் சுடர்ச்சோதி
சகத்துளா காசத்தின் தானம் சமாதியே. (2812)**

வெளியே நம் கண்களுக்குப் புலப்படும் அகாயமாம் விண்வெளி, பூதாகயமாம், குணமல ஆகாயம், குணரகித ஆகாயம், சூரியாகாயம், சிதாகாயம் எனும் ஐவகை ஆகாய வெளிகளும் இருநூற்று இருபத்தி நான்கு புவனங்களையும் தாங்கும் ஆகாயமாம். ஆன்மாக்களின் அகத்திலே காணப்படும் ஆகாசமானது ஆன்மாக்களின் ஆதியைப்பற்றிய அறிவாம். சிவஞானமே சித்துள ஆகாசமாகும். அது அவனது செழுமையான ஜோதி வடிவமாகும். உலகில் உள்ள ஆன்மாக்களுக்கும் சமாதி நிலையே ஆகும்.

(தானம் + சமாதி = தானம் சமாதியே, தானம் = ஸ்தானம்= இடம்)

## ஞானோதயம்

**848. விளக்கைப் பிளந்து விளக்கினை ஏற்றி
விளக்கினுள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே. (2816)**

தத்துவங்களின் ஒளியினின்றும் ஆன்ம ஒளியை வேறுபடுத்திச் சிவ ஒளி பரவும்படிச் செய்து, சிவ ஒளிக்குள் ஜீவ ஒளி விளங்கும்படிச் செய்து, சிவபிரானின் அகண்ட ஒளியிலே தம் ஜீவ ஒளி அடங்கக் காணும் திறமுடையவர்கள் ஒளிக்கு ஒளியாக உள்வார்களாய் சிவபிரானின் கழலிணைகளைப் பொருந்திப் பேரின்பப் பெருவாழ்வடைதலும் உண்டு.

849. தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை
தத்தவ ஞானத்தின் தன்மை அறிந்தபின்
தத்தவன் அங்கே தலைப்படும் தானே. (2817)

தத்துவங்களின் உணமைத் தன்மை: - அவை காரியப் பொருள், அறிவில்லன், மாயையினின்றும் படைக்கப் பட்டவை. இவை அவன்தன் உடைமை. தோன்றி மறையும் தன்மைய என்பனவாம் இத் தன்மைகளை ஆன்மா ஓர்ந்து உணரும் காலத்தில் தத்துவனாய்ச் சிவபிரானும் அங்குத் தோன்றியருள்வான். இப்படிப்பட்ட தத்துவ விசாரணை எங்கில்லையோ அங்கே தத்துவனான சிவபிரானும் தோன்றுதல் இலன். தத்துவ ஞானத்தினால் தான்யார் என்று உண்மையை உணர்ந்த பின்னர்த் தத்துவனான இறைவன் அங்கே தோன்றி அருள்வான்.

850. ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி
ஞானத்தின் நன்னெறி நான் எற்றறிவோர்தல்
ஞானத்தின் நல்யோக நன்னிலையே நிற்றல்
ஞானத்தின் நல்மோனம் நாதாந்த வேதமே (2821)

நாத தத்துவங்கடந்த நல் நெறியே ஞானத்தினது நல்ல நெறியாகும். அதாவது அது ஞானத்தின் ஞானமாம் முதிர்ந்த நிலை. ஞானத்தின் நல்ல நெறியாவது நான்யார் என்னும் விசாரணையினால், நான் என்ற முனைப்பற்று சிவஞானமாய அறிவினை ஆய்ந்து தெளிந்து சிந்தித்தலே. ஞானத்தில் நல் யோக மாவது சீவபோதத்தினை ஒழித்து சிவபோதத்திலே அடங்குதலாம். நல்ல நிலையில் நிற்றல். ஞானத்தின் ஞானமாகிய நல்ல மோன நிலையிலே, பிரணவப் பொருளை உணர்ந்து நாதாந்தத்திலே நிலை பெறுதலாம்.

851. உய்ய வல்லார் கட்கு உயிர்சிவ ஞானமே
உய்ய வல்லார்கட்கு உயிர்சிவ தெய்வமே
உய்ய வல்லார்கட்கு ஒடுக்கம் பிரணவம்
உய்ய வல்லார் அறிவு உள்ளறிவாமே (2822)

பிறப்பிறப்பென்னும் இருமையினின்றும் நீங்கி, வீடுபேறு என்னும் உய்தி அடைய வல்லார்களுக்கு உயிர்போன்று இன்றியமையாதது சிவஞானம் ஒன்றே யாகும். அவர்கட்கு உயிரினும் உயிராய் விளங்குவது சிவமாம் பரம் பொருளே. அவர்கட்கு ஒடுங்கும் இடமாவது பிரணவமாம் 'ஓம்' என்பதே. உய்யவல்லார் அறிவு மெய்ப் பொருளாம் சிவத்தைச் சார்ந்துள்ளமையால், அவர்களது அறிவே உள்ளறிவாம் சிவனை உணரும் மாறுதலற்ற அறிவாகும்.

### சத்திய ஞானானந்தம்

852. மத்திமம் ஆறாறு மாற்றி மல நீங்கிச்
சுத்தம தாகும் துரியத் துரிசற்றுப்
பெத்தமறச் சிவமாகிப் பிறழ்வுற்றுச்
சத்திய ஞானானந்தம் சார்ந்தனன் ஞானியே (2333)

உள்நிலைக் கருவிகளான முப்பத்தாறு தத்துவங்களையும் விட்டு மும்மலங்களிலிருந்து நீங்கி, சுத்தமான துரிய அவத்தையின் குற்றங்களைக் கடந்து, ஆன்மாவின் பெத்தநிலை அற்றுப் போகச் சிவத்தையே, நோக்குவதாகி, உண்மையான ஞான ஆனந்தத்தைச் சார்ந்திருப்பவனே ஞானியாகும். எந்த ஆன்மா இங்ஙனம் தத்துவங்களைக் கடந்து மல நீக்கித் துரியாதீதத்தில் நிலைத்துப் பெத்த நிலையற்றுச் சிவத்தை நோக்கி நிற்கிறதோ அதுவே சத்திய ஞானானந்தம் பெறும்.

853. சிவமாய் அவமான மும்மலம் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானானந் தத்தே
துவமார் துரியம் சொரூப மாதமே (2334)

ஆன்மா சிவத்தைச் சார்ந்து சிவமாகி நின்றபோது, பிறவிக்குக் காரணமாம் மும்மலமும் கெடும். குற்றஞ்சார்ந்த பிரகிருதி மாயை, அசுத்த மாயை, சுத்த மாயை எனும் மூன்றும் இந்த ஆன்மாவால் பற்றறவிட்டு நீங்கும். அக்கால் ஆன்மாவின் தவ வலிவால் சத்திய ஞானானந்த நிலைஎய்திட மேன்மை பொருந்திய துரியாதீத நிலையை ஆன்மா அடைந்து சிவ சொரூபம் எய்தும்.

## சொரூப உதயம்

854. உருவன் றியேநின் றுருவம் புணர்க்கும்
கருவன் றியே நின்று தான்கரு வாகும்
கருவன்றியே நின்ற மாயப் பிரானைக்
குருவன் றியாவர்க்கும் கூட ஒண்ணாதே (2840)

பரம் பொருளான சிவபிரான் உருவம் ஏதுமின்றி அருவமாய் இருப்பினும், உயிர்கள் உய்யும் பொருட்டு சகல உரவங்களையும் கூடி இருக்கும் தனக்கு, ஒரு மூலமில்லாமலே அனைத்துக்கும் தானே மூலமாகி விளங்குகின்றான். அருவ நிலையினையும் கடந்து நின்ற மாயப்பிரானான சிவனை அவனே குரவடிவாகி வலிய வந்து ஆட்கொண்டு அருளினால் அல்லாமல், பிறவகையில் சென்று அடைதல் இயலாது.

855. ஆமாறு அறிந்தேன் அகத்தின் அரும் பொருள்
போமாறு அறிந்தேன் புகுமாறும் ஈதென்றே
ஏமாப்ப தில்லை இனிஓர் இடமில்லை
நாமாம் முதல்வனும் நான்என லாகுமே (2846)

என் உள்ளத்திலே நீங்காது நிலைபெற்றுள்ள சிவபெருமான் எவ்வண்ணம் ஆன்மாக்களை ஆட்கொள்கிறான் என்பதை நான் அறிந்து கொண்டேன். அவனிடம் புகலிடமாகச் சென்றடையும் வழி இதுதான் என்று அங்கு போகும் நெறியையும் நான் அறிந்து கொண்டேன். இனி எனக்கு ஏது ஒரு பாதுகாப்பும் தேவை இல்லை. இனிமேல் எனக்கு எத்துன்பமும் இல்லை. நாம் இறுதியிலே சென்றடையும் முதல்வனாம் சிவனும் நான் என்று கூறுவதில் தவறில்லை.

## ஊழ்

856. தான் முன்னம் செய்த வதிவழி தானல்லால்
வான் முன்னம் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை
கோன் முன்னம் சென்னி குறிவழியே சென்று
நான் முன்னம் செய்ததே நன்னில மானதே (2848

4-23

முற்பிறவிகளில் உயிர்கள் செய்த வினைவழி இன்ப துன்பமாம் இருமை வந்தடையுமே அல்லாமல்., மிக்க மேன்மையான சிவன் முன்னமாகவே செய்தமைத்ததொரு விதித் தொடர்பு (தலை எழுத்து) என்பது கிடையாது. ஆன்மாக்களின் கோனாகிய அப்பரம் பொருள் திருமுன்னே சிரந் தாழ்த்தி வணங்கி அவன் குறியாம் சின்முத்திரை காட்டிய வழியே சென்று வழிபட்டேன். இப்படி முன் பிறப்பிலே செய்த தவமே இப்பிறப்பில் என் உள்ளம் சிவபிரான் தங்கி ஒளிரும் நல்ல நிலமாக அமைந்துள்ளது.

**857. வான் நின்று இடிக்கிலென் மாகடல் பொங்கிலென்?**
**கான்நின்ற செந்தீக் கலத்துடன் வேகிலென்?**
**தானொன்றி மாருதம் சண்டம் அடிக்கிலென்**
**நான் ஒன்றி நாதனை நாடுவன் நானே (2850)**

வானமே நிலமேல் விழுவதைப் போல பேரிடி முழங்கினால் தான் என்ன? பெரிய கடலும் பொங்கி ஊழியைப் போல நிலத்தை உற்றால் தான் என்ன? கானகத்திலே உற்ற தீ உலகத்தினைக் கலந்து வெந்து சாம்பலாக்கினால் என்ன? சண்ட மாருதம் என்னும் ஊழிப் பெருங்காற்று பிறகாற்றுடன் கலந்து வீசினால் என்ன? நான் இவைகளால் மனச் சலனம் ஏதுமின்றி என் நாதனோடு ஒன்றி இணைந்து இருப்பதையே நாடி நிற்பேன்.

## சிவதரிசனம்

**858. சிந்தையது என்னச் சிவனென்ன வேறில்லை**
**சிந்தையினுள்ளே சிவனும் வெளிப்படும்**
**சிந்தை தெளியத் தெளிய வல்லார்கட்குச்**
**சிந்தையினுள்ளே சிவனிருந் தானே (2853)**

சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான் எனச் சிவனையே தியானித்துக் கொண்டிருப்பவர்களுக்குச் சிந்தை வேறு சிவன் வேறு என்பதில்லை. அப்படிச் சிந்திப்பவர்கள் உள்ளத்திலே சிவனும் வெளிப்படுவான். தம் சிந்தையைச்சிவ ஞானத்தால் தெளிவடைய வைத்திருக்கும் ஞானியருக்கு அவர்கள் சிந்தையின் உள்ளேயே சிவன் கோயில் கொண்டுத் திகழுவான்.

859. வாக்கும் மனமும் மறைந்த மறைப் பொருள்
நோக்குமின் நோக்கப்படும் பொருள் நுண்ணிது
போக்கொன்று மில்லை வரவில்லை கேடில்லை
ஆக்கமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்கட்கே (2854)

சொல்லுக்கும் உள்ளத்துக்கும் எட்டாது மறைந்துள்ள மறைகளால் போற்றப்படும் பொருள் சிவனே. அவனை ஞானக் கண் கொண்டு அருள் வயத்தராய் நோக்குங்கள். நோக்கப்படும் பொருளோ மிகவும் நுட்பமானது. எனவே முறையறிந்து நுனித்து நோக்குங்கள் அப்பொருள் போக்கு வரவு அற்றது, என்றும் அழிவற்றது, சிவபரம் பொருளாகும் இதையே ஆய்ந்து தம் அகத்தே அகப்படுத்திக் கொள்வார்க்கு அவனே பெருஞ்செல்வமாகும்.

## சிவசொரூப தரிசனம்

860. ஓதும் மயிர்க்கால் தொறும் அமுதூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்தம்
ஆதி சொரூபங்கள் மூன்றகள் றப்பாலை
வேதம் ஓதும் சொரூபி தன் மேன்மையே (2856)

சொல்லப்படும் மயிர்க்கால் தொறும் பேத அபேதமின்றி சிவபெருமானது திருவடிப் பேரின்பமாம் ஆனந்தம் தேங்கி நிற்கும். இறைவனது ஆதி சொரூபமாம் உருவம், அருவம், அருவுருவம், என்னும் மூன்று நிலைகளையும் கடந்து இன்ன தன்மையன் என்று யாவராலும் இயம்ப வொண்ணாது இயற்கை உண்மை அறிவு இன்ப வடிவினனாக - (சத்+சித்'ஆனந்த) சச்சிதானந்த சொரூபமாக விளங்குபவன் சிவன். வேதங்கள் ஓதும் அருளே சொரூபமாக உடையவனுடைய மேன்மை இதுவாம்.

பேத அபேதம்; சீவ சிவன்; ஒன்றாய். உடனாய் வேறாய் நிற்கும் நிலைகள்.

861. உணர்வும் அவனே உயிரும் அவனே
புணர்வும் அவனே புலவி அவனே
இணரும் அவன்தன்னை எண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தம் துன்னி நின்றானே (2857)

நம்முடைய உணர்வாகவும் நமது உயிராகவும் விளங்குபவன் அவனே. ஒருயிர் மற்றோர் உயிரைச் சேரும்படிச் செய்பவனும், பிணங்கி ஊடும்படிச் செய்பவனும் அவனே. இதயத்துள் கலந்திருக்கும் அவனைச் சிந்தையால் எண்ணவும் முடியாது. பூங்கொத்துகளைப் போல அமைந்துள்ள ஆறாதாரங்களாம் மலர்களிலு[illegible]. [illegible]லரின் மணத்தைப் போல அவன்பொருந்தித் திகழ்கிறான்.

862. சத்தியஞானத் தனிப்பொருள் ஆனந்தம்
சித்தத்தில் நில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியம் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியே (8660)

பரம் பொருளாகிய சிவம் சத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் அமைந்த ஒப்பற்ற பொருளாகும். ஆன்மாக்களது சித்தத்திலே. அச்சித்தம் முக்குண வயப்பட்டுள்ளபோது, அங்கு நிலை பெற்று நில்லாத சிவனாந்தப் பேரொளியாகும் அது. அந்த ஆன்மாக்கள் முக்குணவசமற்று, நிர்க்குணமாகி விட்டால். சுத்தத்தினை அடைந்துச் செயலறலாம் பிரமத்துத் துரியத்துள் விளங்கும். அத்துரியத்துள் செலுத்திய மற்றொரு செயலறல் உய்த்த துரியமாகும். அத்துரியத்துள் மிக்கப் பேரொளியாக விளங்குபவன் அவனே.

முத்திபேதம் - கரும நிருவாணம்

863. ஒதியமுத்தி ஆடைவே உயிர்பரம்
பேதமில்லாச் சிவம் எய்தும் துரியமோ (டு)
ஆதி சொரூபம் சொரூபத் ததாகவே
ஏதமிலா நிருவாணம் பிறந்ததே (2864)

சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற முத்திநிலையாவது துரிய நிலையிலே, முறையாக உயிர், பரம், எனும் இவைகளுடன் சிவம் பொருந்தி நிற்கும் நிலையே ஆகும். இம்மும்மை வேறுபாடின்றி நிற்குங்கால் ஆன்ம சொரூபமாகிய பரம், சிவசொரூபத்தில் இலயிக்கும். இப்படி இலயிக்கும் நிலையே குற்றமற்ற நிருவாண நிலையாகும். (நிருவாணம் - செயலறல்) முத்தியாம்.

864. பற்றற்றவர் பற்றி நின்றபரம் பொருள்
கற்றற்றவர் கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றற்றவர் சுற்றி நின்ற என் சோதியை
பெற்றற்றவர் கள் பிதற் றொழிந் தார்களே (2865)

எல்லாப் பற்றுகளையும் அற்றவர்கள் பற்றுக் கோடாகப் பற்றி நிற்கின்ற பரம்பொருள் சிவன். பலகலைகளும் கற்று அறிந்து அடங்கியவர்களாய்ச் சிவஞானம் எய்தியவர்கள், உள்ளத்தே கருதுகின்ற நுகற்கண்ணுடையவனைப் பாசபந்தமாம் சுற்றம் நீங்கித் துறவியராய் மெய் அன்பு பூண்டவர்கள்; சுற்றி நின்று போற்றும் சோதிப் பிழம்பைப் பெற்று, அதனால் தன்னைத் தான் அற்றவர்கள். அவர்களே பிதற்றுதலை ஒழிந்து மோன நிலை அடைவார்கள்.

## சூனிய சம்பாஷனை

865. தூறு படர்ந்து கிடந்தது தூநெறி
மாறிக் கிடக்கும் வகையறி வாறில்லை
மாறிக் கிடக்கும் வகையறி வானர்க்கு
ஊறிக் கிடந்ததென் உள்ளன்பு தானே (2867)

தூய நெறியான சிவ நெறியிலே சிவப்பயிர் வளராதபடி ஆணவம் கன்மம் மாயை என்னும் களைகள் வளர்ந்து படர்ந்துள்ளன. அத்தகைய களைகளைக் களைந்து சிவநெறிப் பயிர் வளர்க்கும் வகை அறிபவர் இலர். இங்ஙனம் களைகளை நீக்கிச் சிவப்பயிரை வளர்க்கும் வகை அறிந்தவர்களுக்கு என் உள்ளத்துள்ளே ஊற்றெழும் அன்பு ஊற்றெடுத்துப் பெருகுகின்றது.

.6. வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுது கொண் டோடினர் தோட்டக் குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே (2869)

வழுதலை வித்தாம் கத்தரி விதையை விதைத்தேன் (ஞான
னயைத் தொடங்கினேன்) பாகல் கொடி தோன்றியது

(லோக இன்பத்தின் கசப்பாம் வைராக்கியம் தோன்றியது) தத்துவ ஆராய்ச்சியாம் புழுதியைத் தோண்டி ஆராய்ந்தேன் அதன் பயனாக மஞ்சள் மலராகிய பூசணிப்பூ மலர்ந்தது (சகஸ்ரதளமாம் மலர் மலர்ந்தது) இப்படிப்பட்ட மாற்றங்களால் இந்த உடலாம் தோட்டத்திலே குடிகொண்டிருந்த குடிகளாம் முப்பத்தாறு தத்துவங்களும். இந்திரியாதி விடயங்களும் தொழுது என்னிடமிருந்து விலகி ஓடினர். அதன்பின் முழுவதுமாகப் பழுத்து எனக்கு ஆன்ம லாபமாம் வாழைக்கனி கிடைத்தது.

867. பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோர் ஏழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே (2874)

மேய்ப்பாளின்றித் திரியும் ஆன்ம தத்துவமான பசுக்கள் இருபத்தி நான்கு உள்ளன. அதோடு குட்டிப் பசுக்களாம் வித்தியா தத்துவம் ஏழும் சிவதத்துவம் ஐந்தும் உள்ளன. பின் சொன்ன குட்டிப்பசுக்கள் குடம் குடமாகப் பாலைச் சொரிந்தாலும், பால்கறக்காத 24 பட்டி மாடுகளே பனவற்கு (பார்ப்பானுக்கு) இந்த ஆன்மாவுக்கு வாய்த்துள்ளது. அதாவது பயன்தரும் வித்யா தத்துவமும் சிவதத்துவம் போற்றாமல் 24 ஆன்மதத்தவத்தையே அன்மா. நாடுகின்றது

868. எழுதாத புத்தகத் தேட்டின் பொருளை
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத
மலராத பூவின் மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணமுண்ட வாறே (2885)

ஏட்டிலே எழுதாத வேதமாகிய புத்தகத்தின் பொருளை அதாவது சிவானந்தத்தை, நலத்தோடு கூடிய கன்னியாம் குண்டலி தெளிவுடன் எழும்பி மேற்சென்று சகஸ்ராரத்தில் சென்றடைந்து எழுப்ப, உலகிலே மலராத பூவாகிய அச்சகஸ்ரதளம் என்னும் பூவின் ஆனந்த மணத்தின் தேனை, இனிமேல் பிறவாத வண்டாகும் அன்மா உண்டு, ஆனந்தத்தில் அழுந்தி நிற்கும்.

869. போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
ஆகிப் படைத்தன ஒன்பது வாயிலும்
நாகமும் எட்டோடு நான்குப் புரவியும்
பாகன் விடாவிடில் பன்றியுமாமே (2926)

உடலிலிருந்து வெளிப்படும் காற்றாகிய சந்திரகலை எட்டும், உள்ளே வாங்கும் சூரிய கலையாம் பதினெட்டும், கூடி இந்த ஒன்பது வாயில் கொண்ட உடலினை இயக்குகின்றன. உறங்கிக் கிடக்கின்ற குண்டலி சத்தியாம் நாகமும் எண்கலை கொண்ட சந்திரகலையும் நான்கு புரவிகளாம் நிவர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தயாயலை சாந்திகலைகளையும் பாகனாகிய ஆன்மா அறிந்து செயற்படாவிடில், பன்றி ஒப்ப இழிநிலை எய்தும்.

870. போதும் புலர்ந்தது பொன்னிறம் கொண்டது
தாதவிர் புன்னை தயங்கும் இருகரை
ஏதமில் ஈசன் இயங்கு நெறியிது
மாதர் இருந்த தோர் மண்டபம் தானே (2931)

அஞ்ஞான இருள் விலகி பொழுது விடிந்து விட்டது. அதனால் பொன்னிறமான ஞான ஒளி உண்டாயிற்று. தாதவிழ் புன்னையாம் அருளைப் பொழிகின்ற சிவம், இரு கரையாம் உள்ளும் புறமும் விளங்கும். குற்றமற்ற ஈசனாம் சிவபிரான் இயங்குகின்ற தன்மை இதுவாகும். இவ்வகையில் இந்நில உலகம் அழகு மிக்க தன்மை வாய்ந்த தாகும். (மாதர் = அழகு).

## மோன சமாதி

871. காட்டும் குறியும் கடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தே எழுதிவைத் தென்பயன்
கூட்டும் குருநந்தி கூட்டிடின் அல்லது
ஆட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே (2937)

பரம் பொருளைக் காட்டும் அடையாளமான குறிகளும், அடையாளமும் கடந்து நிற்பவள் எம்பெருமான். அப்படிப்பட்ட சிவனை அடையும் நெறியை ஏட்டிலே எழுதி வைத்தக் கொண்டால் மட்டும் பயனில்லை. குரு உபதேசித்த நெறியிலே நின்றால் அல்லாமல் வேறு வகையில் ஆன்மாவுக்கு

உய்தி இல்லை. பிறவகைப்பட்ட அனைத்துமே ஆட்டின் கழுத்திலே பயனற்றுத் தொங்கும் தாடியைப் போன்றவையே.

872. உணர்வுடையார் கட்கு உலகமும் தோன்றும்
உணர்வுடையார் கட்கு உறுதுய ரில்லை
உணர்வுடையார் கள் உணர்ந்த அக்காலம்
உணர்வுடையார்கள் உணர்ந்து கண்டாரே (2938)

சிவநினைவிலே மனம் ஒன்றிய உணர்வுடையவர்கள் திர்க்க தரிசிகள். உள்ள இடத்தில் இருந்தபடியே உலகை அறிய வல்லவர்கள். அவர்களுடைய சித்தம் சிவன் பாலே பொருந்தி இருக்கும் காரணத்தினால் அவர்கள் வந்தடையும் துயரம் ஏதும் இல. ஏனெனில் அவர்கள் எல்லாம் அவன் செயலே என்று எண்ணுபவர்கள். சிவபெருமானே குருவாய் வந்து சிவஞானத்தை உணர்த்த, உணர்வுடைய ஆன்மா அதை முழுமையாக ஏற்று உணர்ந்த அக்காலத்திலே, உணர்வினைப் பெற்றடைந்த ஆன்மா, சிவத்தை உணர்ந்து அதைக் கண்டடையும் பேறு பெற்றதாகிவிடும்.

873. தற்பரமல்ல சதாசிவம் தானல்ல
நிட்கள மல்ல சகளநிலை யல்ல
அற்புத மாகி அநு போகக் காமம் போல்
கற்பனை இன்றிக் கலந்து நின்றானே (2943)

அண்டமனைத்தும் அவனேயாய் உள்ள சிவன், தற்பரம் எனச் சொல்லும் பரமமும் அல்லன்.. அருவுருவான சதாசிவனும் அல்லன். அருவம் ஆனவனும் அல்லன். உருவத்தோடு கூடிய சகள நிலையும் அல்லன். இவை ஏதுமற்ற அப்பாலான அற்புதமான அதிசயமாகியவன் அவன். மக்களால் அனுபவிக்கப்படும் சிற்றின்ப உணர்வினை - அவ்வின்பத்தை- ஒத்ததாகும் இது. அவன் திருவடியை அடையும் இன்பமே: அவன் ஆன்மாவில் கலந்து கற்பனையில்லாது உண்மையாகவே பொருந்தி நிற்கும் ஆனந்தமே: பேரின்பம்.

874. முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுமா றெங்ஙனே?
(2944)

முகத்திலே அமைந்துள்ள இரு கண்களைக் கொண்டு உலகப் பொருள்களைக் கண்டு, அப்பொருள்களால் புறஇன்பம் துய்க்கின்ற மூடர்களே! அகத்திலே விளங்கும் சிவஞானக் கண்கொண்டு, அகவுணர்வினை - சிவானுபவத்தைத் துய்ப்பதல்லவா ஆனந்தமாகும். சிவனாந்தம் தானே உணர்ந்னுபவிப்பது. பிறர் சொல்வதைக் கேட்டால் ஏற்படுவதன்று. கன்னிப் பெண்ணாகிய தன் மகளுக்குத் தாய் தன் மணாளனோடு துய்த்த இன்பத்தைத் தன்னிடம் சொல்லுக என்றால் அதைத் தாய் எவ்வண்ணம் மகளுக்கு விளக்க முடியும். அனுபவித்தறியும் சுகானந்தம் அல்லவா அது.

**875. அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டு**
**செப்பு பராபரம் சேர்பரமும் விட்டு**
**கப்புறு சொற்பதம் மாளக் கலந்தமை**
**எப்படி அப்படி என்னுமவ் வாறே (2945)**

நீரிலே கலந்த உப்பு நிரிலே கரைந்து தன்னை இழந்து நிற்றலைப் போல, அத்தனாம் சிவபிரான் ஆன்மாவைப் பொருந்தி, இரண்டாக உரைக்கப்படும் பராபரமும். அவனைச் சேர்கின்ற ஆன்மாவும் இருபொருளாக உள்ளதை விட்டுக் கவர்பட்டு சொல்லும் தத்துவமசி என்னும் சொல்லினது (அசிபதம்) அகிறாய் என்பது அழியச், சீவன் சிவத்துடன் ஒன்றறக் கலந்திட்டு நின்ற தன்மைதான் புணர்ப்பால் ஒன்றாம் தன்மையாம். எப்படி எனில், அப்படியே மேற்கூறிய முன் மந்திரத்தில் சொன்ன வண்ணமே என்பது பொருளாம்.

**876. தானும் அழிந்து தனமும் அழிந்து நீ(டு)**
**ஊனும் அழிந்து உயிரும் அழிந்துடன்**
**வானும் அழிந்து மனமும் அழிந்துபின்**
**நானும் அழிந்தமை நான் அறியேனே (2951)**

சிவகுரவின் உபதேசத்தால் ஏற்பட்ட சிவஞானானுபவத்தால், என் உடல் பற்று அழிந்தது. எனதென்னும் பொருள் பற்றும் அழிந்தது. இந்த ஊனாகிய தசை உடலிலே உண்டாகும் நீடிய வேட்கையும் அழிந்தது. உயிர்ப்பற்றும் அற்றது. வான்முதலிய பஞ்ச பூதங்களின் பற்றும் விட்டது. அதோடு உள்ளத்தின் ஓட்டமான மனமும் அழிந்துவிட, நான் என்பதும் அற்றுவிட்டது. நானே அவன், அவனே நான் ஆகிவிட்டேன். இது எப்படி என்பதை நான் அறியேன்.

## வரையுரைமாட்சி

**877. தான் வரைவு அற்றபின் ஆரைவரைவது
தான் அவன் ஆனபின் யாரை நினைவது
காமனை வென்றகண் ஆரை உகப்பது
தூமொழி வாசகம் சொல்லுமின் நீரே (2954)**

ஆன்மா எவ்விதமான பந்த பாசப் பற்றும் அற்று, தானே சிவமயமான பிறகு, ஆரைச் சென்றடைவது. தத்துவமசி எனும் மகா வாக்கியப்படி அவனே சிவனான பிறகு சீவன்யாரை நினைத்துக் கொண்டிருக்கும்? காமனுடைய பஞ்ச பாணங்களைத் தன் சித்த வல்லமையால் வெற்றிக் கொண்ட ஆன்மா, எதை விரும்பும்? யாரைக் காதலிக்கும்? குற்றமற்ற உங்கள் பதிலை எனக்குக் கூறுவீராக.

**878. உரையற்ற ஒன்றை உரைசெய்யும் ஊமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற்றி ருந்தான் புரிசடை யானே (2955)**

வாக்கு, மனம் கடந்து நின்ற ஒப்பற்ற பராபரத்தினை வாக்கினால் அளந்து விடமுடியும் என்று பிதற்றுகின்ற ஊமையர்களே எல்லையற்ற அகண்ட வெளியாகப் பரந்து கிடக்கும் வஸ்துவுக்கு எல்லையைக் காண யாரால் முடியும்? திரை சிறிதும் இல்லாத ஓய்ந்த கடலைப் போல மன அலைகள் ஒரு சிறிதும் இன்றிச் சலனமற்ற சிந்தை வாய்ந்தவர்க்குச் சிறிதும் மறைப்பின்றி சிவபெருமான் அவர்கள் சிந்தையிலே வெளிப்பட்டருள்வான்.

## அணைந்தோர் தன்மை

879. மலமில்லை மாசில்லை மானாபிமானம்
குலமில்லை கொள்ளும் குணங்களுமில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி அன்பிற் பதித்து வைப்போர்க்கே (2957)

நந்திப் பிரானாம் சிவபெருமானை சிவஞானத்தின் வல்லமையால் அழுந்தப் பொருந்தித் தங்கள் தீவிரபக்தியால் உள்ளத்திலே பதித்து வைப்பவர்களுக்கு, மும்மலங்களும் நீங்குவனவாம். அம்மலங்களாலும், பழைய வாசனைகளாலும் வரும் குற்றங்களும் இலவாம். இவர்களிடம் மானம் அபிமானம் குலப்பற்று ஒன்றும் பொருந்தி இரா. உயிரினை வந்தணையும் சத்துவ, ராஜஸ, தாமச குணங்களால் உண்டாகும் வேறுபாடுகளும் இல. எனவே இவர்களிடம், நலம் தீமை இன்ப துன்பம் எனும் இருமையும் இல.

880. ஒன்று கண்டீர் உலகுக்கு ஒருதெய்வமும்
ஒன்று கண்டீர் உலகுக் குயிரானது
நன்று கண்டீர் இனி நமசிவாயப் பழம்
தின்று கண்டேற் கிது தித்தித்த வாறே (2962)

இந்த அகில சராசரத்திற்கும் ஒரே ஒரு, ஒப்பற்ற, பேரருட் பிழம்பான கடவுள் உண்டு என்பதை நீங்கள் நன்கு அறிந்துள்ளீர்கள் அது ஒன்றே இந்த உலகனைத்துக்கும் உயிராகிநின்று இயக்கி வருகின்றது என்பதையும் அறிவீர்கள் (இயக்குவதால் அவன் இயவுள் எனப்படுகிறான்) இனி இச்சீவன் சிவமாந்தன்மைக்கு உதவ நன்மையானது, ஏற்றது, நமசிவாயமாம் பஞ்சாக்கரப் பழம் என்பதையும் நன்கு உணர்ந்திர்கள். இந்த நமசிவாயப் பழத்தை நான் என் திருவருள் தின்று அதன் சுவையைக் கண்டுணர்ந்தேன். தெவிட்டாத தித்திப்பாய் திகழ்கின்றது.

881. சித்தம் சிவமாய் மலமூன்றும் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தம்
கத்தும் சிலுகும் கலகமும் கைகாணார்
சத்தம் பரவிந்து தானாம் என் றெண்ணியே (2969)

சித்தமெலாம் சிவமயமாகி விளங்குகின்ற சிவஞானிகள், மும்மலங்களையும் தம்மிடமிருந்து விலக்கியவர்களாவர். அவர்கள் பராபர வஸ்துவான சிவத்தின் தன்மையை அடைந்துள்ளவர்கள். அவர்கள் மலத்தினால் ஏற்படும் பந்த பாசங்களிலே கட்டுண்டு இருப்பவ ராகார். சத்தம் எனப்படும் சொல்லும் அதனாலாம் பொருளும், பரவிந்துவாகிய மாயாகாரியம் என்று உணர்ந்திருப்பவர்கள் ஆதலினால், அவர்கள், வாக்காலாம் வாதமும் பூசலும் பிதற்றலும் செய்யார்.

## தோத்திரம்

882. மாயனை நாடி மனநெடுந் தேரேறி
போயின நாடு அறியாதே புலம்புவார்
தேயமும் நாடும் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமின் நாட்டிடைக் கண்டுகொண்டேனே (2982)

எவராலும் அறிதற்கொண்ணா மாயனை அடைய மனம் என்னும் தேரில் ஏறிச்சென்று பலவிடங்களில் அலைந்து ஆயுள்கள் போயின. பலப்பல நாட்டினர்களின் கணக்கு இத்தனை என்று சொல்ல இயலாது, புலம்புவார்கள். பற்பல தேயங்களும். பற்பல நாடுகளும் நானும் அலைந்து திரிந்து தேடினேன். இறுதியில் சிவமான ஒப்பற்ற செல்வத்தை மின்னலெனத் தோன்றி மறையும் இவ்வுடம்பாகிய நாட்டி லேயே உள்ள உண்மையாம் ரகசியத்தைக் கண்டு கொண்டேன்.

883. புகுந்து நின்றான் எங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்து நின்றான் எங்கள் போதறிவாளன்
புகுந்து நின்றான் அடியார் தங்கள் நெஞ்சம்
புகுந்து நின்றானையே போற்றுகின்றேனே. (2985)

புண்ணியமே ஒரு வடிவாகி நின்ற இறைவன் சிவபிரான், எனது உள்ளத்துள்ளே புகுந்து நின்று விளங்குவான். அப்படிப் புகுந்து நின்று விளங்குபவன் அறிவுக்கு அறிவானவன் (போதம் = அறிவு) எல்லாம் அறிந்தவன். அவன்

மெய்யடியார்களாம் சிவஞானிகள் உள்ளத்தில் எல்லாம் நிறைந்திருப்பவன். அங்ஙனமாக அடியார் உள்ளத்தும் என் உள்ளத்தும் புகுந்து நின்று திகழும் சிவனையே போற்றுகின்றேன்.

**884. மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்**
**எண்ணிற் கலங்கி இறைவன் சிவனென்னார்**
**உண்ணீர்க் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத்**
**தெண்ணீர்ப் படுத்தச் சிவனவ னாமே (2991)**

சேற்று மண்ணோடு கலந்து கலங்கிய நீரைப் போலவே மனிதர்கள் யாவரும் ஐம்புலன் நுகர்வுக்கான எண்ணச் சுழற்சிகளால் கலங்கி இறைவனது சுயம்பிரகாசமான தன்மையை உணரமாட்டார்கள். இத் தன்மைத்தானவன் சிவன் என்று அறியாதவர்கள். உண்ணுதற்குரிய நீரை குளத்திலிருந்து ஒரு குடத்திலே முகந்து வைத்துத்தெளிவாகும்படி அமைதியாக வைத்தால் நீர் தெளிவடைவதைப் போல, சிந்தையைச் சிவத்தின்பால் வைத்தால் உள்ளம் தெளிவடையும். ஆன்மாவும் சிவமயமாகும்.

**885. உள்ளத் தொடுங்கும் புறத்துளும் தானெனும்**
**கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்**
**வள்ளற் பெருமை வழக்கம் செய்வார்கள்தம்**
**அள்ளற் கடலை அறுத்து நின்றானே (3016)**

பராபரனாகிய சிவன் ஆன்மாக்களின் உள்ளத்திலே ஒடுங்கி நிற்பவன். உயிர்களின் புறத்திலேயும் அவையே தானேயாய் நிற்பன். அவன் கரவாடும் நெஞ்சத்தினர் உள்ளத்திலே சென்றடையாமல் நிற்பவனாதலால் கள்ளத் தலைவன் எனப்படுகிறான். அவன் நறுமணம் கமழும் கொன்றை மாலை அணிந்த சடையனாம் நந்தி எம் பெருமானாம் வள்ளலது பெருமையைச் சிந்தித்து வழிபடுவார்களுடைய அள்ளலாம் சேறு நிறைந்த, பிறவிப் பெருங்கடலை அறுத்து அருள்பவன் அவனே.

**886. தன் வலியால் உலகேழும் தரித்தவன்**
**தன் வலியாலே அணுவினும் தான் நொய்யன்**
**தன்வலி[illegible]டிலும் தான் சாரான்**
**தன்வலி[illegible] தடங்கடல் ஆமே (3023)**

சர்வ விவாபியாகிய சிவபிரான் தன் ஆற்றலால் ஏழு உலகங்களையும் தாங்கிநிற்பவனாவான். அவனேதன் ஆற்றலால் அணுவைக் காட்டிலும் பரமாணுவாக சூக்குமமாக இருக்கும் தன்மையன். அவன் வல்லமையை உரைக்கில் அஷ்ட கூல பர்வதங்களாம் எட்டும் அவனுக்கு நிகரில்லை. அதோடு அவன் வியாபகத்தன்மையை உரைக்கில் அவன் தன் ஆற்றலால் தடங்கடலைப் போல வியாபித்துள்ளவன் ஆவான்.

887. ஏனோர் பெருமையனாகிலும் எம்மிறை
ஊனே சிறுமையை உட்கலந் தங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே அறியும் தவத்தின் அளவே (3024)

சிவபிரான் மண்ணவர் விண்ணவர் மற்றுள்ள மூவர். முதலிய யாவரினும் மேம்பட்ட பெருமையை உடையவனாயினும், இந்த, நம்முடைய ஊனாலாய சிறுமையாம் உடலுளே கலந்து நம் உள்ளத்திலே குடி கொண்டிருப்பவன். அவன் வான் உலகத்துள்ளவரானும் அளந்தறிய ஒண்ணா அளப்பருந்தன்மையன். அவனே தேவாதி தேவன், மகாதேவன் ஆன்மாக்களின் தவத்தின் அளவாகவே அப்பெருமான் தன்னை வெளிப்படுத்தி ஆன்மாக்களால் அறியப்படுபவனாக உள்ளான்.

## சர்வ வியாபி

888. நான் அறிந் தப்பொருள் நாடவிடம்இல்லை
வான் அறிந்தங்கே வழியுற விம்மிடும்
ஊன் அறிந்துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்த்
தானறிந் தெங்கும் தலைப்படலாகுமே (3027)

நான் சிவஞானத்தால் உணர்ந்தறிந்த அப்பொருள்தான் அகண்டமாய் எங்கும் பரந்துள்ளதால், அதை நாடி அடையவேண்டித், தேடிப்போக வேண்டிய வேறு இடமில்லை (அவனோ உள்ளும் புறமும் உள்ளவன்).

வானமாகிய துவாத சாந்த நிலையை அறிந்து அங்கே செல்லும் வீணாத்தண்டு வழியாய்க் குண்டலியைச் செலுத்தி வழிபடில் அங்கு அது பூரணமாய் ஒளிமயமாய்ப் பிரகாசிக்கும். ஆன்மாவின்தவ வலிமைக்கேற்ப ஊன் உடம்பின்

தன்மையறிந்து உள்ளத்துள் விளங்கும் ஒளிமிக்கச் சுடர்வடிவானவன்தான் பேரறிவு மயமாகி சர்வ வியாபியாய் அகண்டமாய் விளங்குவான்.

889. கடலிடை வாழ்கின்ற கௌவை உலகத்து
உடலிடை வாழ்வுகொண்டு உள்ளொளி நாடி
உடலிடை வாழ்கின்ற உள்ளுறு தேவனைக்
கடலின் மலிதிரை காணலு மாமே (3028)

கடல் அலைகளிடையே சிக்கித் தத்தளிக்கும் படகை ஒப்ப இந்த உலகத்து உயிர்களும் துன்பமாம் கடலின் மேலே சிக்கித் தவிக்கின்றன. இந்தத் துன்பவாழ்வு வாழும் உயிர்களுள்ளும் இந்த உடலிடையே பொறி புலன்களால், முக்குணங்களால், கரணமாதிகளால் ஆட்டுவிக்கப்படும் வாழ்வினைக் கைக் கொண்டும், அதையெல்லாம் வெற்றி கொண்டும் உள்ளொளியை நாடி, இந்த உடம்புள்ளே கோயில் கொண்டுள்ள உள்ளத்து ஜோதியை கடலில் மலிந்து அலையும் திரையிடையேயும் (பேரலையாம் துன்பம் சூழ்ந்து அலைக்கழிக்கும் வாழ்விடையேயும்) நாம் சிவஞானப் பயிற்சியால் நீந்திக் கரை ஏற முடியும்.

890. பெருஞ்சுடர் மூன்றினும் உள்ளொளி யாகி
தெரிந்துட லாய் நிற்கும் தேவர் பிரானும்
இருஞ்சுடர் விட்டிட்டு இகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே (3029)

சூரியன், சந்திரன், தீ, எனக்கூறப்படும் பெரும் சுடர்களாம் மூன்றினுக்கும், உள்ளொளியாய் அதாவது ஒளிக்குள் ஒளியாய் விளங்குபவன் சிவபிரான். அவனே தேவதேவன். எண்ணுக்கடங்காத ஆன்மாக்களுக்கு அவ்வான்மாக்கள் உய்ய வேண்டி உடனாய் நிற்பவனும் அவனே. முன்னர்க் கூறிய பெரிய சுடர்களாம் சூரிய சோம அக்கினியைக் கடந்து அச்சிவபெருமான், மாறுபாடுகள் பலப்பல கொண்ட இவ்வுலகெல்லாம் உள்ள ஆன்மாக்கள் பால் உள்ளப்பரிவோடு அவர்களைத் தொடர்ந்து செல்கின்ற (புல்) நுண்ணியனாயும் உள்ளவன்ஆவான்.

**891. உறுதியின் உள்வந்த உள்வினைப்பட்டு**
**இறுதியின் வீழ்ந்தார் இரணம தாகும்**
**இறுதியின் உள்ளொளி திப்பிய மூர்த்தி**
**பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே (3030)**

தேக அபிமானத்தினால் தம் மனத்தகத்திலே ஏற்பட்ட அவிச்சை, முக்குண ஆணவ மலங்களால். இருவினை வசமாகிப் பலப்பல புகலிடங்களை அடைந்து, துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் அடையாத அதனால், இறுதியிலே சிவனடியிலே சென்று சார்தலைச் செய்ய. அச்சிவன் தன்னை வந்தடைந்தவர்களைப் பொன் போன்று பொத்திக் காத்தலைச் செய்வான். ஒடுங்கிய சித்தத்துள்ளே ஒளியாய் விளங்கும் திவ்விய மூர்த்தியான அவனை அடையப் பெற்றால் இந்த ஆன்மா பெருஞ்சுடராகி விளங்கும்.

**892. பற்றினுள்ளே பரமாய பரஞ்சுடர்**
**முற்றினும் முற்றி முளைக்கின்ற முன்னொளி**
**நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரும்**
**மற்றவனாய் நின்ற மாதவன் தானே (3031)**

பற்றப்படும் பொருள்கள் யாவற்றையும் அறவே துறந்துவிட்டு, பற்றப்படும் பொருள் ஒன்றே தான். அதுதான் மிக மேலான ஜோதி வடிவமான சிவமாகும். உலகெங்கணும் பரந்து நிலவி தோன்றுகின்ற சூரியன். சந்திரன், தீ, என்னும் முன்னொளியாகும்அது. அப்பரம்பொருள்தான் நெற்றியின் உள்ளே புருவ நடுவில் அமைந்துள்ள ஆக்ஞா சக்கரத்திலே நினைப்பிக்கும் நினைவாய்க் கருதிய வண்ணமாக நிலைத்திருப்பவன். அவனே நினைப்பவர் நெஞ்சத் தாமரையிலே கருதிய வடிவமாகவும் நிற்பவன். அவன் மாதவத்தின் வடிவமான சிவபிரானாவன்.

**893. நோக்கும் கருடன் நொடி ஏழுலகையும்**
**காக்கும் அவனித் தலைவனும் அங்குள**
**நீக்கும் வினை என் நிமலன் பிறப்பிலி**
**போக்கும் வரவும் புணரவல் லானே (3033)**

விண்ணிலே உயரப் பறக்கின்ற கருடன் மண்ணிலே உள்ள நுண்ணியவற்றையும் குறிக்கொண்டு நோக்குதல் போல, நொடிப்பொழுதிலே ஏழுலகங்களையும் நோக்கிக் காக்கும்

உலகத்துக்கெல்லாம் தலைவனாவான் சிவபிரான். இவ்வுலகின்கண் ஆன்மாக்களின் வினைத் துன்பங்கள் அனைத்தையும் நீக்கும். என் தலைவன் பிறப்பில்லாதவன் அவனே, போக்கும் வரவும் புணர்வுமில்லாப் புண்ணியன். ஆயினும் அவன்தன் மெய்யடியார்கள் பொருட்டு போக்கும் வரவும் புணர்வுமின்றிப் புணர வல்லன் ஆவான். இது அவன் தன்மையாம்.

894. உணர்வும் அவனே உயிரும் அவனே
புணர்வும் அவனே புலனும் அவனே
இணரும் அவன்தன்மை எண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தம் துன்னிநின்றானே (3035)

மெய்யடியார்களாம் சிவஞானிகளிடம் பொருந்தியுள்ள உணர்வு அவனே, உயிரும் அவனே. பொருள்களோடு கூடி அறியும் அறிவும் அவனே, மற்று ஐம்புலனால் அறியப்படும் அனைத்தும் அவனே ஆவன். இந்த ஆன்மாவைத் தொடர்ந்து தன் அருளால் செயற்படுத்தும் அவனை எண்ணத்தினால் முழுமையாக எண்ண முடியாது. எண்ணத்தினால் சிறைப்படுத்தவும் முடியாது. அப்பரம் பொருள் பூங்கொத்துக் களிடையே உள்ள மலரின் மணம் போல எவ்விடத்தும் பரவிஉள்ளான்.

895. விண்ணவ னாய்உல கேழுக்கும் மேலுளன்
மண்ணவ னாம்வலம் சூழ்கடல் ஏழுக்கும்
தன்னவ னாயது தன்மையின் நிற்பதோர்
கன்னவ னாகிக் கலந்து நின்றானே (3037)

சிவபிரான் விண்ணாகிப் பரந்து நின்று ஏழுலகங்களுக்கும் அப்பால் உளான் அவன் இந்த மண்ணுலகத்திலே ஆன்மாக்களால் போற்றி வழிபடுபவனாய் இந்த நிலவுலகத் தைச் சுற்றியுள்ள ஏழ்கடலுக்கும் அப்பாலாய் விளங்கி நின்றுள்ளான். அவன்தான் திருவருள் என்று சிறப்பிக்கப்படும். தண்ணளியை உடையவன். அந்தத் தன்மையிலே அதாவது சிவன் அருட்சத்தியோடு கூடி தன்னவனாய் ஆன்மாக்களிடையே நிலைத்து நிற்கின்றான். அதோடு அவன் ஆன்மாக்களுக்குக் கண்போன்றமைந்து பிரிப்பின்றி கலந்து நிற்கும் பேரருட் பெருங்கருணை யாளனுமாவான்.

896. நின்றவன் மாலொடு நான்முகன் தானகி
நின்றனன் தான்நிலம் கீழொடு மேலென
நின்றனன் தான் நெடு மால்வரை ஏழ்கடல்
நின்றனன் தானே வளங்கனி யாயே (3038)

பரம்பொருளாகிய சிவனே திருமாலாகவும் பிரம்மனாகவும் நின்றனன். அதோடு தன் அருட் சக்தியால் மாலையும் பிரம்மனையும் இயக்கிக் காப்பு படைப்பு இவைகளைப் புரிவிக்கிறான். அவன்தான் இந்த உலகத்தின் கீழும் மேலுமாகப் பரவிப் பரந்து நீக்கமற நிறைந்து நின்றனன். அதுவுமின்றி மிக்குயர்ந்த நெடிய மலையாகவும். ஏழ்கடலாகவும் நிலைத்து நின்றுள்ளவனும் அவனே. அச்சிவன்தான் தன்மெய்யடியார்களாம் சிவஞானிகளிடம் வளப்பம் பொருந்திய இனிய மாங்கனியை ஒத்து அவர்கள் தம் உள்ளத்திலே இனிப்பின் வடிவாய்நின்று நிலைத்துள்ளான்.

897. புவனா பதிமிகு புண்ணியன் எந்தை
அவனே உலகில் அடர்பெரும் பாகன்
அவனே அரும்பல சீவனு மாகும்
அவனே இறையென மாலுற்ற வாறே (3039)

எம்பெருமானாகிய சிவன் சகல புவனுங்களுக்கும் தலைவனாவான். அவன் புண்ணியம் அனைத்தையும் தன் வடிவாகக் கொண்ட புண்ணியமூர்த்தி ஆவான். அவன்தான் உலகங்கள் அனைத்திலும் வாழ்கின்ற அனைத் துயிர்களையும் இயக்குகின்ற (குதிரைகளை இயக்குகின்ற சாரதியை ஒப்ப) ஒப்பற்ற பெரிய பாகன் ஆவான். இவ்வுலகிலே வாழ்கின்ற அருமையான எண்ணற்ற ஆன்மா கோடிகளும் அவனே ஆவன். அவன்தானே நமது ஒப்பற்ற தலைவனாம் சிவபிரான் என்று சிவஞானச் செல்வர்கள் அவன்பால் பத்தி மயக்கமுற்று உள்ளனர்.

898. உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்
விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனும்
மண்ணின் றியங்கும் வாயுவுமாய் நிற்கும்
கண்ணின் றியங்கும் கருத்தவன் தானே (3040)

ஆன்மாக்களின் உள்ளத்துள்ளே நின்று ஓயாது, கெடாது, இயங்குகின்ற பிராணன் அவனே ஆவான். (பிராண உயிர்ப்பு

அவன்) விண்ணகத்தே இயங்கி பகலிரவை உண்டாக்கும் விரிந்த கதிர்களையுடைய கதிரோனும் அவனே. இந்த மண்ணுலகத்திலே ஓம் என்னும் நாதத்தோடு ஒலித்திசைத்தியங்கும் காற்றும் அவனே. இவ்வளவாயும் இதற்கப்பாலாயும் உள்ள சிவனே உயிர்களின் கண்ணாகி நின்று. காட்டி, கண்டு, உபகரித்து உடனாகி, ஒன்றாகி நின்றும் ஆன்மாக்களின் நெஞ்சக் கருத்தாகியும் நின்று, அருள்செய்கிறான்.

899. பலவுடன் சென்ற அப்பார் முழுதீசன்
செலவறி வார்இல்லை சேயன் அணியன்
அலைவிலன் சங்கரன் ஆதிஎம் ஆதி
பலவிலதாய் நிற்கும் பான்மை வல்லானே (3043)

இயங்கும் திணையும் நிலைத் திணையுமாகி இயங்குகின்ற இவ்வுலகம் முழுவதும் கலப்புத் தன்மையால் ஒன்றாய்ப் பிரிப்பின்றி விரவி நிற்பவன் பரம்பொருளாம் ஈசன். அந்த ஈசனின் இயக்கத்தினை உள்ளவா றறிவார் ஒருவருமிலர். ஏனெனில் அவன் மிகச் சேயனாகவும் அதே நேரம் மிக அணியனாகவும் உள்ளவன். அவன் சலனமில்லாத சுயம்பு. மங்களமாகி இருப்பதால் சங்கரன் எனப் பெயர் வாய்ந்தவன். அவன். ஆதியாம் சத்திவடிவானவன். யாவற்றுக்கும் காரணன். அவன்தான். ஒன்றாய் வேறாய், உடனாய் கலப்புற்றிருப்பினும் பலவென்பது இல்லாது, உலகனைத்தும் நிறைந்து நிற்கும் தன்மை யானவன்.

900. அது அறிவானவன் ஆதிப் புராணன்
எது அறியாவகை நின்றவன் ஈசன்
பொது அதுவான புவனங்கள் எட்டும்
இது அறிவான் நந்தி எங்கள் பிரானே (3044)

உலகின் வாழும் ஆன்மாக்களின் அறிவை விளக்கி அவர்களின் அறிவுக் கறிவாய் உள்ளவன் சிவபிரான். யாவற்றுக்கும் காரணமான ஆதி ஆற்றலுடைய மிகத் தொன்மையானவன். எவ்வகையாலும் ஆய்ந்து அறிய ஒண்ணாத வகையிலே என்றும் பொன்றாது நிலைத்து நிற்பவன் சிவன் ஒருவனே. அவனே ஆன்மாக்கள் அனைத்துக்கும் பொது உடைமையாகப் பேசப்படும்

புவனங்கள் எட்டும் நிறைந்து நிற்கும் ஒப்பில்லாப் பரம் பொருளாவான். யான் சொல்லிய இந்த உண்மையை நந்தி எம்பெருமான் நன்கு அறிவூரன்.

**901. நீரும் நிலனும் விசும்பாகி மாருதம்
தூரும் உடம்புறு சோதியுமா யுளான்
பேரும் பராபரன் பிஞ்ஞகன் எம்மிறை
ஊரும் சகலன் உலப்பிலி தானே (3045)**

முழு முதற்காரணனான சிவபிரான் நீராகவும் நிலனும் விண்ணாகவும் தீயாகவும், காற்றாகவும் விளங்கி நிற்பவன். பஞ்ச பூத காரணமாக உள்ள உடலாகவும், உடலுள் உறையும் ஆன்மாவின் சோதியாகவும் உள்ளவன். அவன் பேரே பராபரன் பிஞ்ஞகன். என் தலைவன். அவனோ யாவற்றிலும் ஊர்ந்து வியாபித்துள்ளவன். அநித்ய மற்ற நித்தியமானவன்.

**வாழ்த்து**

**வாழ்கவே வாழ்க என் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத்தான் பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ்ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமில்லான் பாதமே (3047)**

என் குருவாய நந்தி எம்பெருமான் திருவடிகள் வாழ்க! என் மும்மலங்களையும் அறுத்து என்னை ஆட்கொண்ட அந்த சிவகுரு நாதனின் திருவடிகள் வாழ்க! மலமறுத்து ஆட்கொண்டதோடு உண்மையான சிவஞானத்தை உபதேசித் தருளியவன்தன் தாள்கள் வாழ்க! இயல்பாகவே மலமற்று விளங்கும் நின்மலனாகிய சிவபெருமான்தன் திருவடிகள் வாழ்க வாழ்கவே!

திருச்சிற்றம்பலம்

ஒன்பதாம் தந்திரம் முற்றும்

திருமூலரின்

மூலமந்திரம் விளக்கவுரை முற்றும்.